# தமிழ் இலக்கியத் திரட்டு

## நான்காம் படிவம்—பொதுத் தொகுதி

[புதிய பாடத்திட்டப்படி அமைந்தது]


தொகுப்பாளர்:

P. துரைக்கண்ணு முதலியார், M.A., L.T.,

தலைவர்,

டாக்டர் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி,

அழகப்பா நகர், காரைக்குடி.

வித்துவான் S. V. வரதராஜ ஐயங்கார், M.A., M.O.L.,

தமிழ்த்துறைத் தலைவர்,

A. M. ஜெயின் கல்லூரி, சென்னை.






T. G. கோபால் பிள்ளை

பதிப்பாளர்

தெப்பக்குளம் திருச்சிராப்பள்ளி | 2/27, பிராட்வே ஜி. டி., சென்னை

பதிப்புரிமை] 1954 [விலை ரூ. 1-2-0

# முகவுரை

சென்னை இராச்சிய அரசியல் கல்வித் துறையாளர் 1952-ல் வெளியிட்டுள்ள புதிய பாடத் திட்டத்தை யொட்டி உயர்நிலைப் பள்ளிகளில் நான்கு, ஐந்தாம் படிவங் (Fourth and Fifth forms) களில் பயிலும் மாணவர்க்கு ஏற்கும்படி '**தமிழ் இலக்கியத் திரட்டு**' என்னும் புத்தகங்களின் பொது, சிறப்பு ஆகிய தொகுதிகள் இரண்டையும் தொகுத்துள்ளோம்.

இப் புத்தகங்களில் பாடத் திட்டத்தில் வகுத்துத் தரப் பெற்றுள்ள பிரிவுகளையும் அளவையும் முற்றும் தழுவிச் செய்யுட் பகுதியில் இனிய அரிய பாடல்களையும், உரைநடைப் பகுதியில் தமிழ் நாட்டுப் பேரறிஞர்கள் எழுதி வெளியிட்டுள்ள அரிய கட்டுரைகளையும் தேர்ந்து சேர்த்திருக்கின்றோம். இவைகளைத் தேர்ந்துகொள்வதில் மாணவர் சுவை, நோக்கம், பண்பாடுகளை உணர்ந்து, அவைகளுக்குப் பொருத்தமான தக்க பகுதிகளையே தொகுத்துச் சேர்த்துள்ளோம். செய்யுட்களும் உரை நடையிலுள்ள கட்டுரைகளும் பொதுப் பகுதியைக் காட்டிலும் சிறப்புப் பகுதியில் சற்று உயர்ந்தனவாகவே தேர்ந்து அமைக்கப்பட்டுள்ளன.

மாணவர்க்குத் தமிழ் மொழியில் தேர்ச்சி உண்டாகும்படி செய்வதே பாடத் திட்டத்தின் சீரிய நோக்கமாதலால், செய்யுள் உரைநடையாகிய இருபகுதிகளிலும் ஒவ்வொரு பிரிவின் முடிவிலும் குறிப்புரை, பயிற்சி, வினாக்கள், கட்டுரையாக்கம் என்பன சேர்க்கப் பெற்றுள்ளன. இவற்றால் மாணவர்க்குத் தாய் மொழியில் தேர்ச்சி ஏற்படுவதுடன், கட்டுரை எழுதும் வன்மையும் அமைதல் கூடும்.

இவைகளைத் தமிழாசிரியர்கள் ஆதரித்துப் பாட புத்தகமாக ஏற்படுத்தியுதவுமாறு வேண்டுகின்றோம்.

ஆசிரியர்கள்.

# நன்றியுரை

## செய்யுட் பகுதியில்

பாரதியார் பாடலிலிருந்து மகாத்மா காந்தி பஞ்சகம் என்ற தலைப்பிலுள்ள பாடல்கள் ஐந்து, மலரும் மாலையும் என்னும் அரிய நூலிலுள்ள மலர்கள் என்ற தலைப்பிலுள்ள பாடல்கள் ஐந்து—இவைகளைச் சேர்த்து வெளியிட அனுமதி தந்த அவற்றின் உரிமையாளர்கட்கும்,

## உரைநடைப் பகுதியில்

போலிச் சாமியார், அபார மூளை, என் சரிதை—பூமி, சிரிப்புக் கதைகள், பித்தம் தெளிய, சுவாமி விவேகாநந்தர் கடிதம், தோற்ற வேற்றுமை, மூன்றும் குலோத்துங்கன் அரசியல், மணிமேகலை பாத்திரம் பெற்றது (நாடகம்), ஒன்று பட்டாலுண்டு வாழ்வு, நோபெல் பரிசு, சாந்தி நிகேதனம் என்னும் கட்டுரைகளைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த அவற்றின் உரிமையாளர்கட்கும், எமது நன்றியுரியதாகும்.

ஆசிரியர்கள்.

# உள்ளுறை

## செய்யுட் பகுதி

## உரைநடைப் பகுதி

| எண் | பொருள் | | பக்கம் |
|---|---|---|---|

# நான்காம் படிவம்—பொது

## செய்யுட் பகுதி

### I. கடவுள் வாழ்த்து

கடவுள்வாழ்த்துப் பாடியபின்னரே நூல் பாடத் தொடங்கு வது முன்னோர் வழக்கம். அதனால் இந்தப் பாட புத்தகத்திலும் கடவுள் வாழ்த்து முதலிடம் பெற்றுள்ளது. 'கடவுள்' என்னும் சொல்லுக்குக் 'கடத்தல்' என்பது பொருள். மனம் மொழி மெய் ஆகிய மூன்றையும் கடந்து நிற்பது கடவுள். ஒவ்வொரு சமயத்தாரும் கடவுளை வேறு வேறு பெயரிட்டு அழைத்தாலும் கடவுள் ஒன்றே என்பதை நாம் உணர்தல் வேண்டும். இந்த உணர்ச்சியுடன் கடவுள்வாழ்த்தாக ஆன்றோர் பாடியவற்றுள் ஐந்து பாடல்கள் இங்கே தரப்பெற்றுள்ளன.

### 1. தாயுமானவர் பாடல்

தாயுமானவர் சோழ நாட்டில் திருமறைக்காடு என்னும் ஊரில் தோன்றியவர்; இவரது தந்தை கேடிலியப்பப் பிள்ளை என்பவர். தாயுமானவர் திரிசிரபுரத்தில் வாழ்ந்தவர்; விஜய ரகுநாத சொக்கலிங்க நாயக மன்னரிடம் கொஞ்சகாலம் வேலை யில் இருந்து, பின் துறவுபூண்டு, இராமநாதபுரத்தை யடைந்து அங்கே வாழ்ந்துவந்தார். இவர் வாழ்ந்த காலம் கி. பி. பதினெட் டாம் நூற்றாண்டின் முற்பகுதி.

இவர் பாடல்கள் எளிய இனிய நடையில் அமைந்தவை; பொதுவாகக் கடவுளைப் போற்றுபவை; மனத்தைக் கனிவிக்கும் தன்மையுள்ளவை.

*எனக்கெனச் செயல் வேறிலை; யாவுமிங் கொருநின்*
*தனக்கெனத் தகு முடல்பொரு ளாவியுந் தந்தேன்;*
*மனத் தகத்துள அழுக்கெலாம் மாற்றிஎம் பிரான்! நீ*
*நினைத்த தெப்படி யப்படி யருளுதல் நீதம்.*

## 2. திருவருட்பா

'திருவருட்பா' என்பதற்குக் கடவுளின் திருவருளால் தோன்றிய பாடல் என்பது பொருள். பின்வரும் பாடல் 'திருவருட்பா' என்னும் நூலிலிருந்து எடுக்கப்பெற்றது.. இதனை இயற்றியவர் இராமலிங்க சுவாமிகள். இவரும் சோழ நாட்டினரே. இவர் சிதம்பரத்திற்கு அருகிலுள்ள மருதூரில் தோன்றியவர்; சைவ சமயத்தவராயினும் பொதுநோக்கு உடையவர். இவர் பாடல்கள் எளிமையும் இனிமையும் உருக்கமும் வாய்ந்தவை. இவர் விளங்கிய காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி.

எத்துணையும் பேதமுறா தெவ்வுயிரும்
தம்முயிர்போல் எண்ணி, உள்ளே
ஒத்துரிமை யுடையவராய் உவக்கின்றார்
யாவர்? அவர் உளந்தான் சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடமெனநான் தேர்ந்தேன்; அந்த
வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடவென்
சிந்தைமிக விழைந்த தாலோ!

## 3. திருவிருத்தம்

கட்டளைக்கலித்துறை என்னும் ஒருவகைச் செய்யுளால் இயன்ற இந்நூல், பொதுவாகச் செய்யுளைக் குறிக்கும் விருத்தம் என்னும் பெயர் பெற்றது. திரு என்பது அடைமொழி. இந் நூலின் ஆசிரியரான நம்மாழ்வார் திருமாலடியார்களான ஆழ்வார்களுள் முதன்மையானவர்; பாண்டிய நாட்டிலுள்ள ஆழ்வார் திருநகரி என்று வழங்கும் திருக்குருகூரில் அவதரித்தவர். இவர் தந்தையார் காரியார் என்பவர். உடையநங்கை என்பது இவர் தாயாரின் பெயர். இவர் விளங்கிய காலம் எட்டாம் நூற்றாண்டு என ஒரு சாராரும், ஐந்தாம் நூற்றாண்டு என்று மற்றொரு சாராரும் கூறுவர். 'பல சமயத்தவரும் தொழும் கடவுள் ஒருவரே' என்னும் கருத்தை இப்பாடல் இனிது விளக்குகின்றது.

வணங்கும் துறைகள் பலபல
 வாக்கி, மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பலபல
 வாக்கி, அவையவை தோ(று)
அணங்கும் பலபல வாக்கி
 நின்மூர்த்தி பரப்பிவைத்தாய் !
இணங்கும் நின்னோரை யில்லாய் !
 நின்கண் வேட்கை எழுவிப்பனே.

## 4. பட்டினத்தார் பாடல்

பட்டினத்தார் என்னும் அடியார் பாடிய பாக்களைக்கொண்ட நூலுக்குப் 'பட்டினத்தார் பாடல்' என்று பெயர். பட்டினத்தார் பெருஞ்செல்வரான வணிகர் மரபில் காவிரிப்பூம்பட்டினத்தில் உதித்தவர்; பின், செல்வத்தில் பற்று நீங்கித் துறவு பூண்டவர். இவர் சமயம் சைவம். இவர் காலம் கி. பி. பத்தாம் நூற்றாண்டு ஆகும். இவரது பாடல்கள் எளிமையும் இனிமையும் உடையவை. இவர் தம் மனத்திற்குச் செய்யும் உபதேசத்தை உணருங்கள்.

ஒன்றென் றிரு தெய்வம் ; உண்டென் றிரு ;
 உயர் செல்வமெல்லாம்
அன்றென் றிரு ; பசித்தோர்முகம்
 பார் ; நல்லறமுநட்பும்
நன்றென் றிரு ; நடு நீங்காமலே
 நமக் கிட்டபடி
என்றென் றிரு மனமே !
 உனக்கே வுபதேசமிதே.

## 5. நீதிநூல்

பின்வரும் பாடல் 'நீதி நூல்' என்னும் புத்தகத்திலிருந்து எடுக்கப்பெற்றது. நீதி நூலின் ஆசிரியர் வேதநாயகம் பிள்ளை என்பவர். இவர் மாயூரம், சீர்காழி முதலான இடங்களில் முனிசீப்பாக வேலை பார்த்தவர்; கிறிஸ்துவ சமயத்தைத் தழுவியவராயினும், சமயப் பொது நோக்குள்ளவர். இவரது

பாடல்கள் எளிய நடையில் அமைந்தவை; ஆழ்ந்த கருத்துடையவை.

வேதநாயகர் 'நெஞ்சொடு கிளத்தல்'—அதாவது மனத்திற்கு உரைத்தலாக அமைத்துப் பாடிய செய்யுள் பின்வருவது:

கதிரவன் கிரணக் கையால்
கடவுளைத் தொழுவான்; புட்கள்
சுதியொடு மாடிப் பாடித்
துதிசெயும்; தருக்க ளெல்லாம்
பொதியலர் தூவிப் போற்றும்;
பூதந்தம் தொழில்செய் தேத்தும்;
அதிர்கட லொலியால் வாழ்த்தும்;
அகமே! நீ வாழ்த்தா தென்னே!

## குறிப்புரை

1. தந்தேன் - அர்ப்பணம் செய்தேன். அழுக்கு - குற்றம். மாற்றி - போக்கி. நீதம் - நீதி.

2. எத்துணையும் - எவ்வளவும். பேதம் - வேறுபாடு. உள்ளே ஒத்து - மனத்தால் ஒத்து. சுத்த சித்து உரு ஆய் - கலப்பற்ற ஞான உருவாயிருந்து. வித்தகர் - அறிஞர், ஞானியர். விழைந்தது - விரும்பியது.

3. துறைகள் - வகைகள். மதிவிகற்பு - அறிவின் வேறுபாடு. அவை அவை தோறு - அந்தந்த மதங்கள் தோறும். அணங்கும் - தெய்வங்களும். மூர்த்தி - வடிவம். இணங்கும் - உன்னோடு இணைத்துக் கூறத்தக்க. நின்னோரை - உன்போல்வார் எவரையும். வேட்கை - விருப்பம்.

4. 'தெய்வம் ஒன்றென்று இரு, உண்டு என்று இரு' என்று கூட்டுக. அன்று - நிலையானதன்று. நன்று - நன்மை தருவன. நடு - நடுநிலை.

5. சுதி - சுருதி. தருக்கள் - மரங்கள். பொதி அலர் - (தேன்) நிறைந்துள்ள பூ. பூதம் - நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பன. அகம் - மனம்.

## பயிற்சி

1. பொருள் கூறுக: வித்தகர், அணங்கு, வேட்கை, மூர்த்தி, அலர்.

2. பிரித்து எழுதுக: வேறிலை, அடிக்கேவல், அன்றென்று, கடலொலி.

3. இப்பகுதியில் வந்துள்ள வடசொற்களைக் கூறுக.

## வினாக்கள்

1. தாயுமானவர் கடவுளை வேண்டுவது என்ன?

2. 'எம்பெருமான் நடம் புரியும் இடம்' என்று இராமலிங்க அடிகள் கருதுவது எதனை?

3. இராமலிங்க அடிகள் தம் சிந்தை விழைந்ததாகக் கூறுவது என்ன?

4. 'மதி விகற்பால் பிணங்கும் சமயம்'—இதன் பொருளை விளக்குக.

5. நம்மாழ்வார் பாடலிலிருந்து நீவிர் அறியும் கருத்து என்ன?

6. பட்டினத்தார் தம் மனதிற்குச் செய்யும் உபதேசமென்ன?

7. கடவுளை உயிர்கள் எல்லாம் தொழுவது எவ்வாறு?

# II. நீதிக் கோவை

## 1. திருக்குறள்

இதனை இயற்றிய திருவள்ளுவர் என்பவர் வள்ளுவர் என்னும் பழந்தமிழ்க் குடியினர். திருக்குறள் என்னும் பெரு நூலைச் செய்து பெரும்புகழ் பெற்றமையால், அக்குடிப் பெயரே இவர்க்குச் சிறப்பாக வழங்கலாயிற்று. வள்ளுவக் குடியினர் படையெழுச்சி, திருவிழா, திருமணம் ஆகிய விசேட காலங்களில் யானைமேல் முரசினையேற்றி முழக்கி, அரசன் ஆணையை ஊரார்க்குத் தெரிவிக்கும் தொழிலினர் என்பர். திருக்குறளுக்கு உரை இயற்றியோர் பதின்மர். அவர்களுள், பரிமேலழகர் இயற்றிய உரை இந்நாளில் சிறப்பாக வழங்கி வருகின்றது. திருவள்ளுவர் வாழ்ந்திருந்த காலம் கடைச்சங்க காலம் ஆகும்.

திருக்குறளிலிருந்து கல்வி, கேள்வி என்னும் இரண்டு அதிகாரங்கள் இங்குத் தேர்ந்து கொள்ளப் பெற்றன. அவை மாணவர்க்கு மிகவும் இன்றியமையாதவை.

### கல்வி

1. கற்க கசடறக் கற்பவை ; கற்றபின்
நிற்க அதற்குத் தக.
2. எண்ணென்ப ஏனை எழுத்தென்ப, இவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.
3. கண்ணுடையர் என்பவர் கற்றோர் ; முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.
4. உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.
5. உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்
கடையரே கல்லா தவர்.
6. தொட்டனைத் தூறும் மணற்கேணி ; மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.
7. யாதானும் நாடாமல் ஊராமால், என்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.
8. ஒருமைக்கண் தான்கற்ற கல்வி ஒருவற்(கு)
எழுமையும் ஏமாப் புடைத்து.

9. தாம்இன் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

*10. கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
மாடல்ல மற்ற யவை.

## கேள்வி

1. செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம் ; அச்செல்வம்
செல்வத்துள் எல்லாந் தலை.
2. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்.
3. செவியுணவிற் கேள்வி உடையார் அவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து.
4. கற்றிலன் ஆயினுங் கேட்க ; அஃதொருவற்
கொற்கத்தின் ஊற்றாந் துணை.
5. இழுக்கல் உடையுழி ஊன்றுகோல் அற்றே
ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்.
6. எனைத்தானும் நல்லவை கேட்க ; அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.
7. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லார், இழைத்
ஈண்டிய கேள்வி யவர். [துணர்ந்து
8. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியால்
தோட்கப் படாத செவி.
9. நுணங்கிய கேள்வியர் அல்லார், வணங்கிய
வாயினர் ஆதல் அரிது.
10. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என் ?

### குறிப்புரை

**கல்வி :** ஒருவர் தாம் கற்பதற்கு உரிய நூல்களைக் கற்றல். அவை யாவன : அறநூல், நீதிநூல், யானை, குதிரை, தேர், படைக்கலம் என்பவற்றின் சாஸ்திரம் முதலியன.

1. கசடு - குற்றம். அற - நீங்க. நிற்க - நடத்தையில் கொள்க.

2. பிறர் 'எண்' என்று சொல்லுவனவற்றையும், 'எழுத்து' என்று சொல்லுவனவற்றையும் அறிஞர் கண் என்று சொல்லுவர் என்பது கருத்து.

3. பல தேசங்களில் நிகழ்கின்றவற்றையும், முக்கால நிகழ்ச்சிகளையும் காணும் ஞானக் கண்ணுடைமையால் கற்றாரைக் 'கண்ணுடையர்' என்றார்.

4. உவப்ப - மகிழும்படி. தலைக்கூடி - கலந்து பழகி. உள்ள - (இனி, இவரை எவ்விடத்து எப்பொழுது எவ்வாறு சேருவோம் என்று) நினைக்கும்படி. புலவர் தொழில் - தாம் நல்வழி யொழுகல், பிறர்க்கு உறுதி கூறல் என்பன. உவப்ப, உள்ள - எதிர்காலங்காட்டிய செயவென் வினையெச்சங்கள்.

5. உடையார் - செல்வமுடையவர். இல்லார் - வறியர். ஏக்கற்றும் - (தாமும் ஆசிரியர் முன்) விரும்பிக் கீழ்ப்படிந்து நின்றும். கடையர் - இழிந்தவர். ஏக்கற்று - இறந்தகால வினையெச்சம் ; ஏக்கறு - பகுதி.

6. தொட்ட - தோண்டிய : தொடு - பகுதி. அனைத்து - அளவிற்கு ஏற்றதாக. ஊறும் - உண்டாகும். கேணி - திசைச்சொல்.

7. யாது ஆனும் - ஏதேனும் ஒரு நாடும். நாடு ஆம் - சொந்த நாடாகும்.

8. ஒருமைக்கண் - ஒரு பிறப்பில். எழுமையும் - ஏழு பிறப்பிலும். ஏமாப்பு - உதவுதல் : தொழிற் பெயர் : ஏமா - பகுதி.

9. இன்பு உறுவது - மகிழ்ச்சியடைவதற்கு ஏதுவாகிய கல்விக்கு. தாம் இன்பமடைவதற்கு ஏதுவாகின்றது, தம்முடைய கல்வி. அந்தக் கல்வியைக் கண்டு உலகோர் இன்புறுகின்றனர். அதனால், கற்றறிந்தவர் பின்னும் அக் கல்வியையே விரும்புவர் என்பது கருத்து.

10. கேடு இல் - அழிவில்லாத : கேடு - முதல்நிலை திரிந்த தொழிற்பெயர். விழு செல்வம் - சிறந்த செல்வம். மற்றையவை - மணி பொன் முதலியன. மாடு - செல்வம்.

கேள்வி - கேட்டல் : அஃதாவது, கேட்கத்தக்க நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்பது. கற்றவர்க்குக் கல்வியாலாகிய அறிவை வளர்ப்பதாலும், கல்லாதவர்க்கும் கல்வியறிவைப் புதிதாக உண்டாக்குவதாலும் கேள்வியானது கல்விபோலவே எவர்க்கும் இன்றியமையாதது.

1. செவிச் செல்வம் - செவியால் வரும் கேள்விச் செல்வம். தலை - சிறந்தது.

2. செவிக்கு உணவு - கேள்வி : அது சுவை மிகுதியும் பின் நன்மை பயத்தலும் உடையது. ஈதல் - வயிற்றின் இழிவு குறிப்பது.

3. செவி உணவின் கேள்வி - செவியுணவாகிய கேள்வி. நிலத்து - பூமியில் வாழ்பவரேயாயினும். அவியுணவின் ஆன்றோர் - யாகத்தில் தரப்படும் 'ஹவிஸ்' என்னும் உணவை உட்கொள்ளும் தேவர்.

4. ஒற்கத்தின் - தளர்ச்சி நேர்ந்தபோது. ஊற்றும் துணை - ஊன்றுகோல் போல உதவும் துணை.

5. இழுக்கல் - வழுக்குதல் : தொழிற் பெயர். ஒழுக்கமுடையார்

வாய்ச்சொல் - கல்வியுடையாரேனும் ஒழுக்கமில்லாதவர் அறிவில்லாதவராவார்; ஆதலின் அவர் வாய்ச்சொல் கேட்கப்படாது என்பது கருத்து.

6. எனைத்து ஆனும் - எவ்வளவு சிறிதாயினும். அனைத்து ஆனும் - அவ்வளவு சிறிதாக இருப்பினும். ஆன்ற - நிறைந்த.

7. பிழைத்து உணர்ந்தும் - மாறுபாடாக உணர்ந்த போதிலும். இழைத்து உணர்ந்து - நுட்பமாக ஆராய்ந்தறிந்து. ஈண்டிய - நிறைந்த - ஈண்டு, பகுதி. பேதைமை - அறிவின்மையைக் காட்டும் சொற்களே.

8. கேட்பினும் கேளாத்தகைய - தம்புலனான ஓசையைக் கேட்ட போதிலும் செவிடான தன்மையை உடையவைகளேயாம் (அச்செவிகள்). தோட்கப் படாத - துளைக்கப்படாத.

9. நுணங்கிய - நுட்பமான. வணங்கிய வாயினர் - பணிவான வார்த்தை பேசுவோர்.

10. கேள்விப்பயன் இல்லாதவரை மாக்கள் என இழிவாகக் கூறியது காண்க. அவியினும் - அழிந்து போனாலும். செவியின் சுவையாவன: சொற்சுவை, பொருட்சுவை.

பயிற்சி

1. பொருள் கூறுக: கசடு, தலைக்கூடி, கடையர், மாடு, அவி, இழுக்கல், ஆன்ற, தோட்கப்படாத.

2. பிரித்துக் காட்டுக: கசடற, இன்புறுவது, கேடில், ஊற்றும், சாந்துணை.

3. பகுதி கூறுக: ஏக்கற்று, தொட்ட, ஏமாப்பு, ஈண்டிய.

4. இப்பாக்களிலிருந்து தொழிற்பெயர், வினையெச்சம், பெயரெச்சம் இவற்றிற்கு இரண்டிரண்டு உதாரணம் தருக.

வினாக்கள்

1. நூல்களைக் கற்கும் முறை யாது? கற்பதன் பயன் என்ன?

2. கண்ணுடையர், புண்ணுடையர் என்றதன் கருத்து யாது?

3. 'கண் என்ப வாழும் உயிர்க்கு' என்றதன் கருத்து என்ன?

4. 'புலவர் தொழில்' எத்தன்மையது? இதனால் தெரிவது என்ன?

5. கற்றவர் மேன்மை, கல்லாதார் இழிவு - இவை எவ்வாறு கூறப்படுகின்றன?

6. அறிவு வளர்ச்சி எதுபோல உண்டாகும்? இதனால் நீவிர் அறிவதென்ன?

7. 'கற்றோர்க்குச் சென்றவிட மெல்லாம் சிறப்பு' என்ற கருத்து திருக்குறளில் எவ்வாறு கூறப்படுகின்றது?

8. 'எழுமையும் ஏமாப்புடைத்து' எது? எவ்வாறு? விளக்கி வரைக.

9. கல்வியால் வரும் இன்பத்தின் தன்மை எத்தகையது?

10. கல்வி எத்தகைய செல்வம்? 'மாடு அல்ல மற்றயவை' என்றது ஏன்?

11. செவிச் செல்வம் யாது ? அதன் சிறப்பு என்ன ?
12. 'சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும்' என்றதன் கருத்தை விளக்குக.
13. செவிச் செல்வம் உடையவர் யாருக்கு ஒப்பாவர் ?
14. 'ஒழுக்கத்தின் ஊற்றுந் துணை'—எது ? எவ்வாறு ?
15. 'ஒழுக்கம் உடையார் வாய்ச்சொல்' என்றதன் கருத்து என்ன ?
16. நல்லவை கேட்டலின் பயன் என்ன ?
17. நுணுகி ஆராய்ந்து அறிந்தவர் என்ன செய்வார் ?
18. கேள்வியறிவில்லாதவர் செவியைத் திருவள்ளுவர் எவ்வாறு பழிக்கின்றார் ?
19. பணிவான வார்த்தை பேசுவோர் எத்தன்மையர் ?
20. கேள்விப்பயன் இல்லாதவரைத் திருவள்ளுவர் எவ்வாறு இழிவாகக் கூறுகின்றார் ?

கட்டுரையாக்கம்

1. 'கல்வியின் சிறப்பு' என்பது பற்றிப் பதினைந்து வரியில் வரைக.
2. 'செவிச் செல்வம்' என்ற பொருள் பற்றிப் பத்து வரியில் எழுதுக.

## 2. திரிகடுகம்

கடைச்சங்க காலத்தை யடுத்துத் தோன்றிய பதினெண் கீழ்க்கணக்கு என்னும் தொகையைச் சேர்ந்த நீதி நூல்களுள் திரிகடுகம் என்பது ஒன்று. இதனை இயற்றியவர் நல்லாதனார் என்பவர். இவரது வரலாறு பற்றிய செய்திகள் தெரியவில்லை. இவர் கடைச்சங்க காலத்தவர்.

சுக்கு, திப்பிலி, மிளகு என்னும் மூன்றும் சேர்த்துச் செய்யப்படும் மருந்துக்குத் 'திரிகடுகம்' என்று பெயர். அது உடற் பிணியைப் போக்கி நன்மை புரிதல் போல மனத்திற்கு உண்டாகும் நோயைப் போக்கி நன்மை பயப்பதால், இந்நூலுக்குத் திரிகடுகம் என்று பெயர். ஒவ்வொரு வெண்பாவிலும் மும்மூன்று நீதிகள் உண்டு.

1. பிறர்தன்னைப் பேணுங்கால் நாணலும் பேணார்
திறன்வேறு கூறிற் பொறையும்,—அறவினையைக்
காராண்மை போல ஒழுகலும், இம்மூன்றும்
ஊராண்மை என்னுஞ் செருக்கு.

2\. கணக்காயர் இல்லாத ஊரும், பிணக்கறுக்கும்
மூத்தோரை'யில்லா அவைக்களனும்—பாத்துண்ணும்
தன்மையி லாளர் அயலிருப்பும், இம்மூன்றும்
நன்மை பயத்தல் இல.

3\. தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்,
வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணுதான்,
கோளாளன் என்பான் மறவாதான், இம்மூவர்
கேளாக வாழ்தல் இனிது.

4\. பொய்வழங்கி வாழும் பொறியறையும், கைதிரிந்து
தாழ்விடத்து நேர்கருதும் தட்டையும்—ஊழினுல்
ஒட்டி வினை நலம் பார்ப்பானும், இம்மூவர்
நட்கப் படாஅ தவர்.

5\. உண்பொழுது நீராடி யுண்டலும், என்பெறினும்
பால்பற்றிச் சொல்லா விடுதலும்—தோல்வற்றிச்
சாயினும் சான்ருண்மை குன்ருமை, இம்மூன்றுந்
தூஉயம் என்பார் தொழில்.

குறிப்புரை

1\. பேணுங்கால் - கொண்டாடும் பொழுது. நாணலும் - கூசுதலும். பேணுர் - பகைவர். திறன் வேறு கூறின் - திறமையை மாறுபடப் பழித்துரைத்தால். பொறை - பொறுமை. காராண்மை - மேகத்தின் பெருந்தன்மை (பயன் கருதாது கொடுத்தல்).

2\. கணக்காயர் - ஆசிரியர். பிணக்கு அறுக்கும் - (ஊரார்) வழக்குகளை விசாரித்து முடிவு கூறும். பாத்து உண்ணும் - (உள்ளதைப்) பிறர்க்கும் அளித்துத் தானும் உண்கின்ற.

3\. தாள் ஆளன் - முயற்சியுள்ளவன். கோள் ஆளன் - கொள்கையுடையவன்.

4\. பொறியறை - நற்பொறியற்றவன். கைதிரிந்து - செல்வம் குறைந்து. நேர்கருதும் - துன்பஞ்செய்ய நினைக்கும். நேர்தல் - எதிர்தல். தட்டை - அறிவிலி. ஊழ் - விதி. ஒட்டி - பந்தயம் வைத்து.

5\. பால்பற்றி - ஒருபக்கத்தைச் சார்ந்து. சொல்லா - நீதி வழங்காமல். சான்ருண்மை - பெருமைக்குணம்.

பயிற்சி

1\. பொருள் கூறுக : காராண்மை, கணக்காயர், தாளாளன், கேள், தட்டை, ஊழ்.

2. பிரித்துக் காட்டுக: காராண்மை, தன்மையிலாளர், பாத்துண்ணும்.

3. பகுதி கூறுக: ஒழுகல், மூத்தோர், வாழ்தல், ஒட்டி.

4. இப்பகுதியிலிருந்து தொழிற் பெயர், பண்புப் பெயர், இடப் பெயர், உவமை உருபு, பெயரெச்சம், வினையெச்சம்—இவைகட்கு ஒவ்வோர் உதாரணம் தருக.

### வினாக்கள்

1. 'திரிகடுகம்' என்று இந்நூல் பெயர்பெறக் காரணம் என்ன?
2. இந்நூலாசிரியர் யார்?
3. பிறர் தன்னைப் பேணுங்கால் நாணல், அறவினையைக் காராண்மைபோல ஒழுகல்—பொருளை விளக்குக.
4. நன்மை உண்டாகாத மூன்று எவை?
5. எத்தகைய மூவரைக் கேளாகக் கொள்ளல் வேண்டும்?
6. சிநேகம் செய்யத்தகாத மூவர் யாவர்?
7. தூயோரிடம் காணத்தக்க ஒழுக்க நெறிகள் எவை?

### கட்டுரையாக்கம்

அறவினையைக் காராண்மை போல ஒழுகல், வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான், என்பெறினும் பால்பற்றிச் சொல்லா விடுதல் - இவற்றிற்கு ஒவ்வொரு சிறு உதாரணக் கதை கூறுக.

## 3. நான்மணிக்கடிகை

இதுவும் பதினெண்கீழ்க்கணக்கு என்னும் தொகையைச் சேர்ந்த நூல்களுள் ஒன்று; நூற்றொரு வெண்பாக்கள் இதில் உண்டு. நான்கு மணி (இரத்தினங்) களைக் கொண்ட கடிகை (தோள்வளை என்னும் ஓர் ஆபரணம்) போல, நந்நான்கு அரிய நீதிகள் அடங்கிய பாக்கள் உடைமையால் இந்நூலுக்கு இப் பெயர் வழங்குகிறது. இதன் ஆசிரியர் **விளம்பிநாகனுர்** என்பவர். இவர் கடைச் சங்க காலத்துப் புலவருள் ஒருவர்.

1. எள்ளற்க என்றும் எளியரென்று, என்பெறினும்
கொள்ளற்க கொள்ளார்கை மேம்பட—உள்சுடினும்
சீறற்க சிற்றில் பிறந்தாரைக், கூறற்க
கூறல்ல வற்றை விரைந்து.

2. மண்ணி யறிப மணிநலம், பண்ணமைத்து
ஏறிய பின்னறிப மாநலம்—மாசறச்

சுட்டறிப பொன்னின் நலங்காண்பார், கேட்டறிப
கேளிரான் ஆய பயன்.

3. மனைக்குப்பாழ் வாணுதல் இன்மை, தான்செல்லும்
திசைக்குப்பாழ் நட்டோரை யின்மை,—இருந்த
அவைக்குப்பாழ் மூத்தோரை யின்மை, தனக்குப்பாழ்
கற்றறி வில்லா உடம்பு.

4. மொய்சிதைக்கும் ஒற்றுமை யின்மை, ஒருவனைப்
பொய்சிதைக்கும் பொன்போலும் மேனியைப்,—பெய்த
கலம்சிதைக்கும் பாலின் சுவையைக், குலம்சிதைக்கும்
கூடார்கண் கூடி விடின்.

5. திரியழல் காணின் தொழுப, விறகின்
எரியழல் காணின் இகழ்ப,—ஒருகுடியிற்
கல்லாது மூத்தானைக் கைவிட்டுக், கற்றான்
இளமை பாராட்டும் உலகு.

குறிப்புரை

1. எள்ளற்க - இகழாதிருப்பீராக. கொள்ளார் - ஏற்கத்தகாதவர். உள் சுடினும் - மனத்தைப் புண்படுத்திய போதிலும். சிற்றில் - ஏழைக்குடி (சிறுமை + இல்). கூறல்லவற்றை - சொல்லத்தகாத வார்த்தைகளை.

2. மண்ணணி - சாணையிலிட்டுத் தீட்டி. மணி - இரத்தினம். பண் - இசை. ஏறிய - சுருதிகூடிய. கேளிர் - உறவினர்.

3. வாள்நுதல் - ஒளி பொருந்திய நெற்றியுள்ள மனைவி. திசை - திக்கு. அவை - சபை. மூத்தோர் - அறிவினால் முதிர்ந்தோர். நட்டோர் - நண்பர். வினையாலணையும் பெயர் : நள் பகுதி. பாழ் - பயனற்றது.

4. மொய் - வலிமை. பாலின் சுவையை - பாலின் உருசியை. கலம் - பாத்திரம். கூடார்கண் - சேரத்தகாதவரிடம். குலம் - குலப்பெருமை.

5. திரி அழல் - திரியில் எரிகின்ற தீபம். இகழ்ப - அலட்சியம் செய்வார்கள். இளமை - இளம்பிராயம். உலகு - ஆகுபெயர்.

பயிற்சி

1. பொருள் உரைக்க : மண்ணணி, பண், கேளிர், வாணுதல், கலம்.
2. பிரித்துக் காட்டுக : சிற்றில், சுட்டறிப, வாணுதல், மாசற.
3. பகுதி கூறுக : நட்டோர், எள்ளற்க, சீறற்க, மண்ணணி, கற்றான்.
4. எளியர், சிற்றில், பொய், தொழுப, இளமை—எதிர்ப்பதம் கூறுக.
5. வினையாலணையும் பெயர், தொழிற்பெயர், ஆகுபெயர்—இவைகட்கு இப்பகுதியிலிருந்து ஒவ்வோர் உதாரணம் தருக.

### வினாக்கள்

1. நான்மணிக்கடிகை என்று ஏன் பெயர்?
2. இதன் ஆசிரியர் பெயரென்ன?
3. யாரை இகழலாகாது? ஏன்?
4. உள் சுடினும் சீறற்க சிற்றில் பிறந்தாரை—இதன் கருத்து என்ன?
5. மணி நலம், பா நலம், பொன் நலம்—இவை எவ்வாறு உண்டாகும்?
6. 'பாழ்' என்று ஆசிரியர் குறிப்பிடும் நான்கு பொருள்கள் எவை?
7. பாலின் சுவையை எது சிதைக்கும்? இதனால் நீவிர் அறிவது யாது?
8. தீபத்தைத் தொழுவதும், விறகின் நெருப்பை அலட்சியஞ் செய்தலும் எந்த உண்மைகளை விளக்க வந்தன?

### கட்டுரையாக்கம்

தான் செல்திசைக்குப் பாழ் நட்டோரை இன்மை, மொய் சிதைக்கும் ஒற்றுமை இன்மை, உலகு கற்றான் இளமை பாராட்டும்—எடுத்துக்காட்டாக ஒவ்வொரு சிறுகதை வரைக.

# III. தொடர்நிலைச் செய்யுள்

## 1. நளவெண்பா

நளனைப் பற்றிய வெண்பா என்பது இதன் பொருள். வெண்பா, நால்வகைப் பாக்களுள் ஒன்று. அது, இங்கே அதனுலாகிய நூலை உணர்த்தியது: கருவியாகு பெயர். (நளன் + வெண்பா = நளவெண்பா). நளசரித்திரம் கூறும் இந்நூல் சுயம்வர காண்டம், கலிதொடர் காண்டம், கலிநீங்கு காண்டம் என்னும் மூன்று பிரிவுகளையுடையது. 'நளவெண்பா'விற்கு முதல்நூல் வடமொழி மகாபாரதத்தில் ஆரணியபருவத்தில் வரும் 'நளோபாக்கியானம்' ஆகும். எனவே இது ஒரு வழி நூல்.

'நளவெண்பா'வை இயற்றியவர் **புகழேந்திப் புலவர்** என்பவர். இவர் தொண்டை நாட்டிலுள்ள **பொன்விளைந்த களத்தூரில்** பிறந்தவர்; பெரும் புலவராகி முதலிற் பாண்டிய நாட்டிலும், அதன் பின் அந்நாட்டின் ஒரு பகுதியான மள்ளுவ நாட்டிலும் வாழ்ந்திருந்தவர். இவரது சமயம், வைணவம். இவர் விளங்கிய காலம், சற்றேறக்குறைய எழுநூறு வருடங்கட்கு முன். இவருடன் இருந்த புலவர், ஒட்டக் கூத்தர்; "வெண்பாவிற் புகழேந்தி" என்று இவர் போற்றப்படுவர்.

சுயம்வர காண்டத்திலுள்ள கதைத் தொடர்ச்சியான பாடல்கள் பின்வருவன:

### [சுயம்வர காண்டம்]

#### நிடத நாட்டுச் சிறப்பு

1. காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் தளையவிழப்—பூமடந்தை
தன்னாட்டம் போலும் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னாட்டின் முன்னாட்டு நாடு.

#### மாவிந்த நகரச் சிறப்பு

2. மாமனுநூல் வாழ வருசந் திரன்சுவர்க்கி
தாமரையாள் வைகும் தடந்தோளான்—காமருபூந்
தாரான் முரணை நகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி.

### நளன் பூஞ்சோலையைச் சேரல்

3. வாங்குவளைக் கையார் வதன மதிபூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினான்–தேங்குவளைத்
தேனாடி வண்டு சிறகுலர்த்தும் நீர்நாடன்
பூநாடிச் சோலை புக.

### நளன்முன் அன்னம் தோன்றல்

4. நீணிறத்தால் சோலை நிறம்பெயர, நீடியதன்
தாணிறத்தால் பொய்கைத் தலஞ்சிவப்ப-மாணிறத்தான்
முன்னப்புள் தோன்றும் முளரித் தலைவைகும்
அன்னப்புள் தோன்றிற்றே ஆங்கு.

### அன்னத்தைப் பிடித்துத் தரும்படி நளன் கூறுதல்

5. ‘‘ பேதை ! மடவன்னந் தன்னைப் பிழையாமல் ’’
மேதிக் குலமேறி மென்கரும்பைக்—கோதிக்
கடித்துத்தான் முத்துமிழும் கங்கைநீர் நாடன்
‘‘ பிடித்துத்தா,’’ என்றான் பெயர்த்து.

### அன்னத்தின் கலக்கம்

6. அன்னந் தனைப்பிடித்தங் காயிழையார் கொண்டுபோய்
மன்னன் திருமுன்னர் வைத்தலுமே—அன்னம்
மலங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடிக்
கலங்கிற்றே மன்னவனைக் கண்டு.

### நளன் அன்னத்தைத் தேற்றுதல்

7. ‘‘ அஞ்சல் மடவனமே ! உன்றன் அணிநடையும்
வஞ்சி அனையார் மடநடையும்—விஞ்சியது
காணப் பிடித்ததுகாண்,’’ என்றான், களிவண்டு
மாணப் பிடித்ததார் மன்.

### அன்னம் தமயந்தியின் குணத்தையும் அழகையும் தெரிவித்தல்

8. ‘‘ நாற்குணமும் நாற்படையா, ஐம்புலனும் நல்லமைச்சா
ஆர்க்கும் சிலம்பே அணிமுரசா,—வேற்படையும்
வாளுமே கண்ணா, வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை அரசு.’’

**அன்னம் தமயந்தியிடம் சேர்தல்**

9. மன்னன் விடுத்த வடிவில் திகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி அருகணைய—நன்னுதலும்
தன்னுடல் விட்டுத் தனியிடம்சேர்ந் தாங்கதனை
"என்னுடல் சொல்" என்றாள் "ஈங்கு."

**அன்னம் நளனது சிறப்பைத் தமயந்தியிடம் எடுத்துரைத்தல்**

10. "செம்மனத்தான், தண்ணளியான், செங்கோலான், [மங்கையர்கள்
தம்மனத்தை வாங்குந் தடந்தோளான்,—மெய்ம்மை
நளனென்பான், மேனிலத்தும் நானிலத்தும் மிக்கான்
உளனென்பான் வேந்தன் உனக்கு."

**தமயந்தியின் மகிழ்ச்சி**

11. "வாவி உறையும் மடவனமே! என்னுடைய
ஆவி உவந்தளித்தாய் ஆதியால்—காவினிடைத்
தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி," என் [றுரைத்தாள்,
பார்வேந்தன் பாவை பதைத்து.

**வீமன் தமயந்தியின் சுயம்வரத்தை அரசர்க்கு அறிவிக்கச் செய்தல்**

12. "மங்கை சுயம்வரநாள் ஏழென்று வார்முரசம்
எங்கும் அறை" கென் றியம்பினன்—பைங்கமுகின்
கூந்தல்மேல் கங்கைக் கொழுந்தோடும் நன்றுடன்
வேந்தர்மேல் தூதோட விட்டு.

**இந்திரன் நளனை ஏவலுக்கு இசைவித்தல்**

13. காவல் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
"ஏவல் தொழிலுக் கிசை," என்றான்—ஏவற்கு
மன்னவனும் நேர்ந்தான், மனத்தினால் மற்றதனை
இன்னதென ஓரா திசைந்து.

**இந்திரன் நளனைத் தமயந்தியிடம் தூதனுப்பல்**

14. "செங்கண் மதயானைத் தேர்வேந்தே! தேமாலை
எங்களிலே சூட்ட இயல்வீமன்—மங்கைபால்
தூதாக," என்றான்; அத் தோகையைத்தன் ஆகத்தால்
கோதாக வென்றான் அக்கோ.

உருக்கரந்து செல்லுமாறு நளனுக்கு வரமீந்து
இந்திரன் அவனைத் தமயந்தியிடம் தூதாக ஏவுதல்

15. வார்வெஞ் சிலையொழிய வச்சிரத்தால் மால்வரையைப்
போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான்—" யாருமுனைக்
காணார் ; போய் மற்றவளைக் காண்" என்றான், கார்வண்டின்
பாணுறுந் தாரானைப் பார்த்து.

தமயந்தி நளனை "நீ யார் ?" என்று வினவுதல்

16. "காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய் !
யாவனோ ? விஞ்சைக் கிறைவனோ ?—தேவனோ ?
உள்ளவா சொல்," என்றாள், ஊசல் குழைமீது
வெள்ளவாள் நீர்சோர விட்டு.

இந்திரனுக்கு மாலையிடுமாறு நளன் தமயந்தியிடம் கூறல்

17. "என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகம் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவாய்," யென்றான், தொடையில்தேன் தும்பிக்கே
ஊட்டுவான் எல்லாம் உரைத்து.

தமயந்தியின் மறுமொழி

18. போதரிக்கண் மாதராள், "பொன்மாலை சூட்டத்
ஆதரித்தார் தம்மோ டவையகத்தே—சோதிச் [தான்
செழுந்தரள வெண்குடையாய் ! தேவர்களும் நீயும்
எழுந்தருள்க," என்றாள் எடுத்து.

நளன் இந்திரனிடம் தமயந்தியின் மொழிகளைத் தெரிவித்தல்

19. விண்ணவர்தம் ஏவலுடன் வீமன் திருமகள்பால்
நண்ணு புகழ்நளனும் நன்குரைத்த—பெண்ணணங்கின்
வன்மொழியும் தேவர் மனமகிழத் தான்மொழிந்த
மென்மொழியும் சென்றுரைத்தான் மீண்டு.

தேவர்கள் நளனுக்கு வரமளித்தல்

20. "அங்கி அமுதம்நீர் அம்பூ அணியாடை
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே—சங்கையறப்
பெற்றாய் !" எனவருணன் ஆகண்ட லன்தருமன்
மற்றோனும் ஈந்தார் வரம்.

### மாலைக்கால வருணனை

21. மல்லிகையே வெண்சங்கா வண்டூத, வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப,—முல்லையெனும்
மென்மாலை தோளசைய, மெல்ல நடந்ததே
புன்மாலை அந்திப் பொழுது.

### தமயந்தியின் சுயம்வரத்திற்கு மன்னர்கள் வருதல்

22. முரைசெறிந்த நாளேழும் முற்றியபின் கொற்றம்
வரைசெறிந்த தோண்மன்னர் வந்தார்—விரை
மாலை துவள முடிதயங்க வால்வளையும் [செறிந்த
காலை முரசும் கலந்து.

### தமயந்தி சுயம்வர மண்டபம் புகுதல்

23. மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்—மின்னிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னம் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று.

### தோழி தமயந்திக்கு அரசர்களை அறிவித்தல்

24. மன்னர் குலமும் பெயரும் வளநாடும்
இன்ன பரிசென் றியலணங்கு—முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினாள்,
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து.

### குரு நாட்டு மன்னன் சிறப்பு

25. "தெரியில் இவன் கண்டாய் செங்கழுநீர் மொட்டை
அரவின் பசுந்தலையென் றஞ்சி—இரவெல்லாம்
பிள்ளைக் குருகிரங்கப் பேதைப்புள் தாலாட்டும்
வள்ளைக் குருநாடர் மன்."

### கோசல நாட்டரசன் பெருமை

26. "அன்னம் துயிலெழுப்ப, அந்தா மரைவயலில்
செந்நெல் அரிவார், சினையாமை—வன்முதுகில்
கூனிரும்பு தீட்டும் குலக்கோ சலநாடன்
தேனிருந்த சொல்லாய்! இச் சேய்."

### காந்தார நாட்டு வேந்தன் மாண்பு

27. "மாநீர் நெடுங்கயத்து வள்ளைக் கொடிமீது
தானேறும் அன்னம் தனிக்கயிற்றில்—போம்நீள்
கழைக்கோ தையரேய்க்கும் காந்தார நாடன்,
மழைக்கோதை மானே! இம் மன்."

### தமயந்தி நளனுருவாயிருந்த தேவர்களைக் கண்டு மயங்கல்

28. காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாச் சென்றிருந்தார் ; பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணுநின்(று)
ஊசலா டுற்றாள் உளம்.

### தமயந்தி நளனை அறிதல்

29. கண்ணிமைத்த லால்,அடிகள் காசினியில் தோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்,—எண்ணி,
நறுந்தா மரைவிரும்பும் நன்னுதலே அன்னாள்
அறிந்தாள் நளன்றன்னை ஆங்கு.

### தமயந்தி நளனுக்கு மாலை சூட்டல்

30. விண்ணரசர் எல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகல் ஞாலம் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட, வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன்.

### குறிப்புரை

1. காமர் - அழகிய. கயல் - ஒருவகை மீன். காவி - கருங்குவளை மலர். பூமடந்தை - திருமகள். நாட்டம் - கண். நன்னாட்டின் - நல் நாட்டின் எனப் பிரிக்க.

2. சந்திரன்சுவர்க்கி - இவன் புகழேந்தியாரை யாதரித்த மள்ளுவ நாட்டு அரசன். தன்னை ஆதரித்தவனுக்கு நன்றி செலுத்துகிறார், இச் செய்யுளில். தட - பெருமைப் பொருள் தரும் உரிச்சொல். முரணை நகர் - சந்திரன்சுவர்க்கியின் தலைநகரம்.

3. வதனமதி - முகமாகிய சந்திரன். குவளைப் பூங்காடு - கண் களாகிய குவளைமலர்க்காடு. தேம் - இனிய. தேன் ஆடி - தேனில் குளித்து. பூநாடி - பூப்பறிக்க விரும்பி.

4. மாண் நிறத்தான்-மாட்சிமை பொருந்திய மார்பையுடைய நளன். அப்பு உள் - நீரில். முளரி - தாமரை : (தண்டில் முள்ளுடையது) : காரணப்

பெயர். தலை - ஏழாம் வேற்றுமையுருபு. அன்னப்புள் - அன்னப்பறவை. நீள் நிறம் - உடலின் வெண்மை நிறம். தாள் நிறம் - பாதத்தின் செந்நிறம்.

5. மேதி - எருமை. பேதை - பெண்ணே! மடம் - இளமை. பிழையாமல் - தப்பாமல். கங்கை நாட்டு வளம் கூறுவது இன்புறத் தக்கது.

6. ஆய் இழையார் - ஆராய்ந்து அணியப்பெற்ற ஆபரணங்களை யுடைய மகளிர். மலங்கிற்று - வருந்தியது.

7. பிடித்து - பற்றிக்கொண்டு. தார் - பூமாலை. வஞ்சி - வஞ்சிக் கொடி. மணி நடை - அழகிய நடை. விஞ்சியது - உயர்ந்தது.

8. நாற்குணம் - நாணம், அச்சம், மடம், பயிர்ப்பு என்பன. நாற் படை - தேர், யானை, குதிரை, காலாள். ஆர்க்கும் - ஒலிக்கும். வதன மதிகுடைக்கீழ் - முகமாகிய சந்திர வட்டக் குடை நிழலில்.

9. கன்னி - தமயந்தி. அணைய - சேர. நல்நுதலும் - அழகிய நெற்றியையுடைய தமயந்தியும். தன் ஆடல் - தன் விளையாட்டு. நாடல் - விரும்பி வந்தது.

10. செம்மனத்தான் - ஒழுங்கான மனமுள்ளவன். தண் அளியான் - குளிர்ந்த இரக்கமுள்ளவன். மேல்நிலம் - விண்ணுலகம். நானிலம் - பூமி (குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்).

11. வாவி - குளம். ஆவி - உயிர். அளித்தாய் ஆதி - காத்தா யாகிறாய். கா - சோலை. பாவை - தமயந்தி : உவமையாகுபெயர்.

12. கமுகு - பாக்குமரம். தூது - தூதுவர். ஓட - விரைந்து செல்ல. மங்கை - தமயந்தி. சுயம்வரம் நாள் - சுயம்வரம் நடைபெறும் நாள். ஏழ் - இன்றைக்கு ஏழாம் நாள்.

13. விண்ணவர் கோன் - இந்திரன். ஏவல் தொழிலுக்கு - நாங்கள் ஏவும் தொழிலைச் செய்வதற்கு. ஓராது - ஆராயாமலே.

14. எங்களிலே சூட்ட - எங்களுக்குள் ஒருவருக்கு இடும்படி. கோது ஆக - சாரமற்ற பொருளாக.

15. சிலை - வில். வச்சிரம் - வச்சிராயுதம். மால் வரை - பெரிய மலை. பாண் நாறும் - இசை மணக்கும்.

16. ஊசல் குழை - அசைந்தாடும் காதணி. விஞ்சைக்கிறைவன் - வித்யாதரர் தலைவன்.

17. தொடை - பூமாலை. தும்பி - வண்டு. இகழாது - அவமதியாமல். பொன் உலகம் - தேவலோகம்.

18. போது அரி கண் - தாமரைமலர்போன்ற செவ்வரி படர்ந்த கண். தானம் - முத்து.

19. பெண் அணங்கு - பெண்தெய்வம் போன்ற தமயந்தி. மீண்டு சென்று உரைத்தான் எனக் கூட்டுக.

20. ஆகண்டலன் - இந்திரன். மற்றோன் - அக்கினி. அங்கி - நெருப்பு. அமுதம் - உணவு. சங்கை - சந்தேகம் (வடசொல்).

21. வான் கருப்பு வில்லி - சிறந்த கரும்புவில்லையுடைய மன்மதன். புன்மாலை - அற்பமான மாலைப்பொழுது.

22. முரைசு எறிந்த - முன்பு முரசை முழங்கி அறிவித்த. விரை - வாசனை. முடி - கிரீடம். முரைசு - இடைப்போலி. வால்வளை - பண்புத் தொகை.

23. பொன்னின் மடப்பாவை - திருமகள் போன்ற இளமையுடைய தமயந்தி : இன் - ஐந்தனுருபு : ஒப்புப் பொருள்.

24. பரிசு - விதம். இயல் அணங்கு - கலைமகளுக்கு நிகரான. சேடி ஒருத்தி.

25. பிள்ளைக் குருகு - நாரைக் குஞ்சு.

26. சினை ஆமை - கருப்பமுற்ற ஆமை. கூன் இரும்பு - வளைந்த அரிவாள்.

27. மழை - மேகம். வள்ளை - ஒருவகைக்கொடி. தனி கயிறு - ஒற்றைக் கயிறு.

28. ஈர் இருவர் - நால்வர் : இந்திரன், வருணன், யமன், அக்கினி. ஊசல் ஆடு உற்றாள் - இன்னாரென்று தெரியாமல் கலங்கினாள்.

29. அடிகள் - பாதங்கள். காசினி - பூமி. நறுந்தாமரை விரும்பும் நல்நுதல் என்றது தமயந்தியை.

34. வெள்கி - வெட்கமுற்று. சுளிக்க - வருந்த. ஞாலம் - பூமி. வல்மால் ஐ - மிகுந்த மனமயக்கத்தை. பொன் - திருமகளைப் போன்ற தமயந்தி.

## பயிற்சி

1. பொருள் கூறுக : காவி, மேதி, கா, கோது, சிலை, குறை, தும்பி, தரளம், அங்கி, குருகு, காசினி.

2. இப்பகுதியில் வந்துள்ள வடசொற்கள் ஐந்து கூறுக.

3. ஆகுபெயர், தொழிற்பெயர், உரிச்சொல், பண்புத்தொகை—இவற்றிற்கு இப்பகுதியிலிருந்து ஒவ்வோருதாரணம் தருக.

4. குறிப்பு வரைக : சந்திரன்சுவர்க்கி, நாற்குணம், நாற்படை, ஐம் புலன், நானிலம், தேவர் ஈரிருவர்.

5. பிரித்துக் காட்டுக : தன்னாட்டம், முன்னாட்டு, தேனடி, நீணிறம், தாணிறம், முன்னப்புள், என்னுடல், கோதாக, பாணுறும்.

6. இப்பகுதியில் நளன், தமயந்தி, இந்திரன்—இவர்களைக் குறிக்கும் பெயர்களைக் கூறுக.

7. கோசலநாட்டு வளப்பமாக இப்பகுதியில் வந்துள்ளதைத் தொகுத்துரைக்க.

### வினாக்கள்

1. புகழேந்திப் புலவரைப் பற்றி நீவிர் அறிந்ததைச் சுருக்கி வரைக.
2. நளவெண்பாவிற்கு முதல் நூல் யாது?
3. புகழேந்திப் புலவர் நன்றியறிவுள்ளவர் என்பது எதனால் விளங்கும்?
4. நளன் பூஞ்சோலையில் சென்றதை ஆசிரியர் எவ்வாறு கூறுகிறார்?
5. அன்னப்புள் சோலையில் தோன்றியது எங்ஙனமிருந்தது?
6. நளன்முன் விடுக்கப்பெற்ற அன்னப் பறவை எந்நிலையுற்றது?
7. அஞ்சிய அன்னப் பறவையை நளன் எவ்வாறு தேற்றினான்?
8. தமயந்தி பெண்மை அரசு ஆளுதல் எவ்விதம்?
9. நளனது சிறப்பைத் தமயந்தியிடம் அன்னம் எவ்வாறு உரைத்தது?
10. நளனது நேர்மை எந்த நிகழ்ச்சியால் விளங்குகிறது?
11. மால்வரையைச் சிறகறுத்தவன் யாவன்? அவ்வரலாறு யாது?
12. அந்திப்பொழுது எவ்வாறு மெல்ல நடந்தது?
13. தமயந்தி சுயம்வர மண்டபத்திற் சென்ற காட்சி எவ்வாறிருந்தது?
14. தமயந்தியின் மனம் ஊசலாடக் காரணம் என்ன? அவள் தெளிந்தது எவ்வாறு?
15. தமயந்தி நளனுக்கு மணமாலை சூட்டியபோது யார் யார் என்னென்ன நிலையடைந்தனர்?

### கட்டுரையாக்கம்

அன்னமும் தமயந்தியும், கன்னிமாடத்தில் நளன் தமயந்தியைக் கண்டு உரையாடல், மாலைக்கால வருணனை—இப்பொருள்கள் பற்றிப் பத்து வரிக்கு மிகாமல் சிறு கட்டுரை வரைக.

## 2. குசேலபாக்கியானம்

'குசேலோபாக்கியானம்' என்னும் தொடர் குசேல+உபாக்கியானம் எனப்பிரிந்து, குசேலரது சரித்திரத்தைக் கூறும் நூல் என்று பொருள்படும். குசேலன் - பொலிவில்லாத ஆடையையுடையவன்: (பலவாய்க் கிழிந்த சிறு துணிகளை இணைத்துத் தைத்த ஆடையையுடையவன்): காரணப்பெயர். இவர் இயற்பெயர் சுதாமா என்பது. உப ஆக்கியானம் - கிளைக்கதை. இக்கதை பாகவதத்துள் வருவது.

இதன் ஆசிரியர்: வல்லூர் தேவராசப் பிள்ளை என்பவர். இவர் தொண்டை நாட்டு வல்லூரினர்; கருணீகர் குலத்தினர்; திரிசிரபுரம் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்

களிடம் தமிழ் பயின்றவர். திருவூர் சீனிவாசப் பிள்ளை இவரை ஆதரித்து இந்நூலை இயற்றும்படி வேண்டினர். இவர் சைவ சமயத்தவர் என்பர். காலம் : இற்றைக்குச் சற்று ஏறக்குறைய நூறு ஆண்டுகட்குமுன்.

கதைத் தொடர்ச்சி : கண்ணபிரானுக்குத் தலைநகரான வடமதுரைக்கு அருகிலுள்ள அவந்திநகரையடுத்த மலைச் சாரலில் சுதாமா வாழ்ந்திருந்தார். அவர் கண்ணபிரானுடன் சாந்தீபினி முனிவரிடம் கல்வி பயின்றவர். குருகுலவாசம் முடிந்தபின் சுதாமா சுசீலை என்பாளை மணந்தார். அவர்கட்குப் புதல்வர் பலர் பிறந்தனர். வறுமை மிகுந்தது. வறுமையிலும் அவர்கள் நடத்திய வாழ்க்கையின் செம்மை பின்வரும் பாடல் களால் விளங்கும்.

### குசேலர் திருமணம்

1. திறலியை தவத்திவ் வாறு
 திகழ்ந்திடும் குசேலன் என்பான்
உறலியை யத்த வத்திற்(கு)
 உதவிசெய் பாக்கு நாளும்
அறலியை கதுப்பி னுளோர்
 அணங்கினை வதுவை செய்தான்
மறலிய மன்னர் சென்னி
 மணிமுடி இடறும் தாளோய் !

### சுசீலையின் மாண்பு

2. மாசிலாக் குலத்து வந்தாள் ;
 வருவிருந் துவப்ப ஊட்டும்
நேசமிக் குடையாள் ; கொண்கன்
 நினைப்பறிந் தொழுகு நீராள் ;
தேசுறு வாய்மை உள்ளாள் ;
 சினந்திடல் என்றும் இல்லாள் ;
பேசுதிண் கற்பு வாய்ந்தாள் ;
 பெற்றதே கொண்டு வப்பாள்.

மக்கட்பேறு

3. மலையிட்ட செல்வத் தார்கள்
மகிழுவோர் மகவும் தாரான்
அலையிட்ட முட்டாள் செய்ய
அம்புயத் துறைவோன் ; ஓரேழ்
தலையிட்ட இருபான் மைந்தர்த்
தந்தனன் ; பெருமை அன்றோ ?
சிலையிட்ட தழும்பு வாய்ந்த
தெரியல்அம் தடந்தோள் வேந்தே !

குசேலர் வாழ்க்கை

4. இருநிலத் தியாவர் கண்ணும்
ஏற்பதை இகழ்ச்சி என்ன
ஒருவிய உளத்தான், காட்டில்
உதிர்ந்துகொள் வாரு மின்றி
அருகிய நீவா ரப்புல்
தானியம் ஆராய்ந் தாராய்ந்(து)
உருவவொண் ணகத்தாற் கிள்ளி
எடுத்துடன் சேரக் கொண்டு,

5. வந்துதன் மனைக்கைந் நீட்ட
வாங்கிமற் றவற்றைக் குற்றி
அந்தமெல் லியல்பா கஞ்செய்(து)
அதிதிக்கோர் பாகம் வைத்துத்
தந்ததன் பங்க யின்று
தவலரும் உவகை பூத்து
மந்திர மறைகட் கெட்டா
மாலடி நினைந்தி ருப்பான்.

சுசீலை குழந்தைகளுக்குக் கஞ்சி வார்த்தலும், அவர்கள் சண்டையிடுதலும்

6. ஒருமகவுக் களித்திடும்போ தொருமகவு
கைநீட்டும் ; முந்தி மேல்வீழ்ந்(து)
இருமகவும் கைநீட்டும் ; மும்மகவும்
கைநீட்டும் ; என்செய் வாளால் !

பொருமிஒரு மகவழும் ; கண் பிசைந்தழும் மற்
றொருமகவு ; புரண்டு வீழாப்
பெருநிலத்திற் கிடந்தழுமற் றொருமக(வு) ; எங்
ஙனம்சகிப்பாள் ? பெரிதும் பாவம் !

**கஞ்சி கிடைக்கவில்லை என்று குழந்தைகள் வருந்தல்**

7. 'அந்தோ ! என் வயிற்றெழுந்த பசியடங்கிற்
றில்லை !' என அழுமால் ஓர்சேய் ?
'சிந்தாத கஞ்சிவார்க் கிலையெனக்கன்
றாய் !' எனப்பொய் செப்பும் ஓர்சேய் ;
முந்தார்வத் தொருசேய்மி சையப்புகும்போ
தினிலொருசேய் முடுகி ஈர்ப்ப,
நந்தாமற் றச்சேயும் எதிரீர்ப்பச்
சிந்துதற்கு நயக்கும் ஓர்சேய்.

**சுசீலை குழந்தைகளைத் தேற்றுதல்**

8. இவ்வண்ணம் கலாம்விளைக்கும் மைந்தர்களை
நனிநோக்கி இரங்கி ஏங்கிச்
செவ்வண்ணக் கரதலத்தால் அணைத்துமடித்
தலத்திருத்திச் சிறப்புச் செய்து
மைவண்ணக் கண்ணீரைத் துடைத்து, முகம்
வெரிந்புறந்தை வந்தும், ஆம்பல்
அவ்வண்ண வாய்முத்தம் கொண்டுநயத்(து)
ஓர்விதத்தில் ஆற்றல் செய்வாள்.

**குழந்தைகளின் வினாவும் சுசீலையின் விடையும்**

9. அடுத்தமனைச் சிறுனொருவன், 'இன்றுநும(து)
அகங்கறிஎன் அட்டார் ?' என்று
தொடுத்துவினு யினுல்அச் சொற்பொருள்யா(து)
அதுதான்எச் சுவைத்தன் றாய் ! நீ
எடுத்துரை,'' என்றிடுமகவுக் குரைக்கிலது
செய்யெனிலென் செய்வாம் என்று,
'' மடுத்தவஃ தறிந்திலேன்,'' எனமற்றொன்
றுரைத்ததனை மறக்கச் செய்வாள்.

கசீலையின் துயரம்

10. வேறுமனைச் சிறுனயின்ற பக்கணங்கண்(டு)
ஓடிவந்து விழிநீர் வாரச்
சீறுதலி லாதஅனை முகம்பார்த்(து) " இன்
னுன்இன்ன தின்ருன் ; என்வாய்
ஊறுதலால் இப்பொழுதே செய்தளித்தி,"
எனவுடுத்த உடைதொட் டீர்க்கும்
தேறுதலில் சிறுமகவை எடுத்துமார்
பிடையணைத்துச் சிந்தை நோவாள்.

குழந்தைகள் அணிகலன் வேண்டுமெனல்

11. " குண்டலம்மோ திரம்கடகம் சுட்டிஅயல்
மனையார்தம் குழவிக் கிட்டார் ;
புண்டரிகக் கண்அன்னுய் ! எனக்குநீ
இடாதிருக்கும் பொருமை என்னே ?
கண்டெடுத்திப் போதி(டு)" எனக் கரைமதலைக்(கு)
இல்லாதான் கடன்தந் தானுக்(கு)
எண்டபச்சொல் வார்த்தையென, ' நாளைக்கு
நாளைக்(கு) 'என் றியம்பிச் சோர்வாள்.

வறுமை நிலை

12. சிறியசித மணிப்பூணே அன்றிவே(று)
ஒருபூண்அச் சேய்கட் கில்லை ;
வறியமர நாருரியே உடையன்றி
மற்றுடைகள் மருவல் இல்லை ;
வெறியபொழில் தழைத்தஇலை உண்கலமல்
லாதுகலம் வேருென் றில்லை ;
குறியமனை வயின்புகுமோர் எறும்பினுக்கும்
ஆங்குணவு கொடுத்தற் கில்லை.

சுசீலையின் பொறுமை

13. இவ்வாறு மிடியென்னும் பெருங்கடலுள்
அழுந்தியுந்தற் கினிமை சான்ற
செவ்வாய்மை அந்தணனை வெறுத்துரையாள் ;
அலர்மொழிகள் சிறிதுஞ் செப்பாள் ;

துவ்வாமை மைந்தர்கள்பால் மறந்துமியற்
றுள் ; அவள்தன் சுகுணம் என்னே !
'எவ்வாறித் துயர்க்கடல்நீந் துவம் !' எனுமோர்
எண்ணமுளத் தென்றும் உண்டால்.

கண்ணனிடம் சென்று பொருள் பெற்று வருமாறு
சுசீலை குசேலனை வேண்டுதல்

14. யாதவர் குலத்தில் தோன்றிய அரசர்
யாவர்க்கும் அதிபனும் இணையின்
மாதவ னுடன்நீ பல்கலைக் கடலை
வாய்மடுத் தனையென வகுப்பார் ;
ஆதலின், அப்பீ தாம்பரன் மருங்கில்
அணைந்தவன் பாற்பெருஞ் செல்வம்
தீதறக் கொண்டு கொடுத்துநம் சிறுவர்
செல்லல்நோய் தவிர்க்குதல் வேண்டும்.''

குசேலர் " கண்ணனுக்குக் கையுறை கொண்டு
செல்ல வேண்டும்,'' எனல்

15. "எழுக டற்கொரு புன்னுனிப் பனித்துளி
என்னுவ கையைச்செய்யும் ?
கொழும லைத்துணைத் தேவுக்கம் மலைத்துணை
கொண்டுபோற் றிடலுண்டோ ?
செழும திக்குச்சின் னூலிழை பறித்திட்டுச்
சிந்தித்த துறல்போல
முழுமு தற்குமே தாவது கையுறை
கொண்டுமுன் னுறல்வேண்டும்.''

சுசீலை அவல் சேர்த்தல்

16. என்றுரைத்த கொழுநனுரை கேட்டுமகிழ்ந்(து)
'இதற்கென்னு செயல் !'என் றெண்ணி,
அன்றுமுதல் உபவாசம் தானிருந்து,
மாமுனிவன் அரிதில் தேடி
நன்றளிக்கும் நெல்லினில்தன் ஒருபாகம்
வேறெடுத்து நலக்கச் சேர்த்து,
துன்றியஅந் நெல்லையொரு தினத்தறலில்
நனைத்துவறுத் தெடுத்துத் தூய்தா,

குசேலரின் புறப்பாடு

17. கறையிட்டு நனிகாண உலக்கைகொடு
மிக்கிடித்துக் கரிசு போக்கி,
நிறையிட்ட அவலாக்கிக் குசேலமுனி
கந்தையினில் நேடி ஓர்பால்
மறையிட்ட ஒழுங்குடையாள் முடிந்துகொடுத்(து)
"இனிதுபோய் வருக!" என்றாள்;
சிறையிட்ட பவம்நீங்கும் வழிகண்டோன்
வழிதேடிச் செல்லல் உற்றான்.

குறிப்புரை

1. திறல் இயை தவம் - ஆற்றல் பொருந்திய தவ ஒழுக்கம். உறல் இயை - உறுதல் பொருந்திய. செய்பாக்கு - செய்ய: (பாக்கு-வினையெச்ச விகுதி). அறம் இயை கதுப்பினாள் - ஆற்றின் கருமணலை ஒத்த கூந்தலையுடையவள் (சுசீலை). வதுவை - திருமணம். சென்னி - தலை. தாளோய்-பாதங்களையுடையவனே! பரீட்சித்து மன்னனுக்குச் சுகர் என்னும் முனிவர் பாகவத சரிதம் கூறிவரும் போது, குசேலரின் வரலாற்றை உரைக்கத் தொடங்கி அம்மன்னனைப் பார்த்துக் கூறுவது, இது.

2. கொண்கன் - கணவன். நீரான் - தன்மையுடையவன். தேசுஉறு-புகழ் மிகுந்த. உறு: உரிச்சொல்.

3. மலைஇட்ட - மலைபோன்ற (இடு - உவம உருபு). அலை இட்ட - நீரில் தோன்றிய (அலை - சினையாகுபெயர்). முள் + தாள் = முட்டாள் - முட்களையுடைய தண்டு: (முட்டாள் - புத்தியில்லாதவன் என்றும் சிலேடை வகையால் பொருள் தோன்றும்படி அமைத்த நயம் காண்க). செய்ய அம்புயம் - செந்தாமரை: (அம்புஜம் - நீரில் முளைப்பது எனப் பொருள் படும் வடசொல்). அம்புயத்து உறைவோன் - பிரமன். ஓர் ஏழ் தலை இட்ட இருபான் மைந்தர் - இருபத்தேழு புதல்வர். தடந்தோள்—தடம்: உரிச்சொல்.

4. இரு நிலத்து - பெரிய பூமியில். ஒருவிய - நீங்கிய. அருகிய - சிறிதாகிய. நீவாரம் - (முனிவர் உணவாகக் கொள்ளும்) காட்டு நெல்.

5. மெல்லியல் - மென்மையான தன்மையை யுடையவள் (சுசீலை). அதிதி - விருந்தினர்: வடசொல். அயின்று - உண்டு: அயில்: பகுதி. தவல் அரும் - கெடுதல் இல்லாத. மலரடி - தாமரைபோன்ற பாதம்: உவமைத் தொகை.

6. மகவு - பிள்ளை. பொருமி - விம்மி. முந்தி - மடி.

7. சேய் - பிள்ளை. மிசைய - உண்ண. முடுகி ஈர்ப்ப - விரைந்து இழுக்க. நந்தா - பின்னிடாத. நயக்கும் - விரும்பும்.

8. கலாம் - கலகம். நனி - மிகவும் : உரிச்சொல். மைவண்ணம் - கருநிறம். வெரிந் - முதுகு. தைவந்து - தடவி : தைவா - பகுதி. ஆம்பல் - செவ்வல்லி மலர்.

9. சிறுன் - சிறுவன் (சிறுமை + அன்). அட்டார் - சமைத்தார். தொடுத்து - தொடர்ந்து.

10. பக்கணம் - தின்பண்டம் (பக்ஷணம் : வடசொல்). வார - வடிய.

11. சுட்டி - நெற்றியில் அணியும் ஒருவகை ஆபரணம். புண்டரிகம் - தாமரை மலர். கரை மதலை - அழுகின்ற குழந்தை : வினைத்தொகை. எண்தப - அளவுகெட.

12. சிதமணி - பாசிமணி. பூண் - ஆபரணம். வெறிய - நறுமணமுள்ள. பொழில் - சோலை. கலம் - பாத்திரம். வயின் : ஏழாம் வேற்றுமையுருபு. மருவல் : தொழிற்பெயர்.

13. மிடி என்னும் பெருங்கடல் - வறுமையாகிய பெரிய கடல். அலர் மொழி - பழி தூற்றும் மொழி. துவ்வாமை - பட்டினி.

14. யாதவர் - யது வமிசத்தினர், அதிபன் - அரசன். இணையில் - ஒப்பில்லாத - மாதவன் - கண்ணன். கலைக் கடல் - சாத்திரங்களாகிய கடல். வாய்மடுத்தனே - பருகினுய் (கற்ருய் என்றபடி). வகுப்பார் - (பெரியோர்) கூறுவர். பீதாம்பரன் - பொன்னுடையை யுடையவன் (கண்ணன்). மருங்கு— பக்கம். செல்லல் நோய் - வறுமையாகிய பிணி.

15. மலை துணை தே - மலை அளவான பெருமையுடைய தெய்வம் (கண்ணன்). மதி - சந்திரன். முழு முதல் - கண்ணன். கையுறை - காணிக்கை. நல்ல கணவன் தமக்குக் கிடைக்க வேண்டும் என்று தமது முன்றானையின் நூலிழையைச் சிறிதெடுத்துக்கிள்ளி பிறைச் சந்திரனைத் தொழுது வேண்டுதல், கன்னிப் பெண்களது வழக்கம்.

16. கொழுநர் - கணவர். உபவாசம் - விரதம். மாமுனிவன் - குசேலன். நலக்க - நன்மையுண்டாக. துன்றிய - நிறைந்த : துன்று - பகுதி. அறலின் நனைத்து - நீரில் நனைத்து.

17. கறை - உரல். கரிசு - உமி. நேடி - ஆராய்ந்து. பவம் - பிறப்பு. கண்டோன் - குசேலன் : வினையாலணையும் பெயர்.

## பயிற்சி

1. பொருள் கூறுக : அறல், சென்னி, தேசு, அம்புயம், நீவாரம், சுட்டி, மிடி, செல்லல், கையுறை, கறை, கரிசு.

2. பிரித்துக் காட்டுக :—மாசிலா, முட்டாள், தவலரும், மகவழும், கண்ணீர், முன்னுறல், வேறெடுத்து, ஒண்ணகம், எண்டப.

3. பகுதிகூறுக : அயின்று, தைவந்து, துன்றிய, தெரியல், அருகிய, முடுகி, எடுத்து, நேடி.

4. இப்பகுதியில் வந்துள்ள உரிச்சொல், தொழிற்பெயர், உவமை உருபு, வினையாலணையும் பெயர், ஆகுபெயர், வடசொல்—இவைகட்கு இரண்டிரண்டு உதாரணம் தருக.

5. எதிர்ப்பதம் தருக :—சுகுணம், இகழ்ச்சி, அருகிய, பொய், மறக்க, குறிய, வெறுப்பு.

6. வதுவை, மாசிலா, தெரியல், அதிதி, பக்கணம்—நும் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

## வினாக்கள்

1. குசேலர் என்று பெயர் வரக் காரணம் என்ன? அவர் இயற்பெயர் யாது?

2. குசேலோபாக்கியான ஆசிரியரைப் பற்றிச் சிறு குறிப்பு வரைக.

3. 'மறலிய மன்னர் சென்னி மணிமுடி இடறும் தாளோய்'—இதன் பொருளைக் கூறி, இது யாரைக் குறிக்கும் என்பதை இடங்காட்டி விளக்குக.

4. 'அலையிட்ட முட்டாள் செய்ய அம்புயத்துறைவோன்'—இது யாரைக் குறிக்கும்? இதிலமைந்துள்ள சிலேடை நயம் என்ன?

5. சுசீலையின் உத்தம குணங்களைச் சுருக்கித் தருக.

6. குசேலரது தூய வாழ்க்கை நிலையை விளக்கி வரைக.

7. சுசீலை தன் குழந்தைகளைப் போற்றியது எவ்வாறு?

8. குழந்தைகளின் அணிகளாக நீவிர் அறிபவை எவை?

9. குசேலர் ஆச்சிரமத்தில் வறுமையே குடிகொண்டிருந்தது எவ் விதம்?

10. சுசீலையின் சுகுணம் என்று கூறத்தக்கது எது?

11. கண்ணபிரானைக் காணும்படி சுசீலை குசேலரை எவ்வாறு வேண்டினாள்?

12. சுசீலை குசேலரிடம் கையுறையாகத் தந்தது என்ன? அதை அவன் எப்படிப் பக்குவம் செய்தாள்?

13. சிறையிட்ட பவம் நீங்கும் வழி கண்டோன், பீதாம்பரன், மலைத் துணைத் தே—இத்தொடர்கள் யார் யாரைக் குறிக்கும்?

14. 'செழுமதிக்குச் சின்னூலிழை பறித்திட்டுச் சிந்தித்தது உறல்'—இதன் பொருள் என்ன? இதனால் நீவிர் அறிவது யாது?

15. 'எழுகடற்கு ஒரு புன்னுனிப் பனித்துளி என்னுவகையைச் செய்யும்' இஃது யார் கூறியது? இதனால் விளங்குவது யாது?

## கட்டுரையாக்கம்

சுசீலையும் குழந்தைகளும், குசேலர் குண நலங்கள், சுசீலையின் பதி பக்தி—இப்பொருள்கள் பற்றிச் சிறு கட்டுரைகள் வரைக. (10 வரி)

## 5. சாவித்திரி வெண்பா

சாவித்திரியின் சரிதையை வெண்பாவிற் கூறும் நூல், இது. இக்கதை மகாபாரதத்தில் ஆரணிய பருவத்தில் வருவது. இந்நூல் கற்பின் திறத்தை முக்கியமாகக்கொண்டு பல நீதிகளைக் கூறுகின்றது.

இந்நூலை இயற்றியவர் உயர்திரு. ஐ. சாமிநாத முதலியார் அவர்கள். இவர் வித்வான் தியாகராச செட்டியார் அவர்களிடம் தமிழ் பயின்றவர்; உயர்நிலைப்பள்ளி மேற்பார்வையாளராகத் தஞ்சை மாவட்டத்தில் வேலை பார்த்தவர்; சைவப் பற்றுடையவர்; இற்றைக்குச் சுமார் அறுபது ஆண்டுகட்கு முன் இருந்தவர்.

**கதைத் தொடர்ச்சி:** யமன் சத்தியவான் உயிரைக் கவர்ந்து செல்லலுற்றான்; அப்பொழுது சாவித்திரி அவனைப் பின் தொடர்ந்து உரையாடலானாள் :

### சாவித்திரி யமனை வினாவல்

1. "யாரையா நீவிர்? இவண் எங்குநின்று வந்தீர்? என்
ஆருயிருக் காருயிராம் ஆண்டகைதன்—ஓருயிரை
என்கொண்டு செல்கின்றீர்!" என்றாள், இசையுலகில்
நன்கென்றும் நாட்ட நயந்து.

### யமன் கூறிய விடை

2. "கற்புக் கருங்கலமே காமருபூங் கொம்பே! யான்
தெற்குத் திசைக்கிறைமை சேர்தருமன்–நற்குணமும்
நற்செய்கை யும்மொருங்கே நன்கமைந்த நின்கொழுநன்
தற்குரிய நாளுலந்த தால்.

3. "கற்பின் பெருமையினுன் கட்புலனில் நேர்பட்டேன்;
அற்பமல இக்காட்சி; அன்றியுங்கேள்;—மற்புயத்த
நின்கொழுநன் தன் தூய்மை நேர்மைகுறித் தியான்பிடித்தேன்
வன்கணர்த்தூ தர்கொள்ளு வார்."

4. ஏன்படுவை நீகவலை? என்றுமுல கிற்பிறந்தார்
தான்படுவர் என்னு முண்மை தானறிந்தும்—மான்படுகண்
நங்காய்! துயரொழிந்துன் நல்லிருப்பைச்சேர்தி" என்றான்
மங்கையிது கூறும் மறுத்து.

**தன்னையும் உடனழைத்துச் செல்லுமாறு சாவித்திரி யமனை வேண்டுதல்**

5. நல்லிருப்பே தென்றனக்கு நாதன் பிரிந்தக்கால்?
அல்லுருக்கொண் டிங்குவந்த அம்மான்! நீ—மெல்ல
எனையும் உடன்கொண்டு போந்தருள" என்றாள்
மனைமாண்பில் ஒப்பிலா மாது.

**சாவித்திரியைக் கொண்டுபோக இயலாதென யமன் கூறுதல்**

6. காலம் அறிந்துயிரைக் கோளிழைக்குங் காரணத்தால்
காலன் எனுமரிய காரணப்பேர்—சாலப்
படைத்துள னஃ தின்றேபோம், பைந்தொடிநீ, காலம்
கடக்குமுன் நிற்பிடித்தக் கால்."

**கணவன் உயிரைத்தவிர வேறு வரம் வேண்டுமாறு யமன் கூற, சாவித்திரி சொல்லுதல்**

7. "கணவன் மனைவியவர் காணில் உயிருடம்பாம்
கணவனிறந் தால்மனைவி கட்டைப்—பிணமதனுக்(கு)
என்னவரம் வேண்டுமைய, ஏழைபிரி யாவகைநீ
பன்னல்நலம்" என்றாள் பரிந்து.

**வேறு வரம் கேட்பின் தருவதாக யமன் மீண்டும் உரைத்தல்**

8. "நாளுலந்தான் நல்லுயிரை நான்கவர்ந்தேன் நாகனமே!
மீள விடுக்க விதியின்றால்—கேளதைநீத்(து)
என்னவரம் வேண்டினும்நீ, யான்தருவன் சத்தியமே"
என்னவிசைத் தான்தருமன் ஏய்ந்து.

*யமன் கூறியதற்கிணங்க, சாவித்திரி தனது மாமன் மாமியார் இழந்த கண்களையும் நாட்டையும் மீட்டும் பெற வரம் பெற்று, அவனைப் பின்றொடர்ந்தாள். அது கண்ட யமன் மேலும் கூறலுற்றான்:*

9. கோறல் தருமமெனக் கொண்டான், குணவதிபின்
சேறல் தனையொழிப்பான் செப்புவான்—" கூறுவினை
வேறலரி தென்பின் மெல்லியலே! சென்றுதுயர்
ஆறலரி(து)" என்றான் அடுத்து.

**சாவித்திரி தன்னையும் கொண்டுசெல்லுமாறு மீண்டும் யமனை வேண்டுதல்**

10. "கணவற் பிரிந்தபின்னர்க் கைம்பெண்ணாய் ஈண்டோர்
கணமுந் தரித்திருத்தல் கற்போ!—குணநிதி, நீ
பின்னும் மறுதருள்வாய், பேணு மவருயிரோ
டென்னையுங்கொண் டேக" வென்றாள் ஏய்ந்து.

**யமன் மறுத்துக் கூறுதல்**

11. "கருவித் துற்றவன்றே காலமுதல் யாவும்
மருவு கணக்கிட்டு வைத்த(து)—ஒருவரால்
மீறி நடத்த லியலாது மெல்லியலே!
சேறியுன தூர்" என்றான் தேர்ந்து.

**எப்படியாவது தன்னையும் கொண்டுசெல்லும்படி சாவித்திரி வேண்டுதல்**

12. "பேறிளமை யின்பம் பிணிமூப்புச் சாக்காடென்
றுறுங் கருவி லமைத்தபடி—நாறுமென்றாய்!
கூறுவிதிக்கு விலக்குண்டோ? கூற்றுவ! யான்
கூறுவதைப் பின்னுங் குறி."

13. "யாருங்கா ணுவுருவை யான்கண் டிடப்பணித்தாய்!
யாருங்கா ணுவுன் எழி லூர்யான்—சேரும்
விதமருளல் நிற்கரிதோ? மேலவனே!" என்றாள்,
இதவசனத் தீடுயர்வில் லாள்.

**மீண்டும் யமன் "வேறு வரம் கேள்" எனல்**

14. "மன்னும் எனதியல்பின் மாறுபடக் கூறுதலின்
என்னபயன்? நன்னுதலே! இங்கிதைவிட்—டென்னவரம்
கேட்டாலும் ஈயவல்லேன்; கேள்" என்றான்; தன்னைவிட
மாட்டாளை மேன்மேல் மதித்து.

சாவித்திரி தன் பெற்றோருக்குப் புத்திரப்பேறு அருளும்படி வரம் கேட்டாள். தருமனும் அவ்வாறே அருளினான். மேலும் சாவித்திரி அவனைப் பின்தொடரலானாள்.

சாவித்திரி பின்னும் வேண்டுதல்

15. "அன்னானை உன்னொடுவிட் டையா ! தனித்திருந்தே
என்னாளை என்கழிப்பேன், ஏமுறுவேன்—தென்னாடு
மன்ன ! எனை யுங்கொடுபோய் மன்னு தருமனெனும்
நன்னாமம் நேர்நிறுத்தல் நன்று."

யமன் சாவித்திரியை வாழ்த்தி, வரம்
கேட்கச் சொல்லுதல்

16. என்றாளைத் தென்திசைக்கோன் ஏம முறநோக்கி,
"குன்றாத மங்கலியக் கோமளமே !—பொன்றாத
சீர்த்தியாய் ! பின்னுமோர் செய்யவரம் கேள்" என்றான்
கீர்த்தி பெருகக் கிளர்ந்து.

யமன் தன்னைக் 'குன்றாத மங்கலியக் கோமளமே !' என வாழ்த்தியது கொண்டு, அந்த வாக்குப் பலிக்குமாறு செய்யும் பொருட்டுச் சாவித்திரி மற்றோர் வரம் வேண்டினள்.

17. "என்பொருட்டால் இன்றுசெய்வ தொன்றுண்டால் ; என்கணவன்
தன்பொன் குலம்விளங்கச் சந்தமக—வைம்ப(து)
இரட்டியெளி யேன்பெறத்தா !" என்றிரந்தாள், மானை
மருட்டுண்கண் மாது மதித்து.

யமன் வரமளித்தல்

18. தன்னை மறந்தவனாய், "தந்தோம் ! தந்தோம் ! அயரேல்
இன்னலொழிந் துன்னூர் இனிதேகி—மன்னியிருந்
தெண்ணரிய மக்கட்பே றெய்திவாழ் வாயாக !
பெண்ணரியாய் !" என்றான் பெயர்த்து.

'தந்த வரம் பலிக்கும் : ஊர் சென்று சீருறுக'
என்று யமன் கூறுதல்

19. "சொன்ன உரையிலொன்றுஞ் சோராம லேபலிக்கும்
நன்னயமெல் லின்மொழியாய் ! நன்கினியுன்—தொன்னகரம்
சென்றரிய செல்வமகப் பேறெய்திச் சீருறுக !"
என்றான் இயமன்றான் ஏய்ந்து.

### சாவித்திரி வினுவல்

20. "தொன்னகரஞ் சென்று சுதரைப் பெறுவதெங்ஙன்?
என்னுயிருக் கின்னுயிராம் என்கணவன்—தன்னுயிரை
வன்பொடுகொண் டேகுவையேல்? மாபெரியாய்!" என்றுரைத்தாள்
தென்புலத்தார் கோமான் தெளிந்து.

### யமன் திகைப்புற்றுக் கருதுதல்

21. "தந்தோம் மகப்பேறு! தாரோம் கணவனுயிர்!
அந்தோ மயிலோ அருந்ததி—நந்தா
வரனை நிறை வேற்றவெனின் மாறுங் கடமை
திரமறியோம்" என்றான் திகைத்து.

### தனக்கு அளித்த வரம் நன்கு பலிக்குமாறு சாவித்திரி மீண்டும் வேண்டுதல்

22. "ஆருயிரின் தாயே! அறத்தின் பிறந்தகமே!
பேரருளின் கண்ணே! பெருமானே!—நேரெனை நீ
'குன்றாத மங்கலியக் கோமளமே' என்றவுரை
நன்றாக முற்றவகை நாடு."

### அதுகேட்ட யமன் கருதியதும் சொல்லியதும்

23. என்றவுரை கேட்டான், "இவள்கூறு மிக்கூற்று
நன்றுநமக் கோர்கூற்றாய் நண்ணியதே!—என்றும்
அடங்காத நாவுடையார்க் கன்னார்வாய்ச் சொல்லே
மடங்காப் பகை" என்றான் மற்று.

24. சொல்லென் பதுசிறிது; சொற்பெருமை யோபெரிது
தொல்லுலகில் ஈடிதற்குச் சொல்லவொன்றும்—இல்லையால்
வில்லுஞ் சிலகால் வெலாதொழியும்; மேலோர்கள்
சொல்லுஞ்சொல் தோற்றதுண்டோ? சொல்.

25. "ஆதலினின் காதலன்றன் ஆருயிரை யான்விடுத்தேன்;
தீதணையா மங்கலியச் செந்திருவே—ஓதுசுதர்
நூறுறுவர், சோதரரும் நூறுறுவர் மாதுலரும்
பேறுறுவர் கண்ணுமண்ணும் பெற்று."

## குறிப்புரை

1. இசை - (தனது) புகழ். ஆண்தகை - ஆண்மைக் குணமுள்ள கணவன். இசை : எதிர்மொழி, வசை.

2. அருங்கலம் - அழகிய ஆபரணம். காமரு பூ கொம்பே - அழகிய பூங்கொம்பு போன்றவளே. கொழுநன் - (கொடிக்குக் கொழுகொம்பு போன்று பெண்ணுக்கு ஆதரவானவன்) கணவன். உலந்தார் - முடிந்தவர். உறேன் - புலப்பட மாட்டேன். ஆற்றுவான் - 'வான்' ஈற்று வினையெச்சம்.

3. மல்புயத்த - வலிமை பொருந்திய தோள்களையுடைய. வண்கணர் - கொடியவர். குறித்து + யான் = குறித்தியான் - குற்றியலிகரம்.

4. மான் படு கண் - மான்தோற்பதற்குக் காரணமான கண்ணழகு. நல் இருப்பு - நல்வாழ்வு. சேர்தி - ஏவலொருமை முற்று.

5. மனைமாண்பு - இல்லற ஒழுக்கம். அல் உரு - இருள்போன்ற கரிய உருவம். பிரிந்தக்கால் - எதிர்கால வினையெச்சம்.

6. கோள் இழைக்கும் - கொண்டு செல்லும். அஃது - காலன் என்ற அக்காரணத்தால் வந்த பெயர்.

7. கட்டைப் பிணம் - பிணக்கட்டைப் போல்வாள். பன்னல் - வரமளித்தல்.

8. விதிஇன்று - (எனக்குக்) கட்டளை இல்லை. நாகு அனமே - இளமையாகிய அன்னப்பறவை போன்றவளே. நாகு - இளமைப் பெயர்.

9. கோறல் - உயிர் கவர்தல்; (கொல் + தல்). ஒழிப்பான் - நீக்கும் பொருட்டு. வேறல் - வெல்லுதல்; (வெல் + தல்). குணவதி - பெண்பால் : குணவான்: ஆண்பால்.

10. ஏய்ந்து - மனம் பொருந்தி. தன் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும் என்று யமனை 'குணநிதிநீ' என்று புகழ்ந்தனன்.

11. தேர்ந்து - ஆலோசித்து. சேறி - செல்வாய். (செல் - பகுதி, இ - விகுதி.)

12. பேறு - உடம்பைப் பெறுதல். சாக்காடு - மரணம் (தொழிற் பெயர்). நாறும் - தோன்றும். குறி - ஆலோசித்துப் பார். மூப்பு - 'மூ' பகுதி. கூற்றுவன் - உடம்பையும் உயிரையும் கூறுபடுத்துங் கடவுள்.

13. எழில் ஊர் - அழகிய நகரம். இதவசனம் - இன்சொல். சிறிதும் கண்ணோட்டமின்றித் தொழில் செய்யும் யமனையும் தனது இன்சொல்லால் வசப்படுத்தவல்லவ ளாதலால் 'இதவசனத்து ஈடு உயர்வு இல்லாள்' என்றார்.

14. நல் நுதலே - அழகிய நெற்றியை யுடையவளே. ஈயவல்லேன் - நிச்சயமாகக் கொடுப்பேன்.

15. ஏமுறுவேன் - செய்வது இன்னது என்று தோன்றாது மயங்குவேன்.

16. *சீர்த்தியாய்* - மிகுந்த புகழுடையவளே ! ஏமம்உற நோக்கி - அன்பு பொருந்தப் பார்த்து.

17. பொன் குலம் - அருமையான குலம். சந்தம் மகவு ஐம்பது, இரட்டி - நூறு அழகிய குழந்தைகளை. மானை மருட்டு - மானையும் மருளச் செய்யும் : மானின் கண்ணைவிட அழகிய என்றபடி. உண்கண் - மையுண்டகண்.

18. அயரேல் - வருந்தாதே. இன்னல் - மனவருத்தம்.

19. நல் நயம் மெல் இன்மொழியாய் - நல்ல நீதியுள்ள மெல்லிய இனிய சொற்களை யுடையவளே.

20. வன்பொடு - உன் வலிமையினால். சுதர் - புதல்வர்.

21. மயிலோ - மயில்போன்ற சாயலையுடைய இவளோ. அருந்ததி - கற்பினால் அருந்ததி போல்வாள். நந்தா - தவறாமல் பலிக்கவேண்டிய.

22. அறத்தின் பிறந்தஅகமே - தருமத்திற்குப் பிறப்பிடமானவனே. முற்ற - பலிக்கும்படி.

23. கூற்று - வார்த்தை, யமன். நண்ணியது - நேர்ந்தது. மடங்காப் பகை - அழியாத பகைமை. ‘ கூற்றின் கூற்று அவனுக்கே கூற்றாயிற்று ’ என்று நயந்தோன்றக் கூறியது காண்க.

24. சிலகால் - சிலசமயம், “ சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாஞ் சொல்லிய வண்ணஞ் செயல் ” என்பது தமிழ்மறை.

25. செந்திருவே - திருமகள் போன்றவளே. மாதுலர் - மாமன் மாமியர். பேறு உறுவர் - இழந்த அரசியலையடைவார்கள்.

பயிற்சி

1. பொருள் கூறுக : ஆண்தகை, அல்லுரு, நாகு, ஏமுறுவேன், ஏமம், சுதர், திறம் செந்திரு.

2. எதிர்மொழி தருக : இசை, இதவசனம், இன்மொழி.

3. இப்பகுதியில் வந்துள்ள வடசொற்களை எடுத்துக் காட்டுக.

4. யமனுக்குரிய பெயர்களாக இங்கே வந்துள்ளவற்றைக் குறிக்க.

வினாக்கள்

1. “ என் கணவன் உயிரை ஏன் கொண்டு செல்லுகின்றீர் ?” என்ற சாவித்திரிக்கு யமன் கூறியது என்ன ?

2. “ மங்கை இது கூறும் மறுத்து ”—மங்கை எதனை மறுத்தாள் ? என்ன கூறினாள் ?

3. யமன் தனக்குக் காலன் எனப் பெயர் வந்ததன் காரணத்தை எவ்வாறு கூறினான் ?

4. கணவன், மனைவி, என்பவர் எத்தன்மையர் ? சாவித்திரி வாக்கால் விளக்குக.

5. ‘ கூறுவிதிக்கு விலக்குண்டோ ?’ சந்தர்ப்பங் கூறி விளக்குக.

6. 'இதவசனத் தீடுயர் வில்லாள்'—யார்? இவ்வாறு கூறியது ஏன்?

7. 'குன்றாத மங்கலியக் கோமளமே' என்று யமன் சொல்லியது கொண்டு சாவித்திரி அவனை எவ்வாறு வென்றாள்?

8. யமன் திகைப்புற்றுக் கருதியது யாது?

9. நாவடக்கத்தின் இன்றியமையாமை, மேலோர் சொல்லுஞ் சொல் தோற்பதில்லை—என்ற கருத்துக்கள் எங்ஙனம் விளக்கப்படுகின்றன?

### கட்டுரையாக்கம்

1. சாவித்திரிக்கும் யமனுக்கும் நிகழ்ந்த பேச்சை உரையாடல் நடையில் அமைத்து எழுதுக.

2. 'நாவடக்கம்' என்ற பொருளைத் தலைப்பாகக் கொண்டு இக் கதையை அமைக்க.

# IV. சிறுநூற் கோவை

## 1. திருவரங்கத்தந்தாதி

முன் நின்ற செய்யுளின் ஈற்றிலுள்ள எழுத்தாயினும் அசையாயினும் சீராயினும் அடியாயினும் அடுத்து வரும் செய்யுளின் முதலாக வரும்படி நூறு செய்யுளால் பாடப்படுவதோர் சிறுநூல் அந்தாதி எனப்படும். இது திருவரங்க (ஸ்ரீரங்க) த்தைப் பற்றிய அந்தாதி. இதன் ஆசிரியர் **பிள்ளைப்பெருமாள் ஐயங்கார்** என்பவர். இவர் காலம் 750 வருடங்கட்கு முன்.

1. **தலை**யிலங் காபுரஞ் செற்ரு
   னரங்கனென் தாழ்சொற்புன்கு
   தலையிலங் காதரஞ் செய்த பிரான்
   சரணன்றி மற்ருேர்
   தலையிலங் கானின்ற கண்ணிலங்
   காண்கைக்குத் தாழுகைக்குத்
   தலையிலங் காதிலங் கேட்கைக்கு
   வாயிலஞ் சாற்றுகைக்கே.

2. **கைக்குஞ்** சரமன் றளித்தாய்!
   யரங்கமண் காக்கைக்குமாய்க்
   கைக்குஞ் சரம சரம் படைத்
   தாய்கடல் நீரெழுத்து
   கைக்குஞ் சரம கரக்குழை
   யாய்!எனைக் கைக்கொளுடல்
   கைக்குஞ் சரம தசையிலஞ்
   சேல்என்றென் கண்முன்**வந்தே.**

3. **வந்தனை** யேற்றனை என்புன் சொற்
   கொண்டனை வன்மனத்தே
   வந்தனை யேற்றனை யாவையு
   மாயினை வான்தரவு
   வந்தனை யேற்றனை தாளுெத்த
   தாளில்வைப் பாய்பலித்து
   வந்தனை யேற்றனைத் தீர்த்தாய்
   அரங்கத்து மாதவனே.

## 2. நால்வர் நான்மணிமாலை

இத்தொடர் நால்வரைப்பற்றிய நான்மணிமாலை எனப் பொருள்படும். இந்நால்வர் திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்க வாசகர் என்பவர். நான்மணிமாலை என்பது ஒருவகைச் சிறு நூல் (பிரபந்தம்); வெண்பா, கட்டளைக் கலித்துறை, ஆசிரிய விருத்தம், ஆசிரியப்பா ஆகிய பாக்களுள் மணி போன்ற நால்வகைப் பாக்களால் இயற்றப் பெறுவதாதலின், இப்பெயர் பெற்றது. ஒவ்வொரு பாவிலும் மேற்குறித்த நால்வருள் ஒருவரைப் பற்றிக் கூறப்படும்.

**துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய பிரபந்தம் இது.** இப்பெரியார் வீர சைவ சமயத்துத் துறவியாராவார். இவர் பாடிய நூல்கள் பல. அவை யாவும் சொற்சுவை பொருட்சுவை மிகுந்து விளங்குவன. இவர் விளங்கியிருந்த காலம் 17-ம் நூற்றுண்டாகும்.

### திருஞானசம்பந்தர்

(நேரிசை வெண்பா)

4. பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையிணியற்
பாவான் மொழிஞானப் பாலுண்டு—நாவான்
மறித்தெஞ் செவியமுதாய் வார்த்தபிரான் தண்டை
வெறித்தண் கமலமே வீடு

### திருநாவுக்கரசர்

(கட்டளைக் கலித்துறை)

5. வீட்டிற்கு வாயில் எனுந்தொடை
சாத்துசொல் வேந்தே! பொது
ஆட்டிற்கு வல்லன் ஒருவற்கு
ஞான அமுதுதவி
நாட்டிற் கிலாத குடர்நோய்
நினைக்குமுன் நல்கினுமென்
பாட்டிற்கு நீயு மவனுமொப்
பீரெப் படியினுமே.

## சுந்தரர்

(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)

6. படியிலா நின்பாட்டி லாரூர !
நனிவிருப்பன் பரமனென்ப(து)
அடியனேன் அறிந்தனன்வான் தொழுமீசன்
நினைத்தடுத்தாட் கொண்டு மன்றித்
தொடியுலா மென்கைமட மாதர்பால்
நினக்காகத் தூது சென்றும்
மிடியிலா மனைகள்தொறும் இரந்திட்டும்
உழன்றமையால் விளங்குமாறே.

## மாணிக்கவாசகர்

(நேரிசை ஆசிரியப்பா)

7. விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கண்
காரண னுரையெனு மாரண மொழியோ
வாதிசீர் பரவும் வாதவூ ரண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்த தென்குவீ ராயின்,
வேதமோதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர் காண்கிலேம் ;
திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கன் மனமும் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
யன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகின் மற்றைய ரிலரே.

## 3. ஏரெழுபது

ஏரின் சிறப்பைக் கூறும் எழுபது செய்யுளால் இயன்ற நூல், ஏரெழுபது. இதனை இயற்றியவர் கம்பர். இவர் சோழ நாட்டில் திருவழுந்தூரில் தோன்றியவர் ; தமிழில் இராம காதை இயற்றி இணையற்ற புகழ் பெற்றவர். இவர் காலம் கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு. இங்குள்ள செய்யுள் அலப்படை (கலப்பை) யின் சிறப்பைக் கூறுவது.

8. குடையாளு முடிவேந்தர் கொலையானை தேர்புரவி
படையாளும் இவைநான்கும் படைத்துடைய ராளுலென் ?
மடைவாளை வரும்பொன்னி வளநாடர் தங்கள்கலப்
படைவாளைக் கொண்டன்றிப் பகையறுக்க மாட்டாரே.

## 4. கலைசைச் சிலேடை வெண்பா

கலைசையைப் பற்றிச் சிலேடை வகையாகக் கூறும் வெண் பாக்களாலாகிய ஒரு சிறு நூல் வகை இது. இதன் ஆசிரியர் சுமார் 140 வருடங்களுக்கு முன்னிருந்த தொட்டிக் கலைச் சுப்பிரமணிய முனிவர் என்பவர்.

9. மண்டமர்செய் யுங்களமும் வான்கரும்பை மள்ளருஞ்சேர்
கண்டகரச் சாடுங் கலைசையே—தொண்டர்
கணிச்சித் திருக்கையான் காதரத்தைத் தீர்க்கும்
கணிச்சித் திருக்கையான் காப்பு.

## 5. சரபேந்திர பூபால குறவஞ்சி நாடகம்

தஞ்சையிலாண்ட சரபேந்திர பூபாலரைப் பற்றிய குற வஞ்சி நாடகம் இது. சரபேந்திர பூபாலர்—சரபோஜி மன்னர். இந்நூலை இயற்றியவர் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் என்பவர். இவர் காலம் சுமார் 100 வருடங்கட்கு முன் எனலாம். வஞ்சிக்கொடி போன்ற தோற்றமுடைய குறத்தி யாடும் நாடகமாகக் கவி கற்பனை செய்து பாடுவது இந்நூல். இப்பாட்டில் குறத்தி தனது சாதியின் பெருமையைக் கூறுகிறாள்.

10. செந்திருமா லென்றனக்கு மைத்துனன்காண் அம்மே !
திங்களணி சிவனெனக்குத் தமையன்முறை அம்மே !
அந்தமிகுங் கந்தனெங்கள் மருமகன்காண் அம்மே !
அன்னநடை வள்ளியெங்கள் கன்னிகைகாண் அம்மே !

## குறிப்புரை

1. தலை - தலைமையான. செற்றான் - அழித்தவன். குதலை - கொஞ்சிப் பேசும் (குழந்தைப்) பேச்சு ; இங்குத் துதிக்கும் பேச்சைக் குறிப்பது. சாற்றுகைக்கு - போற்றுவதற்கு.

2. கை குஞ்சரம் - துதிக்கையையுடைய யானை. மாய்க்கை - அழிக்கப் படுதல். சரம் அசரம் - அசையும் பொருள் அசையாப் பொருள் (நிலைத் திணைப் பொருள், இயங்கு திணைப் பொருள்). கடல் நீறு எழ துகைக்கும் சர - எனப் பிரிக்க. சர - அம்பினையுடையவனே. மகரக் குழை - சுறு மீன் வடிவான ஒருவகைக் காதணி. சரம தசை - மரண காலம்.

3. ஏற்றனை - இடபவாகனத்தையுடைய சிவபிரானை. பலித்து வந்தனை - பிச்சை ஏற்கும் தொழிலை. வந்தனை - வணக்கத்தை. ஏற்றனை - ஏற்றுக் கொண்டனை. அனையாவையும் ஆயினை - தாயும் மற்றெல்லாமும் ஆனாய்.

4. மலி - நிறைந்த. மணிநீர் - தெளிவான நீர். பொய்கை - சீர்காழித் தலத்தினுள்ளே அமைந்துள்ள திருக் குளம். திருஞான சம்பந்தர் ஞானப் பாலுண்ட வரலாறு இதில் குறிக்கப்பெற்றுள்ளது. கமலம் - தாமரை போன்ற திருவடிகள் ; உவமையாகு பெயர்.

5. தொடை - பாமாலை. சொல்லேந்து - திருநாவுக்கு அரசு. ஆட்டு - நடனம். எப்படியினும் - எத்தன்மையினாலும். நல்கினும் - கொடுத்தாலும். குடர்நோய் - சூலை நோய்.

6. படி - ஒப்பு ; உவமை. நனி - மிகவும் ; உரிச்சொல். ஆரூரர் - சுந்தரர். தொடி உலாம் - வளையல்கள் அசைகின்ற. மிடி - வறுமை. உழன்றமை - அலைந்து வருந்திய தன்மை. சுந்தரர் தடுத்தாட் கொள்ளப் பெற்றதும், அவருக்காக ஈசன் பரவையாரிடம் தூது சென்றதும் இங்கே குறிக்கப் பெற்றுள்ளன.

7. விளங்கு இழை - ஒளி வீசும் திருவாபரணங்களையுடைய உமா தேவி ; அன்மொழித் தொகை. ஆரணம் - வேதம். வாதவூர் - திருவாதவூர் ; மதுரைக்கு அண்மையில் உள்ள ஓரூர் ; மாணிக்கவாசகர் பிறந்த இடம். அண்ணல் - பெருமையை உடையவன் ; ஆண்பாற் சிறப்புப் பெயர். மலர் வாய் - மலர் போன்ற வாய் ; உவமைத் தொகை. கருங்கல் மனம் - கருங்கல் போன்ற கடினமான மனம். தொடுமணற் கேணியின் - தோண்டப்படும் மணற் கேணி போல ; 'இன்' ஐந்தன் உருபு ஒப்புப் பொருளில் வந்தது. மன்பதை - மக்கள் கூட்டம்.

8. புரவி - குதிரை. மடை - வயல் வாய் மடை. வாளை - ஒரு வகை மீன். பொன்னி - காவிரி யாறு.

9. கண்டகர் - வான் வீரர். கண் தகர - கணுக்கள் தகரும்படி. மள்ளர் - உழவர். காதரம் - துன்பம். தொண்டர்கண் இச்சித்து - தொண்டரிடம் விருப்பம் கொண்டு. கணிச்சி - மழுவாயுதம். திருக் கையான் - அழகிய கையை உடையவன்.

10. இராமன் குகனைத் தன் உடன் பிறந்தவனாக ஏற்றுக்கொண்டதால் "திருமால் என்றனக்கு மைத்துனன்" என்றாள். சிவன் வேட வடிவு கொண்டதால் "சிவன் எனக்குத் தமயன் முறை" என்றாள்.

## பயிற்சி

1. பொருள் தருக:—குதலை, சரம், தொடி, மிடி, அலிங்கல், கணிச்சி.

2. பிரித்துக் காட்டுக:—பாலுண்டு, அமுதுதவி.

3. செய்த, தொழும், பகிர்ந்த, பரவும்—இப்பெயரெச்சங்கள் எவ்வெக் காலத்தை உணர்த்துவன? மற்றிரண்டு காலமும் கூறுக.

## கேள்விகள்

1. பிள்ளைப் பெருமாளையங்கார் அரங்கனையே தாம் வழிபடும் தன்மையை எவ்வாறு கூறுகின்றார்?

2. ஐயங்கார் தம்மைக் காக்கும்படி அரங்கனை வேண்டுவது எப்பொழுது?

3. அரங்கன் தமக்கு அருள் புரிந்ததை ஐயங்கார் எவ்வாறு உரைக்கின்றார்?

4. அந்தாதியின் இலக்கணம் என்ன?

5. நான்மணிமாலை எவ்வாறு அமைவதற்கு உரியது?

6. சிவப்பிரகாசர் ஞானசம்பந்தர் திருவடிகளை எவ்வாறு போற்றுகிறார்?

7. திருநாவுக்கரசர் இறைவன்பால் பெற்ற அருள் எப்படிப்பட்டது?

8. சுந்தரர் பாட்டில் ஈசன் விருப்புடையன் என்பது எவற்றால் புலனாகும்?

9. திருவாசகத்தின் சிறப்பினைச் சிவப்பிரகாசர் எப்படி விளக்குகிறார்?

10. சிவப்பிரகாசர் வாழ்ந்த காலம் யாது?

11. முடிவேந்தர் பகைவரை அழிக்க ஆதாரமாயுள்ளது எது?

12. கண்டகரச் சாடும், தொண்டர் கணிச்சித் திருக்கையான்—சிலேடைப் பொருள் தருக.

13. திருமால் குறத்திக்கு மைத்துனன் ஆவது எங்ஙனம்?

14. சிவனைக் குறத்தி தனக்குத் தமையன் என்றது எப்படிப் பொருந்தும்?

15. 'குறவஞ்சி' என்ற நூலின் இலக்கணம் என்ன?

# V. பல்சுவைப் பகுதி

## 1. தனிப் பாசுரத் தொகை

தனிப்பட்ட பாடல்களின் தொகுப்பினுலாகிய நூல் என்பது இதன் பொருள். இந்நூலில் தனித்தனிப் பதினுலடி யளவான நாற்பத்து மூன்று பாடல்கள் உள்ளன. அவை கடவுள் முதல் எறும்பு ஈருக நாற்பத்து மூன்று பொருள்களைப் பற்றியவை. இதன் ஆசிரியர் திரு. வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியார் அவர்கள். இவர் சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராயிருந்தவர். இவர் பல அரிய செய்யுள், உரைநடை, நாடகநூல்கள் இயற்றியுள்ளார். இவர்காலம் கி. பி. 1870—1903. இச் செய்யுள் கடலின் தன்மைகளை அழகாகக் கூறு கின்றது.

**கடல்**

வாழிய கடலே! வாழிய கடலே!!
உலகினுக் கியைந்த வொருதுணைக் கருவியே!
அலகிலா உருவ மடைந்தோய்! நிலத்தினை
ஆக்கி யன்புடன் காக்கும் பரவாய்!
உன்னை யடுத்துவந் துறுநா வாய்களை
நன்னர்ச் செலுத்து நங்காய்! நின்னிளங்
காதற் றலைவனும் மோது காற்றினுற்
புனற்கா ரென்னும் புனிற்றிள மகனுல்
உயிர்த்தொகை யோடு பயிர்த்தொகை மகிழத்
தாவா வின்பந் தருந்தனித் தாயே!
ஓவா தொல்லென வொலிக்குங் கடலே!
உன்றன் பெருமையு முயர்வுங் கருணையுந்
துன்று மடி யின்மையுந் தூய்மையும்
என்ற ணுலெடுத் தியம்ப இயலுமோ?

## 2. தனிப்பாடல்

கதையைத் தெரிவித்துவரும் தொடர்செய்யுளைப் போல வராமல் பல புலவர்களால் அவ்வப்போது பாடப்பட்ட பாடல் களையுடைய நூல் 'தனிப்பாடல்' எனப்படும். அவற்றுள் ஐந்து செய்யுட்கள் இங்கே தரப் பெற்றுள்ளன.

பின்வரும் முதல் மூன்று பாடல்களை இயற்றியவர் **காளமேகப் புலவர்.** இவர் திருவரங்கத்தில் கோயில் பரிசாரகரா யிருந்து, பின் மோகனாங்கி என்னும் பொதுமகளின் தூண்டுதலால், திருவானைக்காவில் சிவாலயப் பரிசாரகராகிக் கலைமகள் திருவருளால் ஆசுகவியானவர். இவர் பாடிய பாடல்கள் மிகப் பல உண்டு. இவர் காலம் : **கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டு.**

## வறுமையின் கொடுமை

1. இந்திரன் கலையாய் என்மருங் கிருந்தான்
அக்கினி யுதரம்விட் டகலான்
எமனெனைக் கருதா னரனெனக் கருதி
நிருதிவந் தென்னையென் செய்வான்?
அந்தமாம் வருண னிருகண்விட் டகலான்
அகத்துறு மக்களும் யானும்
அனிலம தாகு மமுதினைக் கொள்வோம்
யாரெனை யுலகினி லொப்பார்?
சந்தத மிந்த வரிசையைப் பெற்றுத்
தரித்திர ராசனை வணங்கித்
தலைசெயு மென்னை நிலைசெய்கல் **யாணிச்**
**சாளுவத் திருமலை ராயன்**
மந்தர புயனாங் கோப்பய னுதவு
மகிபதி விதரண ராமன்
வாக்கினாற் குபேர னாக்கினா னவனே
மாசிலா வீசனா வானே.

## பாம்புக்கும் வாழைப் பழத்துக்கும் சிலேடை

2. நஞ்சிருக்குந் தோலுரிக்கு நாதர்முடி மேலிருக்கும்
வெஞ்சினத்திற் பற்பட்டால் மீளாது—விஞ்சுமலர்
தேம்பாயுஞ் சோலைத் திருமலைரா யன்வரையில்
பாம்பாகும் வாழைப் பழம்.

## மோர்ப்பரட்டு

3. காரென்று பேர்படைத்தாய் ககனத் துறும்போது
நீரென்று பேர்படைத்தாய் நீணிலத்தில் வீழ்ந்ததற்பின்
வாரொன்று மென்மயில்நேர் ஆய்ச்சியர்கை வந்ததற்பின்
**மோர்** என்று பேர்படைத்தாய் முப்பேரும் பெற்றாயே.

## கல்யாண வாழ்த்து

கீழ்வரும் நகைவிளைவிக்கும் பாடலை இயற்றியவர், **சிவப்பிரகாச சுவாமிகள்** என்பவர். இவர் 17-ஆம் நூற்றாண்டினர். பிரபுலிங்க லீலை, நன்னெறி முதலிய நூல்களை ஆக்கிப் புகழ் பெற்றவர். இவர் வீரசைவ மதத்தினர்; ஒரு துறவி. இவர் ஒரு மணமக்களுக்கு வாழ்த்தாகப் பாடியனுப்பிய செய்யுள் இது.

4. அரனவ னிடத்திலே ஐங்கரன் வந்துநின்(று)
"ஐய! என் செவியை மிகவும்
அறுமுகன் கிள்ளினான்" என்றே சிணுங்கிடவும்
அத்தன்வே லவனை நோக்கி
விரைவுடன் வினவவே, "அண்ணன்என் சென்னியில்
விளங்குகண் எண்ணி னன்" என
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்து "நீயப்படி
விகடமேன் செய்தாய்?" என
"மருவுமென் கைந்நீள முழமளந் தான்" என்ன
மயிலவன் நகைத்து நிற்க,
மலையரையன் உதவவரும் உமையவளை நோக்கி "நின்
மைந்தரைப் பாராய்!" எனக்
கருதரிய கடலாடை உலகுபல அண்டம்
கருப்பமாப் பெற்ற கன்னி
கணபதியை அருகழைத் தகமகிழ்வு கொண்டனள்
களிப்புடன் உமைக் காக்கவே.

## சீட்டுக் கவி

முற்காலத்தில் கடிதங்கள் எழுதும்போது பாடலில் வல்ல கவிஞர் பாட்டாகவே எழுதுவது உண்டு. அதற்குச் சீட்டுக் கவி என்று பெயர். சரவணப் பெருமாள் **கவிராயர்** என்பவர் **முத்துக் கருப்பண்ணன்** என்னும் வள்ளலுக்கு எழுதியனுப்பிய கவிக்கடிதம் இது.

5. கல்விச் சமுத்திரம் கமலால யம்தமிழ்க்
கடன்மடை திறந்த வெள்ளம்;
கற்பனைப் பிறப்பிடம்; கலைமகள் இருப்பிடம்;
கவிமாரி பொழியு மேகம்;

சொல்விற் பனம்விளையு மதுரக் களஞ்சியம் ;
தோன்று கற்பூர தீபம் ;
சுகிர்தகுண அவதானி சரவணப் பெருமாள்கை
தொட் டெழுதி விட்ட சனது ;
வில்லுக் கருச்சனன் ; சொல்லுக் கரிச்சந்திரன்
வெற்றிக்கு விக்ர மார்க்கன் ;
வித்தைக் ககத்தியன் முத்துக் கருப்பண்ண
விலட்சண னெதிர்ந்து காண்க ;
மல்வெற்றி யாயென்று தாயென்று நீயென்று
மாலென்று வேலொன் றுகா
மாவென்று காவென்று நாவொன்று பாவொன்று
வருகின்ற தருள் புரிகவே.

## 3. பாரதியார் பாடல்

ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் எட்டையபுரத்தில் 1882-ஆம் ஆண்டில் பிறந்தவர் ; ஆங்கிலம், தமிழ், இந்தி முதலிய பல மொழி அறிந்தவர் ; தமிழன்பு ததும்பப் பெற்றவர் ; சுதந்திர வேட்கையும், சமுத்துவ உணர்ச்சியும், தேசப்பற்றும் கொண் டவர். இவர் மகாத்மா காந்தியடிகளைப் போற்றிப் பாடியுள்ள செய்யுட்கள் இங்கே தரப்பெற்றுள்ளன.



### மகாத்மா காந்தி பஞ்சகம்

1. வாழ்க நீ ! எம்மான்இந்த வையத்து நாட்டி லெல்லாம்
தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டுப்
பாழ்பட்டு நின்ற தாமோர் பாரத தேசந் தன்னை
வாழ்விக்க வந்த காந்தி மகாத்மா நீ வாழ்க ! வாழ்க.

2. அடிமைதாழ் வகன்றிந் நாட்டார்
விடுதலை யார்ந்து செல்வம்
குடிமையி லுயர்வு கல்வி
ஞானமும் கூடி யோங்கிப்

படிமிசைத் தலைமை யெய்தும்
    படிக்கொரு சூழ்ச்சி செய்தாய்
முடிவிலாக் கீர்த்தி பெற்றாய்
    புவிக்குளே முதன்மை யுற்றாய்.

வேறு

3. கொடியவெந் நாக பாசத்தை மாற்ற
    மூலிகை கொணர்ந்தவ னென்கோ?
இடிமினல் காக்கும் குடைசெய்தா னென்கோ?
    என்சொலிப் புகழ்வதிங் குனையே?
விடிவிலாத் துன்பஞ் செயும் பராதீன
    வெம்பிணி யகற்றிடும் வண்ணம்
படிமிசைப் புதிதாச் சாலவு மெளிதாம்
    படிக்கொரு சூழ்ச்சிநீ படைத்தாய்!

4. தன்னுயிர் போலத் தனக்கழி வெண்ணும்
    பிறனுயிர் தன்னையுங் கணித்தல்;
மன்னுயி ரெல்லாங் கடவுளின் வடிவம்
    கடவுளின் மக்களென் றுணர்தல்;
இன்ன மெய்ஞ்ஞானத் துணிவினை மற்றுங்
    கிழிபடு போர், கொலை, தண்டம்
பின்னியே கிடக்கும் அரசிய லதனிற்
    பிணைத்திடத் துணிந்தனை, பெருமான்!

5. பெருங்கொலை வழியாம் போர்வழி யிகந்தாய்;
    அதனிலுந் திறன்பெரி துடைத்தாம்
அருங்கலை வாணர் மெய்த்தொண்டர் தங்கள்
    அறவழி யென்றுநீ அறிந்தாய்;
நெருங்கிய பயன்சேர் 'ஒத்துழை யாமை'
    நெறியினால் இந்தியா விற்கு
வருங்கதி கண்டு பகைத்தொழில் மறந்து
    வையகம் வாழ்கநல் லறத்தே.

## 4. மலரும் மாலையும்

தனித்த மலர் போலவும் மலர்களால் தொடுக்கப்பட்ட மாலை போலவும் பலதிறப்பட்ட கவிகள் இந்நூலில் காணப்படுவதால், இந்நூல் இப்பெயர் பெற்றது.

இந்நூலாசிரியர் : **கவிமணி சி. தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள்.** இவர் திருவாங்கூர் நாட்டைச் சேர்ந்த தேரூர்



என்னுமிடத்தில் 1876-ஆம் ஆண்டில் பிறந்தவர் ; முறையாகத் தமிழ் பயின்ற பெரும் புலவர். இவரது கவிகள், எளிமையும் இனிமையும் பொருந்தியவை.

பின்வரும் பாடல்கள் 'மலர்கள்' என்னும் பகுதியில் உள்ளவை. இவற்றில் மலர்கள் தமது அருமை பெருமைகளைக் கூறுகின்றன.

### மலர்கள்

1. மண்ணிலிருந்து பொருள்வரினும்—அதை
   மாற்றி மணம்பெறச் செய்திடுவோம் ;
   கண்ணுக் கினிய நிறங்களெல்லாம்—விண்ணிற்
   காணுங் கதிரிடம் பெற்றிடுவோம்.

2. வண்டின் வரவெதிர் பார்த்துநிற்போம்—நல்ல
வாசனை வீதியில் வீசிநிற்போம் ;
உண்டு களிக்க மதுவளிப்போம்—சற்றே
உட்காரப் பீடமும் இட்டுவைப்போம்.

3. மங்கைய ரோடு குமரரையும்—மனம்
வாய்த்த மணஞ் செய்து வாழவைப்போம்
தங்கமும் பொன்னும் மணிகளுமே—எம்மைத்
தாழ்ந்து வணங்கமேல் தங்கிடுவோம்.

4. ஈசன் அடியில் பணிந்திடுவோம்—அவர்
ஏந்து முடிமீதும் ஏறிநிற்போம்
பூசனை செய்யும் அடியவரின்—உள்ளம்
பொங்கு களிப்பெலாம் காட்டி நிற்போம்.

5. மன்னருங் கண்டெதிர் வந்திடுவார்—கட்டி
மார்போ டணைத்து மகிழ்ந்திடுவர்
இந்நிலத் தின்பம் பெருகிடவே—நாங்கள்
என்றும் உயிர்வாழ்ந்திருப்போம் அம்மா .

குறிப்புரை

1. **தனிப்பாசுரத் தொகை:** அலகு இலா - அளவில்லாத. பரவாய் - கடலே. நாவாய் - மரக்கலம். நன்னர் - நன்றாக. புனல் கார் - நீருண்ட மேகம். புனிறு - அப்பொழுதுதான் பெற்ற மிக்க இளமையுடைய. தாவா - அழியாத. ஓவாது - இடைவிடாமல். துன்று - நெருங்கிய. மடி - சோம்பல்.

2. **தனிப்பாடல் :** (1) கலை - ஆடை. மருங்கு - இடை. உதரம் - வயிறு. அரன் - சிவபிரான். நிருதி - தசையை யுண்ணும் ஓர் அரக்கன். அந்தம் - குருடு. அனிலம் - காற்று. மந்தரம் - ஒரு மலை. கோப்பயன் - இது ஒருவன் பெயர். உதவும் - பெற்றெடுத்த. மகிபதி - பூமிக்குத் தலைவன், அரசன். விதரணராமன் - கொடையால் யாவரையும் மகிழ்விப்பவன். (2) விஞ்சு - மிகுதியான. நஞ்சு இருக்கும் - (பாம்பு) விஷத்தைத் தன்னிடம் கொண்டிருக்கும் ; (வாழைப்பழம்) நைந்து இருக்கும். தோல் உரித்தல் பாம்புக்கும் வாழைப்பழத்திற்கும் பொதுவானது. வெஞ்சினத்தில் - (பாம்பு) கொடிய கோபத்தில் ; (வாழைப்பழம்) உணவாக உபயோகப் பட்டால். (3) கார் - மேகம். ககனம் - ஆகாயம். நேர் - உவம உருபு. நீள் + நிலம் = நீணிலம். (4) ஐங்கரன் - விநாயகன். சென்னி - தலை.

கன்னி - பார்வதியைக் குறிக்கும். (5) மாரி - மழை. சுகிர்தம் - இனிமை. சனது - கடிதம். நாவொன்று - நாவிற் பொருந்திய.

3. பாரதியார் பாடல்: (1) வையகம் - பூமி. எம்மான் - பெருமை மிக்கவனே. (2) படி - பூமி. சூழ்ச்சி - ஆலோசனை மிக்க வழி. (3) பராதீனம் - பிறர்க் கடிமையாதல் (எதிர்ப்பதம் - சுவாதீனம்). (4) கணித்தல் - எண்ணுதல். பிணித்திட - சேர்க்க. (5) அறவழி - தருமவழி. கதி - பிற்கால நிலை.

4. மலரும் மாலையும்: ஏந்தும் - (தலையில்) குடியிருக்கும்.

## பயிற்சி

1. பொருள் கூறுக: சென்னி, மடி, அனிலம், ககனம், சனது, படி.

2. பிரித்துக் காட்டுக: அலகிலா, மாசிலா, நீணிலம், பற்பட்டால், முப்பேர்.

3. பகுதி கூறுக: அகலான்; கொண்டனள், வருகின்றது.

4. தொழிற்பெயர், உரிச்சொல், ஆகுபெயர், உவமஉருபு, பெயரெச்சம், வினையெச்சம்,—இவற்றிற்கு இப்பகுதியிலிருந்து இரண்டிரண்டு உதாரணம் தருக.

5. மோதுகாற்று, உயிர்த்தொகை, முப்பேர், மலையரையன்—இவை என்ன தொடர்?

## வினாக்கள்

1. தின்னிளங் காதற் றலைவனும் மோது காற்றினால் புனற்காரென்னும் புனிற்றிளமகனால், கல்யாணிச் சாளுவத் திருமலைராயன், கருதரிய கடலாடை உலகுபல அண்டம் கருப்பமாய் பெற்ற கன்னி—இவற்றின் பொருளை விளக்கி வரைக.

2. தனிப்பாசுரத் தொகை, தனிப்பாடல், மலரும் மாலையும்—பெயர்க் காரணம் என்ன?

3. கடலின் சிறந்த பண்புகளைத் தொகுத்துக் கூறுக.

4. காளமேகப் புலவர் தம் வறுமை நிலையை எவ்வாறு கூறுகிறார்?

5. திருமலைராயன் என்பவன் யாவன்? அவனைப் புலவர் எங்ஙனம் போற்றுகிறார்?

6. நஞ்சிருக்கும், தோலுரிக்கும், வெஞ்சினத்திற் பற்பட்டால் மீளாது—சிலேடைப் பொருள் தருக.

7. நீரானது முப்பேர் பெற்றது எவ்விதம்?

8. முருகப் பெருமானுக்கும் கணபதிக்கும் நேர்ந்த விளையாட்டுச் சண்டையைக் கூறுக.

9. முத்துக் கருப்பண்ண வள்ளலைப் புலவர் எவ்வாறு சிறப்பிக்கின்றார்?

10. காந்தியடிகளின் முடிவிலாக் கீர்த்திக்கு ஆதாரமான காரணம் யாது?

11. காந்தியடிகள் அரசியலில் பிணைத்தவை எவை?

12. மலர்கள் இனிய நிறங்களைப் பெறுவது எவ்வாறு?

13. மலர்கள் வண்டிற்குச் செய்யும் நன்மைகள் எவை?

14. மலரால் அடியார் அடையும் பயன் யாது?

## கட்டுரையாக்கம்

1. கடலின் பெருமை, புலவர் வறுமை, முருகன் கணபதி விளையாட்டுச் சண்டை, முத்துக்கருப்பண்ண வள்ளல், காந்தியடிகள் காட்டிய நெறி—இப்பொருள்கள் பற்றிப் பப்பத்து வரிகட்கு மேற்படாமல் சிறு கட்டுரை வரைக.

2. மலர் தன் பெருங்குணத்தைத் தானே சொல்வது போல் பதினைந்து வரியில் எழுதுக.

3. 'கடலின் பெருமிதம்' என்பது பற்றி ஒரு சிறு கட்டுரை வரைக.

# உரைநடைப் பகுதி

## 1. சிலப்பதிகாரம்

### உரை பெறு கட்டுரை

[இளங்கோவடிகள்]

தமிழ் மொழியிலுள்ள பழைய காப்பியங்கள் ஐந்து. அவற்றுள் ஒன்று 'நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரம்.' பண்டைக் காலத்தில் சோழ நாட்டின் தலைநகராயிருந்த காவிரிப்பூம் பட்டினத்தில் வணிகர் குலத்தில் தோன்றிய கோவலன், அவன் மனைவி கண்ணகி ஆகிய இவர்கள் வரலாற்றை விவரித்துரைப்பது இக் காப்பியம். தனது செல்வம் முழுவதையும் மாதவி என்னும் விலைமகட்குக் கொடுத்து இழந்த கோவலன், வாணிபம் செய்து பொருள் தேடும் பொருட்டுக் கண்ணகியுடன் மதுரைக்குச் சென்று, அவள் சிலம்பு என்னும் காலணியை விற்க முற்படும்போது, கொடியவனான பொற்கொல்லன் ஒருவன் பேச்சை நம்பிய பாண்டியன் நெடுஞ்செழியனால் நெறி தவறிக் கொல்விக்கப்பட்ட சரித்திரத்தை விவரித்துக் கூறிச் சிறந்த நீதிகளைத் தெரிவித்தலால், இந்நூல் சிலப்பதிகாரம் என்று பெயர் பெற்றது.

இந்நூல், முத்தமிழும் விரவப் பெற்றதலால் இயலிசை நாடகப்பொருள் தொடர்நிலைச் செய்யுள் என்றும், நாடக உறுப்புக்களையுடையதால், நாடகக் காப்பியம் என்றும் பெயர் பெறும். இடையிடையே உரைப் பாட்டும் இசைப் பாட்டும் விரவப் பெற்றுள்ளதால் உரை யிடை யிட்ட பாட்டுடைச் செய்யுள் என்றும் இந்நூலுக்குப் பெயர் வழங்கும்.

கோவலன் மதுரையில் கொலையுண்டதும், கண்ணகி கோபாவேசங்கொண்டு, அரண்மனையை யடைந்து பாண்டியனிடம் வழக்குரைத்தாள். தான் செய்தது அநீதி என்றுணர்ந்த பாண்டியன் உயிர் நீத்தான். கண்ணகி மதுரையை யழித்துச் சேர நாடடைந்து சுவர்க்கம்' புகுந்தாள். கண்ணகி வரலாற்றை அறிந்த சேரன்-செங்குட்டுவன் தன் நகரில் பத்தினி தேவியான அவட்கு ஒரு கோயில்எடுத்தான். அச்சேர வேந்தன் இளவலும் இளமையிலேயே துறவு பூண்டவருமான **இளங்கோவடிகள்** சிலப்பதிகாரம் என்னும் காப்பியத்தை இயற்றினார்.

கீழ் வரும் உரைச்செய்யுள் கண்ணகி சுவர்க்கம் புகுந்த

பின் நிகழ்ந்ததைக் கூறுவது : பழங்காலத்து உரை நடைக்கு ஓர் எடுத்துக்காட்டாக இப்பகுதி இங்கே தரப்பெற்றுள்ளது.

அன்று தொட்டுப் பாண்டியநாடு மழைவறங் கூர்ந்து, வறுமை யெய்தி, வெப்பு நோயுங் குருவுந் தொடர, கொற்கையிலிருந்த வெற்றிவேற் செழியன் நங் கைக்குப் பொற் கொல்லராயிரவரைக் கொன்று களவேள் வியால் விழவொடு சாந்தி செய்ய, நாடு மலிய, மழை பெய்து நோயுந் துன்பமும் நீங்கியது.

அது கேட்டுக் கொங்கிளங்கோசர் தங்கள் நாட் டகத்து நங்கைக்கு விழவொடு சாந்தி செய்ய மழை தொழிலென்றும் மாறாதாயிற்று.

அது கேட்டுக் கடல் சூழிலங்கைக் கயவாகு வென் பான் நங்கைக்கு நாட்பலி பீடிகைக் கோட்டம் முந்துறுத் தாங்கு அரந்தை கெடுத்து, வரந்தருமிவளென ஆடித் திங்கள் அகவையின் ஆங்கோர் பாடிவிழாக் கோள் பன் முறை யெடுப்ப, மறை வீற்றிருந்து வளம் பல பெருகிப் பிழையா விளையுள் நாடாயிற்று.

அதுகேட்டுச் சோழன் பெருங்கிள்ளி கோழியகத்து எத்திறத்தானும் வரந்தரும் இவள் ஓர் பத்தினிக் கடவு ளாகுமென நங்கைக்குப் பத்தினிக்கோட்டமுஞ் சமைத்து நித்தல் விழாவணி நிகழ்வித்தோனே.

குறிப்புரை

உரை பெறுகட்டுரை - உரைத்துச் செல்லும் கட்டுரை. அன்று - கோவலன் கொலையுண்ணவும், பாண்டியன் உயிர் நீங்கவும், மதுரைமா நகர் தீக்கிரையாகவும் நேர்ந்த அன்று. வறம் கூர்தல் - பெய்யாது மிகுந்த நாள் இருத்தல். குரு - வகுரி முதலிய கொப்புளங்காணும் நோய். நங்கை - கண்ணகி.

கொங்கிளங்கோசர் - கொங்கு மண்டிலத்து இளங்கோவாகிய கோசர். மழை தொழில் - மழை பெய்யும் தொழில்.

நாட் பலி பீடிகைக் கோட்டம் - ஒவ்வொரு நாளும் பலி கொள்ளும் பலி பீடத்தையுடைய கோயில். முந்து உறுத்து - முதலில் செய்து. அரந்தை - துக்கம். ஆடி திங்கள் அகவையின் - ஆடி மாதத்தில். பிழையா விளையுள் - குன்றாத விளைச்சல்.

கோழி - உறையூர் : இது திருச்சிராப்பள்ளியை ஒட்டியுள்ள ஊர் ; சோழ மன்னரது தலைநகர். முன்னொரு காலத்தில் கோழியொன்று

யானையைத் தாக்கிப் போரிட்டு வென்ற இடமாதலால், கோழி எனப் பெயர் பெற்றது. நித்தல் விழாவணி - தினந்தோறும் நடைபெறும் விழா.

### பயிற்சி

1. பொருள் தருக: வறங்கூர்தல், குரு, நாட்பலி, கோட்டம், அரந்தை, அகவை.

2. இப்பாடத்திலுள்ள வட சொற்கள், தொழிற்பெயர், இடப்பெயர் களைக் குறிப்பிடுக.

### வினாக்கள்

1. சிலப்பதிகாரம் என்று பெயர் வரக் காரணமென்ன?

2. சிலப்பதிகாரத்திற்கு வழங்கும் வேறு பெயர் யாது?

3. சிலப்பதிகாரம் இயற்றியவர் யார்? அவரைப்பற்றி நீவிர் அறிந் ததைக் கூறுக.

4. 'அன்று தொட்டு' என்பது எதைக் குறிக்கிறது?

5. கண்ணகி தேவிக்கு யார் யார் எங்கெங்கே கோயிலெடுத்தனர்?

6. 'கோழி' என்பது எவ்வூரைக் குறிக்கும்? அப்பெயர் வரக் காரணமென்ன?

7. நாட்பலிபீடிகைக் கோட்டம், கொங்கிளங்கோசர்—சிறு குறிப் புத் தருக.

### கட்டுரையாக்கம்

'கண்ணகி தேவி' என்பது பொருளாகப் பத்து வரியில் இங்குள்ள செய்தியை வரைக.

# 2. போலிச் சாமியார்

**பேராசிரியர் மு. இராகவையங்கார்**

[பொன்னுசாமித் தேவர் என்பவர் சென்ற நூற்ருண்டின் இறுதியில் இராமநாதபுரம் சமஸ்தானத்தின் அமைச்சராயிருந்த ஒரு வள்ளல். இவர் சேதுபதி மரபினர்; அக்காலத்தல் இராம நாதபுரம் சீமையாட்சி பெற் றிருந்த முத்து ராமலிங்க சேது பதியவர்களின் தமையனுராவார்; மிக்க நுண்ணறிவும், கலை பயில் தெளிவும், கட்டுரை வன்மையும் வாய்க்கப் பெற்றவர்; தமிழ்ப் புலமையும் தமிழ் வளர்ச்சியில் பேரார்வமும் கொண்டிருந்து, தமிழ் வித்துவான்களை ஆதரித் தும், தமிழ் நூல்களை அச்சிட்டு இலவசமாக வழங்கியும் தமிழ் வளர்த்தவர். இவரது அவையில் நிகழ்ந்த விநோத நிகழ்ச்சி யொன்றைப் பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள் "செந்தமிழ் வளர்த்த தேவர்கள்" என்னும் புத்தகத்தில் விளக்கி வரைந்துள்ளார்]



**தேவரின் அவைச் சிறப்பு:**

பொன்னுச்சாமித் தேவரும் அவரிளவலும், கல்வி யறிவுகளிலும் அரசியல் துறைகளிலும் தக்க பயிற்சியை இளமை முதலே பெற்று வந்தவராதலால், அவ்விருவருமே பிற்காலத்தில் அத்துறைகளில் மேம்பட்டு விளங்கலா யினர். தமிழ்ப் புலமையானது பரம்பரைச் செல்வமாக இவர்கட்கு வாய்த்திருந்தது. திருக்குறள், இராமாயண பாரதங்கள், சில்லறைப் பிரபந்தங்கள் முதலியவற்றில் வேண்டிய பயிற்சி இவர்கட்கு இளமை முதலே உண்டு. கவிபாடும் திறமையும் புலவர்களின் கூட்டுறவால் தக்கபடி இவர்கள்பால் அமைந்தது. கம்ப ராமாயணத்தில் அபி மானமும் ஆராய்ச்சியும் தேவர்க்கு மிகுதியாம். அப்

பெருங்காவியம் பற்றிய பிரசங்கங்கள் அவர் திருமுன்பு அடிக்கடி நிகழ்ந்து வந்தன. தமிழ் நாட்டின் பல திசை களிலிருந்தும் வந்து, பரிசுகளும், வரிசைகளும் பெற்றுப் புலவர்கள் செல்வதை இராமநாதபுரம் நாளும் கண்டு கொண்டிருந்தது. அவருள், சொல்லணி, பொருளணிகள் அமைந்த கவிகள் பாடிக் கௌரவம் பெறுபவர் பலர். அஷ்டாவதானி, சதாவதானி என்ற சிறப்புப் பெயர் தாங்கித் தங்கள் அவதானத் திறமைகளைக் காட்டிச் சிறப் படைபவர் சிலர். பிரபந்தங்கள் பாடிப் பெருமை பெறு வோர் பலர். அரிய உபந்நியாசங்கள் புரிந்து மதிக்கப் பெற்றவர் சிலர்.

அகங்காரத்துடனே, ஏமாற்றும் கருத்துடனே வரும் புலவர்கள் முடிவில் பரிபவமடைந்து சென்றதற்குப் பல செய்திகள் கேள்விப்பட்டதுண்டு. இவற்றுள் அதிரச மான நிகழ்ச்சி யொன்று அடியில் வருமாறு :

புலவர்க்கெல்லாம் ' அடையா நெடுங்கதவும் அஞ்சல் என்ற சொல்லும் ' உடையாராய்த் தேவரவர்கள் வாழும் போது ஒரு சமயம் மாணுக்கர் குழாத்துடனும் விருதுகளு டனும் சாமியார் ஒருவர் இராமநாதபுரம் வந்தனர். சந்தக் கவிகளைச் சரமாரியாகப் பொழிவதில் வல்லவர் என்று அக்காலத்தில் பெயர் பெற்றிருந்தவர் அவர். அதனால், **' சந்தச் சாமியார் '** என்றும் அவரை அழைப்பதுண்டு. முருகக் கடவுள் அவதாரமே தாம் என்றும், வேண்டி யவர்க்கு வேண்டிய வரங்களை அளிக்கத் தாம் வல்லவ ரென்றும் கூறிக் கொண்டு, தம் நாவன்மையாலும் ஆடம் பரங்களாலும் செல்வர் பலரை மயக்கிப் பொருள் திரட்டு வது அவர் தொழிலாயிருந்தது. இந்தச் சாமியார் சேது பதி நகர்க்கு வந்தார். நோக்கம், பொன்னுச்சாமித் தேவ ரிடமும் தம் ஆற்றலைக் காட்டிப் பொன்கள் பெறலாம் என்பதே.

இவர் வருகை முதல் நாளே அப்பிரபுவுக்குத் தெரிய வந்தது. மறுநாட் காலை 8 மணிக்குத் தேவரவர்கள் அரண்மனையில் வழக்கம் போலப் புலவர் குழாம் கூடியது. கம்ப ராமாயாணம் பற்றிப் பிரசங்கங்கள் நடந்துகொண்

டிருந்தன. இதனிடையே ஏதோ பரபரப்புச் சத்த மொன்று வெளிப்புறமாகக் கேட்டது. அஃது என்ன வென்று பிரபு அவர்கள் அறிய எண்ணியபோது, வாயில் காவலன் வந்துநின்று, மாணுக்கர் குழாத்துடன் சாமியார் ஒருவர் சமுகத்தைக் காண விரும்பிக் காத்திருப்பதாக வணக்கத்துடன் தெரிவித்தான். "அழைத்து வருக" என்று தேவரும் அவனுக்கு ஆணையிட்டார்.

வேல் தாங்கிய கையினரான அச்சாமியார், தம் பரி வாரத்தோடு 'முருகா! முருகா!' என்று கோஷித்துக் கொண்டு சபாமண்டபம் புகுந்து வித்வான்கள் மத்தியில் வீற்றிருக்கும் தேவரவர்களைக் கண்டார். கண்டவர் அப் பிரபுவின் அருகில் தங்க விரும்பி இடமின்றி நெருங்கி யுள்ள சபையோரை ஊடறுத்துச் சென்று, பிரபுவினரு கில் தாமே வலிய வந்திருந்து, கால்மேற் காலிட்ட வண் ணம் கம்பீரமாகக் கண்களை மூடி ஏதோ முணுமுணுத்துக் கொண்டிருந்தார். சிறிது நேரத்தில் அவ்வாறிருந்த சாமியாரின் நிலைமை முற்றும் வேருகக் காணப்பட்டது. திடீரென்று எழுந்து நின்று, கைகளை வீசிக் கொண்டும், கண்களை மிரள விழித்தும், பக்கத்திலுள்ள வித்வான் களுக்கு இடைஞ்சல் உண்டாகும்படி அங்கு மிங்கும் அவர் அலையலானுர். இதன்பின் பிரபுவை நோக்கிப் பெருங் குரலுடன் "அடா! நம்மை இன்னுர் என்று அறியாமல் அலட்சியங் காட்டுகிருய்! நாம் யார் தெரிந்ததனையோ? சூர் முதல் தடிந்த சுடர் வேல் முருகன்காண்; பன்னிருகை யன் பழனி வேலவன்காண்; நீ நித்தமும் தொழும் தெய் வம் யானே என்பதறிக. ஏதோ பத்தனெருவன் இங்குள் ளான் என்றிரங்கி, அருள் புரிய வலிய இங்கு வந்தோமே யன்றி வேறில்லை. இனியேனும் இதனை அறிந்தொழுகுக" என்று சினத்துடன் கூறி ஆரவாரித்தபடி அமர்ந்தனர். அப்போது கடிய ஆணை செலுத்த வல்ல தேவர் திரு முன்பு அச்சாமியார் கூறிய கொடுஞ் சொற்களையும், துணிகரச் செயல்களையும் கண்டு அவையோர் சிறிது அஞ்சினராயினும், அமைதியே காட்டினர். சாமியாரது ஆவேச மொழிகளைக் கேட்டதும் பிரபு அவரை நோக்கி,

“அடா அடா! அறிந்துகொண்டேன். பொறுப்பீராக” என்று கூறிச் சபையை ஒரு முறை பார்த்துவிட்டு வாளா விருந்தார்.

சாமியார், உடனே “வேண்டுகோட்படி பொறுத்தோம். இனி, எம்போலும் பெரியோரை இவ்வாறு அலட்சியஞ் செய்யமாட்டாய் என்றும் நம்புகிறோம்” என்று, இவ்விதம் சொற்களை அடுக்கிக்கொண்டு வந்தபொழுது, அச்சபையின் ஒரு பக்கத்திலிருந்து, “முசு, முசு” என்ற சத்தமொன்று அவையோர் கேட்ப எழுந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் அது ஒரு பெரிய குரலாக விரிந்து, அரண்மனை முழுதுமே எதிரொலி பரவும்படி செய்தது. உடனே, சாமியார் உட்படச் சபையோர் கண்கள் யாவும் அப்பக்கமே திரும்பி இமை கொட்டாது நோக்கின. அப்பொழுது கறுத்துப் பெருத்து உயர்ந்த தோர் உருவம் திடீரென்று எழுந்து நின்று, ஆவேசமிக்கதாய் அக்கம் பக்கங்களில் ஆடியோடிக் கைகளை நீட்டியும் முடக்கியும் “அடடா! விந்தை! பெருவிந்தையே” என்று குமுறிப் பிரபுவுக்கு நேரே சபையை ஊடுருவிப் பாய்ந்தது. பாய்ந்து, “எங்கே அவன்!” என்று பக்கங்களில் துழாவி, முடிவில் சாமியாரண்டை வந்து, “ஆ கண்டோம்! உன்னை!” என்று அவர் தோள் மேலேறிக் குந்திக் கொண்டது. பின்பு அவர் கை வேலைப் பறித்தது. “அடா உன் பொய் வெளிப்பட இதோ வந்து விட்டோம். பழனியில் நாம் உனக்குச் சொல்லி யனுப்பியது யாது? இங்கு வந்து நீ என்ன சொல்லினை? பாதக! எம் பரம பத்தனிடம் நம் அவதாரமென்ரு நீ பெரும் பொய் கூறினை? எவ்வளவு துணிகரம்! சூரனிலும் கொடியை போலும்! நீ வேண்டிக் கொண்டபடி பொன்னுச்சாமியிடம் சென்று, நம் பக்தரில் ஒருவன் என்று சொல்லி உன் கவித்திறமையைக் காட்டினல், நீ விரும்பியது பெறலாம் என்றுதானே நாம் உனக்கு ஆணையிட்டு அனுப்பினேம்? நாமே நீ என்றும், வேண்டிய அருள் புரிய வல்லோம் என்றும் உன்னிலும் பெரியான் ஒருவனிடஞ் சொல்லி, நம் பெயருக்கே கேடு சூழ்ந்தனை! இக் கொடுஞ் சொற்களுக்கு

உன் நாவைப் பிளந்து விடலாகும். ஆனால் நம்மைச் சந்தக் கவிகள் பாடிவந்த புலவன் என்றே அது செய்யாது விட்டோம். இனி இது போலும் ஏமாற்ற வித்தைகளை விட்டுவிடுதியா, இல்லையா, கூறுதி!'' என்று ஆவேசமுற்ற மூர்த்தி சாமியாரை பளிச்சென்று ஓர் அறை அறைந்து கேட்டது.

அமுக்கப்பட்ட சாமியாரோ விடை சொல்ல இயலாது விழித்து நின்றார். சபையினருள் ஒரு சிலர் எழுந்து நின்று அம்மூர்த்தியை நோக்கி, "சுவாமி! மன்னித்தருள வேண்டும். பிரபுவின் அருமை பெருமைகள் தெரியாமல் மூடத்தனத்தால் மாயஞ் செய்யத் துணிந்து இவர் பெரிய அபராதியானார். ஆயினும் புலவரானமையால், தமிழ்த் தெய்வமான தாம் பொறுத்தருள்புரிவீராக'' என்று வேண்டினர். வேறு சிலர், "சிறிது நேரத்தில் இம் மனிதன் அறிஞர்களான எங்களையே மயக்கி விட்டான். கல்லாத மக்களில் எத்தனைபேர் இவன் மாய வலையிற் சிக்கினரோ!'' என்றனர்.

இவற்றுக்கெல்லாம் பிரபு ஒன்றுங் கூறினாரில்லை. அமுக்கப்பட்ட சாமியாரிடமிருந்து 'இனி குற்றம் செய்ய வில்லை, என்ற விடை இன்னும் வாராமையால், ஆவேச மூர்த்திக்குக் கோபந் தணியாமல், அச் சந்தச்சாமியாரை மேலும் தொந்தரவு செய்யலாயிற்று. தாம் படும் வேதனையையும் அவமானத்தையும் நிவர்த்திக்க வேறு வழியில்லை என்று உணர்ந்து கொண்டார், சாமியார்; எவ்விதமாவது சபையினின்று விலகிச் செல்வதே நலம் என்று கருதி, "நான் செய்த பிழையை எல்லாரும் மன்னியுங்கள். இனி இப்பக்கம் நாடுவதும் இல்லை'' என்று வாய் விட்டுக் கூறலானார். "அடே! புத்தி வந்ததா! ஒழுங்காக நட. சாக்கிரதை. இம்முறை 'விட்டோம் உன்னை!'' என்று, தாம் பிடித்த பிடியையும் அசைத்த அசைப்புக்களையும் மேற்கொண்ட கோபத்தையும் விட்டது அவ்வாவேச மூர்த்தி. சாமியாரும் 'செத்தேன், பிழைத்தேன்' என்று முகங்கவிழ்ந்து மனங்குன்றி, அச் சபையை விட்டு மெல்ல எழுந்து நீங்கிச் சென்றுவிட்டார்.

மேற்கூறிய சாமியார், அவையையும் அவைத்தலை வரையும் மதியாமற் பேசியதை வேண்டியவளவு பொறுத்தும், பொறுக்க முடியாத நிலை ஏற்பட்ட பின்பே, பிரபுவின் சித்தம் அதனை ஒடுக்கும் வழியைத் தேடியது. இதற்காக, ஏதோ ஒரு குறிப்பை அவையில் ஒருவர்க்குக் காட்டியவுடன், அதனை அறிந்து சமயோசிதமான சூழ்ச்சி யொன்றை அவர் விரைந்து செலுத்தியது வியப்பினும் வியப்பே. இங்ஙனம் ஆவேச மூர்த்தியாக நடித்தவர் தேவரவர்களது ஆஸ்தான வித்வான்களில் ஒருவர்.

" குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல் "

என்றபடி, இவர் போன்றவர் அரசவையில் பெரிதும் ஆதரவு பெற்றனர் என்பது சொல்லவும் வேண்டுமா?

## குறிப்புரை

இளவல் - தம்பி. திருமுன்பு - சபையில். அஷ்டாவதானி - ஒரே சமயத்தில் எட்டுக் காரியங்களில் கவனம் செலுத்தும் திறமையுள்ளவர். சதாவதானி - ஒரே சமயத்தில் நூறு காரியங்களில் கவனம் செலுத்தும் திறமையுள்ளவர். பரிபவம் - அவமானம். சரமாரி - அம்புமழை. பரிவாரம் - சீடர்குழு. சூர் - சூரபதுமன். தடிந்த - அழித்த.

" குறிப்பின் ": தம் குறிப்பு நிகழுமாறு அறிந்து, அதனால் அயலாருடைய குறிப்பை அறியும் தன்மையுடையவரை அவர் வேண்டுவதொன்றைக்கொடுத்தாவது அரசர் தமக்குத் துணையாகக் கொள்ளக்கடவர்.

## பயிற்சி

1. பொருள் தருக: பரிபாவம், சரமாரி, பரிபவம்.

2. செத்தேன் பிழைத்தேன், ஏமாற்று வித்தை, சரமாரியாக, ஊடறுத்து—இத்தொடர்களை அமைத்து ஒவ்வொரு வாக்கியம் எழுதுக.

3. பயிற்சி, இளமை, ஆராய்ச்சி, நிகழ்ச்சி, மாணாக்கர், ஆதரவு, புலவர், பெரியான்—இவை என்ன பெயர்?

## வினாக்கள்

1. தேவரவையில் என்னென்ன நிகழும்?
2. தேவர் புலவர்களை எவ்வாறு ஆதரித்தார்?
3. சந்தச்சாமியார் என்பவர் யார்? அப்பெயர் வரக்காரணம் என்ன?
4. சந்தச்சாமியார் இராமநாதபுரத்திற்கு வந்த நோக்கம் யாது?
5. சாமியார் தேவரவையில் புகுந்தபோது எவ்வாறு நடந்து கொண்டார்?
6. தேவர் குறிப்பின்படி அவையில் நிகழ்ந்தது என்ன?

## கட்டுரையாக்கம்

'சந்தச்சாமியார்' என்பது பற்றி 15 வரியில் கட்டுரை எழுதுக.

# 3. அபார மூளை

கி. ஸ்ரீநிவாச ராகவன், எம். ஏ., எல். டி.

சூத்தக் கிறுக்கு. ஞாபகமறதிக்கோ கேட்க வேண்டாம்; பிடிவாதமோ குரங்குப் பிடிவாதம். ஆனால்—வேலைசெய்யச் சொன்னால் அதற்கு ஈடாக வேலை செய்யக் கூடிய மூளையே கிடையாது என்னலாம். அது யார் தெரியுமா? மூளைக்கேற்ற முகம் இல்லை. முகம் கடினமானதாகவும் கெட்டியாகவும் தோன்றும் என்று நினைக்கிறீர்களா? இல்லை. கம்பீரமும் ருசியும் கலந்த கவி அல்லது பாடகனது முகத்தைப் போன்றது. சாந்தம், சமயத்திற் கேற்றவாறு தாழ்ந்துபோவது, விட்டுக் கொடுத்தல் முதலிய நற்குணக் களஞ்சியம். ஒரு சமயம் ஏழைகள் உதவிக்குப் பணம் சேகரிக்கப் பாடச் சொன்னபோது "ஐயோ, எனக்கு என்ன பாடத்தெரியும்! தொழிலாகப் பாடுவோரைக் கேளுங்கள்......" என்றார். ஆனால் கடைசியில் "ஏழைகளுக்காக அல்லவா?" என்று ஒப்புக்கொண்டார். ஒரு சமயம் கப்பலில் இவருக்கென்று ஒரு பெரிய இரட்டை அறை கொடுத்தார்கள். அப்பொழுது "இது எனக்கு வேண்டாம். மஹாராஜாக்களுக்கு அல்லவோ இதுவேண்டும்" என்று ஒதுக்கிவிட்டார். ஆனால் கப்பல் கம்பெனிக்காரர் அது தங்களுக்கு அவமானமாகும் என்று சொன்னதும் சரியென ஒப்புக்கொண்டார். அமெரிக்காவில் விருந்துக்கு அழைத்தார்கள். அவரும் அவர் மனைவியும் போகும்பொழுதே "இவர்கள் நம் போன்றவர்கள் அல்லர். மரியாதையாகக் கொடுத்ததைச் சாப்பிடுவோம்" என்று பேசிக்கொண்டு சென்றார்கள். அங்கு ஒவ்வொருவருக்கும் ஒரு தட்டில் ஒரு கொத்துப் புஷ்பம் அழகாக வைத்தார்கள். "இதுவும் சாப்பிடத்தானுக்கும்" என்று அவர் மனைவி சாப்பிட்டாள். புருஷனுக்கு ஏற்ற மனைவி. தகப்பனின் தம்பிக்கும், தாயின் தங்கைக்கும் பிறந்தவள் அல்லவா! 1500 டாலர் செக் ஒன்று ராக்பெல்லர் இவருக்கு

ஆங்கிலத்தில் ஆல்வா ஜான்ஸ்டன் என்பவர் எழுதியதை ஒட்டித் தமிழில் எழுதப்பட்டது.

இனும் அளித்தார். அதைப் புத்தகத்தில் படிக்கும் இடத்திற்குக் குறியாக வைத்துப் படித்தவர். புத்தகத்தை யாருக்கோ கொடுத்துவிட்டார். செக்கு மாத்திரம் ஞாபகம் இருக்கிறது. யார் கொடுத்தார்கள் என்பதே மறந்துவிட்டது. நல்ல ஞாபகம்! பெல்ஜியம் அரசி விருந்துக்கு அழைத்தாள். எதிர்கொண்டு அழைக்க எல்லாரும் ரயிலடியில் காத்துக்கொண்டிருக்கிறார்கள். இவர் ஒரு 3-ம் வகுப்பு வண்டியிலிருந்து இறங்கி நேரே அரண்மனைக்கு நடந்துபோனார். அங்கு எல்லாருக்கும் நகைத்தனர் என்று சொல்லவும் வேண்டுமோ? "நோபல் பரிசு" பெரிய மேதாவிகளுக்கே கொடுக்கப்படுகிறது. இதை இவருக்கு அளித்தார்கள். "இது எனக்கு வேண்டாம். ஏழைகளுக்கு அவசியம்" என்று உடனே தர்மத்திற்குக் கொடுத்தார். ஒரு கட்டுரைக்கு 500 பவுன் தருவதாகப் பிரசுரகர்த்தர் ஒருவர்கேட்டதற்கு "என்னடா பைத்தியமா நீ? ஒரு கட்டுரைக்கு 500 பவுன் அதிகம் அல்லவா? நான் என்ன பணப்போட்டிக்கு எழுதுபவனா?" என்று 250 பவுனுக்கு ஒரு கட்டுரை எழுதித் தந்தார். பெரிய சர்வகலாசாலையில் உத்தியோகம் அளித்தார்கள். "இவ்வளவு சம்பளம் வாங்கிக் கொண்டால் அது எனக்குப் பாவம். ஏழைகள் கஷ்டப்படும்பொழுது நான் இவ்வளவு அடையக்கூடாது" என்று பாதியிலும் குறைவாகச் சம்பளம் பெற்றுக் கொண்டார். பணம் பிறருக்குக் கொடுக்கப்படுவதற்காக உளது என்பது இவரது கொள்கை. ஒரு காலத்தில் இவர் 150 ஏழைக் குடித்தனங்களைக் காப்பாற்றி வந்தார். சிகரெட்டுக்கும் பற்பொடிக்கும் அத்தாக்ஷி பத்திரம் எழுதிக் கொடுக்கும்படி இவருக்கு வந்த விண்ணப்பங்கள் எவருக்கும் வந்ததில்லை. இவை லஞ்சம் வாங்கும் காரியம் என்று நிராகரித்துவிட்டார்.

இப்பெரியார்தான் "**மகரிஷி ஐன்ஸ்டீன்**". இவர் 1879-ல் பிறந்தவர். பால்யம் தொட்டு யுத்தமின்மைக் கட்சிக்கும் யூத மதத்திற்கும் பாடுபட்டவர். 8 அல்லது 9 வயதுப் பையனாய் இருக்கும்பொழுது மியூனிச் நகரில் இராணுவ வீரர் பயிற்சி செய்வதைக் கண்டு தம் தந்தை

யிடம் "அப்பா, என்னை இத்தொழிலினின்றும் காப் பாற்றுவீராக" என்ருர். இதற்காக அவரும் ஸ்விட்ஸர் லாந்து தேசத்தவராஞர். 10 வயதுப் பையஞக இருக் கும் காலத்தில் ஒரு கிறிஸ்தவப் பாதிரியார் இவர் படித்து வந்த பள்ளிக்கூடத்திற்கு வத்தார். ஏசுநாதரை யூதர்கள் கொன்றபொழுது அவரது காலில் அடிக்கப்பட்ட ஆணி என்று ஒன்றை அப்பையன்களுக்குக் காண்பித்தார். மற்ற மாணவர்கள் ஐன்ஸ்டீனுடன் பிறகு எப்படிப் பழகி இருப்பார்கள் என்று சொல்லவேண்டுவது இல்லை. பெரிய கணித ஆசிரியரானபின் கொஞ்ச காலம் மதத்துவேஷத் தால் தாக்கப்படாமல் இருந்து வந்தார். ஆனுல் ஹிட்லர் ராஜ்யம் ஏற்பாடானதும் அவர் மனம் கொஞ்சம் தத் தளிக்க ஆரம்பித்தது. இப்பொழுது அமெரிக்காவில் வசித்து வருகிருர். ஆயினும் இவர் உயிருக்கே ஜெர்மா னியர் உலைவைக்கிருர்கள் என்ற வதந்தி உலவுகிறது.

பள்ளிக்கூடத்தில் கொஞ்சம் மக்குத்தான். பேச்சும் கொஞ்சம் மெதுவு. உபாத்தியாயர்கள் இவர் மூளைக்குள் இருக்கும் வஸ்து என்னவாயிருக்கும் என்றுகூட ஒரோர் சமயம் சந்தேகித்தனர். இவர் தந்தை ஒரு மின்சார எஞ்சினியர்; இவருக்கு வயது பதினைந்தாக இருக்கும் பொழுது இவரை அழைத்துக்கொண்டு இத்தாலியில் உள்ள மிலான் நகருக்கு வேலைக்குச் சென்ருர். பதினேழு வயதில் ஸ்விட்ஸர்லாந்து தேசத்து ஜூரிச் நகரத்துக் கைத்தொழில் கலாசாலையில் சேர்ந்தார். அங்கு இவருடன் படித்த ஒரு பெண்ணைச் சில ஆண்டுகளுக்குப்பின் 1903-ல் மணந்தார். இவர்களுக்கு இரண்டு பிள்ளைகள் பிறந்தனர். பிறகு இருவருக்கும் ஒத்துக்கொள்ளவில்லை. ஆதலால் மணரத்து செய்து கொண்டார்கள். 1911-ல் எல்ஸா என்னும் பெண்ணை மணந்தார். அவள் இவர் தந்தையின் தம்பிக்கும் தாயின் தங்கைக்கும் பிறந்தவள்.

பிழைக்க வழி தெரியாத பேர்வழி இவர். 3 தடவை உபாத்தியாயர் வேலை பார்த்தார். ஒவ்வொரு தடவையும் உபயோகமில்லை என்று நீக்கப்பட்டார். எதுவும் கிடைக்காவிடில் உபாத்தியாயர் தொழில் என்பது வழக்

கம். அதற்கும் இவர் உபயோகமில்லை எனில், என்னே இவர் சாமர்த்தியம்! 1902-ல் பிரன் நகரத்துப் பேடண்ட் 'ஆபீஸில் வேலைக்கமர்ந்தார். குமாஸ்தா உத்தியோகத்திற்கு இவர் ஏற்றவர் அல்லர். ஒழிந்த நேரத்தில் கணக்குப் போடுவார். உத்தியோகத்தின் சட்டத்திற்கு இது விரோதம். ஆனால் சட்டவிரோதமே இவர் தொழில். பெரிய ஆபீஸர் வந்து விட்டால் கடிதத் துண்டுகள் மேஜை டிராயருக்குள்ளாவது தலைத் தொப்பிக்குள்ளாவது ஒளிந்துவிடும். இவர் ஆயுதங்கள் ஓர் அட்டையும், பௌண்டன் பேனாவும், தலைத்தொப்பியுமே. இவைகளில் தொப்பி முக்கியமானது.

1905-ல் இவரது 26-ம் வயதில் (Special Relativity Theory) சம்பந்த ஸித்தாந்தப்பகுதி என்னும் விஷயத்தைப் பற்றி ஐந்து முக்கியமான வியாசங்கள் எழுதினார். இதுவே இவரது 'சம்பந்த சித்தாந்தம்' என்னும் தரிசனத்தின் ஆரம்பம். இவ்வியாசங்களில் வழக்கத்தில் உள்ள நியூடன் (Newton) முதலியவர்களுடைய சித்தாந்தங்களைத் தகர்த்தார்; வெகுசீக்கிரத்தில் கீர்த்தி எய்தினார். உடனே பலர் வரவேற்றனர். பல பெரிய கலாசாலைகளில் இவர் உத்தியோகம் பெற்றார். அதிர்ஷ்டம் பொங்க ஆரம்பித்தது. 1915-ல் பொது சம்பந்த சித்தாந்தம் என்னும் தரிசனத்தை வெளியிட்டார். அப்போதுகூட இவரை சாமானிய ஜனங்கள் அறியவில்லை. 1919-ம் வருஷத்துப் பூர்ண சூர்ய கிரகணம் முதலிய பரீக்ஷைகளில் இவரது சித்தாந்தம் ஜயம் பெற்றதும் இவர் உலகப் பிரசித்தி பெற்றார். இப்பொழுது சாஸ்திர ஆராய்ச்சியாளர்களில் இவருக்கு மேம்பட்டவர் எவரும் இலர்.

ஐன்ஸ்டீன் கோபம் என்பதே அறியாதவர். மனச்சஞ்சலம் ஒரு பொழுதும் இவரை அணுகினது கிடையாது. இவர் வேலையோ வெகு கடினமான விடுகதை போன்ற ஆராய்ச்சியே. பலதடவை பல முயற்சிகள் வீண்போயினும் அவற்றை மேன்மேலும் ஆராயும் சாந்த சுபாவமுடையவர். மனிதர்களால் அறிய முடியாததும் தேவர்களே அறியக் கூடியதுமான விஷயங்களை இவர்

அறிந்திருக்கிறார். ஆனால் அவற்றை நமக்குக் கணிதக் குறிப்பால் அல்லது, வேறு வழியால் சொல்ல இயலவில்லை. மனித வர்க்கத்தின் அறிவின் உன்னதம் இவரிடமே உள்ளது.

இவர் சாந்தமே உருவானவராதலால் இருவருக்குள் எப்படி மன வேறுபாடு உண்டாகும் என்று ஆச்சரியப் படுகிறார். இவர் பொழுது போக்கு, கப்பல் ஓட்டுதல். அதற்கெனச் சிறு படகு வைத்துக்கொண்டு பர்லின் நக ரத்து ஏரியில் பொழுது போக்குவார். இவர் மீகாமத் திறமையைப்பற்றி எவரேனும் குறைவாகக் கூறிவிட்டால் போதும்; வந்துவிடும் கோபமும் தற்புகழ்ச்சியும். இது ஒன்றுதான் இவரை மனித வர்க்கத்தினர் என்று காண் பிக்கிறது.

நன்மதிப்புப் பத்திரங்களுக்காக இவரை அணுகு வோர் பல கோடிக்கணக்கினர். சித்திரம், ராஜீயம், கல்வி, தத்துவம், வேதாந்தம், செலாவணி ஆராய்ச்சி, முக்கிய மாக புருஷன் பெண்சாதி சச்சரவுத்தீர்ப்பு இவைபோலப் பல விஷயங்களுக்கும் அலுப்புச் சலிப்பு இன்றி எல்லா ரையும் ஒரே மனத்துடன் பாவித்துப் பலருக்கும் பதிலும் புத்திமதியும் எழுதிக்கொண்டே இருக்கிறார். குழந்தை களுக்குத் தாலாட்டுப் பாட்டுக்கள் எழுதுகிறார். பெரிய வர்களுக்குச் சந்தேகங்களைத் தீர்க்கிறார். பணக்காரர்கள், ஏழை, பெரியவர், சிறியவர் முதலிய பேதமே இவருக்குக் கிடையாது. பேச்சிலோ ஒரு ருசியும் சாதுர்யமும் ததும் பும். ஆனால் முகம் பால்யத்தில் இருந்தவாறே பேய் பிடித்ததுபோல் தோன்றினும், அங்கு விளங்கும் பிரகாச மும், வசீகரமும், அன்பும் இவரைத் தெய்வப் பிறப்பு என்றே விளக்குகின்றன.

குறிப்புரை

மேதாவி - பேரறிவாளி. தொட்டு - தொடங்கி; முதலாக. பிரசுர கர்த்தன் - நூல்களை வெளியிடுவோன். நிராகரித்து - ஏற்க மறுத்து; ஆதாரமற்றவையென நீக்கி. உலைவைக்கிறார்கள் - ஆபத்தை உண்டாக்கு கிறார்கள். தகர்த்தார் - ஆதாரமற்றதென நிரூபித்தார். மீகாமத்திறமை - படகோட்டும் வல்லமை.

### பயிற்சி

தொட்டு, தகர்த்தார், உன்னதம், அலுப்புச்சலிப்பு, பாவித்து—வாக்கியங்களில் அமைக்க.

### வினுக்கள்

1. "ஐன்ஸ்டீன் ஒரு நற்குணக் களஞ்சியம்" என்ற கூற்று எவ்வாறு பொருந்தும்?

2. "ஐன்ஸ்டீன் சுத்தக் கிறுக்கு"—இதனை நிரூபிக்க மூன்று உதாரணங்கள் தருக.

3. ஐன்ஸ்டீனது மனைவியார் புஷ்பத்தைத் தின்ற வரலாற்றைக் கூறுக.

4. ஏழைகள்பால் ஐன்ஸ்டீன் மிகுந்த இரக்கமுடையவர் என்பதை ஆதாரங்களுடன் விளக்குக.

5. எத்தொழிலினின்றும் தம்மைக் காப்பாற்றுமாறு ஐன்ஸ்டீன் தம் தந்தையை வேண்டினர்?

6. பாதிரியார் மாணவர்களுக்குக் காட்டிய பொருள் யாது? அச் சம்பவத்தால் ஏற்பட்ட பலன் என்ன?

7. "ஐன்ஸ்டீன் பிழைக்க வழி தெரியாத பேர்வழி" என்பது எவ்வாறு பொருந்தும்?

8. ஐன்ஸ்டீனின் கீர்த்தி எய்தியது எவ்வாறு?

9. ஐன்ஸ்டீன் பொழுதுபோக்கு என்ன?

10. கோபத்தாலும் தற்புகழ்ச்சியாலும் ஐன்ஸ்டீன் எப்போது மேற்கொள்ளப்படுகிறர்?

### கட்டுரையாக்கம்

1. 'ஐன்ஸ்டீனின் ஞாபகமறதி' என்பது பொருளாக ஒரு சிறு கட்டுரை வரைக.

2. 'ஐன்ஸ்டீன் ஒரு மேதாவி' இக் கூற்றை நிரூபிக்க ஒரு கட்டுரை வரைக.

# 4. என் சரிதை - பூமி

**கே. எஸ். நாகராஜன், எம். ஏ.**

நான் ஒரு கிரகம். எங்கள் குடும்பம் மிகப்பெரிது. நான் சூரியனைச் சுற்றி வருகின்றேன். நான் செல்லும் பாதை நீள்வட்ட (Ellipse) வடிவானது. நான் எப்படிச் சூரியனைச் சுற்றி வருகிறேனே அதேபோல, சந்திரன் என்னைச் சுற்றிவருகிறான். என்னைப்போல இன்னும் பல கிரகங்கள் இருக்கின்றன. சந்திரன் என்னைப் பிடித்துக்கொண்டு தொங்குவதனால் என்னுடைய உபக் கிரகம் என்று அதனை அழைக்கிறார்கள். அதேபோல மற்றக் கிரகங்களுக்கும் உபக்கிரகங்கள் உள. சூரியனும் கிரகங்களும் உபக்கிரகங்களும் சேர்ந்து ஒரு குடும்ப வாழ்க்கை நடத்தி வருகிறோம். இக் குடும்பத்தையே சூரிய ஒழுங்கு (Solar System) என்று வான நூலோர் அழைக்கின்றனர். சூரியனே எங்கள் குடும்பத்திற்குத் தந்தை போலிருந்து வருகிறான்.

இராக்காலங்களில் ஆகாயத்தை உற்றுப் பாருங்கள். எத்தனை நட்சத்திரங்கள் காணப்படுகின்றன! ஆயினும் அவற்றில் சிலவே என் சகோதரர்களான கிரகங்கள். உண்மையில் எங்களை நட்சத்திரங்கள் என்று கூறுவது தவறு. எங்களுக்கும் நட்சத்திரங்களுக்கும் என்ன வேற்றுமை தெரியுமா? நாங்கள் உண்மையில் மிகச் சிறியவர்கள். நட்சத்திரங்கள் எங்களைவிடப் பல்லாயிர மடங்கு பெரியவை. ஆனால் என் சகோதரர்களெல்லாரும் எனக்கு அருகாமையிலேயே இருப்பதால் அவர்களைக் காணும் மக்கள் "எவ்வளவு பெரியவை இக்கிரகங்கள்!" என்று சொல்லி ஆச்சரியமடைகிறார்கள். நட்சத்திரங்கள் எனக்கு வெகுதூரத்தில் இருப்பதால், என் பரப்பில் வாழும் மக்களுக்கு அவை மிகச் சிறியவைபோலத் தோன்றுகின்றன. ஆனால் உருவின் அளவைக்கொண்டு வானத்திலுள்ள ஓர் ஒளிப்புள்ளியை நட்சத்திரமா அல்லது என்னைப்போன்ற ஒரு கிரகமா என்று கண்டு பிடிக்க முடியாது. நட்சத்திரங்கள் மின்னுகின்றன,

பொறி தட்டுகின்றன. அப்படி மின்னுதல் இல்லையானல் அது கிரகம். எங்களுக்கு மின்னுஞ் சக்தி இல்லாததற்குக் காரணந் தெரியுமா ?

சூரியனுடைய ஒளி எங்கள்மேல் படுகிறது. அந்தச் சூரிய ஒளியில் நாங்கள் பிரகாசிக்கிறோம். ஆகவே எங்களுக்குச் சுய ஒளி இல்லை. எங்களிடம் காணப்படும் ஒளி சூரியனால் எங்கள்மேல் வீசப்படும் ஒளியே. ஆனால் உண்மையான நட்சத்திரம் ஒவ்வொன்றும் சூரியனைப் போன்றது; பிறருதவியின்றித் தானே பிரகாசிக்கும் சக்தியுடையது. நட்சத்திரங்களெல்லாம் மிக வெப்ப மானவை; ஓயாமல் எரிந்துகொண்டே யிருப்பவை. நான் பிறந்ததும் வளர்ந்ததும் எவ்வாறு என்று கேட் கிறீர்களா ?

முதலில் நானும் என் சகோதரர்களும் சூரியனுடைய பகுதிகளாயிருந்தோம். சூரியன் அப்போதும் ஓர் அதி தீக்ஷண்யமான சுடர்ப் பொருளாகவே இருந்தது. எது காரணம் பற்றியோ (எனக்கே ஞாபகமில்லை) நானும் என் சகோதரர்களுமாய்ச் சேர்ந்து சூரியனுடன் இனி இருத் தல் இயலாதென்றும், அதனால் நாங்கள் தனியே விலகிச் சென்றுவிடவேண்டும் என்றும் முடிவுசெய்தோம்; அதே போல அவனிடமிருந்து விலகிக் காற்றில் பறந்து போனோம். ஆனாலும் தந்தைபோலும் சூரியனிடம் எங்களுக்கிருந்த அன்பு எங்களை அவனுடன் பின்னும் பிணைக்க வைத்தது; அவனிடமிருந்து அறவே விலகி நிற்க எங்களால் முடியாமற் போயிற்று.

அதனால் அவனைச் சுற்றிவர ஆரம்பித்தோம். இங்ஙனம் எங்களைச் செயற்படுத்தும் விசை (Force) க்குப் புவிக் கவர்ச்சி (Gravity) என்று பெயர். இந்தக் கவர்ச்சி எங்களை மாத்திரம் கட்டுப்படுத்துவதொன்று அன்று. எந்தச் சிறிய பொருளும் அதற்கு அருகாமையிலுள்ள பெரிய பொருளால் இம்மாதிரி கவரப்படுகிறது. இக் கவர்ச்சியாலேதான் மேலே எறியப்படும் பொருள்கள் மீண்டும் பூமியில் வந்து சேருகின்றன. நாங்கள் சூரிய னிடமிருந்து பிரிந்து போகும்போது என் அனற்பதம்

(Temperature) எவ்வளவு இருந்திருக்கும் என்று உங்களால் எண்ணவும் முடியாததே! என்னை நாற்புறமும் சூடான வாயுக்களும் ஆவிகளும் சூழ்ந்துகொண் டிருந்தன. பிறகு காலஞ் செல்லச் செல்ல என் அனற் பதம் குறைந்து, தற்போதைய நிலையை அடைந்தேன். நன்ருக யோசித்துப் பார்த்தால் சூரியனும் ஆறிவருவது உங்களுக்குத் தெரியலாம். ஆனால் அது என்னைப்போலக் குளிர்நிலையடைய இன்னும் பல கோடி வருஷங்கள் செல்லும். நான் சூரியனை விட்டுப் பிரிந்து சென்ற காலத்து என் நிலப்பரப்பில் தாவரங்களோ மனிதர்களோ ஒரு சிறிதும் இருக்கவில்லை. எனது தீவிர சூட்டினால் அவற்றின் உயிர்வாழ்க்கை இயலாது போய்விட்டது.

நான் எப்படிச் சூரியனிடமிருந்து பிரிந்து சென் றேனே, அதேபோலச் சந்திரன் என்னிடமிருந்து பிரிந்து சென்ருன். இப்பொழுது அமெரிக்காவுக்கும் ஜப்பா னுக்குமிடையே பஸிபிக் மகா சமுத்திரம் இருக்கிற தல்லவா? இது அடைத்துக் கொண்டிருக்கும் இடத்தில் தான் சந்திரன் இருந்ததாக எனக்கு ஞாபகம். அது எழுந்து போய்விட்டதும், என் குளிர்ச்சியினால் காற்றில் இருந்த நீராவியெல்லாம் சுருங்கிச் செறிந்து (Condense) மழையாகப் பெய்யவே, அம் மழைநீர் சந்திரனைப் போன்ற என் உபகிரகங்கள் என்னைவிட்டுச் சென்றதனு லுண்டான குழிகளிலெல்லாம் நிரம்பியது. இந்த நீர்ப் பரப்புக்களையே கடல்களென்றும் சமுத்திரங்களென்றும் பெயரிட்டு அழைக்கின்றீர்கள். இப்படியாக என்னிட மிருந்த நிலப்பரப்பும் அதைச் சூழ்ந்திருந்த நீரும் குளிர்ந்தவுடனே உயிரினங்கள் அவற்றில் வாழத் தொடங்கின.

இப்பொழுதும் என் புறப்பறப்பு குளிர்ச்சியடைந் திருக்கிறதே தவிர, என் உட்புறம் சூடாகவே யிருந்து வருகிறது. ஒரு சுரங்கத்திற்குள் செல்லச் செல்ல சூடு அதிகரிப்பதை இன்றுங் காண்கிறீர்கள் அல்லவா! அப்படியே இன்னும் பல நூறு மைல்கள் ஆழத்தில் நீங்கள் செல்வீர்களானுல் அங்கே தரைப் பரப்பு முழு

வதும் சிவக்கக் காய்ந்திருக்கக் காண்பீர்கள். சந்திரன் என்னைவிட மிகச் சிறியது. அதனால் அது மிக விரைவில் குளிர்ந்து போய்விட்டது. அதை இப்பொழுது 'தண்மதி' யென்றும், அதன் ஒளியைத் 'தண்ஒளி' என்றும் அழைக்கிறீர்கள். அதில் எங்கே பார்த்தாலும் பனிக்கட்டி யாறு (Glaciers) களும் பனிமலைகளுமே உள்ளனவோ என்றுகூட ஊகிக்க வேண்டியிருக்கிறது.

### குறிப்புரை

உபகிரகம் - சேர்ந்துள்ள கிரகம். அதிதீக்ஷண்யமான - மிகவும் பிரகாசமான. அனற்பதம் - சூட்டின் நிலை ; ஆறும் வேற்றுமைத் தொகை (அனலினதுபதம்). ஞாபகம் - நினைவு. பரப்பிற் சிறியதைக் கடல் என்றும் பெரியதைச் சமுத்திரம் என்றும் அழைக்கிறார்கள். (கடல் - தமிழ்ச் சொல். சமுத்திரம் - வடசொல்). புறப்பரப்பு × அகப்பரப்பு.

### பயிற்சி

1. உபக்கிரகம், அனற்பதம், உயிர்வாழ்க்கை, புவிக்கவர்ச்சி, குடும்ப வாழ்க்கை—இவைகளை அமைத்துச், சொந்த வாக்கியம் எழுதுக.

2. குளிர்நிலை, பலகோடி, அனற்பதம், தண்மதி, பனிமலை—இவை என்ன தொடர்கள் ?

### வினாக்கள்

1. பூமியின் குடும்பம் என்பது யாது? அதற்கு வழங்கும் பெயர் என்ன ?
2. நட்சத்திரங்களுக்கும் கிரகங்களுக்கும் உள்ள வேறுபாடு என்ன ?
3. பூமி பிறந்து வளர்ந்த வரலாறு யாது ?
4. புவிக்கவர்ச்சி, அனற்பதம்—விளக்குக.
5. உயிரினங்கள் பூமியின்மேல் எந்நிலையில் வாழத்தொடங்கின ?

### கட்டுரையாக்கம்

1. இப்பாடத்தில் வந்துள்ள செய்திகளைக்கொண்டு சூரியன், சந்திரன்—இவைகளின் சுயசரிதைகளைச் சுருக்கமாக வரைக.

2. ஓர் அறிஞர் தம் சரிதையைத் தாமே கூறுவதுபோல் பதினைந்து வரியில் எழுதுக.

# 5. சிரிப்புக் கதைகள்

எம். லக்ஷ்மி அம்மாள், எம். ஏ., எல். டி.

சிரிப்பு மகா வன்மையுடையது. சிரிப்புணர்ச்சியும், சிரிக்கும் திறனும் மனிதனுக்கேயன்றி விலங்குகளுக்கில்லை யென்றும், சிரிப்பு பகுத்தறிவால் மேம்பட்ட மனித ஜாதியாரின் விசேஷ குணங்களில் ஒன்றென்றும் சிலர் சொல்லுகிருர்கள். "பிறர் சிரிப்பை யஞ்சி மனமுளையப் பட்டவன் தோல்விக்குரிய குணங்களுடையவன்; தன்னைத் தான் சிரிக்கவல்லவன்; எல்லாக் கஷ்டங்களையும் எளிதில் வெல்லவல்லவன்" என்று ஒரு சீன தேச முதுமொழி கூறுகிறது. கார்காலத்தில் நள்ளிரவில் திடீரென்று தோன்றி மறையும் மின்னலால் ஒரு கணம் எங்கும் வெளிச்சமாவது போல, சிரிப்பு ஒரு கணம், மனத்திலெங்கும் ஒளிவீசச் செய்யவல்லது. சிரிப்பை ஒரு முக்கிய அம்சமாகக் கொண்ட கதைகள் சிலவற்றை இங்கே எழுதுகிறேன்.

சிவன் திரிபுரமெரித்த கதை எல்லாருக்கும் தெரியும். பிரமனும், விஷ்ணுவும், பிறரும் "நானே பிரதானி! நானே! நானே!" என்று வீண்பெருமை பேசியதைக் கேட்டு, 'அவனன்றி ஓரணுவும் அசைய'ப்பெருத சிவன், பிறர் துணையைத் தான் தேடின விளையாட்டயர்ப்பு நீங்கித் தன்னிலையைத் தானுணர்ந்து சிரித்தான். திரிபுரங்களும் அக்கணமே எரிந்து சாம்பராகிவிட்டன. இந்தக் கதையின் பயன் வீண் பெருமையைக் கண்டிப்பதன்று; ஈசனின் பெருமையை உணர்த்துவதே யென்று எனக்குத் தோன்றுகிறது.

மயனமைத்த மாளிகையின் மர்மங்களை யறியாமல் துரியோதனன் நடை தடுமாறியதைக் கண்டு திரௌபதி சிரித்தாள். அந்த நாளில், திரௌபதி கௌரவரிடம் துவேஷம் பாராட்டவில்லை. அவர்களுடைய பொருமையை அறிந்தும், உறவையெண்ணி, அவர்களுடன் உரிமை கொண்டாட மனமிசைந்திருந்தாள். அவளுடைய கேலிச் சிரிப்புக்கு மாற்ருக, அப்படி "மன்னைச் சிரித்த செங்

கனிவாய் மாருதிரங்கி அழுதரற்ற"ச் செய்ய வேண்டு மென்று கௌரவர் கொண்ட கொடிய எண்ணமே பாரதப் போருக்கும் அவர்களுடைய குலநாசத்துக்கும் காரண மாயிற்று. பாரதக் கதையில், துரியோதனுதியர் குண மில்லாதவருமில்லை; பாண்டவர் குற்றமற்றவருமில்லை. ஆனுல் நல்லெண்ணங்களை மேற்கொண்டு பகையை மறக்கவல்லவர் பாண்டவர்; பகையிலும், பகையால் வரும் இரக்கமின்மையிலும், பொருமையிலும் ஈடுபட்டுக் கரைகாணுதவர் கௌரவர். திரௌபதியின் சிரிப்பு பாரதப் போருக்கு ஏதுவான கதையிலும் இந்த வித்தியாசத்தைக் காணலாம்.

அசோக வனத்தில் சிறையிலிருந்த காலத்தில், சீதை தன்னைக் காவல் காத்த அரக்கியரின் விகார அலங்காரத் தைக் கண்டு சிரித்தாளென்பது, பெண்டிருக்குள் வழங் கும் கதை. பிரிவின் சோகமே உருவெடுத்தாற்போலிருந்த பிராட்டி அற்ப விஷயத்தை எண்ணிச் சிரித்தாளென்பது தகாதென்பர் சிலர். அரக்கியர் நடுவில் புலிகளிடைப் பட்ட மான்போல மெய் பதறியும் சீதை ஒருநாளும் மனந் தளரவில்லை. இராவணனுடைய பிரதாபத்தை எடுத்துக் கூறும் அரக்கிகளின் பேச்சு, அவள் மனத்தில் வெறுப்பையும் இகழ்ச்சியையும் தர, அவர்களுடைய தோற்றத்தைக்கண்டு அவளுக்கொருகால் சிரிப்பும் வந்த தென்று சொன்னுலும் பொருந்தும். இலங்கையில் இலங் கேசனைத் துரும்பென மதித்திகழும் துணிவு அவளுக் கிருந்தது. முதல் நாள் போரில் முறிந்து திரும்பின வுடன், இராவணன் தன்னைச் 'சானகி நகுவளென்றே' தீராத வெட்கமுற்றுன்.

தற்காலக் கதைகள் ஒன்றிரண்டு பின்வருவன:— இத்தாலி, ஆஸ்திரியர் ஆட்சிக் குட்பட்டிருந்த காலத்தில், தேசத்தில் ஆங்காங்குச் சுதந்திர நாட்டச் சங்கங்கள் கிளைத்தன. அவற்றிற் சேர்ந்த தேசாபிமானிகளுக்குக் கடுந்தண்டனைகளிட்டு அந்தச் சங்கங்களை கலைத்துவிட வேண்டுமென்று அரசாங்கத்தார் பெரிதும் முயன்றனர். இவ்விதம் தண்டனைக்குட்பட்டும் தேசாபிமானிகள் கண்

ணீர் பெருகத் தம் உற்ருரிடம் விடைபெற்று, "தாய் நாடே! என் தியாகத்தை ஏற்றுக்கொள்" என்று பூமி யைத் தொட்டு வணங்கிச் சிறைக்குச் செல்வது வழக்கமா யிருந்தது. தினமும் நீதிஸ்தலங்களில் நிகழ்ந்த இக் காட்சி பரிதாபகரமாயிருந்தது. இந்தச் சங்கங்களொன் றில் சேர்ந்த யோசப் என்ற வாலிபன், பெரிய பழைய குடியிற் பிறந்தவன்; போலீசாரால் குற்றம் சாட்டப்பட்டு நீதிஸ்தலத்துக்கு வந்தான். அவனுடைய வரலாற்றை விசாரித்து நீதிபதி 'உனக்கு ஆயுள் பரியந்தம் சிறை வாசம்' என்று கட்டளையிட்டார். அவன் சிரித்து நல்ல தென்று தலைவணங்கினுன். அந்தத் தீரச் சிரிப்பைக் கேட்ட அவன் உற்ருர் உறவினர் மனம் தேறிப் புதிய உற்சாகத்துடன் தன் உயிரையும் பொருளையும் தேசத் துக்காகச் செலவிடச் சித்தமாயினர்.

வங்காளத்தில் லோதிகா என்ற ஒரு பெண்—குழந் தைப் பருவத்தில் செல்வமாய் வளர்ந்தவள்—புக்ககத் தில் சகிக்கமுடியாத கஷ்டங்களுக்குள்ளாளுள். அவள் கணவன் இளையாளைக் கல்யாணம் செய்து வீட்டிற் கழைத்துவந்தான். லோதிகாவின் ஒரு குழந்தையையும் அவள் கையில் கொடுக்காமல் மாமியார் பிடுங்கி வளர்த்து வந்தாள். அவளைப் புக்ககத்தார் செய்த கொடுமைகளுக் குக் கணக்கில்லை. கடைசியில் அவள் உயிரை வெறுத்துத் தற்கொலை செய்துகொள்ளத் துணிந்தாள். நான்று கொண்டு சாவக் கயிற்றைச் சித்தம் செய்தாள். அப் பொழுது தொட்டிலிலிருந்த குழந்தை சிரித்தது அவள் காதிற் பட்டது. அவள் குழந்தையின் அருகில் போய்ப் பார்த்தாள். சுவர் மேலிருந்த ஒரு பல்லியைக் கண்டு குழந்தை மகிழ்ந்து கொண்டிருந்தது. இதற்குத்தானு இவ்வளவு சிரிப்பென்று லோதிகா நினைத்தாள். சிரிப்பைக் கேட்டபின் அவளுக்குச் சாவ மனம் வரவில்லை; வீட்டை விட்டு ஓடிப்போய் அவள் பரதேசியாய்த் திரிந்தாள். "வாழ்க்கை இனிதே; சந்திரனும் சூரியனும் இனியவை; நக்ஷத்திரங்கள் இனியவை; புல்வெளியில் வீசும் காற்று

இனியது!'' என்னும் உண்மையை அவள் அறிந்தாள் போலும்.

வாழ்க்கையில் இனியவைகளை ஏற்று மகிழவும், இன்னுததை உதிர்க்கவும், இகழத்தக்கதை இகழவும் நமக்கு உள்ளதை உள்ளபடி அறியவல்ல திடச்சித்தம் வேண்டும்; அந்தத் திடச்சித்தத்தின் அறிகுறிகளிலொன்று சிரிப்பேயாம்.

### குறிப்புரை

மனம் உளைதல் - மனம் வருந்துதல். அயர்ப்பு - களைப்பு. மயன் - தேவ தச்சன். மர்மம் - இரகசியம். மன்னை - சக்கரவர்த்தியான துரியோதனனை. மாறாது - தப்பாமல். பிராட்டி - சீதை (பிரான் - ஆண்பால்).

### பயிற்சி

1. இகழ்ச்சி, இனியது, பரதேசி—எதிர்ப்பதம் கூறுக.
2. எதிர்ப்பால் தருக - பிரான், அரக்கன், பெண்டிர்.

### வினாக்கள்

1. சிரிப்பின் தன்மையைப் பற்றிச் சீன முதுமொழி கூறுவது என்ன?
2. ஈசன் திரிபுரம் எரித்த கதையால் சிரிப்பின் தன்மையை யாதென்று உணரலாம்?
3. திரௌபதியின் சிரிப்பால் விளைந்தது யாது?
4. பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் குணத்தில் உள்ள வேறுபாடு என்ன?
5. சீதை சிரித்த சந்தர்ப்பங்கள் எவை?
6. 'புலிகளிடைப்பட்ட மான்போல' சந்தர்ப்பங்கூறி விளக்குக.
7. யோசப் என்ற இத்தாலிய வாலிபன் சிரித்தது எப்பொழுது? அதன் விளைவு என்ன?
8. குழந்தையின் சிரிப்பு எதைத் தவிர்த்தது? இதனால் நீங்கள் அறிவது யாது?

### கட்டுரையாக்கம்

1. 'சிரிப்பும் அதன் விளைவும்' என்பதுபற்றி நீவிர் அறிந்ததை வரைக.
2. 'அழுகையைத் தவிர்த்தல்' என்பது பொருளாகப் பத்து வரியில் எழுதுக.

# 6. இயேசுநாதர் பொன்மொழிகள்

## (கிறிஸ்தவ மறை நூல்)

1. மனுஷர் காணவேண்டுமென்று அவர்களுக்கு முன்பாக உங்கள் தர்மத்தைச் செய்யாதபடிக்கு எச்சரிக்கையாய் இருங்கள். செய்தால் பரலோகத்திலிருக்கிற உங்கள் பிதாவினிடத்தில் உங்களுக்குப் பயனில்லை.

2. ஆகையால் நீ தருமஞ் செய்யும்போது, மனுஷரால் புகழ்ப் படுவதற்கு, மாயக்காரர் ஆலயங்களிலும், வீதிகளிலும் செய்வதுபோல, உனக்கு முன்பாகத் தாரை ஊதுவியாதே ; அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

3. நீயோ தர்மஞ் செய்யும்போது, உன் தர்மம் அந்தரங்கமாயிருப்பதற்கு, உன் வலது கை செய்கின்றதை உன் இடது கை அறியாதிருக்கக் கடவது.

4. அப்பொழுது அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா தாமே உனக்கு வெளியரங்கமாய்ப் பலனளிப்பார்.

5. அன்றியும் நீ ஜெபம் பண்ணும்போது மாயக்காரரைப் போலிருக்க வேண்டாம். மனுஷர் காணும்படியாக அவர்கள் ஜெப ஆலயங்களிலும் வீதிகளின் சந்திகளிலும் நின்று ஜெபம் பண்ண விரும்புவார்கள் ; அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

6. நீயோ, ஜெபம் பண்ணும்போது, உன் அறை வீட்டிற்குள் பிரவேசித்து, உன் கதவைப் பூட்டி, அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவை நோக்கி ஜெபம் பண்ணு ; அப்பொழுது, அந்தரங்கத்தில் பார்க்கிற பிதா வெளியரங்கமாய் உனக்குப் பலனளிப்பார்.

7. அன்றியும் நீங்கள் ஜெபம் பண்ணும்போது, அஞ்ஞானிகளைப் போல் வீண் வார்த்தைகளை அலப்பாதேயுங்கள் ; அவர்கள், அதிக வசனிப்பினால் தங்கள் ஜெபம் கேட்கப்படுமென்று நினைக்கிறார்கள்.

8. அவர்களைப் போல நீங்கள் செய்யாதிருங்கள். உங்கள் பிதாவை நோக்கி நீங்கள் வேண்டிக் கொள்ளுகிற

தற்கு முன்னமே உங்களுக்கு இன்னது தேவை என்று அவர் அறிந்திருக்கிருர்.

9. நீங்கள் ஜெபம் பண்ணவேண்டிய விதமாவது, "பரமண்டலத்திலிருக்கிற எங்கள் பிதாவே, உம்முடைய நாமம் பரிசுத்தப் படுவதாக.




10. உம்முடைய ராஜ்யம் வருவதாக; உம்முடைய சித்தம் பரமண்டலத்திலே செய்யப்படுவது போல, பூமியிலேயும் செய்யப் படுவதாக.

11. எங்களுக்கு வேண்டிய ஆகாரத்தை இன்று எங்களுக்குத் தாரும்.

12. எங்கள் கடனாளிகளுக்கு நாங்கள் மன்னிக்கிறது போலவே எங்கள் கடன்களை எங்களுக்கு மன்னியும்.

13. எங்களைச் சோதனைக்குட்படப் பண்ணுமல், தீமையினின்று ரக்ஷித்துக் கொள்ளும். ராஜ்யமும், வல்லமையும், மகிமையும் என்றென்றைக்கும் உம்முடையவைகளே ஆம்" என்பதே.

14. மனுஷருடைய தப்பிதங்களை நீங்கள் அவர்களுக்கு மன்னித்தால், உங்கள் பரமபிதா உங்களை மன்னிப்பார்.

15. மனுஷருடைய தப்பிதங்களை நீங்கள் அவர்களுக்கு மன்னியாதிருந்தால், உங்கள் பிதா உங்கள் தப்பிதங்களையும் மன்னியாதிருப்பார்.

16. நீங்கள் உபவாசிக்கும்போது மாயக்காரரைப் போல முகவாடலாய் இராதேயுங்கள் ; அவர்கள் உபவாசிக்கிறதை மனுஷர் காணும் பொருட்டாகத் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

17. நீயோ உபவாசிக்கும்போது, அந்த உபவாசம் மனுஷர்களுக்குக் காணப்படாமல், அந்தரங்கத்தில் இருக்கிற உன் பிதாவுக்கே காணப்படும்படியாக, உன் தலைக்கு எண்ணெய் பூசி, உன் முகத்தைக் கழுவு.

18. அப்பொழுது அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா உனக்கு வெளியரங்கமாய்ப் பலனளிப்பார்.

19. பூமியிலே எங்களுக்குப் பொக்கிஷங்களைச் சேர்த்து வைக்க வேண்டாம் ; இங்கே பூச்சியும், துருவும் அவைகளைக் கெடுக்கும் ; இங்கே திருடரும் கன்ன மிட்டுத் திருடுவார்கள்.

20. பரலோகத்தில் உங்களுக்குப் பொக்கிஷங்களைச் சேர்த்து வையுங்கள் ; அங்கே பூச்சியாவது துருவாவது கெடுக்கிறதும் இல்லை ; அங்கே திருடர் கன்னமிட்டுத் திருடுகிறதும் இல்லை.

21. உங்கள் பொக்கிஷம் எங்கே இருக்கிறதோ அங்கே உங்கள் இருதயமும் இருக்கும்.

22. கண்ணானது சரீரத்தின் விளக்காயிருக்கிறது ; உன் கண் தெளிவாயிருந்தால், உன் சரீரம் முழுவதும் வெளிச்சமாயிருக்கும்.

23. உன் கண் கெட்டதாயிருந்தால், உன் சரீரம் முழுவதும் இருளாயிருக்கும் ; இப்படி உன்னிலுள்ள வெளிச்சம் இருளாயிருந்தால் அவ்விருள் எவ்வளவு அதிகமாயிருக்கும் !

24. இரண்டு எஜமான்களுக்கு ஊழியஞ்செய்ய ஒருவராலுங் கூடாது; ஒருவனைப் பகைத்து, மற்றவனைச் சிநேகிப்பான்; அல்லது ஒருவனைப் பற்றிக் கொண்டு, மற்றவனை அசட்டை பண்ணுவான்; தேவனுக்கும் உலகப் பொருளுக்கும் ஊழியஞ் செய்ய உங்களால் கூடாது.

25. ஆகையால், என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போம் என்று உங்கள் ஜீவனுக்காகவும், என்னத்தை உடுப்போம் என்று உங்கள் சரீரத்துக்காகவும் கவலைப் படாதிருங்கள் என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்; ஆகாரத்தைப் பார்க்கிலும் ஜீவனும், உடையைப் பார்க்கிலும் சரீரமும் விசேஷித்தவர்கள் அல்லவா!

26. ஆகாயத்துப் பட்சிகளைக் கவனித்துப் பாருங்கள்; அவைகள் விதைக்கிறதுமில்லை, அறுக்கிறதுமில்லை, களஞ்சியங்களில் சேர்த்து வைக்கிறது மில்லை; அவைகளையும் உங்கள் பரம பிதா பிழைப்பூட்டுகிருர்; அவைகளைப் பார்க்கிலும் நீங்கள் விசேஷித்தவர்கள் அல்லவா!

27. கவலைப் படுகிறதனாலே உங்களில் எவன் தன் சரீர அளவோடு ஒரு முழத்தைக் கூட்டுவான்!

28. உடைக்காகவும் நீங்கள் கவலைப் படுகிறதென்ன? காட்டுப் புஷ்பங்கள் எப்படி வளருகின்றனவென்று கவனித்துப் பாருங்கள்; அவைகள் உழைக்கிறதுமில்லை; நூற்கிறதுமில்லை.

29. என்றாலும், சாலமோன் முதலாய்த் தன் சர்வ மகிமையிலும் அவைகளில் ஒன்றைப் போலாகிலும் உடுத்தி யிருந்ததில்லை என்று உங்களுக்குச் சொல்லுகிறேன்.

30. அற்ப விசுவாசிகளே! இன்றைக்கு இருந்து நாளைக்கு அடுப்பிலே போடப்படும் காட்டுப் புல்லுக்குத் தேவன் இவ்விதமாக உடுத்துவிப்பது அதிக நிச்சயமல்லவா?

31. ஆகையால், என்னத்தை உண்போம், என்னத்தைக் குடிப்போம், என்னத்தை உடுப்போம் என்று கவலைப்படாதிருங்கள்.

32. இவைகளையெல்லாம் அஞ்ஞானிகள் நாடித் தேடு

கிறார்கள்; இவைகளை யெல்லாம் உங்களுக்கு வேண்டிய வைகள் என்று உங்கள் பரம பிதா அறிந்திருக்கிறார்.

33. முதலாவது தேவனுடைய ராஜ்யத்தையும் அவருடைய நீதியையும் தேடுங்கள்; அப்பொழுது இவை களெல்லாம் உங்களுக்குக் கூடக் கொடுக்கப்படும்.

34. ஆகையால், நாளைக்காகக் கவலைப் படாதிருங் கள்; நாளையதினம் தன்னுடையவைகளுக்காகக் கவலைப் படும். அந்தந்த நாளுக்கு அதனதன் பாடு போதும்.

### குறிப்புரை

அந்தரங்கம் - மறைவு. வெளியரங்கம் - வெளிப்படை; பகிரங்கம். அலப்புதல் - வீணாகச் சத்தமிடல். உபவாசம் - பட்டினி. அசட்டை செய் தல் - புறக்கணித்தல். விசேஷித்தவர் - சிறந்தவர். பாடு - கஷ்டம்.

### பயிற்சி

1. எதிர்ப்பதம் தருக: பரலோகம், தர்மம், கடனாளி, அஞ்ஞானி.
2. சாலமோன், மாயக்காரர் என்போர் யார்?

### வினாக்கள்

1. எவ்வாறு தர்மம் செய்ய வேண்டும்? எவ்வாறு செய்யலாகாது?
2. ஜெபம் செய்யவேண்டிய முறை யாது?
3. உபவாசம் எவ்வாறு அமையவேண்டும்?
4. பட்சிகளைப் பார்த்து நாம் கற்றுக்கொள்ள வேண்டியதென்ன?
5. பூமியில் பொக்கிஷத்தைச் சேர்த்து வைப்பதில் உள்ள குறை என்ன?
6. "இரண்டு எஜமான்கள்" எனப்படுவோர் யார்?
7. நாளைக்காக ஏன் கவலைப்படலாகாது?

### கட்டுரையாக்கம்

கடவுளை நோக்கி நாம் எவ்வாறு ஜெபம் செய்ய வேண்டும் என்று இயேசு நாதர் கூறுகிறார் என்பதை நும் சொந்த வாக்கியங்களில் 15 வரி களுக்குள் எழுதுக.

# 7. பித்தம் தெளிய

ரா. ஸ்ரீ. தேசிகன்,. எம். ஏ.

மாதம் ஆனி மாதம். சாயங்காலம் ஐந்து மணி இருக்கும். ஐந்து மணி ஆகியும் வீட்டின் அறையில் புழுக்கமா யிருந்தது. வெளியிலே கடற்கரைப் பக்கம் உலாவச் சென்றேன். கடற்கரை மணல்மீது உட்கார முடியவில்லே. அங்கேயும் அனல் அடித்தது. காற்று எந்தக் கூட்டில் பதுங்கியிருந்ததோ ?—தெரியவில்லே. ஆகாயத்தில் கொஞ்சங்கூடச் சலனமில்லே. வெயில் தணிகிற வரையில் பரிட்சை மண்டபத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தேன்.

நாழி ஆகவாக வெயிலும் குறைந்தது. குளிர்ந்த காற்றும் வீசிற்று. கடற்கரைமீது நிழலும் விழுந்தது. அங்கே துணியைப் பரப்பி, விண்ணே நோக்கிய வண்ணம் படுத்திருந்தேன்.

கொஞ்சங் கொஞ்சமாய் வானும் தரையும் இருள, வானில் நட்சத்திரங்கள் வரத்தொடங்கின. பொழுது போகப் போக, ஆகாயத்தையே அவைகள் போர்த்து விட்டன. அவைகள் ஏதோ பாடிக்கொண்டு வந்தன. கீழே பாட்டிற்கேற்ப, கடலும் தன் திரைக் கைகளேக் கொட்டித் தாளம் போட்டது. சூழ் இருட்டில் விரிந்து கிடந்த தரை, இந்தப் பாட்டை, வழிந்தோடுகிற அமைதி யில் உற்றுக் கேட்டது.

என்ன பாட்டுப் பாடுகின்றன அந்த நட்சத்திரங்கள்! அந்தப் பாட்டை மனிதன் கேட்கிருனு? அவனுக்கு அவகாசம் இருக்கிறதா அண்ணுந்து பார்க்க ?

நமக்கு அவகாசம் ஏது? இருள் கீறிக் கீழ்வான் நுதலில் சுடர்விட்டெரிகிற சூரியனே யார் பார்க்கிருர்கள் ? சந்திரோதயக் காட்சியைக் கண்டு யார் களிப்புறுகிருர் கள்? காற்றின் இன்பத்தை யார் நுகர்கிருர்கள்? கடலின் கானத்தை யார் கேட்கிருர்கள்? இவைகள் தினசரிக் காட்சிகளானபடியால், இவைகளின் அருமையை நாம்

உணரவில்லை—என்ற நீண்ட நினைவுப் பாதையில் என் மனம் சென்றுகொண்டிருந்தது.

"அகண்டமான ஆகாயத்தின் அமைதி என்னை அப்படியே திகைக்கும்படி செய்கிறது" என்கிறார் ஒருவர். "அளப்பிலா ஆகாயத்தைப் பார்த்து அழுவன், தொழுவன்" என்கிறார் மற்றொருவர். இவர்களுடைய வார்த்தைகள் என் மனத்தில் எழுந்தன. ஆனால் உள்ளம் தாரகைக் கணத்தின் கானத்தை நாடிற்று.

என்ன பாட்டை அவைகள் இசைக்கின்றன என்ற விஷயம் முதலில் எனக்கு விளங்கவில்லை. ஓர் இன்ப அருவி என் உள்ளத்தில் பாய்ந்தது. அந்த அருவியின் சலனத்தை உற்றுக் கேட்டேன். நக்ஷத்திரங்களுடைய பாட்டின் பொருள் நன்கு என் மனத்தில் பதிந்தது.

"எங்கள் உருவங்கள் மிகச் சிறியவைகள் என்று கருதி எங்களை இகழ்ந்து விடாதீர்கள். நீங்கள் காண்கிற சூரியனைவிட, நாங்கள் எத்தனையோ மடங்கு பெரியவர்கள். நாங்கள் எண்ணரும் தொலையில் இருக்கிறோம். எங்களிடமிருந்து வெளிச்சம் உங்களிடத்துக்கு வருகிறது. ஒரு விநாடிக்கு ஒரு லட்சத்து எண்பத்தாறாயிரம் மைல் வேகத்தில் வெளிச்சம் வானவெளியில் பின்னிப் பாய்கிறது. சூரியனிடமிருந்து உங்களுக்கு வெளிச்சம் வர 8 நிமிஷங்கள் ஆகின்றன. எங்களிடமிருந்து உங்களுக்கு ஒளி வர, பத்து வருஷங்கள்கூடச் சென்றுவிடுகின்றன. எங்களிடமிருந்து உங்களுக்கு வெளிச்சம் வராத மண்டலங்களும் உண்டு. இங்கிருந்து பார்த்தால் நீங்கள் இருக்கிற இடமே தெரியவில்லை. நாங்களே பொட்டுப்பொட்டாய்க் காணப்படுகிறபொழுது உங்களைப் பற்றிப் பேசுவானேன்? ஆனால் ஒன்றுமில்லாத கடுகத்தனை இடத்துக்கு எத்தனை கடும்போர் செய்கிறீர்கள்? எங்களைச் சற்று அண்ணாந்து பாருங்களேன். உங்கள் பித்தம் தெளியும். எங்கள் வெளிச்சம் அழியாத வெளிச்சமென்று நினைத்து விடாதீர்கள்; அற்பாயுள் உடையவை; மெழுகு வர்த்திகள்போல அவனுடைய ஆகாய அரண்மனை வீதியில் ஏற்றி வைக்கப்பட்ட விளக்குகள் நாங்கள்.

அவனுடைய சங்கல்பத்தில் அத்தனை விளக்குகளும் அவிந்து விடலாம். அவிந்து போனால் மாளாத பேரிருள் வந்து மூடிவிடும்—ஒன்றும் எங்களுக்குத் தெரியவில்லை. அவன் சங்கல்பத்தை நிறைவேற்றிக்கொண்டிருக்கிறோம்'' என்று நட்சத்திரங்கள் பாடிக்கொண்டிருந்தன.

பாட்டைக் கேட்டது என் செவி; ஆகாயத்துக்கு விரைந்தது என் கண். கடல் மணல் போல எத்தனைக் கணக்கிலா நட்சத்திரங்கள் விண்ணில் சிதறிக் கிடந்தன! இவைகள் எத்தனை மடங்கு நாம் இருக்கிற பூமியை விடப் பெரியவை என்ற வியப்பில் ஒன்றும் எனக்குத் தோன்றவில்லை. எப்படிப் பம்பரங்கள் போல அவைகள் சுழல்கின்றன என்று எண்ணமிட்டேன்.

இங்கே நம்மிடத்தே நடந்த எத்தனைக் கோர யுத்தங்களை நீங்கள் கண்டிருப்பீர்கள். பிரமாண்டமான இராம இராவண யுத்தத்தை நீங்கள் கண்டிருக்கிறீர்கள். குருக்ஷேத்திரப் பேரொலியை நீங்கள் கேட்டிருக்கிறீர்கள். ஹோமர் பாடிய ட்ராய் (Troy) எரிந்தது உங்கள் ஞாபகத்தில் இருக்கிறது. அலெக்சாண்டரின் போர் முழக்கம் எங்கே? ஹனிபாலின் யுத்த வேகமெங்கே? சீசரின் பேராசை எங்கே? நெப்போலியனின் கதிதான் என்ன? நெப்போலியனைப் பின்பற்றுகிற சூரர்களின் கதிதான் என்ன? கணக்கிலாக் கண்களோடு இக்காட்சிகளைக் காண்கிற உங்கள் கதிதான் என்ன—ஒன்றும் தெரியவில்லை.

ஏதோ ஒரு சக்தி இஷ்டப்படி ஆட்டிவைக்கிறது; அழிக்கிறது. அதனுடைய இயல்பு ஒரு மந்திரம்; ஓர் இரகசியம். மனம் தடுமாறுகிறது; வாய் குழறுகிறது; சிந்தை சுழல்கிறது.

எத்தனை பெரிய மஹானோ, மேதாவியோ, வீரனோ—எவனும் **அவன்** கையில் அகப்பட்ட துரும்பு. அதை வைத்துக்கொண்டு தன்னுடைய காரியத்தைச் சாதிக்கிறான் **ஆண்டவன்**. நெப்போலியன் ஒரு சமயத்தில் சொன்னது இப்பொழுது ஞாபகத்திற்கு வருகிறது. ''ஏதோ ஒரு சக்தி என்னைத் தள்ளிக்கொண்டு போகிறது.

காரியம் முடிந்தால், இதோ கிடக்கிற புல் தடுக்கிக் கீழே விழுந்துவிடுவேன் '' என்கிறன். நேற்று நெப்போலியன் சொல்லுகிற வார்த்தை என்ன? கண்ணன் அர்ச்சுனனை வியாஜமாக வைத்துக்கொண்டு தன் காரியத்தை முடித்து விட்டான். காரியம் ஆனதும் காண்டீவத்தின் மூலம் தான் தந்த சக்தியை இழுத்துவிட்டான் அம்மாயக் கள்வன். சாதாரண கோகுலத்து ஆயர்கள் அர்ச்சுனனை அடித்துத் துரத்திவிட்டார்கள். இதை உணராது பெரு மதங்கொண்டு ஏனே வெட்டி மடிகிறேம்! '' அறிவினல் விண்ணை அளக்கிறேம். ஆனல், அன்பூற்றுக்கள் வறண்டு போய்விட்டன. அறிவுமட்டும் போதாது; அன்பும் வேண்டும். இத்தெய்வச் செய்கையில் தான் நாகரிகம் நிற்கும்'' என்று பெர்ட்ராண்ட் ரசல் (Bertrand Russell) சொன்ன வேதமொழி என் செவியில் அப்பொழுது புகுந்தது. வானில் பறக்கிறேம்; கடல்மீது ஆணை செலுத்துகிறேம்; தண்ணீரின் கீழ் ஊர்கிறேம். ஆனல், மனிதனுக்கு மனிதன் பயப்படுகிற நிலையும் வந்து விட்டது. ஐயோ! மகா சுலப ரகசியத்தை இழந்தோம்; எது கற்றென்ன! எது எழுதியென்ன! சேர்ந்து வாழும் இன்பத்தைத் தெரிந்திலோமே!

நம்முடைய அகவறுமை தீர மார்க்கம் உண்டு— பித்தம் தெளிய மருந்தொன்றுண்டு. வேத மோதவேண் டாம்; உபநிஷத்துக்கள் படிக்கவேண்டாம்; ஆகாயத் தைச் சற்று நோக்கினல், பித்தம் தெளியும். இப்படி யெல்லாம் என் மனத்தகத்தே எண்ணங்கள் குவிந் தெழுந்தன; வாடுகிற என் அக உயிர்க்கு ஆராவமுதம் ஒன்று கண்டேன் என்ற எண்ணத்தால் என் சிந்தையும் கலந்தது. முன்போல் வான வீதியில் நட்சத்திரங்கள் பாடின. கடல் திரைக்கை கொட்டி ஆர்த்தது. இருளில் மூடிய தரை, விண்மீனின் கானத்தை உற்றுக்கேட்டு அமுத கீதவலையில் சுருக்குண்டு படுத்திருந்தது. நானும் ஆகாயத்தை நோக்கிய வண்ணமே இருந்தேன். இரவும் தேய்ந்துகொண்டிருந்தது.

### குறிப்புரை

சலனம் - அசைவு. விண் - ஆகாயம், நுதல் - நெற்றி. தாரகைக் கணம் - நட்சத்திரக் கூட்டம். சங்கல்பம் - எண்ணம். வியாஜம் - காரணம்.

### பயிற்சி

1. திரைக்கை, போகப் போக, ஆராவமுதம், வேதமொழி—இவை என்ன தொடர்?

2. எதிர்ப்பதம் கூறுக: அற்பாயுசு, பேரொலி, அழித்தல், அகம்.

### வினாக்கள்

1. ஆசிரியர் கடற்கரை செல்லுமுன் காலநிலை எவ்வாறு இருந்தது?

2. நட்சத்திரங்கள் வரத்தொடங்கியதை ஆசிரியர் எவ்வாறு வருணிக்கிறார்?

3. எந்தத் தினசரிக் காட்சிகளின் அருமையை நாம் உணருவதில்லை என்று ஆசிரியர் கூறுகிறார்?

4. சூரியனிடமிருந்தும், நட்சத்திரங்களிடமிருந்தும் ஒளி பூமியை யடைய எவ்வளவு காலமாகிறது?

5. "அதனுடைய இயல்பு ஒரு மந்திரம், ஓர் இரகசியம்" என்று ஆசிரியர் கூறுவது எதனை?

6. பெர்ட்ராண்ட் ரசல் கூறிய வேத மொழி யாது?

7. பித்தம் என ஆசிரியர் எதைக் கூறுகிறார்? அது தெளிய மார்க்கம் யாது?

### கட்டுரையாக்கம்

1. நக்ஷத்திரங்களுடைய பாட்டின் பொருள் யாது? 15 வரிகளில் ஒரு கட்டுரை வரைக.

2. ஆண்டவன் மனிதனை எவ்வாறு உபயோகப்படுத்திக் கொள்ளுகிறான் என்பதை விளக்க 15 வரிகளில் ஒரு கட்டுரை வரைக.

## 8. சுவாமி விவேகானந்தர் கடிதம்

சிகாகோ,
1894 ஹு ஜூன் மீ 23உ

மாட்சிமை தங்கிய மன்னர் அவர்களே,

எல்லாம் வல்ல இறைவன் தங்களுக்கும் தங்களைச் சார்ந்தவர்களுக்கும் அருள்புரிவாராக. தங்களுடைய அன்பு மிகுந்த உதவியினாலேயே இத்தேசத்திக்கு நான் வரமுடிந்தது. வந்த நாள் முதலாக இங்குப் பலரும் என்னை நன்கறியும் பேறு பெற்றுள்ளேன். விருந்தோம்பும் இந்நாட்டு மக்களும் எனக்கு வேண்டிய வெல்லாம் தருகிறார்கள். இது மிகவும் வியக்கத்தக்க ஒரு நாடே; பல வழியாலும் இத்தேசத்தினர் வியக்கத் தக்கவர்களே. அன்றாட வாழ்க்கைக்கு இத்தேசத்தினரைப்போல் அவ்வளவு இயந்திரங்களைப் பயன்படுத்துபவர்கள் வேறு எந்தத் தேசத்திலுமில்லை; ஒவ்வொன்றுக்கும் இயந்திரந் தான். மேலும், உலகத்திலுள்ள மக்களின் தொகையில் இவர்கள் தொகை 20-ல் ஒரு கூறுதான்; ஆயினும், இவர்கள் உலகத்திலுள்ள செல்வத்தில் ஆறில் ஒரு பகுதியைப் பெற்றிருக்கிறார்கள். இவர்களுடைய செல்வத்திற்கும் இன்ப வசதிகட்கும் குறைவில்லை. ஆனால் இங்கு எப்பொருளும் விலைமிக்கதாயிருக்கிறது. உலகத்திலுள்ள எல்லாத் தேசங்களினும் இவ்விடத்தே வேலைக்குக் கூலி மிகவும் அதிகம். ஆயினும், உழைப்பாளிக்கும் முதலாளிக்கும் ஓயாத போராட்டம் நடந்துகொண்டே யிருக்கிறது.

அமெரிக்காவிற்போல் இப்பூவுலகில் வேறெங்கும் மகளிர் இத்தனை உரிமைகளைப் பெற்றிருப்பதில்லை. அவர்கள் அனைத்தையும் மெல்ல மெல்லத் தம் வசப்படுத்திக் கொண்டு வருகின்றனர். இங்கே பண்புமிக்க ஆடவர் தொகையினும் அத்தகைய மகளிர் தொகை மிகப் பெரிதாதல் ஒரு விந்தை. ஆனாலும் அறிவாற்றல் மிக்க மேதாவியர் பெரும்பாலும் ஆண்பாலராகத்தான் இருக்

கின்றனர். நமது ஜாதிப் பகுப்பு முறைமையை மேற்குத் தேசத்தார் எவ்வளவுதான் குற்றம் கூறினும், அவர்களிடத்து அதனினும் இழிந்ததொன்ருகிய சாதி முறைமை வழங்கி வருகின்றது. அமெரிக்கர்கள் சொல்லுவதைப் போல் எல்லாம் வல்ல டாலர் பெருமான் இங்கு என்ன வேண்டுமென்ருலும் செய்யலாம்.

இப்புவியில் வேறெந்த நாட்டிலும் இத்தனைச் சட்டங்களில்லை. அவைகளை இவ்வளவு அலக்ஷியம் செய்வதும் வேறெங்கும் கிடையாது. மொத்தத்தில் மேற்றிசையாரில் எப்பகுதியாளரையும் விட நம் ஏழை இந்து மக்கள் ஒழுக்கத்தால் எவ்வளவோ விழுப்பமுடையோர். மதவிஷயத்தில் அமெரிக்கர் போலி வேடத்தையாயினும் மத வெறியை யாயினும் கைக் கொள்ளுகிருர்கள். அவர்களுள் ஆழ்ந்த யோசனையுள்ள மக்கள் மூட நம்பிக்கை வாய்ந்த மதத்தின்மீது வெறுப்புக் கொண்டு விட்டனர். புத்தொளி பெற அவர்களெல்லோரும் இந்தியாவை எதிர்நோக்கி யிருக்கின்றனர். தற்கால அறிவியல் நூலின் கோரமான தாக்குதல்களை எதிர்த்துக்கொண்டே ஊறுருது நிற்கும் பரிசுத்தமான வேதங்களிலுள்ள சிறந்த கருத்துக்களுள் ஒரு சிறிதையும் எவ்வளவு ஆவலுடன் அவர்கள் ஏற்றுக் கொள்ளுகிருர்கள் என்பதைத் தாங்கள் நேரில் பார்க்காமல் அறிந்துகொள்ளல் அரிதாகும். என் முடிவு என்னவென்ருல், அவர்களுக்கு ஆத்மீக நாகரிகம் அதிகமும் நமக்கு லௌகிகஞானம் அதிகமும் வேண்டுமென்பதுதான்.



இந்தியாவில் எல்லாத் தீமைகளுக்கும் காரணமாயிருப்பது ஜனங்களின் ஏழைமையே. மேற்குத் தேசங்

களிலுள்ள ஏழைகள் பிசாசுகளே ; அவர்களுடன் நம்மவர் களை ஒப்பிட்டுப் பார்க்கின் நம்மவர்களைத் தேவர்கள் என்னலாம். அதனுல்தான் நம் ஏழைகளை முன்னேற்று வது மிக எளிதாகும். நாம் தாழ்ந்த வகுப்பினர்களுக்குச் செய்ய வேண்டிய பணியாதெனில், கல்வியை அளித்தலே; அவர்கள் இழந்து விட்ட தனி இயல்பைத் தளிர்க்கச் செய்தலே. நம்முடைய ஜனங்களும் அரசர்களும் செய்து முடிக்க வேண்டிய பணி இதுவே. இத்துறையில் இது காறும் யாதொன்றும் செய்யப்படவில்லை. வைதிகரது வன்மையும் அயல் நாட்டாரின் வெற்றியும் அநேக நூற்ருண்டுகளாக அவர்களை நசுக்கிவிட்டன. அதன் முடிவாக, ஏழை மக்கள் தாம் மக்கள் என்பதையே மறந்து விட்டனர். அவர்களுக்குச் சிறந்த கருத்துக்கள் புகட்ட டப்பட வேண்டும். உலகத்தில் என்ன நடக்கிறதென் பதைப் பார்க்க அவர்களது கண்கள் திறக்கப்பட வேண்டும். அதன் பிறகு அவர்கள் தாங்களே உழைத்து உய்தி பெறுவார்கள்.

ஒவ்வொரு ஜாதியாரும், ஒவ்வொரு மனிதனும், ஒவ் வொரு ஸ்திரீயும், தம்தம் விடுதலையைத் தாமே நாடி அடைய வேண்டும். அவர்களுக்கு எண்ணங்களை ஊட் டுங்கள். அவைதாம் அவர்கட்கு வேண்டும் உதவியெல் லாம். மற்றவையாவும் அதன் பலனுகப் பின்தொடரும். இரஸாயனப் பொருள்களை ஒன்று சேர்த்து வைக்க வேண்டியது நமது கடமை. இயற்கை முறைமைப் பற்றிப் படிகமாதல் தானே நிகழும். அவர்கள் அறிவிற்கு நாம் கருத்துக்களை ஊட்ட வேண்டியதுதான் இந்தியா வில் இனிச் செய்ய வேண்டியது. இந்த எண்ணந்தான் என் உள்ளத்தில் நெடுங்காலமாக இருந்துள்ளது. இந்தி யாவில் என்ஞல் அதைச் செய்ய முடியவில்லை. இத்தேசத் திற்கு நான் வந்ததும் அதற்காகத் தான். ஏழைகளுக்குக் கல்வி போதிப்பதில் உள்ள பெருங் கஷ்டம் இது. மன்ன ராகிய தாங்களே ஒவ்வொரு கிராமத்திலும் ஓர் இலவசப் பள்ளிக்கூடம் ஏற்படுத்தியிருப்பதாகவே வைத்துக் கொள்வோம். அப்பொழுதுகூட ஒரு நன்மையும் விளை

யாது. ஏனெனில், பள்ளிக்கூடத்திற்கு வருவதை விட்டு, ஏழைச் சிறுவர்கள் தம் பெற்றோர்களுக்கு வயல்களில் உதவி செய்வார்கள்; அல்லது பிழைப்பதற்கு வேறு ஏதாவது ஒரு வழியைத் தேடுவார்கள். இந்தியாவின் வறுமை இவ்வளவு கொடியது. ஏழை கல்வியை நாடி வராவிட்டால், கல்வி அவனைத் தேடிப் போகவேண்டும். கிராமம் கிராமமாகச் சென்று, மத உபதேசஞ் செய்யும் ஒரே நினைவோடும், சுயநலம் கருதாதும் உள்ள துறவிகள் நம் தேசத்தில் ஆயிரக்கணக்கிலிருக்கிறார்கள். அவர்களில் சிலர் உலகியற் கல்வியும் கற்பிப்பவராக ஏற்பாடு செய்ய முடியுமானால், அவர்கள் ஊரூராக வீடு வீடாகச் சென்று, மதப் பிரசாரம் செய்வதோடு, கல்வி புகட்டியும் வருவார்கள். இத்தகைய மக்களில் இரண்டுபேர் ஒரு கிராமத்துக்கு மாலைவேளையில், ஓர் ஒளிப்பட விளக்கு, பூகோள உருண்டை, தேசப் படங்கள் முதலியன எடுத்துப் போவதாக வைத்துக் கொள்வோம். ஒன்று மறியாதவர்களுக்கு வான நூலைப்பற்றியும், பூகோளத்தைப் பற்றியும் ஏராளமாகச் சொல்லிக் கொடுக்கக் கூடும். வெவ்வேறு நாட்டு மக்களைப் பற்றிய கதைகள் சொல்வதனால், தம் ஆயுள் முழுவதும் புத்தகங்களைப் படிப்பதால் பெறும் அறிவைக் காட்டிலும், நூறுமடங்கு மிக்க அறிவை ஏழைகளுக்குப் புகட்டலாம். இதற்கு ஓர் ஏற்பாடு வேண்டும். ஆனால், அதற்குப் பணம் வேண்டியதாக இருக்கிறது. இவ்வேற்பாட்டின்படி நடத்திவைக்க இந்தியாவில் போதிய மக்கள் உளர். ஆனால் அந்தோ! அவர்களிடம் பணமில்லை. ஒரு வலிய சக்கரத்தைச் சுற்றச் செய்வது மிகவும் கஷ்டம். ஆனால் ஒரு முறை சுற்ற வைத்த பிறகு அதிகரிக்கும் வேகத்தோடு அது செல்கிறது.

என் தேசத்திலேயே யான் உதவி பெற நாடியும், பணக்காரர்களிடமிருந்து ஓர் அனுதாபமும் பெறமுடியாமையால், தங்களுடைய உதவி கொண்டு இவ்விடம் வந்தேன். இந்தியாவின் ஏழை மக்கள் இறந்தாலும் இருந்தாலும் அமெரிக்கர்கள் அதுபற்றி ஒன்றும் கவலையுறார். நமது நாட்டினரே தங்களுடைய சுயநலக் காரியங்களைத் தவிர

வேறொன்றையும் நினைக்காமலிருக்கும் போது, அமெரிக்கர் ஏன் நம்மவர்களைப் பற்றி நினைக்க வேண்டும்?

எனது பெருந்தகை அரசே! இவ்வாழ்வோ குறுகியது. இவ்வுலகத்தின் ஆடம்பரங்களோ நிலையற்றவை. தமக்கென வாழாப் பிறர்க்குரியாளரே வாழ்பவராவர். மற்றவர்களெல்லாரும் உயிரற்றவர்களே யொழிய உயிருள்ளவர்களல்லர். தங்களைப்போல் உயர்வும், பெருந்தன்மையும் அரசுரிமையும் பெற்றுள்ள புதல்வன் ஒருவன், இந்தியர் பண்டு போல் எழுந்து நிற்கப் பேருதவி புரிய முடியும். அவ்வாயிலாக நம் பின் சந்ததியார்கள் அனைவரும் போற்றும்படியான பெயரை நாம் பெற முடியும். அறியாமையில் ஆழ்ந்து கஷ்டப்படும் கோடிக்கணக்கான இந்திய மக்களுக்காகத் தங்களது கருணை நிரம்பிய இருதயம் உருக வேண்டுமென்று எம்பெருமானிடம் முறையிடும்,

**விவேகானந்தன்.**

### குறிப்புரை

விருந்தோம்பல் - விருந்தினரை உபசரித்தல். கூறு - பகுதி. ஓவாத - நீங்காத. விழுப்பம் - மேன்மை. ஊறுருது - பழுதடையாமல். அனுதாபம்- தயையுணர்ச்சி. பண்டு போல் - பழங்காலத்திற் போல. பிரசாரம் - பரவச் செய்தல்.

### பயிற்சி

1. முதலாக, உழைப்பு, அலக்ஷியம், வெறுப்பு—எதிர்ப்பதம் தருக.

2. பேறு, ஒரு கூறு, எதிர்நோக்கி, பண்டு போல்—இச்சொற்களையும், சொற்றொடர்களையும் வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக.

### வினாக்கள்

1. அமெரிக்கரின் இயல்புகள் யாவை?

2. அமெரிக்க மகளிரின் சிறப்பியல்புகள் யாவை?

3. மத விஷயத்தில் அமெரிக்க நாட்டினர் எவ்வாறுள்ளனர்?

4. அமெரிக்கர்களையும் இந்தியர்களையும் சீர்தூக்கிச் சுவாமிகள் கண்ட முடிவு என்ன?

5. "ஒரு வலிய சக்கரத்தை.........செல்கிறது." இவ்வுபமானத்தால் சுவாமிகள் விளங்க வைப்பது யாது?

6. எவ்வாறு வாழ்பவர், வாழ்பவராவர்?

### கட்டுரையாக்கம்

"ஏழைகளுக்கு நாம் செய்ய வேண்டிய பணி யாது?" என்பதுபற்றி நண்பருக்கு ஒரு பக்க அளவில் ஒரு கடிதம் வரைக.

# 9. தோற்ற வேற்றுமை

பேராசிரியர். G. வேங்கடராமன், எம்.ஏ., எம். எஸ் ஸி., எல்.டி.

பார்க்கவும் பார்க்கப்படவும் வெளிச்சம் அத்தியா வசியமானது. ஜீவராசிகளுக்கு வெளிச்சம் சூரியனிட மிருந்தோ சந்திரனிடமிருந்தோ, நக்ஷத்திரங்களிட மிருந்தோதான் வரவேண்டும். மனிதன் ஒன்றைப் பார்க்கிறனென்றுல், அப்பொருளிலிருந்து பிரதிபலிக்கும் ஒளியின் அடர்த்தி, பொருளின் உருவம், அதன் நிறம், இருக்கும் தூரம் முதலியவைகளே அறிந்து கொள்கிறன். இதற்குக் காரணம் மூளையின் விருத்தியே ; கண்கள் உதவிக் கருவிகள் மட்டும்தான். பல்வேறு ஜீவராசிகளில் ஒவ்வொன்றினுடைய மூளேயும் ஒவ்வொருவிதமாக இருப் பதுடன், அவைகளின் கண்களமைப்புகளும் வித்தியாசப் படுகின்றன ; அதனுல் ஒவ்வொரு ஜந்துவுக்கும் உலகம் எப்படித் தோன்றும் என்று அறிய வேண்டாவோ !

## பகலில் உலாவும் பிராணிகள்

பகலிலுலாவும் பிராணிகளும் இரவிலுலாவும் பிராணி களும் இவ்வுலகிலிருக்கின்றன. நல்ல வெளிச்சத்திலேயே பார்க்கக்கூடிய பிராணிகளுக்குள் நாமும் ஒன்று. இருந் தாலும், பழக்கத்தால் கிராமவாசிகளில் சிலர் நல்ல இருட்டி லும் பார்க்கப் பழகிக்கொண்டிருக்கின்றனர். பக்ஷிகளில் சிலவற்றைத் தவிர மற்றவையெல்லாம் பகலிலேதான் அங்குமிங்கும் பறந்து இரைதேடித் திரிகின்றன; பொழுது போகுமுன்னரே தன் இருப்பிடத்தைச் சேர்ந்து விடுகின் றன. அவைகளின் தெளிவான தூரப்பார்வை வெகு கூர்மையானது. பருந்து வட்டமிடுவது பூமியில் ஊர்ந்து செல்லும் சிறு பிராணிகளேப் பிடித்துத் தின்னவேதான். திறந்த வெளிகளிலும், தோட்டங்களிலும் உல்லாசமாகப் பூக்களேத் தேடித் திரிந்துகொண்டிருக்கும் வண்ணுத்திப் பூச்சிக்கு அதிக வெளிச்சம் தேவை. ஒரு மேகம் சூரிய னேச் சற்று மறைத்தால்கூட, பூக்களேக் காணமுடியாமல்,

அது தன் இறகுகளை மடக்கிக்கொண்டு மேகம் போகுமளவும் உட்கார்ந்து கொண்டிருக்கும்.

## இரவில் உலாவும் பிராணிகள்

இரவில் வெளிக்கிளம்பும் பிராணிகளாகிய ஆந்தை, வௌவால், கோட்டான் முதலியவைகளுக்குப் பகல் வெளிச்சத்தில் ஒன்றும் தெரியாது. அவைகளின் கண்கள் கூசும்; எல்லாம் ஜகத்ஜோதிமயமே. பூனை, எலி, மீன்கள் முதலியன அல்லிலும், பகலிலும், நல்ல இருட்டிலும் நல்ல வெளிச்சத்திலும் தெளிவாகப் பார்க்கின்றன. மேற்கூறிய எல்லாவற்றினுடைய கண்களமைப்பும் அநேகமாக ஒரே மாதிரிதான்; கண் திரையில் (Retina) தான் வித்தியாசம். கண் திரையில் இருவிதமான உயிரணுக்கள் இருக்கின்றன: ஒன்று தடிவடிவானது (Rods); மற்றொன்று கூம்பு வடிவமானது (Cones). இரவிலுலாவும் பிராணிகளின் கண்திரையில் மங்கிய வெளிச்சத்தையும் காணும் சக்தியுள்ள தடிவடிவ உயிரணுக்களே அதிகம். அம்மாதிரி தடிவடிவ அணுக்கள் அநேகம் நம் நயனத்தின் திரையோரங்களிலே இருக்கின்றன. அதனால் இருண்ட ஆகாயத்தில் ஓர் மங்கிய சிறு நக்ஷத்திரத்தை நன்கு காணத் தலையைச் சற்று ஒரு பக்கமாகச் சாய்க்க வேண்டும்.

## குவியம் (Focus)

கண் பார்வைக்கு வில்லை (lens) அவசியம். கண்ணாடி வில்லைக்கும் கண்ணுக்குள்ளிருக்கும் உயிர் வில்லைக்கும் ஓர் வித்தியாசமுண்டு. கண்ணாடி வில்லையின் குவியத் தொலையை (Focal length) மாற்றமுடியாது. உயிர் வில்லைக்குத் தானாகப் பருத்தோ, மெலிந்தோ 'குவியத் தொலையை' மாற்றிக் கொள்ளும் சக்தி இருக்கிறது. அதனாலேதான் தூரத்திலிருக்கும் ஒரு மரத்தையும், அடுத்த விநாடியே புத்தகத்திலிருக்கும் சிறு எழுத்தையும் தெளிவாகப் பார்க்க முடிகிறது. எல்லாப் பிராணிகளுக்கும் இது முடியாது. சுறுமீனின் கண்வில்லை கண்ணாடி

வில்லையைப் போன்றது. இம்மீன் தெளிவாக எதையும் பார்க்க, வில்லையின் குவியத் தொலைதூரம்வரை நீந்திச் செல்ல வேண்டும். பிறகேதான் காண்பது விரோதியா, இரையா என்று தெரியும். தவளையும் தேரையும் தெளிவான பார்வைக்கு முன்னும் பின்னும் போவதற்குப் பதிலாகக் கண்களை வெளியே தள்ளியும் உள்ளே இழுத்தும் பார்க்கின்றன.

**படம் பதிவியல்** (Photographic) **கண்களும், கன உருக்காட்டி** (Stereoscopic) :—**கண்களும்** முயல், குதிரை, மீன் இவைகளுக்குக் கண்கள் பக்கங்களிலிருப்பதால் முன்னிருப்பவைகளையும் ஒரே சமயத்தில் சர்வ சாதாரணமாகப் பார்க்கின்றன. இருகண்களும் முகத்தின் முன்புறத்தில் நமக்கிருப்பது போலிருந்தால், ஒரு பொருளை இரு கண்களும் ஒரே சமயத்தில் பார்க்கும் பொழுது, அப்பொருளின் கனஉரு தெரிகிறது. பிறவியிலேயே ஒருவனுக்கு ஒரு கண் குருடாக இருந்தால் அவனுக்குப் பொருள்களின் கனஉரு தெரியாது ; எல்லாப் படங்களிலும் காணும் சித்திரங்களைப் போல்தானிருக்கும். அதே மாதிரி, பக்கங்களிலிருக்கும் கண்களையுடைய மிருகங்கள் பொருள்களை நாம் காணும் சலனப் படங்கள் மாதிரியே பார்க்கின்றன. நம்மைப்போல் கன உருவையும் பார்க்க முடியும் உயிரினங்களிற் சில, பூனை, புலி, சிங்கம், குரங்கு ஆகியவையாம்.

## நிறங்களின் உண்மை

ஆடு, மாடு, நாய், நரி, யானை, பூனை முதலிய நாற்கால் பிராணிகளுக்குப் பல நிறங்களையும் பகுத்தறியும் சக்தி கிடையாது. எல்லா நிறங்களும் அவைகளின் கண்களுக்கு வெள்ளையும் கறுப்பும், அதன் சாயைகளுமாகத்தான் தெரிகின்றன. நிறங்களற்ற உலகிலே, வாழும் இம்மிருகங்களின் நிறங்களும் வெள்ளை, கறுப்பு அல்லது பழுப்பாகத்தான் இருக்கின்றன. ஆனால் குரங்குகளுக்கு மட்டும் பல நிறங்களையும் பகுத்தறியும் சக்தியுண்டெனப் பரிசோதனைகள் மூலம் கண்டுபிடித்திருக்கின்றனர். பல

நிறங்களும் கலந்த அழகான பறவைகளின் சிறகுகளைக் கண்டு ஆனந்திக்காதவர் கிடையாது. பறவைகளில் ஆண்களே அழகு நிறைந்தவை. அந்த அழகைப் பெண்பக்ஷிகள் பார்க்கின்றனவா? பழங்களையே ஆதாரமாகக் கொண்டிருக்கும் சில பக்ஷிகள் பழ நிறங்களைப் பார்க்கின்றனவா? இதைப் பரீட்சிக்கச் சுலபமாக ஒரு பரிசோதனை செய்யலாம். ஓர் இருட்டு அறையில் கண்ணுடி முக்கோண உருட்டின் (Prism) வழியாக நல்ல வெளிச்சத்தை விட்டு, தரையில் வான வில்லில் காணும் நிறங்களை விழச் செய்ய வேண்டும். சிறு தானியங்களைத் தரையில் சமமாகத் தூவி விட்டு ஒரு கோழியை உள்ளே விட்டால், அது சிவப்பு, ஆரஞ்சு, மஞ்சள், பச்சை நிறங்களாகக் காணும் தானியங்களைப் பொறுக்கித் தின்று விடும். நீலம், ஊதா நிறங்களாகக்காணும் தானியங்களைப் பொறுக்குவதில்லை. ஊதா நிறத்துக்கு அடுத்தாற்போல் 'அல்ட்ரா வயலட்' (ultra violet) கதிர்கள் இருக்கின்றன. நம் கண்ணுக்கு அவை புலப்படுவதில்லை. தேனீயின் கண்கள் இந்நிறத்தைப் பார்க்கின்றனவாம். நிறமாலை (Spectrum)யின் மறு முனையில் சிவப்புக்கு அடுத்தாற்போலிருக்கும் (Infrared) கதிர்கள் நம் கண்ணுக்குத் தெரியா. இக்கதிர்களையும் பதிவுசெய்யும் புகைப்படத் தட்டுகளை உபயோகப்படுத்தி, மூடுபனி அதிகமாக இருக்கும் பொழுது, படம் பிடித்தால் தெளிவாக எல்லாம் தெரியும். ஆந்தையின் கண்களுக்கும், எறும்பின் கண்களுக்கும் இக்கதிர்கள் தெரிகின்றனவென்றால், அவைகளின் கண்களுக்கு உலகம் எப்படித் தெரியும் என்று நம்மால் ஊகிக்கவும் முடியாமல் இருக்கிறது. பரிசோதனைகள் மூலம், தேனீ வெள்ளையை நீலங் கலந்த பச்சையாகவும், சிவப்பைக் கறுப்பாகவும், இளஞ்சிவப்பை நீலமாகவும் பார்க்கிறதெனக் கண்டுபிடித்திருக்கின்றனர். தேனீ பார்க்கும் உலகில் வெள்ளை நிறம் கிடையாது; எல்லாம் பல நிறங்களடர்ந்தனவே.

## பார்வை

வெகு தூரத்திலிருக்கும் மரங்கள், மலைகள், மேகங்கள், உடுக்கள் முதலியவைகளைப் பார்க்கும் சக்தி நமக்கு இருக்கிற மாதிரி, பிற ஜீவன்களும் அப்படியே பார்க்கமுடியுமாவென்றால், ஒவ்வொன்று பார்ப்பதும் ஒவ்வொருவிதத்தில் வினோதமாக இருக்கிறது. அநேகமாக எல்லாப் பூச்சிகளும் மூன்றடி தூரத்திற்குள் இருப்பவைகளையேதான் பார்க்கமுடியும். அவைகளின் கண்களுக்கு உலகில் பெரிய பொருள்களே கிடையாது. பூச்சிகளின் கண்களைக் கலப்புக்கண்கள் (Compound eyes) என்று சொல்லுகிறார்கள். அநேக சிறு கண்கள் சேர்ந்ததே ஒரு கலப்புக்கண். தலையின் இருபக்கங்களிலும் இரு பெரிய கண்கள் இருக்கின்றன. அதனால் முன்னும் பின்னும், பக்கங்களிலும் பார்க்க முடிகிறது. தேனீ, வண்ணாத்திப் பூச்சி, தும்பி போன்ற அதிவேகமாகப் பறந்து செல்லும் பூச்சிகளின் கண்கள் 'சலனத்தைக் காணுமாறு நன்றாக விருத்தியடைந்திருக்கின்றன. புகை வண்டியில் நாம் வேகமாகப் போய்க்கொண்டிருக்கும்பொழுது ஜன்னல் வழியாக வண்டியோடும் பக்கம் பார்த்தால் ஓர் ஒன்றுமே சரியாகத் தெரிவதில்லை. ஒரு உருவம் கண்திரையில் பட்டு அதை அறிந்து கொள்ளுமுன், மற்றொரு உருவம் அதற்குமேல் படுவதே காரணம். ஆனால் மணிக்குப் பத்து மைலுக்குமேல் வேகமாகப் பறக்கும் மேற்கூறிய பூச்சிகள் ஒவ்வொரு நொடி நேரத்திலும், கலப்புக் கண்ணின் ஒவ்வொரு தொகுதியே வேலைசெய்வதால், உருவங்களைத் தெளிவாகப் பார்க்கின்றன. கம்பளிப் புழுவுக்கு ஆறு ஜதை கண்களிலிருந்தபோதிலும், அதன் உலகம் தானிருக்கும் செடிதான். ஒன்றரை அங்குல தூரமே அதற்குத் தெரிகிறது. சிலந்தியின் கண்களுக்கு எல்லாமே மங்கல். நத்தை எட்டி எட்டிப் பார்த்தாலும் ஓர் இலைக்கு மேல் பார்க்க முடியாது.

தான் பார்க்கும் உலகந்தான் உண்மையானது என்று ஒவ்வொரு பிராணியும் எண்ணிக் கொண்டிருக்

கிறது! நாமும் அப்படியே எண்ணுகிறோம். ஆனால் உண்மை எது?

## குறிப்புரை

*ஜீவராசிகள் - உயிர் இனங்கள். இரை - தீனி. அல்லிலும் - இரவிலும். நயனம் - கண். சலனப் படங்கள் - அசையும் படங்கள். உடுக்கள் - நட்சத்திரங்கள். சாயை - நிழல்.*

## பயிற்சி

சேர்த்து எழுதுக: கண்கள் அமைப்பு, இருட்டு அறை, பகுத்து அறியும், தூரத்தில் இருக்கும், கண்கள் இருக்கின்றன.

பிரித்து எழுதுக: பகலிலுலாவும், அங்குமிங்கும், கண்ணுடி, குருடாக, நிறங்களடர்ந்த.

தமிழாக்கம் தருக: அத்தியாவசியம், ஜீவராசிகள், நக்ஷத்திரங்கள், வித்தியாசம், ஜந்து, உல்லாசமாக.

## வினாக்கள்

1. வெளிச்சம் எக்காரணங்களால் நமக்கு இன்றியமையாதது?
2. *பகலில் உலாவும் பிராணிகளைப்பற்றி நீவிர் அறிவதென்ன?*
3. வானவில்லிலுள்ள ஏழு நிறங்கள் எவை?
4. இரவில் உலாவும் பிராணிகளின் கண்கள் எவ்வாறு அமைந்துள்ளன?
5. கண் பார்வைக்குக் குவியம் அவசியம் என்பதை விளக்குக.
6. முயல், குதிரை, மீன் ஆகியவைகளின் கண்கள் எப்படி அமைந்துள்ளன?
7. நாற்கால் பிராணிகளுக்கு நிறங்கள் எந்த அளவில் புலனாகின்றன?
8. கலப்புக் கண் என்பது யாது? அது எந்த உயிர்களுக்கு உண்டு? அதனால் ஏற்படுவது யாது?

## கட்டுரையாக்கம்

'*பிராணிகளின் பார்வை யமைப்பு*' என்பது பற்றி இப்பாடத்திலிருந்து நீங்களறிந்த உண்மைகளைத் தொகுத்துத் தருக.

# 10. மூன்றும் குலோத்துங்கன்

## அரசியல்

வி. ஆர். இராமசந்திர தீக்ஷிதர், எம். ஏ.

### சோழ ஏகாதிபத்யம்

தமிழகத்தில் பேரரசர்களாய் ஆண்டவர்களைக் 'கோ' என்ற சொல்லால் முன்னோர் வழங்கி வந்தனர். கோப் பெருஞ் சோழன், கோநெடுமாறன் என்ற பெயர்களைக் காண்க. மன்னர் பலருக்குந் தலைவனை சக்கரவர்த்தி என்பது இதன் பொருள். "கோக் கண்டு மன்னர் குரைகடற் புக்கிலர்," என இதே கருத்தில் பாடப் பட்டிருத்தல் காணலாம். தமிழ் நாடுகளிலும் அதனைச் சூழ்ந்த தெலுங்கு கன்னட தேசங்களிலும், தங்கள் தனியாணை செல்லும்படி சக்ராதிபத்தியத்தை நிலை நாட்டிய தமிழ்க் கோவேந்தர்களுள் விஜயாலயன் வமிசத்துச் சோழ மன்னரே தலைமை வாய்ந்தவர்கள். இவர்களது ஏகாதிபத்தியம், முதலாம் இராஜ ராஜன் காலத்திலிருந்து, வடக்கே கலிங்கமும், தெற்கே கன்னியா குமரியும், கிழக்கும் மேற்கும் கடல்களும் எல்லைகளாகப் பெருகியது. இந்த சாம்ராஜ்யத்தின் தனிநாயகம் வகித்த அரசர் பெருமக்களை இராஜகேசரிவர்மன் பரகேசரிவர்மன் என்ற பட்டங்களுடன் 'கோ' என்றதைச் சேர்த்து' கோ ராஜ கேசரிவர்மன் கோப்பரகேசரிவர்மன் என்று முன்னோர் வழங்கி வந்தனர். தந்தை இராஜகேசரியாயின், மகன் பரகேசரி என்னும் பட்டம் உடையவனாவான்.

### நாடுகள்

இத்தகைய சோழ சக்கரவர்த்திகளால் பரிபாலிக்கப் பட்டு வந்த ஏகாதிபத்தியம் பல மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. சோணாடு, பாண்டியநாடு, மலை நாடு, கொங்குநாடு, தொண்டைநாடு, கங்கபாடி, நுளம்ப பாடி, வேங்கை நாடு, இலங்கை என்பவை இவ்வேகாதி பத்தியத்தில் அடங்கிய மண்டலங்களே. முதல் இராஜராஜ

சோழன் இவற்றுட் பலவற்றை வென்று கொண்டவனாதலால், அவன் பெயரால் ஜெயங்கொண்ட சோழ மண்டலம் (தொண்டை நாடு), மும்முடிச் சோழ மண்டலம் (இலங்கை), முடிகொண்ட சோழ மண்டலம் (கங்கபாடி) என்று இவ்வாறாக அவை வழங்கப்பட்டன. நம் குலோத்துங்கன் காலத்திலும் இப்பெயர்களே பெரும் பான்மை வழக்கில் இருந்தன.

இவ்வேகாதிபத்தியத்துள் தலைமையான நாடு சோழ மண்டலம். இது 9 வளநாடுகளாகவும் 79 நாடுகளாகவும் வகுக்கப் பட்டிருந்தது. இம்மண்டலம் பெரிய நாடு எனவும் பெயர் பெறும்.

**நகரங்கள்**

சங்க காலத்தில் சோழ வேந்தர்க்குத் தலைநகரங்களாய் இருந்தவை கோழி என்ற உறையூரும், புகார் என்ற காவிரிப்பூம் பட்டினமுமாகும். விஜயாலயன் வழியில் வந்த சோழர் காலங்களில் ஆயிரத்தளி, தஞ்சை, கங்கை கொண்ட சோழபுரம், இராஜராஜபுரம் என்பவை இராஜஸ் தலங்களா யிருந்தன. நம் சோழன் காலத்தில் தலைநகரமாய் இருந்தது கும்பகோணத்தை அடுத்துள்ள ஆயிரத் தளியேயாகும். நந்திபுரம், பழையாறை, முடிகொண்ட சோழபுரம் என்றும் இது வழங்கப்பட்டது. இச்சோழன், பாண்டியனது தலைநகரான மதுரையில் அவனுக்குச் செய்த பரிபவங்களையும், அங்கே செய்துகொண்ட விஜயாபிஷேகத்தையும், ஜடாவர்மன் சுந்தர பாண்டியன் என்பவன் பின்பு சோழர் தலைநகரான இவ் வாயிரத் தளியில் பழி வாங்க வேண்டித் திருப்பிச் செய்தான் என்பது அப் பாண்டியன் மெய்க்கீர்த்தியால் தெரிய வருகின்றது. இதிலிருந்து, நம் சோழன் அமர்ந்து ஆட்சி செய்த தலைநகர் ஆயிரத்தளியே என்பது தெளியப்படும். இரண்டாம் இராஜராஜன் தனக்குப்பின் ஆளுவதற்கு இராஜாதிராஜனை யுவராஜனாக்கிட அன்றே இறந்த இடமும் இவ்வாயிரத்தளிப் படை வீடே. இராஜராஜனால் அபிமானிக்கப்பட்ட வேறு தலைநகரம் இராஜராஜபுரம்

என்பது. இதனைத் தாராசுரம் என இக்காலத்தார் வழங்குவர். அளகை என்னும் நகரை நம் சோழனுக்கு உரியதாகக் 'குலோத்துங்கன் கோவை' பலவிடத்தும் கூறுகின்றது. இது இராஜராஜபுரம் ஆகலாம். காவிரிப்பூம் பட்டனத்தைக் காட்டிலும் நாகபட்டினம் இச் சோழன் காலத்தில் சிறந்த கடற்றுறை நகரமாய் இருந்ததென்று தெரியவருகின்றது.

**அரசியல் தலைவர்கள்**

அரசனுக்குத் தலைமையமைச்சன் ஒருவன் உண்டு. இம்மந்திரியே அவனால் விபவங்கள் பலவும் பெற்று, எல்லா அரசியல் துறைகளுக்குந் தலைவனாய் விளங்குபவன். இராஜராஜன் காலத்திலும் நம் சோழன் தமையன் நாளிலும் அமைச்சர் தலைவராய் விளங்கியவர் **பல்லவ ராயர்** என்பவர்.

நம் அரசனாட்சிக்காலத்தில் தலைமை மந்திரியா யிருந்தவர் எவரென்று தெரியவில்லை. இனி, தலைமை யமைச்சனையடுத்த அரசாங்க அதிகாரிகள் 'உடன் கூட்டத்துப் பெருமக்கள்' எனப்படுவர். இவர்களை 'முதலிகள்' என்றும் வழங்குவர். தலைமை மந்திரியைப் போலவே அரசனால் வரிசைகள் பெற்று அவனுடன் இருந்து ஆலோசனை கூறியும், அரசியல் துறைகளை நிர்வகித்தும் வந்தவர்கள் இன்னோர். திருமந்திரவோலை, விடையிலதிகாரி, வரிக் கூறுசெய்வார், நாட்டதிகாரி என இவர்கள் பலவகையினராய் இருந்தனர். இவருள், திருமந்திரவோலை என்பவன் அரசன் திருவாய் மலர்ந் தருளும் ஆணைகளைக் கேட்டு எழுதியும், இன்னின்ன காலத்து இன்னின்ன நடத்தற்குரியன என்பதை அவனுக்கு நினைவூட்டியும், அவனால் நடத்தற்குரிய காரியங்களை நிர்வகித்துப் பார்த்தும் அவனது 'அந்தரங்கக் காரியதரிசி' யின் ஸ்தானத்திலிருந்தவன்.

இனி, அரசரிடமிருந்து பிறக்கும் கட்டளைகளை அவ ரவர்க்கு அனுப்பி உத்திரவிடுந் தலைவன் 'விடையி லதிகாரி' ஆவான். வாங்கப்பட்ட அரசிறை முதலிய

வருவாய்களையும் செலவுகளையும் ஒழுங்காக வைப்பித்து மேற்பார்ப்போர் 'வரியிலார்' எனப்படுவர். அரசிறை முதலியன விதித்துத் திட்டம் செய்யும் அதிகாரிகள் 'வரிக் கூறு செய்வார்' ஆவர். இவர்களன்றி, அரசிறை நீங்கிய ஊர்களின் கணக்குக்களை மேற்பார்க்கும் புரவுவரிச் சீகரண நாயகமும், குத்தகை நிலங்களின் கணக்கு வைக்கும் 'வரிப்பொத்தக' அதிகாரியும், நாட்டின் நிலைமைகளை ஆராய்ந்து ஒழுங்கு செய்யும் நாட்டதிகாரிகளும், அரசிறைகள் தண்டுவதை மேற்பார்க்கும் 'தண்டுவா' னும் இருந்தனர் என்பது நம் சோழன் சாஸனங்களால் தெரிய வருகின்றது. இவ்வரசியல் துறைகளுக்கெல்லாம் நம் அரசன்கீழ் அதிகாரிகளாய் இருந்தவர்கள் பலர். இவருள் பலர் உடன் கூட்டத்துப் பெருமக்களாகவும் விளங்கியவர்கள் எனத் தோன்றுகின்றது. நாட்டுத் தலைவர்களான சாமந்தர்கள் சிலரும் இவ்வுடன் கூட்டத்தவர்களிற் சேர்ந்தவர்களே.

அரசனிடம் குறையோ முறையோ உரிமைகளோ பெறவேண்டியவர்கள் தங்கள் வேண்டுகோளை முதலில் இவ்வதிகாரிகளுள் ஒருவரிடம் அறிவிப்பர். அறிவித்தவற்றை விசாரித்து, அரசன் ஆணைபெறுவது அவசியமானால், அவ்வதிகாரியே அவ்வரசனிடம் நேரில் விண்ணப்பம் செய்வர். அதனைக் கேட்ட வேந்தன் காரியத்துக்கேற்றபடி உடன் கூட்டத்தவரோடு கலந்தோ தனியாகவோ முடிவுசெய்து, தன் ஆணையை வரிக் கூறு செய்வார் முதலிய அதிகாரிகளுக்கு வாய்மொழியாக அருளிச் செய்வான். அவ்வருளிச் செயல் திருமந்திரவோலையதிகாரியால் பட்டோலை கொள்ளப்பட்டு, உடன் கூட்டத்து அதிகாரிகளின் கையொப்பத்துடன் உரிய கீழ் அதிகாரிக்கு அனுப்பப்படும். இவ்வாறன்றி, அரசனுக்கு வேண்டியவர்கள் அவனிடம் நேரே தங்கள் குறை முறைகளை விண்ணப்பித்து அவன் ஆணையைப் பெறுவதும், சொந்தக் காரியமானவற்றை அரசனே பிறரோடு ஆலோசிக்காமல் ஆணையிடுவதும் உண்டு.

**மகாசபைகள்**

அரசியல் துறைகள் மேற்கூறிய அதிகாரிகளின் மேற்பார்வைக்கு உட்பட்டிருந்தது போலவே, ஜனசமுதாயத்துக்குரிய பொதுக் காரியங்களும் நியாய பரிபாலனமும் நகரங்களிலும் கிராமங்களிலும் அமைந்த சபைகளால் நிர்வகிக்கப்பட்டு வந்தன. இச்சபையின் அங்கத்தினரெல்லாரும் பொது மக்களால் தெரிந்தெடுக்கப்பட்டவர்களே. அவ்வாறு தெரிந்தெடுப்பதற்கும், தெரிந்தெடுத்த அங்கத்தினர் செய்வதற்குரிய காரியாதிகளுக்கும் ஏற்ற விதிகள் செப்பமாக அரசாங்கத்தாரால் அமைக்கப்பட்டிருந்தன. ஆயத்துறை, நியாயத்துறை, தேவதானம், திருவிடையாட்டம், பள்ளிச் சந்தம், அகரப்பற்று, மடப்புறம், ஜீவிதப்பற்று, படைப்பற்று, வன்னியப்பற்று முதலிய பொது வுரிமைகளெல்லாம் இவர்கள் மேற்பார்வையில் சிறிதும் குறைவில்லாமல் நடைபெற்று வந்தன. இம்மகா சபையின் உட்பிரிவுகளான தர்ம வாரியம், ஏரிவாரியம், தோட்ட வாரியம், ஊர்வாரியம், பொன்வாரியம் இவைபோன்ற கிளைச் சபைகளும் தாய்ச் சபைகளுடன் ஒத்துழைத்து வந்தன.

நம் வேந்தன் காலத்தில் இந்த மகாசபைகள் ஆலயம் முதலிய அறப்புறங்களுக்கு இறைகழித்துக் கொடுத்தும், நிலவரித்திட்டம் செய்தும், பூமிகள் உதவியும், பிறர் அளித்த நிலங்களையும் பொருள்களையும் ஏற்றுக் கண்காணித்தும், திருப்பணிகள் பல புரிவித்தும், இராஜத் துரோகம் சிவத்துரோகம் களவு முதலியவற்றுக்குத் தண்டம் விதித்தும், பொதுக் காரியங்களைத் திறமையுடனும் சிரத்தையுடனும் நிர்வகித்து வந்த செய்திகளைக் கல்வெட்டுகள் மூலம் பரக்கக் காணலாம்.

இம் மகாசபையேயன்றி, நாட்டாரும் நகரத்தாரும் திரண்டு சபைகூடிக் கொலை களவு முதலிய குற்றங்களை ஆராய்ந்து உரிய தண்டனைகளை விதிப்பதும் உண்டு. இத்தகைய மகாசபைக்கு அங்கத்தினரைத் தேர்ந்தெடுப்பதில் இருந்த பழைய விதிகளை நம் வேந்தன் சில நகரங்களில் திருத்தி யமைத்துள்ளான்.

இனி, தேவாலயம் முதலியவற்றின் சொத்துரிமை பற்றி நேரும் பெரிய வழக்குகளை அரசன் தன் உடன் கூட்டத்து அதிகாரிகளைக் கொண்டு விசாரிக்கச் செய்வதும், அவர்களது விசாரணை முடிவைப் பெரும் பாலும் அனுமதித்து உறுதி செய்வதும் வழக்கமாகும்.

### குறிப்புரை

பரிபவங்கள் - அவமானங்கள். ஏகாதிபத்தியம் - தனியரசு. நாயகம்- தலைமை. அரசிறை - அரசனுக்குச் செலுத்தவேண்டிய வரி. தண்டுதல்- வாங்குதல். வழங்குவர் - சொல்லுவர். இன்னோர் - இவர். விண்ணப்பித்து- தெரிவித்து. பரக்க - விரிவாக.

### பயிற்சி

குரைகடல், தலைநகர், கையொப்பம் - இவை என்ன தொடர்?

### வினாக்கள்

1. 'கோ' என்ற சொல்லின் பொருள் யாது?

2. இராஜகேசரி, பரகேசரி என்ற பட்டங்கள் யாவருக்கு உரித்தானவை?

3. சோழ ஏகாதிபத்தியத்தில் அடங்கியிருந்த நாடுகள் சில கூறுக.

4. சங்க காலத்துச் சோழ வேந்தர் தலைநகரங்கள் எவை? விஜயாலயன் வழிவந்த சோழ வேந்தர் தலைநகரங்கள் எவை?

5. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் தலைநகரமாயிருந்தது எது? அதன் வேறு பெயர்கள் யாவை?

6. பல்லவராயர் என்பவர் யார்?

7. 'முதலிகள்' என்பவர் யார்? அவர்கள் தொழில் யாது?

8. விடையிலதிகாரி, வரியிலார், வரிக்குக் கூறு செய்வார், புரவுவரிச் சீகரணநாயகம், வரிப் பொத்தக அதிகாரி, தண்டுவான் என்போர் யாவர்?

### கட்டுரையாக்கம்

1. மூன்றாம் குலோத்துங்கன் காலத்து அரசியல் முறையைப்பற்றி இருபது வரிகளில் ஒரு கட்டுரை வரைக.

2. குடிகள் தங்கள் குறையைப் போக்கிக்கொண்ட விதத்தைப்பற்றிப் பத்துவரியில் எழுதுக.

# 11. மணிமேகலை

## பாத்திரம் பெற்றது

கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம் பிள்ளை

### காட்சி 1

இடம் : மணிபல்லவத் தீவு

காலம் : பகல்

உரியோர் : மணிமேகலை, தீவதிலகை.

**மணிமேகலை :** ஓ ! என்ன அழகிய காட்சி. வெண்மணற் குன்றம், விரிபூஞ்சோலை, தண்மலர்ப் பொய்கை இவை மூன்றும் ஓரிடத்திருப்பக் காண்பதினும் சிறந்த காட்சி யாது உளது ! ஓ ! அதோ வருவார் யாவரோ ? அம்மையே வணக்கம் ! வருக ! வருக !

**தீவதிலகை :** அம்மா ! இத் தீவகத்தே, மரக்கலம் கவிழ்ந்திட, அதனின்றும் தப்பி உய்ந்து வந்த மகளிரைப்போல் இங்கே நிற்கின்றாய் நங்கையே ! நீ யாரோ ?

**மணிமேகலை :** அம்மா ! எனக்கு இப்பிறப்பின் நிகழ்ச்சியே அன்றிச் சென்ற பிறப்பின் நிகழ்ச்சியும் தெரியும். ஆகலின் இரண்டும் கூறுவன். சென்ற பிறவியில் யான் இராகுலன் என்னும் மன்னன் தேவி. இலக்குமி என்பது என் பெயர். இப்பிறப்பில் நாடகக் கணிகையாய மாதவி பெற்ற மணிமேகலை யாவேன். மணிமேகலா தெய்வம் என்பது என்னை இங்கே சேர்த்தருளியது. தெய்வப் பெருமை வாய்ந்த இப் பெரும் பீடிகையால், எனது முற்பிறப்பினை முழுதும் அறிந்தேன் ! நான் இங்கு வந்த வரலாறும் இங்கு எய்திய பயனும் இவையே யாகும். தேவி ! நீவிர் யாரோ ?

**தீவதிலகை :** அம்மா ! மணிமேகலை ! இத்தீவின் அயலிடத்தே, இரத்தின தீவம் என்பது ஒன்று உண்டு. அதன்கண் சமந்தம் என்னும் உயர்ந்த மலையொன்

றுளது. அதன் உச்சியில் புத்தபெருமானின் இணை யடிக்காட்சி எழில் பெற்றுள்ளது. அது, பிறவிப் பெருங்கடற்கு அறவியாகிய மரக்கலம் ஆகும். அதனை வலங்கொண்டு பணிந்து இங்கே வந்தேன். சிறந்த காட்சியினையுடைய இத்தெய்வப் பீடிகை யைக் கண்டு வணங்கி மகிழ்ந்தேன். அப்போது இந்திரன் தோன்றி, இதனை என்றும் காவல் பூண் டிருக்கும் பெரும் பேற்றினை எனக்கு அளித்தனன். என்பெயர் தீவதிலகை என்பதாகும்.

அம்மா! மணிமேகலை! நமது பெருமான் புத்த தேவன் கூறிய நல்லறத்தினைப் பற்றியொழுகும் நோன்பினரே இப்பீடிகையைக் கண்டு வணங்குதற்கு உரியராவர். அங்ஙனம் கண்டு வணங்குவார்க்கு, அவர் முற்பிறப்பின் உணர்ச்சி இனிதின் எய்தும். அங்ஙனம் கண்டு வணங்கி முற்பிறப்புணர்ந்தோர், உலகத்திற் சிறந்தோர் ஆவர். அன்னவர்களே பின்னர் அறமொழி கேட்டற்குரியராவர். அத்தகு சிறப்பினையுடைய மாதே! யான் கூறுவதனைக் கேட்பாயாக.

இதோ, எதிரே, குவளை நெய்தல் மலர்களை அணிந்து விளங்கும் இப்பொய்கை, கோமுகி யென்ப தாகும். இதன்கண், ஒவ்வோராண்டிலும் வைகாசித் திங்கள் முழுமதி நாளில், அமுதசுரபி யென்னும் பெருமையுடையதோர் பாத்திரம் தோன்றும். அஃது ஆபுத்திரன் என்பானது. இன்று அது தோன்றும் காலமுமாகும். அதுபோது தக்கார் எவரேனும் இங்கு உளராயின், அஃது அவர் கையில் வந்துறும்; இன் றேல் மீண்டும் இப்பொய்கையில் மறைந்திடும். மணிமேகலை! நீ உரிய சிறப்புக்களெல்லாம் எய்தி யிருத்தலின், நின் கையில் அப்பாத்திரம் வந்திடு மென எண்ணுகின்றேன். நாம் அங்குச் செல்வோம்.

**மணிமேகலை :** தேவி! நன்று! இதோ பீடிகையை வணங்கி வருவேன். (வணங்கல். இருவரும் சென்று கோமுகியை வலம் வந்து நிற்றல்.)

**தீவதிலகை :** மணிமேகலை! நின் சிறப்பினை என்னென்பது! இதோ தோன்றிய அமுத சுரபி நின்னை நோக்கி வருகின்றது! இதோ நின் கையில் அமர்ந்துள்ளது!

**மணிமேகலை :** புத்ததேவனே !

மாரனை வெல்லும் வீர நின்னடி
தீநெறிக் கடும்பகை கடிந்தோய் நின்னடி
பிறர்க்கறம் முயலும் பெரியோய் நின்னடி
துறக்கம் வேண்டாத் தொல்லோய் நின்னடி
எண்பிறக் கொழிய இறந்தோய் நின்னடி
கண்பிறர்க் களிக்கும் கண்ணோய் நின்னடி
தீமொழிக் கடைத்த செவியோய் நின்னடி
வாய்மொழி சிறந்த நாவோய் நின்னடி
நரகர் துயர்கெட நடப்போய் நின்னடி
உரகர் துயரம் ஒழிப்போய் நின்னடி
வணங்குவன் வாழ்த்துவன் மலரடி வாழியர்

**தீவதிலகை :** மணிமேகலை! பசியின் கொடுமையினை என்னென்பது!

குடிப்பிறப்பு அழிக்கும்; விழுப்பம் கொல்லும்;
பிடித்த கல்விப் பெரும்புணை விடூஉம்;
நாணணி களையும்; மாணெழில் சிதைக்கும்;
பூண்அணி மாதரொடு புறங்கடை நிறுத்தும்;
பசிப்பிணி யென்னும் பாவி!

அப்பசியைத் தீர்த்தோரது புகழோ அளந்துரைத்தற்கரியது. மணிமேகலை! செல்வமுடையார்க்கு அளிப்போர் அறவிலை கூறுவோராவர். அம்மா! உயிர்கட்கு உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே யாவர். ஆகலின், நீ அத்தகைய சிறந்த அறத்தினை மேற்கொள்ளும் அறிவினையுடையையாகி, அந்நல்லறம் கண்டு சிறப்புறுவாயாக.

**மணிமேகலை :** அம்மா தீவதிலகை! சென்ற பிறப்பில் என் கணவன் திட்டிவிடம் என்னும் பாம்பு தீண்டியதால் உயிர் நீங்கினவிடத்து, உடன் தீக்குளித்த யான், அப்பிறப்பில் சாதுசக்கரன் என்னும் பெரியாரை உச்சிப்பொழுதில் உண்பித்த செயலாகிய

களுக் காண்பேறுயினேன். அதன் பயன் போலும் இப்பாத்திரம் என்கையிற் புகுந்தது. இவ்வுலகத்தில், நல்லறம் செய்து செல்வத்தை யுற்றோர் வாழும் இடங்கள் பல. அத்தகைய நல்லறம் செய்யாது வறிஞராய்ப் பிறந்து, உடுக்கத்தக்க உடையுமின்றிப் பெரும்பசி அலைத்தலால் மிக வருந்தி, வெயில் மழை யெனப் பாராது அச்செல்வர் மனைகளின்முன் அலைந்து திரிந்து அயர்வோர் பலர். அத்தகைய வறியர்முன் தோன்றிக் குழவிமுகம் கண்டு இரங்கும் தாய்போன்று, இப்பாத்திரத்தின் வழியாக அவர்தம் ஆருயிர் மருந்தாகிய உணவினையளிக்கும் தொண் டினை அடைய மிக்க விருப்பம் உடையேன்.

**தீவதிலகை:** அம்மா! மணிமேகலை! அப்பாத்திரத்தின் மற்றொரு சிறப்பினைக் கூற யான் மறந்தேன். நீ எடுத்துக் கூறினை. அறமே சான்றாக, நிறைந்த அருளால் உலகத்துயிர்களை யுண்பிக்க விரும்பும் சிறந்தோர்க்கல்லது, அப்பாத்திரம் போலியறம் செய்வார் பிறர்க்கு நன்கு சுரவாது. நீ அறத்தோடும் அருளோடும் நின்று உயிர்கட்குப் பசிப்பிணி போக் கும் பேரவா உடையை யாகலின், அது நன்கு சுரந்து உதவும். மணிமேகலை! நின் பதிக்கு எழுவா யாக.

[மணிமேகலை தீவதிலகையையும், புத்த பீடிகையையும் வலங்கொண்டு வணங்கிப் பாத்திரத்தைக் கையில் ஏந்தி வான் வழியாகத் தன் பதிக்கு ஏகல்.]

## காட்சி 2

**இடம்:** புகார்
**காலம்:** பகல்
**உரியோர்:** மாதவி, சுதமதி, மணிமேகலை.

**மாதவி:** சுதமதி! நீயும் என் மகளும் சென்ற காலம் இன்றுடன் ஏழுநாள் ஆகிவிட்டனவே. அந்தோ! மணிமேகலை வரக் காணேமே! ஏதேனும் தீங்கு நிகழ்ந்திருக்குமோ என்று என் உள்ளம் அஞ்சு கின்றது.

**சுதமதி :** மாதவி, இதோ பார் மணிமேகலையை !

**மணிமேகலை :** தாயே வணக்கம், சுதமதி வணக்கம்.

**மாதவி :** மணிமேகலை ! நின்னைப் பிரிந்த யாங்கள் எய்திய துயரினை என்னென்போம்! நீ சென்ற விடத்து என் உற்றனையோ ?

**மணிமேகலை :** அம்மா! முதலில் நிகழ்ந்தன சுதமதி கூற அறிந்திருப்பாய். சுதமதியினின்றும் என்னைப் பிரித்தெடுத்த தெய்வம் சுதமதிக்குக் கூறியனவும் அறிந்திருப்பாய். இப்பால் நடந்தனவற்றுள் சிறந்தது நம் பழம் பிறப்பினை யான் அறிந்துவந்திருப்பது. அதனைச் சுருங்கக் கூறுவேன் : நீயும் சுதமதியும் யானும் இரவிவன்மன் என்பான் மக்கள். நின் பெயரோ தாரை. சுதமதி, நின் தங்கையாகிய வீரை. யான் நுங்கள் தங்கையாகிய இலக்குமி. தாயே! நீ துச்சய மன்னனது தேவியாயினை. (இருவரையும் நோக்கி) தாயரே ! நுங்கட்கு இப்பொழுது இம்மானிட யாக்கையின் தீவினைகளை யறுக்கும் செய்தவம் உண்டாவதாக ! உங்கள் பிறப்பின் ஏனை வரலாறுகளை அறவண அடிகள் பால் அறிந்துகொள்ளுங்கள். இதோ என் கையிலுள்ள மாபெரும் பாத்திரம் அமுதசுரபி யென்னும் பெயரினது. இது ஆபுத்திரன் கையது. இதுகொண்டு வறிஞர் உலகத்தின் பசிப்பிணிகளை நீக்கும் பேரறத்தினை யான் மேற்கொண்டுள்ளேன். இதனை நீவிரும் வணங்குவீர்களாக. இனி நாம் அறவண அடிகள் திருவடிகளை வணங்குவதற்குச் செல்வோமாக. எழுக !

(யாவரும் செல்லுதல்)

குறிப்புரை

பாத்திரம் பெற்றது - பிக்குணிக் (பிச்சையெடுப்பவள்) கோலங் கொண்ட மணிமேகலை அமுதசுரபி என்னும் பாத்திரத்தைப் பெற்ற கதையைக் கூறுவது.

பீடிகை - (புத்தர் பாதங்களைத் தாங்கி நிற்கும்) பீடம் ; இது மாணிக்கத்தாலாகியது ; அதனால் 'மணிப்பீடிகை' எனப்பட்டது. அறவி தருமமாகிய கோமுகி - குளத்தின் பெயர்.

"மாரனை": மன்மதனை. தீநெறி - கொடிய வழி. கடிந்தோய் ஒழித்திட்டவனே. துறக்கம் - சுவர்க்கம். எண்பிறக்கு ஒழிய - (மனிதருடைய) எண்ணங்கள் (எட்டாமற்) பின்னே கிடக்கும்படி, இறந்தோய் - கடந்திருப்பவனே. கண் - அறிவு. கண்ணோய் - ஞானியே. உரகர் - நாகர்.

"குடிப்பிறப்பு": விழுப்பம் - சிறப்பு. பிடித்தகல்வி - கற்றுள்ள கல்வி. புணை - தெப்பம். விடூஉம் - நீங்கச் செய்யும். நாண் அணி களையும் - நாணமாகிய ஆபரணத்தை நீக்கும். மாண் எழில் - மாட்சிமைப்பட்ட அழகு. புறங்கடை - (பிறர் வீட்டின்) வாயிலில்.

## பயிற்சி

1. பொருள் கூறுக: அறவி, துறக்கம், புணை, விழுப்பம், எழில்.

2. யாவிரோ, வருக, உதவும், செல்வோமாக - இவை எவ்வகை வினை முற்றுக்கள்?

## வினாக்கள்

1. மணிமேகலையின் முற்பிறப்புச் செய்தி யாது?

2. புத்தபெருமானின் இணையடிக்காட்சி எங்குள்ளது? அதனை வணங்குதற்குரியோர் யார்? அவர் அடையும் பேறு என்ன?

3. அமுதசுரபி எங்கே எப்பொழுது தோன்றும்? அதன் தன்மை என்ன?

4. மணிமேகலை புத்த தேவனை எவ்வாறு போற்றினாள்?

5. 'பசிப்பிணி என்னும் பாவி' யின் தன்மை என்ன?

6. அறவிலை கூறுவோர் யாவர்?

7. மணிமேகலை மாதவிக்குப் பழம் பிறப்புணர்த்திய செய்தியைக் கூறுக.

## கட்டுரையாக்கம்

1. 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே' என்பது பற்றிப் பத்து வரியில் எழுதுக.

2. தீவதிலகைக்கும் மணிமேகலைக்கும் நடந்த உரையாடலில் உள்ள செய்திகளைத் திரட்டித் தருக.

3. இப்பாடத்தைச் சிறு நாடகமாக நடித்துக் காட்டுக.

# 12. ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு

டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார், எம். ஏ., பிஎச். டி.

"ஒன்றுபட்டால் உண்டு வாழ்வே நம்மில், ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே" என முழங்கினார் கவிஞர் சுப்பிரமணிய பாரதியார். "ஒற்றுமையாக உழைத்திடுவோம், நாட்டில் உற்ற துணைவராய் வாழ்ந் திடுவோம்" என்றார் கவிமணி தேசிக விநாயகம். இறக் கும் தறுவாயில் இருந்த ஒரு முதியவர் தம் பிள்ளைகளை அழைத்து, விறகை ஒவ்வொன்றாகக் கொடுத்தும், கட் டாகக் கொடுத்தும் ஒடிக்குமாறு பணித்தார் என்றும், ஒன்றை ஒடித்த பிள்ளைகள் கட்டினை முறிக்கக்கூடாத காரணத்தை வைத்து, அவர்களுக்கு ஒற்றுமையுபதேசம் செய்தார் தந்தையார் என்றும் சொல்லப்படுகிற கதை நம்மில் பலர் அறிந்ததே. திருவள்ளுவரும் ஒற்றுமையின் அருமையை ஓர் உதாரண முகத்தான் விளக்கியுள்ளார். ஒரு பெரிய வண்டி இருக்கிறது. அது வலிமை மிக்கதே. எனினும், மயிற்றோகையை நிரம்ப நிரம்ப, வாரி வாரிப் போட்டுக்கொண்டேயிருந்தால், அவ்வண்டியும் தாங்காது அச்சு ஒடியும். தோகையோ மிகவும் நொய்ம்மையானது. வண்டியின் அச்சோ மிகவும் பருத்து வலிமையுடையதாய் உள்ளது. எனினும், மேலும் மேலும் திரண்டு கூடித் தோகைகள் வருவதால் அச்சு இற்றுப்போகிறது. அதைப் போலவே, எத்துணை எளியராயினும், நமது பகைவர் சேர்ந்து சேர்ந்து கூட்டமாக வருவாரே யாயின், நமது வலிமை பெரியதாயினும் பயனின்றிப் போம். நாமே ஒற்றுமை மிக்குப் பலரையும் நம்மோடு சேர்த்துக் கொள்ளுவோமாயின், வரும் பயன் மிகப் பெரிதன்றோ? இவற்றையெல்லாம் உணர்த்த எடுத்துக்கொண்ட வள் ளுவர் பெருந்தகையார், "பீலிபெய் சாகாடும் அச்சிறும், அப்பண்டம் சால மிகுத்துப் பெயின்" என்று வழங்கி யருளினார்.

நம் சுற்றத்தாரே யன்றி நமது ஏவல் செய்வோர் தாமும் நம்மோடு இயைந்தவராய் இருத்தல் வேண்டும்.

நாமொன்று கருத, நம் வேலைக்காரர் பிறிதொன்று நினைத்துச் செய்து நமக்கு எள்ளல் வாங்கித் தருவாராயின், அவ் வேலைக்காரரால் நமக்கு உதவியுண்டாவதற்கு மாருகப் பல சங்கடங்கள் வந்து சேரும். சங்கடங்கள் ஏற்படின், கவலை யுண்டாவது நிச்சயம். கவலையேற்பட்டாலோ, கருமயிர் நரைத்தல் ஒருதலை. எனவே, நல்ல வேலையாட்கள், நம்மோடு ஒற்றுமைப்பட்ட வேலையாட்கள்—இல்லையேல், நாம் விரைவில் மூப்பு உற்றவர் போன்று தோன்றுவோம். இதன் உண்மை, பழந்தமிழ் பாடல் ஒன்ருலும் அறியப்படுகிறது. முன்னுளில் பிசிராந்தையார் என ஒரு புலவர் இருந்தார். அவருக்கு வயது பல ஆகியும் நரை தோன்றவில்லை. சில புலவர், அவரை ஒரு நாள் அதற்குக் காரணம் கேட்டனர். அவர் சொல்லிய காரணங்களுள் ஒன்று, 'யான் கண்டனையர் என் இளையரும்' என்பது. அதன் கருத்து 'நான் நினைக்கிறபடியே நினைத்து என்னுடைய ஏவல் செய்வோரும் என்னுேடு இயைந்து செயல் களைப் புரிகின்றனர். என் இல்லத்தில் சண்டைத் தொல்லைகள் இல்லை' என்பதாகும்.

இனி, குடும்பத்தாரிடையே பூசலும் கலாமும் விளையக்கூடிய சமயங்களில், புலவர்கள் சிலர் ஒற்றுமையுபதேசம் புரிந்து தடுத்துள்ளனர் என்று அறிகிறேம். நலங்கிள்ளி என்னும் சோழனும் நெடுங்கிள்ளி என்னும் சோழனும் தாயத்தார்கள். அவருள் நலங்கிள்ளி மிக்க வீரம் வாய்ந்தவன்; சேர, பாண்டிய அரசரை வென்று அவர் தம் வஞ்சியென்னும் ஊரையும் மதுரை யென்னும் ஊரையும் புலவர்க்கு வழங்கத்தக்க ஆற்றலுடையவன். அவன் ஒரு நாள் உறையூரை முற்றுகையிட்டான். உள்ளே பங்காளியாகிய நெடுங்கிள்ளி இருந்தான். பார்த்தார் ஒரு புலவர்; 'அழகிது!' என நினைத்தார். நலங்கிள்ளியிடம், 'ஒன்றுபட்டால் வாழ்வுண்டு; இன்றேல், இருவர்க்கும் தாழ்வே' என்று கூறினர். இக்கருத்துப் பொதிந்த பாடல் புறநானூற்றிற் காணப்படுகிறது. அதன் போக்கு இது: "அரசே! நீ பொர நினைக்கும் அரசன் சேரனும் அல்லன்; பாண்டியனும் அல்லன்; சோழனே

ஆவன். நீயும் சோழன்; அவனுஞ் சோழன்; நீயும் ஆத்திமாலை சூடியிருக்கிறாய்; அவனும் ஆத்திமாலை சூடியிருக்கிறான். அஃது ஒன்றே நீங்கள் இருவீரும் ஒரு குடிப் பிறந்தீர் என்பதைக் காட்டுமே! நும் இருவருள் எவர் தோற்றாலும், தோற்பது உம் குடியன்றோ? அவ்வசை வரலாமா? நீங்கள் இருவீரும் வெற்றிகொள்ள முடியாது என்பது வெளிப்படை. உமது குடிக்கு வரும் பழியை நீக்க வேண்டுமானால் இம்மாறுபாட்டை உடனே தவிர்க்கவேண்டாவோ? நீவிர் பொருவீரானால், உம் பகைவரெல்லாம் உடம்பு பூரித்து உவகை எய்துவர். அவர் உவகை நுமது இளிவரல் அன்றோ? நீர் போர் குறித்து நிற்பது நும் குடிக்கு ஏற்றதன்று.''

நலங்கிள்ளி, 'குடிக்கு வடு உண்டாகும்' என்று கேட்டவுடன் போர்க்கோலம் நீத்தான். நெடுங்கிள்ளியும் புலவர் மொழியைக் கேட்டு இகலை விட்டான். இங்ஙனம் ஒற்றுமைப் படுத்திய புலவரது பெயரை நாம் அறிய வேண்டாவோ? வேண்டினும் அவர் பெயரை அறியோம்; ஊரை அறிவோம். அவ்வூர்ப் பெயராலேயே அவர் இற்றை நாள் வரை அறியப்படுகிறார். அவரை மறவாது இருப்போமாக! கோவூர் கிழார் வாழ்க!

மற்றொரு புலவர் ஒரு பாண்டியனுக்கும் ஒரு சோழனுக்கும் ஓர் அறவுரை பகர்ந்துள்ளார். அவர் காவிரிப்பூம் பட்டினத்துக் **காரிக் கண்ணனார்** எனப்படுவர். **வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி** என்னும் அப்பாண்டியனையும், சிராப்பள்ளித் துஞ்சிய **பெருந் திருமா வளவன்** என்னும் அச்சோழனையும் ஒரு நாள் ஒருசேரக் கண்ட அப்புலவர்க்கு உண்டான மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. உடனே அவர் பாடத் தொடங்கிவிட்டார்:

''பால் நிறக் கடவுளும், நீல நிறக் கடவுளும் உடனிருப்பதுபோல் உள்ள நீவிர் இருவீரும் இயைந்திருப்பது இனிது. அண்ணனும் தம்பியுமாகிய பலராமனும் கண்ணபிரானும் ஒருங்கு இருப்பது போன்று உள்ளது உமது தோற்றம். இதனினுஞ் சிறந்த காட்சி பிறிதொன்று உண்டோ? நீங்கள் இருவீரும் ஒருவீர் ஒருவீர்க்கு உதவி

புரிவீராகுக! நீவிர் இங்ஙனே ஒன்றுபட்டிருப்பின், கடல் சூழ்ந்த பேருலகு நும் கையகப்படுவது மெய்யேயாகும். இப்படி நீவிர் அன்பினால் இயைந்துள்ளதைக் காணும் சிலர் பொருமை கொண்டு, நல்லன சொல்லுவார்போல் சில சொல் சொல்லி நும்மைப் பிரிக்கப் பார்ப்பர். நான் வேண்டுவதெல்லாம், இன்று போலவே என்றும் இருங்கள் என்பது. இருப்பீராயின் வெற்றி யெல்லாம் நும் இருவர்க் கேயாம்; நுங்கள் கொடிகளே பிறநாடுகள் எங்கும் துலங் கும். பிரியன்மின், பிரியன்மின்.''

மற்றுமோர் புலவர், சினந்த தந்தையை எதிர்த்த மக் களோடு ஒன்றுபடுத்தி வைத்தார் என்றும் அறிகிறோம். அப்புலவர் பெயர் எயிற்றியனார் என்பது; ஊர் புல்லாற் றூர். கோப்பெருஞ் சோழன் என்னும் அரசன், உறை யூரை ஆண்டு வரும் நாளில், ஒருநாள் அவனுடைய புதல் வர் இருவர் அவனோடு மாறுகொண்டனர். எதிர்த்து நின்ற அவரொடு பொரக் கருதி எழுந்தான் சோழ மன் னன். அப்பொழுது அருகேயிருந்த பைந்தமிழ்ப் புலவர், "விறல் கெழு வேந்தே!'' என்று விளித்தவுடன், செவி சாய்த்து நின்றான் நிருபன். புலவர் உடனே தமது பொருளுரையைப் புகலத் தொடங்கினார். அதன் சாரம் வருமாறு: "பற்பல அமருள் வென்று மேம்பட்ட வேந்தே! இப்பொழுது உன்னோடு எதிர்த்து வந்து நிற் போர் உன் பகைஞர் அல்லரே. நீயும் அவர்க்குப் பகை ஞன் அல்லை. பகைஞரைக் கொல்லும் களிற்றையுடைய தலைவ! நீ புகழை இவ்வுலகில் எய்தி, உயர்ந்த உலகை அடைந்த பிறகு, உன் புதல்வர்க்குத் தானே உன் அரசு உரித்தாகும்! இதனை நீயே அறிவையே!''

இப்பொருளுரையைக் கேட்டும், அரசன் ஓர் அடி எடுத்து வைப்பது தோன்றிற்று புலவருக்கு. "இன்னும் கேட்பாயாக, இசையில் விருப்பமுடையோய்! பெரிதும் கேட்பாயாக! புகழில் இச்சையுடையோய்!'' என்பன போன்ற மொழிகளைச் சமயமறிந்து சொல்லி, அவர்மேலும் சொல்லலுற்றார்: "புதல்வர் ஆலோசனையின்றி, அறிவு குன்றி எதிர்ப்பட்டுள்ளனர். தோற்றுப்போனால் உன்

செல்வத்தைப் பின்னர் அவருக்கு அல்லாமல் வேறு எவருக்குக் கொடுக்கப் போகிருய்? போரினை விரும்புகின்ற செல்வ! ஒருகால் நீ அவர்க்குத் தோற்ருல், உன் பகைவரெல்லாம் உன்னை இகழ்ந்து மகிழ்வர். உலகில் பழியையே வைத்துச் செல்லவேண்டியிருக்கும். நான் உன் ஆற்றலில் ஐயமுள்ளேன் என்பதன்று. அவ்வாற்றலை இவரிடம் காட்ட வேண்டா என்பதே எனது வேண்டுகோள். உன்னுடைய வீரம் உன்னைவிட்டு இப்பொழுது நீங்கியிருக்கட்டும். உன்னுடைய ஊக்கம் பிறவற்றிற் செல்லட்டும். நல்வினைகள் பல செய்வாயாக. வாழிய அரசே!''

நயம்பட உரைக்கப்பட்ட இவ்வுரையையும் மறுத்துப் புதல்வரொடு பொருவதற்கு அரசன் மனம் இயைந்திருக்குமோ? புலவர் உரைக்குங் காலே, வேம்பும் கரும்பும் போல இடையிடையே கடுஞ் சொல்லும் புகழ்மொழியும் பெய்து உரைத்த நயம் வியக்கற்பாற்று. அவர் அழைக்கும் போதே, அவன் பெருமையையும், வீரத்தையும், வென்றியையும் உரைத்து அழைத்தார்; இடையிடையே அவன் ஆற்றலின் சிறப்பைக் குறிக்கும் சொற்களைக் கூறினர்; ''உனக்குத் தெரியாத தன்று'' என்று சொன்ருர்; புகழ் விருப்பம் உள்ள அவன், பழி தரும் செயல் புரியலாகாது என்பதை வற்புறுத்திருர்; புதல்வரை வெறுத்துரைப்பார் போன்று சில சொன்ருர். இவையெல்லாவற்றிலும் மிக்கதாக, ''அமரில் விருப்பமுள்ள செல்வ'' என்றும், ''உன் வீரம் இப்பொழுது உன்னை விட்டு இருக்கட்டும்'' என்றும் அவர் மொழிந்த மொழிகளின் சிறப்பைக் கண்டு நாம் மகிழாதிருக்க முடியாது. ஓர் அரசன் முன் நின்று, ''நீ உன் புதல்வருக்குத் தோற்ருல்'' என்ற கூற்றைக் கூறுவது எளிதன்று. அரசன் வெகுளாதிருக்கும் பொருட்டும், வெகுண்டு புதல்வரையே அழித்துவிடாதிருக்கும் பொருட்டும், எழுச்சியைத் தடுக்கும் பொருட்டும் அன்ருே அத் தண்டமிழ்ப் புலவர்,

" அமர்வெஞ் செல்வ! நீ யவர்க்கு உலையின்
இகழுநர் உவப்பப் பழியெஞ் சுவையே;
அதனால், ஒழிகதில் அத்தைநின் மறனே "

என இருமருங்கும் சர்க்கரையைக் கூட்டி, இடையே கடுக்காய்த் தூளை வைத்தார்! இங்ஙனமெல்லாம் நன்மருந்து தரவல்ல நாவலர் பலர் வாழ்ந்த நாடு நம் நாடு. அவர் தம் ஊர்பேர் உபதேசங்களை மறந்துள்ள நாம் இனி யாவது விழித்துக் காண்போமாக. அவர்தம் பொன்னுரைகளையறிந்து வாழ்வம் ஒன்றுகவே!

### குறிப்புரை

முகத்தான் - மூலமாக. இற்று - ஒடிந்து. பீலி - மயில் தோகை. சாகாடு - வண்டி. எள்ளல் - இகழ்ச்சி. ஒருதலை - நிச்சயம். பூசல் - சண்டை. கலாம் - கலகம். தாயத்தார் - பங்காளி. வசை - பழி. இளிவரல் - இகழ்ச்சி. வடு - குற்றம். இகல் - பகை. அமர் - போர். களிறு - ஆண் யானை. வெகுண்டு - கோபித்து. உலையின் - தோற்றால். எஞ்சுவை - மிகுத்து வைப்பாய்.

### பயிற்சி

1. மயிற்றோகை, பழந்தமிழ், பைந்தமிழ்—இவை என்ன தொடர்?

2. உபதேசம், முகத்தான், ஒருதலை, பூசல், அல்லை—இச்சொற்களை நும் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக.

### வினாக்கள்

1. முதியவர் எவ்வாறு தம் பிள்ளைகளுக்கு ஒற்றுமையை உபதேசம் செய்தார்?

2. திருவள்ளுவர் எவ்வுதாரண முகத்தான் ஒற்றுமையின் அருமையை விளக்குகிறார்?

3. எவ்வகை வேலைக்காரரால் நமக்குச் சங்கடங்கள் நேரும்?

4. பிசிராந்தையார் தமக்கு நரை இன்மைக்குக் கூறிய காரணம் யாது?

5. கோவூர்கிழார் எவ்வரசர்கட்கு ஒற்றுமையுபதேசம் செய்தார்? அவர் கூறியது யாது?

6. காரிக் கண்ணனார் பாண்டியனையும் சோழனையும் ஒருசேரக் கண்டபோது எவ்வாறு பாராட்டினார்?

7. சினந்த தந்தையை எதிர்த்த மக்களோடு ஒற்றுமைப்படுத்தி வைத்த புலவர் யார்? எவ்வாறு ஒற்றுமைப்படுத்தினார்?

### கட்டுரையாக்கம்

1. "வேந்தர்களிடையே ஒற்றுமை நிலவப் புலவர்கள் ஆற்றிய தொண்டு" என்பது பொருளாக ஒரு பக்க அளவில் கட்டுரை வரைக.

2. "ஒன்று பட்டாலுண்டு வாழ்வு" என்பது பொருளாக ஒன்றரைப் பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

# 13. நோபெல் பரிசு

பண்டித ஞா. தேவநேயப் பாவாணர் எம். ஏ.

ஔவையார் 'தாதா கோடிக்கொருவர்' என்று ஆய்ந்து கூறியபடி, உலகில் எந்நாட்டிலும் வள்ளல்கள் சிலராகவே இருந்து வருகின்றனர். அச்சிலருடைய வண்மையும் கேளாமற் கொடுப்பது, கேட்டுக் கொடுப்பது, பலமுறை கேட்டுக் கொடுப்பது என முறையே தலை இடை கடையாக மூவகைப்படும்.

" தண்டாமல் ஈவது தாளாண்மை தண்டி
அடுத்தக்கால் ஈவது வண்மை—அடுத்தடுத்துப்
பின்சென்றல் ஈவது காற்கூலி."

—ஔவையார்

இந்து தேசத்தில், சிறப்பாகத் தமிழ் நாட்டில், கேளாமற் கொடுத்தவராகச் சொல்லப்படும் தலைவள்ள லாரும் ஓரிடத்தார்க்கு ஒரு காலத்தில் உதவினரேயன்றி எந்நாட்டார்க்கும் எக்காலத்தும் பயன்படத்தக்க நிலையான அறநிதியங்களை நிறுவிச் சென்றவரல்லர்.

உலக நலத்தைக் குறிக்கொண்டதும், நிலைபேறுள் ளதும், தேச குல மத வேறுபாடின்றி எல்லார்க்கும் பொதுவானதும், பெருந் தொகையானதுமான பரிசு உலகமுண்டானது முதல் இதுவரையும் நோபெல் பரிசு ஒன்றே ஆகும். இதை ஏற்படுத்திய ஆல்பிரட் பெர்ண் ஹார்ட் நோபெல் (Alfred Bernhard Nobel) என்பவர் 1833-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 21-ந் தேதி ஸ்வீடன் நாட்டுத் தலைநகராகிய ஸ்டாக்ஹோமில் எம்மானுவேல் நோபெல் என்னும் இயந்திர வினைஞரின் மூன்றும் மக னாகப் பிறந்தார். இவர் இளமையிலேயே தம் குடும்பத் துடன் ரஷ்யாவிலுள்ள பீட்டர்ஸ்பர்க் என்னுமிடத்திற் குச் சென்றார். அங்கு இவருடைய தந்தையார் போர்க் கலங்களை உடைக்கும் வெடிகுண்டுத் (Torpedo) தொழி லைத் தொடங்கி, 1859-ம் ஆண்டுவரை நடத்திப் பின்பு அதைத் தம் இரண்டாம் மகனிடம் ஒப்புவித்துவிட்டு, ஸ்வீடனுக்குத் திரும்பும்போது இவரும் உடன் திரும்பி

னூர். பிறகு, அங்குச் சென்று இவர் பல அரிய ஆராய்ச்சி கள் புரிந்து **டைனமைட்** என்னும் வெடி மருந்தைக் கண்டு பிடித்தார் ; அதற்கு ஓர் உரிமைக் காப்பைப் பெற்றுத் தொழிலை விருத்தி செய்து கொண்டு, காலத்தைக் கழித்துவந்தார். நாளடைவில் இவருக்குப் பெருநிதி திரண்டது. இவர் ஒரு புது நிருமாணிகராயும் வள்ளலாயும் விளங்கினூர் ; கடைசியில் தம் இறுதிக்காலம் அடுத்ததை அறிந்து, 1895-ம் ஆண்டு நவம்பர் மாதம் 27-ந் தேதி, தாம் தேடிய பொருளில் பெரும் பகுதியை (2,000,000 பவுனை) உலக நலத்திற்கென்று ஆருயிரத்து ஐந்நூறு பவுன் முதல் எண்ணுயிரம் பவுன் வரை பெறுமானமுள்ள **ஐந்து** பரிசுகளைத் தேச மத வேறுபாடின்றித் தக்கார்க்கு ஆண்டுதோறும் அளிக்கும்படி, ' இறுதி முறி ' (Will) எழுதிவைத்து 1896-ம் ஆண்டு டிசம்பர் மாதம் 10-ம்தேதி இவ்வுலக வாழ்வை நீத்தார். இவரது இறுதி முறியில் குறிக்கப்பட்டுள்ள பரிசுகள் **பௌதிக நூல்** (Physics) பரிசு, **இரசாயன நூல்** (Chemistry) பரிசு, **மருத்துவ** (Medical Science) அல்லது **உடல் நூல்** (Physiology) பரிசு, **இலக்கியப்** (literature) பரிசு, **உலக அமைதி** (Peace) ஆக்கப் பரிசு என்பன. இவை ஆண்டுதோறும் அவ்வத்துறையில் புதுமையான தேர்ச்சி காட்டும் அறிஞருள் தலைசிறந்தவருக்கு அளிக்கப்படும். இதற்கென்று நோபெல் **கழகம்** (Nobel Institute) என ஒன்று ஏற்பட்டிருக்கின்றது. பௌதிக இரசாயன நூற்பரிசிலரைத் தேர்ந்தெடுத்தற்கு ஸ்வீடன் **அரச அறிவியற் கழகமும்** (Royal Academy of Science), மருத்துவ அல்லது உடல்நூல் பரிசிலரைத் தேர்ந்தெடுத்தற்கு ஸ்டாக்ஹோமிலுள்ள **அரசாங்க மருத்துவக் கழகமும்** (Faculty of Medicine) இலக்கியப் பரிசிலரைத் தேர்ந்தெடுத்தற்கு ஸ்வீடன் **அரசு இலக்கியக் கழகமும்** (Royal Academy of Literature) உலக அமைதியாக்கப் பரிசிலரைத் தேர்ந்தெடுத்தற்கு **நார்வே நாட்டுப் பாராளு மன்றத்தால் அமைக்கப்படும் ஒரு கழகமும்** நியமிக்கப்பட்டுள்ளன. இக்கழகங்களைச்

சேராது ஸ்வீடனிலும் பிற நாடுகளிலுமுள்ள சிறந்த அறிஞர்களின் மதிப்புரைகள் பரிசுத் தீர்மானத்திற்கு மிகப் பயன் படுவனவாகும். பரிசுகள் தீர்மானிக்கப் பட்டபின் அவற்றின் அறிக்கை நார்வே நாட்டுப் பாராளு மன்றத்தால் வெளியிடப்படும்.

ஒவ்வொரு பரிசும் இருவருக்குப் பகுத்துக் கொடுக் கப்படலாம். ஆனால் இருவர்க்குமேல் பகுத்துக் கொடுக் கப்படாது. ஒரு வினையைப் பலர் சேர்ந்து செய்திருப் பின் அவர் எத்துணைப் பேராயினும் அத்துணைப் பேர்க் •கும் பகிர்ந்து அளிக்கப்படும். இம்முறையில் ஓர் ஆராய்ச்சி நிலையத்திற்கு அல்லது கழகத்திற்கு அளிக்கப் படுவதுமுண்டு. ஓராண்டில் ஒரு பரிசிற்கு உரியவர் இன்றேல், அடுத்த ஆண்டிலும் இல்லையேல் அது மூல நிதியோடு சேர்த்துக் கொள்ளப்படும்; அல்லது வேறாக வைத்து அதன் வருவாய் மேற்குறித்த வகைகளில் ஒன் றுக்கு வழங்கப்படும்.

நோபெல் பரிசுக் கழக விதிகளில் அடிப்படையான வற்றை 1900-ம் ஆண்டில் ஸ்வீடன் அரசியலார் அங்கீ கரித்தனர். அதன்பின் 1901-முதல் ஆண்டுதோறும் டிசம்பர் மாதம் பத்தாம் நாளாகிய நோபெல் இறந்த நாளில் நோபெல் பரிசுகள் விழாக் கொண்டாட்டத்துடன் வழங்கப்படும். அன்று **ஸ்டாக்ஹோம் இசைக் கழக மண்டபத்தில்** சொற்பொழிவுகளும் இன்னிசைகளும் நடைபெறும். ஸ்வீடன் மன்னர் பரிசளிப்பார். ஒவ் வொரு பரிசிலர்க்கும் பரிசுடன் ஒரு தகுதித் தாளும், நோபெல் வள்ளலின் உருவம் பொறித்த தங்கப் பதக்க மும் அளிக்கப்படும்.

இதுவரையில் பல துறைகளிலும் பரிசுபெற்றவர்கள் பலராவார். நம் இந்தியாவில் பரிசு பெற்றவர் பௌதிக நூற்கு **சர். சி. வி. ராமனும்**, இலக்கிய நூற்கு **இரவீந் திரநாத தாகூரும்** ஆவர். இப்பெரும் பரிசு வைத்த வள்ளலை எவர்தாம் மறத்தல் கூடும்!

கலை வளர்ச்சிக்கும் உலக அமைதியாக்கத்திற்கும் இதுவரை ஏற்பட்டுள்ள ஏதுக்களில் நோபெல் பரிசு தலை

சிறந்ததாகும். ஒரு வள்ளல் தன் வாழ்நாளில் எத்துணைப் பொருளை வழங்கினும், அதைத் தானே வெளிப்படையாய் வழங்கின், அதற்குக் கைம்மாருன புகழைத் தன் காலத்திலேயே அனுபவிக்கின்ருனுதலின், அவனிறந்தபின் நிற்கும் புகழுடம்பு நிறைவற்றதாகும். ஆனுல், தன் பொருளைத் தன் காலத்திற்குப்பின் வழங்குமாறு செய்து விட்டுச் செல்லும் வள்ளலோ, மக்கள் நடுவிற் பூதவுடம்பிலிருந்துகொண்டு அனுபவியாமையின், முழு நிறைவான புகழுடம்பை நிறுத்திவிட்டுச் செல்கிருன். அங்ஙனம் சென்ற வள்ளல்களுள் ஆல்பிரட் நேபெல் தலைசிறந்தவரன்ருே?

## குறிப்புரை

தாதா - வள்ளல். தண்டாமல் - அடுத்தடுத்துக் கேளாமல். தாளாண்மை - ஊக்கத்துடன் கொடுக்குந் தன்மை. தண்டி - அடுத்தடுத்துக் கேட்டு. அடுத்தக்கால் - தம்மையடைந்தபோது. அடுத்தடுத்து - திரும்பத் திரும்பச் சென்று. நிலைபேறு - நிலைநிற்றல். நிருமாணிகர் - உண்டாக்குபவர். இறுதி முறி - சாகுந்தறுவாயில் எழுதி வைக்கும் சாசனம். பாராளுமன்றம் - அரசியல் சன அவை (Parliament). ஏது - காரணம். அறநிதி - தருமத்திற்காக ஏற்படுத்தப்பட்ட பொருள்.

## பயிற்சி

1. பொருள் கூறுக: தாளாண்மை, வண்மை, இறுதி முறி, பாராளுமன்றம், வன்மை.

2. வினைஞர், வள்ளல், அறிஞர், பரிசிலர், ஆராய்ச்சி: இவை என்ன பெயர்? இவற்றிற்குப் பகுதி கூறுக.

3. அடிப்படை, அங்கீகாரம், ஆண்டுதோறும், உலக அமைதியாக்கம்—இவைகளை நும் சொந்த வாக்கியங்களில் அமைத்தெழுதுக.

## வினுக்கள்

1. வண்மையாவது யாது? அது எத்தனை வகைப்படும்?

2. தமிழ் நாட்டுத் தலைவள்ளல்களுக்கும் மேனுட்டு வள்ளலான நோபல் என்பவருக்கும் உள்ள வேறுபாடு என்ன?

3. நோபெல் பிரபு தம் ஆராய்ச்சியால் கண்டு பிடித்தது என்ன?

4. நோபெல் பிரபுவின் இறுதி முறி யாது?

5. இப்பரிசு எந்தெந்தத் துறையில் தேர்ச்சி பெற்றவர்க்கு அளித்தற்குரியது?

6. இப்பரிசு அளிப்பதில் தக்காரைத் தேர்ந்துகொள்ளும் முறையாது?

7. இப்பரிசளிக்கும் விழா எவ்வாறு நிகழும்?

8. நோபெல் பரிசு பெற்ற இந்திய அறிஞர் யாவர்?

## கட்டுரையாக்கம்

"நோபெல் பரிசின் வரலாறு" என்பது பற்றிப் பத்து வரியில் எழுதுக.

# 14. சாந்தி நிகேதனம்

திரு R. K. சர்மா

கல்விப் பயிற்சியில் ஒரு மாறுதல் உண்டாக்க வேண்டும் என்பதும், ஆங்கிலப் பயிற்சி முறை நம் நாட்டவர்க்கு ஏற்றது அன்று என்பதும் ரவீந்திரரின் நீண்ட நாட் கருத்தாகும். அதனை ரவீந்திரர் 1901-ஆம் வருடம் செயலில் காட்ட முனைந்தார். மகரிஷி தேவேந்திரர், பல நாட்களுக்கு முன் தனிமை நாடி, தவவேடம் பூண்டு, போல்பூர் என்னும் ஊருக்கு இரண்டு மைல் தூரத்தில் இருந்த மரங்கள் அடர்ந்த சோலைக்குச் சென்று ஆசிரம வாழ்வைக் கொண்டார். ஒரு முறை அந்த இடத்திற்குச் சிறுவராயிருந்த ரவீந்திரரையும் அழைத்துச் சென்றிருந்தார். அப்பொழுது ரவீந்திரரும், மகரிஷியுமாகச் சேர்ந்து, ஆங்குப் பல செடி கொடிகளை நட்டுப் பயிராக்கினர். ரவீந்திரர் அந்த இடத்தில் தம் 'புதிய முறைக் கல்லூரி'யை ஏற்படுத்தல் வேண்டும் என்னும் அவாக் கொண்டார்; அங்ஙனமே இன்று உலகம் புகழும் பல்கலைக் கழகமாக விளங்கும் **சாந்தி நிகேதனம்** என்னும் கல்வி நிலையத்தை 1901-ஆம் ஆண்டு ஏற்படுத்தி, அதற்குக் கடைக்கால் இட்டார். ரவீந்திரரின் மூத்தவர் துவிஜேந்திரநாத தாகூர் தாமிறக்கும் (1926) வரை அங்குத்தான் நிரந்தரமாக இருந்தனர். அதே ஆண்டில், **வங்க தர்சன்** என்ற பத்திரிகை புத்துயிர் பெற்று வெளிவரத் தொடங்கியது. ரவீந்திரர் அதன் ஆசிரியராக அமர்ந்தார்; **'காந்தாரியின் பிரார்த்தனை,' 'கன்னனும் குந்தியும்'** போன்ற நாடகங்கள் வரைந்தார்.

சாந்தி நிகேதனம், முதலில் ஒரு சிறு பள்ளிக்கூடமாகத் தொடங்கப்பட்டது. கல்கத்தாப் பல்கலைக் கழகத்திலிருந்து இதற்கு ஆதரவு கேட்கவோ, அதனுடன் கூட்டுறவு வைத்துக் கொள்ளவோ தாகூர் விழைந்தனரில்லை. இயற்கையோடு ஒத்து, பண்டை இந்திய முறையைக் கைக்கொண்டு, ஆசிரம வாழ்வினைக் கொண்டு குருகுலம் போலத் தம் கலா நிலயத்தை நடத்திச் செல்ல வேண்டும்

என்பதே அவரது உட்கிடையாக இருந்தது. மக்கள் உயர்ந்த நோக்கங்கள் கொண்டவர்களாகுமாறு அவர் களது உள்ளம் பண்படுத்தப்படல் வேண்டும் என்பது அவரது ஆழ்ந்த பெரு நோக்கமாயிருந்தது.

தொடக்கத்தில் சாந்தி நிகேதனத்திற்குப் பத்து மாணவரே வந்தனர். தளரா உள்ளம் படைத்த ரவீந் திரர் அச்சம் கொள்ளவில்லை; உறுதியினின்று பிறழ வில்லை. அவர் இடைவிடாமலும் ஊக்கங் குன்ருமலும் உழைத்து வந்ததன் பயனுக, நான்காண்டுகளுக்குள் அங்கு அறுபது மாணவர்கள் சேர்ந்து விட்டனர்.

நாளடைவில் சாந்தி நிகேதனத்தின் பெருமை நாடெங்கும்—உலகெங்கும் பரவத் தொடங்கிற்று. அந்தக் கலா நிலயத்தில் கல்வி கற்றுக்கொடுப்பது அனைத்தும் தாய்மொழியில்தான். தாய் மொழி மூலமே பிற கலைகள் அனைத்தும் பயிற்றுவிக்கப்படுகின்றன.

அந்தக் கலா நிலையம் எவ்வண்ணம் நடைபெறு கிறது என்பதை அனைவரும் அறிந்துகொள்ளல் வேண்டும்; விடியற்காலை 4-30 மணிக்கு மாணவர் சிலர், காலைப்பாட்டுப் பாடிக்கொண்டு சாந்திநிகேதனக் கலா நிலயத்தைச் சுற்றி வருவர். அப்பொழுது பிற மாணவர் களும், ஆசிரியர்களும் உறக்கத்தை விட்டு விழித்து எழுவர். உடனே மாணவர்கள் அனைவரும் தத்தம் அறை யைக் கூட்டிச் சுத்தப்படுத்தி விடுதல் வேண்டும். இந்த வழக்கம் தொடக்கத்திலேயே அளிக்கப்படுவதால், அவர் களுக்கு எப்பணி ஆற்றுதலும் இழிந்த செயல் ஆகாது என்னும் எண்ணம் உறுதிப்படுகிறது; அதனுடன் உடல் உழைப்பின் கஷ்டமும் அறிய முடிகிறது. பிறகு அனை வரும் திறந்த வெளியிடம் சென்று உடற்பயிற்சி செய்தல் வேண்டும். அது முடிந்ததும், கிணறுகளிலிருந்து தண் ணீர் இழுத்துக் குளித்தல் வேண்டும். இங்ஙனம் காலைக் கடன்கள் அனைத்தும் முடிந்த பிறகு பதினைந்து நிமிஷங் கள் வரை அமைதியாகத் தியானம் புரிதல் வேண்டும். இது கட்டாயமன்று. விருப்பம் இல்லாதவர்கள் தியானத் தில் கலந்து கொள்ளாமல் இருக்கலாம். ஆயின் தியா

னம் செய்வோருக்கு இடையூறின்றி இருக்கப் பேசாமலும், சத்தமிடாமலும், அமைதியாக இருத்தல் வேண்டும். தியானம் முடிந்தபின் மணி அடிக்கும். மாணவர்கள் ஓசையின்றி ஒழுங்காகக் கலா நிலயக் கோவிலுக்குச் செல்ல வேண்டும்.

இவை அனைத்தும் முடிந்து, காலை உணவு உட்கொண்ட பிறகு, 7-மணி முதல் 10-மணி வரை கல்விப் பயிற்சி நடக்கும்; மீண்டும் 2-மணியிலிருந்து 5-மணி வரை நடக்கும். வகுப்புகள் மரங்களின் அடியில்தாம் நடைபெறும். ஒவ்வொரு வகுப்பிலும் பதினைந்து மாணவர்களுக்குமேல் இரார். குறித்த நாளில் குறித்த பாடம் தான் படித்துத் தீரல் வேண்டும் என்னும் கட்டாயம் அங்கில்லை. பிள்ளைகள் விரும்பும் கலையை, அக்கலை பயிற்றுவிக்கப்படும் வகுப்பிற் சென்று உட்கார்ந்து பயிலலாம். எந்தப் பிள்ளைக்கும் கல்வி பயிலும் வகையில் கட்டுப்பாடு ஒன்றுமில்லை. அன்றன்று அவ்வப் பிள்ளை விரும்பும் கலையைப் பயிலலாம். ஆனால் ஒழுக்கத்திலும் ஒற்றுமையிலும் கட்டுப்பாடு இருக்க வேண்டுவது இன்றியமையாதது எனக் கருதப்படுகிறது. மாலைப்போதில் விளையாட்டு நேரம் முடிந்து, உணவருந்தும் நேரம் வரும் வரையில் ஆசிரியர்கள், மாணவர்களுக்குக் கதைகள் சொல்லுதல், அவர்களை நடிக்கச் செய்தல், பண் இசைக்கச் செய்தல் முதலியவற்றில் ஈடுபடுத்துவர். சில சமயங்களில் வயது முதிர்ந்த மாணவர்கள் இம்மாலைப்போதில் சுற்றுப்புறக் கிராமங்களுக்குச் சென்று கிராமப் பிள்ளைகளை அழைத்து உட்கார வைத்துக் கல்வி பயிற்றுவிப்பர்.

சரியாக இரவு ஒன்பதரை மணிக்கு மாணவர் அனைவரும் படுக்கைக்குச் சென்றுவிடுதல் வேண்டும். படுக்கும்போது, மாணவர் குழு ஒன்று மாலைப்பாட்டுப் பாடிக் கொண்டு சாந்தி நிகேதனக் கலாசாலை நிலையத்தைச் சுற்றி வரும். இங்ஙனம் இன்னிசை மூலம் நாளைத் தொடங்கி இசையிலேயே நாளை முடித்து உறங்கச் செல்லும் உயர்ந்த பழக்கம் அக்கலா நிலையத்தினரால் கைக்கொள்ளப்படுகின்றது.

தொடக்க வகுப்பிலிருந்தே ஆண்களுடன் பெண்களும் ஒன்ருக அமர்த்தப்பட்டே கல்வி அளிக்கப்படுகின்றனர். ஆசிரியர்களுடைய புதல்விகளும் அங்குப் படிக்கின்றனர். இவ்வாறு முதல் வகுப்பிலிருந்து முடிவு வரை ஆண்களும் பெண்களும் கலந்தே படிக்கின்றனர். ஆயின், பெண்களுக்கெனத் தனி விடுதி உண்டு. அவ் விடுதியின் நிர்வாகத்திற்காக ஒரு பெண் அதிகாரியும் இருக்கிருர். பெண்கள் நாள்தோறும் வைகறையில் துயில் நீத்து மாலைகள் தொடுக்க மலர்கள் பறித்து வரல் வேண்டும்.

சாந்தி நிகேதனத்தில் மாணவ மாணவிகள் சேர்ந்து, தங்களுக்கென்று ஒரு பால் பண்ணை வைத்து நடத்துகின்றனர். தபால் நிலையம், மருத்துவக் கூடம், அச்சுத் தொழிற்சாலை, நெசவுத் தொழிற்சாலை போன்ற கைத் தொழிற்சாலைகள் ஆகியவற்றினையும் மாணவர்களே தங்கள் பொறுப்பில் நேர்மையாக நடத்தி வருகின்றனர். மாணவர்களே சேர்ந்து நடத்தும் சட்ட சபைகளும், நீதி மன்றங்களும் சாந்தி நிகேனத்தில் இருக்கின்றன. அந்த மன்றத்தில் அடித்தல் போன்ற கடும் தண்டனைகள் விதிப்பது இல்லை எனினும், தங்களுக்குள் ஒழுக்கமும் ஒற்றுமையும் கட்டுப்பாடும் குறையாவண்ணம் இருக்கத் தக்க சீரிய முறைகள், அனைத்தையும் அந்த மாணவ நீதி மன்றத்தினர் புரிகின்றனர். கல்வி, இசை, ஓவியந் தீட்டல், நடனம் போன்ற கலைகள் அனைத்தும் அங்குக் கற்பிக்கப்படுகின்றன. அந்தக் கலாநிலையத்தினை நடத்தி வர, ரவீந்தரநாத தாகூர் தமக்குக் கிடைத்த 'நோபல்' பரிசுத் தொகையாகிய 8000 பவுனையும், தம் நூல்களின் மூலம் கிடைக்கும் இலாபத் தொகை அனைத்தையும் உபயோகித்துள்ளார்.

சாந்தி நிகேதனத்தில் படிக்கும் பெரிய மாணவர்கள் சுற்றுபுறக் கிராம மக்களுக்குக் கல்வி பயிற்றுவிக்கும் முறை கவனித்தற்கு உரியது. கலா நிலையத்தைச் சுற்றி யிருக்கும் கிராமங்களில் 'சந்தால்கள்' என்னும் ஒடுக்கப் பட்ட மக்களே பெரும்பான்மையினராக வசிக்கின்றனர்.

சாந்தி நிகேதன மாணவர்களில் சிலர், கைகளில் பந்து களை எடுத்துக்கொண்டு அக் கிராமங்களுக்கு அருகிற் சென்று விளையாடத் தொடங்குவார்கள். இந்த விளையாட்டினைக் காண விரும்பிச் சந்தால் மக்கள் பலர் வந்து குழுமுவர். உடனே விளையாடிக்கொண்டு இருப்பவர்கள் விளையாட்டை நிறுத்திவிட்டுக் குழுமி இருக்கும் கிராம மக்களுக்கு அறிவுக்கான செய்திகளை எடுத்துப் போதனை செய்வார்கள். அம்மாணவர்கள் நாள்தோறும் தவருமல் சென்று, அம்மக்களுக்குக் கல்வி பயிற்றுவிப்பர். இதே முறையில் சாந்தி நிகேதனம் உண்மைக் கல்வியைப் பரப்பிவரும் நற்ருெண்டை ஆற்றிவருகிறது.

சாந்தி நிகேதனத்தில் அளிக்கப்படும் கல்வி முறை மிக்க உயர்வானது. அங்கு ஆசிரியர்களும் மாணவர் களும் ஒன்ருக வாழ்கின்றனர்; படிக்கின்றனர். அம் முறை பண்டைக் குருகுலத்தினையே ஒத்திருக்கிறது. ஆசிரியர்களேனும் சரி, அன்றி மற்றை மாணவர்களேனும் சரி, எளிய வாழ்வையே மேற்கொண்டிருக்கின்றனர். சாந்தி நிகேதனத்தில் பயிற்றுவிக்கும் கல்விக்கும், இந்தியாவிலுள்ள பிற கலாசாலைகளில் பயிற்றுவிக்கும் கல்விக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடு இருக்கிறது. அங்கு இயற்கைக் கல்வி கிடைக்கிறது; மற்ற இடங்களில் செயற்கைக் கல்வி பயிற்றுவிக்கப்படுகிறது.

சாந்தி நிகேதனத்தில் மாணவ மாணவிகள் உட்கார நாற்காலிகள் இல்லை. மரத்தடியில் அனைவரும் பாய்களில் அமருதல் வேண்டும். ஆசிரியரும் அங்ஙனமே. வகுப்புகளோ, மற்றைப் பிற ஆடம்பர ஆரவாரங்களோ அங்குக் காணப்படா. பாடங்களை குருட்டுப் பாடமாகப் படித்து ஒப்புவித்தே தீரல் வேண்டும் என்னும் வற்புறுத்தல் இல்லை. மாணவர்களுக்கு விளங்காதவற்றை எங்ஙனமேனும் நெட்டுருப் போட்டுவிடல் வேண்டும் என்று ஆசிரியர்கள் கூறுவது இல்லை; அங்ஙனம் கூறுதல் கூடாது. பிள்ளைகள் படியாததற்குத் தண்டனை விதித்தல் இல்லை. இயற்கையாகவே அவர்களுக்குக் கல்வியில் விருப்பமும் ஆர்வமும் எழ முயற்சி செய்யப்படுகிறது. அவர்கள்

விரும்பிக் கற்கும் முறைகளே அங்குள்ள எல்லா ஆசிரியர் களாலும் கையாளப்படுகின்றன. பிள்ளைகள் வெறும் புத்தகப் படிப்புடன் இருந்துவிடல் சாந்தி நிகேதனத்தில் முடியாது. இயற்கையாகக் கொண்டு கற்பிக்கும் முறை தான் அங்குச் சிறப்புப் பெற்றிருக்கிறது. வானவெளி, நீலக்கடல், யாறு, மலை ஆகியவற்றின் எழிலைக் காட்டி, அவற்றினோடு மக்கள் வாழ்வு எங்ஙனம் இயைந்து செல் கின்றது என்பதை விளக்கி, மாணவர்களுக்கு அச்சமோ வெறுப்போ ஏற்படாத வழியில் கல்வி பயிற்றுவிக்கப்படு கிறது. ஆசிரியர்கள் என்றால் பிற இடங்களில் மாணவர் கள் அச்சங் கொள்வது போன்று, சாந்தி நிகேதன மாணவர்கள் அச்சங் கொள்வதில்லை; ஆனால் மாணவர் களும் ஆசிரியர்களும் அன்பால் பிணைக்கப்பட்டிருக் கின்றனர். எனவே, அங்குக் கல்வி பயிலுவோர், மிக உயர்ந்த அறிவூட்டும் அரிய கல்வியையும், ஒழுக்கத்தை யும், வாழ்வுக்கு உரிய இதர நன்முறைகளையும் பள்ளிக் கூட வாழ்விலேயே பயின்று கொள்ளுகின்றனர். அத னுடன், வெறுங் கல்வியில் மட்டும் கவலை செலுத்தி விடுவ தோடு நின்றுவிடாமல் காவியம் புனைதல், ஓவியம் தீற்று தல், சிற்பம் கற்றல், பண் இசைத்தல், மலர்மாலை தொடுத்தல், தோட்டத் தொழில் புரிதல், மக்கட்குத் தொண்டாற்றுதல், தாம் கற்றதைப் பிறரையும் கற்கச் செய்தல் ஆகியவற்றினையும் மாணவர்கள் அறிந்து கொள்ளுமாறு செய்வதில் சாந்தி நிகேதனம் மிகுந்த கவலை எடுத்துக் கொண்டுள்ளது. அங்குள்ள ஆசிரியர் கள் அவ்வத் துறையில் அறிஞர்கள்; ஆடம்பரம் அற்ற வர்கள்; ஒழுக்கத்தில் உயர்ந்தவர்கள்; மாணவர்களுடன் ஒத்துழைக்கும் கருத்து உள்ளவர்கள். தோட்ட வேலையில் ஒரு மாணவன் மண் வெட்டினால், ஆசிரியர் அம்மண்ணைத் தூக்கிச் செல்வார். இங்ஙனம் வேறுபாடின்றி ஆசிரியரும் மாணவர்களும் ஒத்துழைத்து வருவதில் சாந்தி நிகே தனம் ஒரு புதிய முறையை ஏற்படுத்தியுள்ளது.

அங்குப் பல்கலைக் கழக 'மெட்ரிகுலேஷன்' வகுப் புக்கு ஒத்த கல்வி வரை கற்பிக்கப்படுகிறது. சாந்தி

நிகேதனம் இன்று வெளிநாட்டு அறிஞர்கள் மனத்தைக் கவரும் பெருமை பெற்றதாய் இலங்குகிறது. பல வெளி நாட்டு அறிஞர்கள் சாந்தி நிகேதனத்திலேயே ரவீந்திர ருடன் தங்கி இருந்தனர். இந்திய அறிஞர் பலரும் ஆங்குத் தங்கியுள்ளனர்.

### குறிப்புரை

பல்கலைக் கழகம் - சர்வ கலாசாலை (University). விழைந்தனரில்லை - விரும்பவில்லை. உட்கிடை - விருப்பம் (உள் + கிடை : மனத்தினுள் கிடக்கும் எண்ணம்.) பிறழ - மாறுபட. ஓவியம் - சித்திரம். குழுமுவர் - கூடுவர். வற்புறுத்தல் - கட்டாயப்படுத்துதல். ஈதர - மற்ற. வைகறை - அதிகாலை.

### பயிற்சி

1. நற்றெண்டு, நான்காண்டு, இடையூறின்றி, அறிவூட்டும்—பதம் பிரித்துக் காட்டுக.

2. மலைக்கும் மடுவுக்கும், ஆடம்பர ஆரவாரம், குருட்டுப்பாடம், உட்கிடை—நும் சொந்த வாக்கியங்களில் அமைத்தெழுதுக.

3. இப்பாடத்தில் வந்துள்ள கலைகளின் பெயரை எடுத்தெழுதுக.

### வினாக்கள்

1. ரவீந்திர நாதரின் நீண்ட நாள் கருத்து யாது ?

2. ரவீந்திர் நடத்திய பத்திரிகை, அவர் இயற்றிய நாடகங்கள் எவை ?

3. சாந்தி நிகேதனம் எவ்வாறிருத்தல் வேண்டும் என்பது தாகூரின் உட்கிடையாக இருந்தது ?

4. சாந்தி நிகேதனத்தின் நடப்பு முறைகளை விளக்கி எழுதுக.

5. சாந்தி நிகேதன மாணவரும் ஆசிரியரும் பழகும் விதம் எப்படி ? இதனால் ஏற்படும் நன்மை என்ன ?

6. 'கலைப்பயிற்சி' யில் மாணவர் பெற்றுள்ள உரிமையைப் பற்றிக் கூறுக.

7. சாந்தி நிகேதனத்தில் மாணவர் கற்கும் கலைகள் எவை ?

8. அங்கு மாணவர் தம் பொறுப்பில் நடத்தி வரும் தொழில்கள் எவை ?

9. சாந்தி நிகேதனத்தில் சேரும் மாணவர்கள் பெறத் தக்க சிறந்த நன்மைகளைத் தொகுத்துக் கூறுக.

10. சாந்தி நிகேதனத்திலுள்ள ஆசிரியர்களைப் பற்றி நீவிர் அறிவதென்ன ?

### கட்டுரையாக்கம்

1. சாந்தி நிகேதனத்தில் கற்பிக்கப்படும் கலைகளைப்பற்றிப் பதினைந்து வரியில் எழுதுக.

2. நீ சாந்தி நிகேதனத்தில் சேர விரும்புவதாக வைத்துக்கொண்டு அங்கே நீ கற்க விரும்பும் கலையைப் பற்றிக் கூறுக.

---

# தமிழ் இலக்கியத் திரட்டு

## நான்காம் படிவம்—சிறப்புத் தொகுதி

[புதிய பாடத்திட்டப்படி அமைந்தது]


தொகுப்பாளர் :

P. துரைக்கண்ணு முதலியார், M.A., L.T.,

தலைவர்,

டாக்டர் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி,

அழகப்பா நகர், காரைக்குடி.

வித்துவான் S. V. வரதராஜ ஐயங்கார், M.A., M.O.L.,

தமிழ்த்துறைத் தலைவர்,

A. M. ஜெயின் கல்லூரி, சென்னை.






T. G. கோபால் பிள்ளை

பதிப்பாளர்

தெப்பக்குளம் | 2/27, பிராட்வே

திருச்சிராப்பள்ளி | ஜி. டி., சென்னை

பதிப்புரிமை] 1954 [விலை ரூ. 0–12–0

# முகவுரை

சென்னை இராச்சிய அரசியல் கல்வித் துறையாளர் 1952-ல் வெளியிட்டுள்ள புதிய பாடத் திட்டத்தை யொட்டி உயர்நிலைப் பள்ளிகளில் நான்கு, ஐந்தாம் படிவங் (Fourth and Fifth forms) களில் பயிலும் மாணவர்க்கு ஏற்கும்படி '**தமிழ் இலக்கியத் திரட்டு**' என்னும் புத்தகங்களின் பொது, சிறப்பு ஆகிய தொகுதிகள் இரண்டையும் தொகுத்துள்ளோம்.

இப் புத்தகங்களில் பாடத் திட்டத்தில் வகுத்துத் தரப் பெற்றுள்ள பிரிவுகளையும் அளவையும் முற்றும் தழுவிச் செய்யுட் பகுதியில் இனிய அரிய பாடல்களையும், உரைநடைப் பகுதியில் தமிழ் நாட்டுப் பேரறிஞர்கள் எழுதி வெளியிட்டுள்ள அரிய கட்டுரைகளையும் தேர்ந்து சேர்த்திருக்கின்றோம். இவைகளைத் தேர்ந்துகொள்வதில் மாணவர் சுவை, நோக்கம், பண்பாடுகளை உணர்ந்து, அவைகளுக்குப் பொருத்தமான தக்க பகுதிகளையே தொகுத்துச் சேர்த்துள்ளோம். செய்யுட்களும் உரைநடையிலுள்ள கட்டுரைகளும் பொதுப் பகுதியைக் காட்டிலும் சிறப்புப் பகுதியில் சற்று உயர்ந்தனவாகவே தேர்ந்து அமைக்கப்பட்டுள்ளன.

மாணவர்க்குத் தமிழ் மொழியில் தேர்ச்சி உண்டாகும்படி செய்வதே பாடத் திட்டத்தின் சீரிய நோக்கமாதலால், செய்யுள் உரைநடையாகிய இருபகுதிகளிலும் ஒவ்வொரு பிரிவின் முடிவிலும் குறிப்புரை, பயிற்சி, வினாக்கள், கட்டுரையாக்கம் என்பன சேர்க்கப்பெற்றுள்ளன. இவற்றால் மாணவர்க்குத் தாய்மொழியில் தேர்ச்சி ஏற்படுவதுடன், கட்டுரை எழுதும் வன்மையும் அமைதல் கூடும்.

இவைகளைத் தமிழாசிரியர்கள் ஆதரித்துப் பாட புத்தகமாக ஏற்படுத்தியுதவுமாறு வேண்டுகின்றோம்.

ஆசிரியர்கள்.

# நன்றியுரை

## உரைநடைப் பகுதியில்

இசையின்பம், எனது இலங்கைச் செலவு, பண்டைத் தமிழர் வாணிகம், சிறையிருந்த செல்வி, ஒரு நடிக நாடகம் என்னும் கட்டுரைகளைச் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்த அவற்றின் உரிமையாளர்கட்கும், பரணர் என்ற கட்டுரையைச் சேர்த்து வெளியிட அனுமதி உதவிய சென்னை அகில இந்திய ரேடியோ நிலையத்தார்க்கும் எமது நன்றியுரியதாகும்.

ஆசிரியர்கள்.

# உள்ளுறை

## செய்யுட் பகுதி

## உரைநடைப் பகுதி

# நான்காம் படிவம் - சிறப்பு



# செய்யுட் பகுதி

---

## I. கடவுள் வாழ்த்து

கடவுள் வாழ்த்துப் பாடிய பின்னரே நூல்பாடத் தொடங்குவது முன்னோர் வழக்கம். அதனால், இந்தப் பாட புத்தகத்திலும் கடவுள் வாழ்த்து முதலிடம் பெற்றுள்ளது. 'கடவுள்' என்னும் சொல்லுக்குக் 'கடத்தல்' என்பது பொருள். மனம் மொழி மெய் ஆகிய மூன்றையும் கடந்து நிற்பது கடவுள். ஒவ்வொரு சமயத்தாரும் கடவுளை வேறு வேறு பெயரிட்டு அழைத்தாலும் கடவுள் ஒன்றே என்பதை நாம் உணர்தல் வேண்டும். இந்த உணர்ச்சியுடன் கடவுள் வாழ்த்தாக ஆன்றோர் பாடியவற்றுள் இரண்டு பாடல்கள் கீழே தரப்பட்டுள்ளன.

### 1. வில்லி பாரதம்

பின் வரும் பாடல் வில்லிபுத்தூராழ்வார் இயற்றிய பாரதத்திலிருந்து எடுக்கப்பெற்றது. இவர் திருமுனைப்பாடி நாட்டிலுள்ள சனியூரில் தோன்றியவர்; வைணவ சமயத்தினர்; வரபதியாட்கொண்டான் என்னும் சிற்றரசனால் ஆதரிக்கப்பெற்று, அவன் விருப்பிற்கிணங்கத் தமிழில் பாரதம் இயற்றினார். இவர் காலம் 14-ஆம் நூற்றாண்டு.

வேதமும் வேதம் விளம்பு மெய்ப் பொருளும்
அப்பொருள் விதங்களும், பஞ்ச
பூதமும் புலனும் புலன்களின் பயனும்
அப்பயன் பொலிவுற நுகரும்
நாதமும் உலகம் படைத்தளித் தழித்து
ஞானமாய் அகிலமு நிறைவுற்(று)
ஆதியும் நடுவும் முடிவுமாய் நின்ற
ஆதியான் அடியிணை பணிவாம்.

## 2. திருவருட்பா

'திருவருட்பா' என்பதற்குக் கடவுளின் திருவருளால் தோன்றிய பாடல் என்பது பொருள். பின்வரும் பாடல் 'திரு வருட்பா' என்னும் நூலிலிருந்து எடுக்கப் பெற்றது. இதனை இயற்றியவர் இராமலிங்க சுவாமிகள் ஆவர். இவரும் சோழ நாட்டினரே. இவர் சிதம்பரத்திற்கு அருகிலுள்ள, மருதூரில் தோன்றியவர். சைவ சமயத்தவ ராயினும் பொதுநோக்கு உடையவர். இவர் பாடல்கள் எளிமையும் இனிமையும் உருக்க மும் வாய்ந்தவை. இவர் விளங்கிய காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதி.

### பிள்ளைச் சிறு விண்ணப்பம்

கருணையே வடிவாய்ப் பிறர்களுக் கடுத்த
கடுந்துயர் அச்சமா திகளைத்
தருணநின் அருளால் தவிர்த்தவர்க் கின்பம்
தரவும்,வன் புலைகொலை இரண்டும்
ஒருவிய நெறியில் உலகெலாம் நடக்க
உஞற்றவும், அம்பலந் தனிலே
மருவிய புகழை வழுத்தவும், நின்னை
வாழ்த்தவும் இச்சைகாண் எந்தாய்.

### குறிப்புரை

1. விளம்பும் - சொல்லும். பஞ்சபூதம் - நிலம், நீர், தீ, விசும்பு, காற்று என்னும் ஐம்பெரும் பூதங்கள். புலன் - மெய், வாய், கண், மூக்கு, செவி என்பன (புலம் - புலன் : போலி). ஞாதம் - அறியப்படும் தன்மை. அகிலம் - எல்லாம். அளித்து, அழித்து - பொருள் வேறுபாடு மாணவர் அறியத்தக்கது.

2. ஆதிகளை - முதலியவைகளை. தருணம் - சமயம் (அவை உண் டாகும் கணத்திலேயே). ஒருவிய - நீக்கிய. உஞற்றவும் - செய்யவும். மருவிய - பொருந்திய. வழுத்த - துதிக்க.

### பயிற்சி

1. பொருள் கூறுக : விளம்பும், பொலிவு, நுகரும், ஞாதம், தவிர்த்து, புலை.

2. வேதம், ஞானம், ஆதி, தருணம்—நேரான தமிழ்ச்சொல் தருக.

3. பிரித்துக் காட்டுக :—உலகெலாம், பொலிவுற, படைத்தளித் தழித்து, நிறைவுற்று.

### வினாக்கள்

1. வில்லிபுத்தூரார் கடவுளின் தன்மைகளை எவ்வாறு கூறுகின்றார் ?
2. பஞ்சபூதம், ஐம்புலன்—எவை ?
3. கடவுள் புரியும் முத்தொழில்கள் எவை ?
4. இராமலிங்க அடிகள் எவற்றில் விருப்பங் கொண்டுள்ளார் ?
5. எந்த இரண்டு கொடுந் தொழிலும் நீக்கப்படவேண்டும் ?

# II. நீதிக் கோவை

## 1. திருக்குறள்

இதனை இயற்றிய திருவள்ளுவர் என்பவர் வள்ளுவர் என்னும் பழந்தமிழ்க் குடியினர். திருக்குறள் என்னும் பெரு நூலைச் செய்து பெரும்புகழ் பெற்றமையால், அக்குடிப் பெயரே இவர்க்குச் சிறப்பாக வழங்கலாயிற்று. வள்ளுவக் குடியினர் படையெழுச்சி, திருவிழா, திருமணம் ஆகிய விசேட காலங்களில் யானைமேல் முரசினையேற்றி முழக்கி, அரசன் ஆணையை ஊரார்க்குத் தெரிவிக்கும் தொழிலினர் என்பர். திருக்குறளுக்கு உரை இயற்றியோர் பதின்மர். அவர்களுள் பரிமேலழகர் இயற்றிய உரை இந்நாளில் சிறப்பாக வழங்கி வருகின்றது. திருவள்ளுவர் வாழ்ந்திருந்த காலம் கடைச் சங்க காலமாகும்.

திருக்குறளிலிருந்து இல்வாழ்க்கை, வாழ்க்கைத்துணை நலம் என்னும் இரண்டு அதிகாரங்கள் இங்குத் தேர்ந்து கொள்ளப் பெற்றன. அவை மாணவர்க்கு மிகவும் இன்றியமையாதவை.

**இல்வாழ்க்கை**

1. இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
நல்லாற்றி னின்ற துணை.
2. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை.
3. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை.
4. பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.
5. அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.
6. அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்.
7. இயல்பினா னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை.
8. ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து.

9. அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன் பழிப்ப தில்லாயி னன்று.
10. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்.

### வாழ்க்கைத்துணை நலம்

1. மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.
2. மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்.
3. இல்லதெ னில்லவண் மாண்பானு லுள்ளதென்
னில்லவண் மாணுக் கடை.
4. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்.
5. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.
6. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.
7. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.
8. பெற்ருர் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ் சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.
9. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு நடை.
10. மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கலம் நன்மக்கட் பேறு.

### குறிப்புரை

**இல்வாழ்க்கை :** இல்லாளோடு கூடி வாழும் வாழ்க்கை. அதன் சிறப்பைக் கூறுவது இவ்வதிகாரம்.

1. இயல்புடைய மூவர் - பிரம்மசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி. நல்லாறு - நல்லொழுக்கம்.

2. துறந்தார் - கைவிடப்பட்டவர்; கதியற்றவர். துவ்வாதவர் - வறுமையுற்றவர். இறந்தார் - பிதுருக்கள்.

3. தென்புலத்தார் - பிதிரர். தெய்வம் - தேவர். விருந்து - விருந்

தினர். ஒக்கல் - சுற்றத்தார். இல்வாழ்வான் தான் சம்பாதித்த பொருளை ஆறு கூறுக்கி, ஒன்றை அரசனுக்குச் செலுத்தி, மற்றவற்றை ஐந்து வகையினருக்கும் பயன்படுத்த வேண்டும் என அறிக.

4. பழி-பாவம். பாத்து - (மேற்குறள்களில் சொல்லப்பட்டவர்க்காகப்) பிரித்து. எஞ்சல் - அழிதல்.

5. இல்வாழ்க்கைக்கு மனைவிமேல் அன்பு குணமும், பிறர்க்குப் பகுத்து உண்பது பயனும் ஆகும்.

6. அறத்து ஆறு - தருமவழி. புறத்து ஆறு - இல்வாழ்க்கைக்குப் புறம்பான வானப்பிரத்த நிலை. எவன் - யாது.

7. தலை - மிக்கவன், நெறி தவறாத இல்வாழ்க்கையுடையவன் சிறந்த வாழ்க்கை யுடையவனுவான்.

8. ஆற்றின் ஒழுக்கி - தவஞ் செய்வாரைத் தத்தம் நெறியில் நடக்க உதவி. அறன் இழுக்கா - தானும் தனது ஒழுக்கத்தின்றும் தவறாத.

9. அறன் எனப்பட்டது - அறம் என்று சிறப்பித்துச் சொல்லப் பட்டது. அஃது - துறவறம்.

10. வையம் - பூமி. வாழ்வு ஆங்கு - வாழ்வதற்கு உரிய வகை.

வாழ்க்கைத் துணை நலம் : இல்வாழ்க்கைத் துணையாகிய இல்லாளின் நன்மை.

1. மனை தக்க - இல்வாழ்க்கைக்குத் தகுந்த. மாண்பு - நற்குண நற்செய்கைகள். வளம் தக்காள் - வருவாய்க்குத் தக்கவாறு வாழ்க்கை நடத்துபவள்.

2. மாட்சி - நற்குண நற்செயல்கள். எனை மாட்சித்து - செல்வத்தால் எவ்வளவு சிறந்திருந்தாலும்.

3. மாண்பு - நற்குண நற்செயல்கள். மாணுக்கடை - நற்குண நற்செயல் இல்லாதவள்.

4. கற்புடையவளைப்போல ஒருவனுக்கு அறம் பொருள் இன்பங்கள் அடைவதற்கு வேறு உற்ற துணை இல்லை என்பது கருத்து.

5. கொழுநன் - கணவன். தொழுது எழுவாள் - தொழுதுகொண்டு தூக்கத்தினின்று எழுந்திருப்பவள்.

6. தன் காத்து - தன் கற்பினைக் காத்து. பேணி - உண்டி முதலியவற்றால் உபசரித்து. தகை சான்ற சொல் - இருவரிடமும் புகழ் நிலைநிற்கச் செய்வதான சொல். சோர்வு - தளர்ச்சி ; தொழிற் பெயர்.

7. சிறை காப்பு - சிறை வைப்பதுபோல் வைத்துக் காப்பாற்றுவது. எவன் செய்யும் - என்ன பயனைத் தரும். நிறை - மனத்தைக் கற்பு வழியில் நிற்கச் செய்தல்.

8. பெண்டிர் - மனைவிமார். புத்தேளிர் - தேவர்.

9. புகழ் புரிந்த இல் - புகழை விரும்பிய மனைவி. இகழ்வார் முன் - பழித்துப் பேசும் பகைவருக்கு முன்னே. ஏறு - ஆண் சிங்கம். பீடு - பெருமை.

10. மங்கலம் - நன்மை. மனைமாட்சி - மனையாளின் நற்குண நற்செயல்கள்.

### பயிற்சி

1. பொருள் கூறுக :—துவ்வாதவர், ஒக்கல், வையம், கொழுநன், பீடு, ஏறு.

2. பிரித்துக்காட்டுக :—விருந்தொக்கல், வானுறையும், கற்பென்னும், சொற்காத்து, சோர்விலான்.

3. இப் பகுதியிலிருந்து தொழிற்பெயர், வினையெச்சம், பெயரெச்சம், ஆகுபெயர் இவைகளுக்கு ஒவ்வோர் உதாரணந் தருக.

### வினாக்கள்

1. 'இயல்புடைய மூவர்'—யாவர் ?
2. இல்வாழ்வான் எவருக்கு உற்ற துணையாவான் ?
3. 'ஐம்புலத்தாறு'—என்பது யார் யாரைக் குறிக்கும் ? அவ்வாறு கூறியதன் கருத்தென்ன ?
4. இல்வாழ்க்கை எப்பொழுது பயனுடையதாகும் ?
5. இல்வாழ்க்கைக்குப் பண்பு எது ? பயன் யாது ?
6. அறத்தாறு, புறத்தாறு - பொருளை விளக்குக.
7. துறவறம் எப்பொழுது நன்மையுடையதாகும் ?
8. வாழ்க்கைத் துணை எப்படிப்பட்டவளாக இருத்தல் வேண்டும் ?
9. இல்லாளின் நற்குண நற்செயல்களே இல்வாழ்க்கையின் சிறப்பிற்குக் காரணம் என்பது எவ்வாறு விளக்கப்படுகிறது ?
10. கற்பின் சிறப்பை வள்ளுவர் எப்படி வலியுறுத்துகின்றார் ?
11. தகை சான்ற சொல் - தெளிவான பொருள் தருக.
12. பகைவன்முன் தலைநிமிர்ந்து நடக்கும் தன்மை எவருக்கு இராது ?

## 2. சிறுபஞ்சமூலம்

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் இதுவும் ஒன்று. செவ்வியம், சித்திரமூலம், கண்டுபறங்கி, பேரரத்தை, சுக்கு ஆகிய ஐந்து மருந்துப் பொருள்களால் ஆகிய கஷாயம் உடல் நோயைப் போக்கி நன்மை பயப்பது போல, இந்நூலின் ஒவ்வொரு பாட்டிலும் வரும் ஐந்தைந்து விஷயமும் மனத்திற்கு இதம் செய்வன என்னும் காரணத்தால் இந்நூல் சிறுபஞ்சமூலம் எனப் பெயர் பெற்றது. இதனை இயற்றியவர் காரியாசான் என்பவர்.

### கற்றவர்—கல்லாதவர்

தேவரே கற்றவர் கல்லாதார் தேருங்கால்
பூதரே முன்பொருள் செய்யாதார்—ஆதரே
துன்பமி லேம்பண்டு யாமே வனப்புடையேம்
என்பார் இருகால் எருது.

### ஒருவற்கு ஒன்றே எளிது

2. வான்குருவிக் கூடரக்கு வால்உலண்டு கோல்தருதல்
தேன்புரிந் தியார்க்கும் செயலாகா—தாம்புரீஇ
வல்லவர் வாய்ப்பன என்னுர் ஒரோரொருவர்க்(கு)
ஒல்காதோர் ஒன்று படும்.

### பெண்டிர் சிறப்பு

3. வருவாய்க்குத் தக்க வழக்கறிந்து சுற்றம்
வெருவாமை வீழ்ந்து விருந்தோம்பித்—திருவாக்கும்
தெய்வத்தையும் எஞ்ஞான்றும் தேற்ற வழிபாடு
செய்வதே பெண்டிர் சிறப்பு.

### கடமை உணர்வு

4. தான்பிறந்த இல்நினைந்து தன்னைக் கடைப்பிடித்துத்
தான்பிற ரால்கருதற் பாடுணர்ந்து—தான்பிறரால்
சாவஎன வாழான் சான்றோரால் பல்யாண்டும்
வாழ்கஎன வாழ்தல் நன்று.

### அறிவுடையார்—அறிவில்லாதவர்

5. பூத்தாலும் காயா மரமும்உள ; நன்றறியார்
மூத்தாலும் மூவார்நூல் தேற்றுதார்—பாத்திப்
புதைத்தாலும் நாறுத வித்துள ; பேதைக்(கு)
உரைத்தாலும் செல்லா துணர்வு.

### குறிப்புரை

1. தேருங்கால் - ஆராயும்போது. பூதர் - பூத பைசாசங்கள். ஆதர்- அறிவில்லாதவர், மூடர். என்பார் - என்று தற்பெருமை பேசுவோர். விலங்காகிய எருதுக்கும் இவர்க்கும் வேறுபாடு தோன்ற 'இருகால் எருது' என்றுர்.

2. வான்குருவி - தூக்கணங்குருவி. அரக்கு - செம்மெழுகு. வால்-வெண்மையான. உலண்டு - புழுக்கள் நூற்கும் நூல். கோல் தருதல் - கோல் புழுவால் செய்யும் கூடு. வாய்ப்பன - செய்ய முடிவன. ஒல்காது - குறைவுபடாமல்.

3. வருவாய் - பொருள் வரும் வழி. வழக்கு - செலவிடும் வழி. வீழ்ந்து - விரும்பித் தழுவி. சுற்றம் - உறவினர் : சுற்று - பகுதி. வீழ்த்து - வீழ் - பகுதி.

4. இல் - குடிச்சிறப்பு. தன்னை - தன்கொள்கையை. கருதற்பாடு - மதிக்கப்படுதல். வாழான் - வாழாதவனும்.

5. மூத்தாலும் - வயதால் முதியவராயினும். மூவார் - குணஞ் செயல்களால் முதியோராகார் : மூ - பகுதி. நாருத - முளைக்காத : நாறு-பகுதி.

## பயிற்சி

1. பொருள் கூறுக : ஆதர், உலண்டு, சுற்றம், வீழ்ந்து, வித்து.

2. எதிர்ப்பதம் தருக : கற்றவர், துன்பம், சிறப்பு, வாழான், சான்றோர், வாழ்க.

3. பிரித்துக் காட்டுக : துன்பமிலேம், செயலாகா, பாடுணர்ந்து, நன்றறியார்.

4. பகுதி கூறுக : செயல், சுற்றம், வீழ்ந்து, நாருத.

## வினாக்கள்

1. 'சிறு பஞ்சமூலம்' என்னும் பெயர்க் காரணத்தை விளக்குக.
2. 'தேவரே கற்றவர்' என்ற கருத்தமைந்த திருக்குறள் யாது?
3. 'இருகால் எருது' என இகழப்படுவார் யார்?
4. யாருக்கும் செயலாகாதவை எவை?
5. பெண்டிர்க்குச் சிறப்பான செயல்கள் யாவை?
6. மாதர் தம் கடமையை உணர்ந்து புரியத்தக்கவை எவை?
7. அறிவுடையார் அறிவிலார் தன்மைகளை விளக்குக.
8. 'பூத்தாலும் காயா மரமுள'—இதனால் நீவிர் அறிவதென்ன?

## கட்டுரையாக்கம்

1. பேதைக்கு உரைத்தாலும் செல்லாதுணர்வு—இதை விளக்கிப் பத்து வரியில் வரைக.

2. கடமை உணர்வு—என்ற செய்யுளின் பொருளைக் கொண்டு காந்தியடிகளின் வாழ்க்கை வரலாற்றை விளக்கிப் பதினைந்து வரியில் எழுதுக.

## 3. ஆசாரக்கோவை

நல்லொழுக்கத்திற்கு அடிப்படையான செயல்களையெல்லாம் திரட்டி ஒழுங்காக எடுத்துக்கூறுவதால் இந்நூல் இப்பெயர் பெற்றது. இதுவும் பதினெண் கீழ்க்கணக்கைச் சேர்ந்ததே. இதனை ஆக்கியோர், பெருவாயின் முள்ளியார் என்பவர். இவர் காலமும் கடைச் சங்க காலத்தை ஒட்டியதே யாகும்.

### காலைக்கடமைகள்

1. வைகறை யாமம் துயிலெழுந்து, தான்செய்யும்
நல்லறமும் ஒண்பொருளும் சிந்தித்து, வாய்வதில்
தந்தையும் தாயும் தொழுதெழுக என்பதே
முந்தையோர் கண்ட முறை.

### நீராடும் நேர்மை

2. நீராடும் போழ்தில் நெறிப்பட்டார் எஞ்ஞான்றும்
நீந்தார், உமியார், திளையார், விளையாடார்
காய்ந்த தெனினும் தலைஒழிந் தாடாரே
ஆய்ந்த அறிவி னவர்.

### மாலையில் செய்யத்தகாதவை

3. அந்திப்பொழுது கிடவார் நடவாரே
உண்ணார் வெகுளார் விளக்கிகழார் முன்அந்தி
அல்குண்(டு) அடங்கல் வழி.

### எப்போதும் செய்யத்தகாதவை

4. சுடரிடைப் போகார் சுவர்மேல் உமியார்
இடர்எனினும் மாசுணி கீழ்தம் மேற்கொள்ளார்
படைவரினும் ஆடை வளியுறைப்பப் போகார்
பலரிடை ஆடை உதிராரே என்றும்
கடனறி காட் சியவர்.

### தத்தமக்குத் தக்கன செய்தல்

5. உடைநடை சொற்சோர்வு வைதல் இந்நான்கும்
நிலைமைக்கும், கல்விக்கும், ஆண்மைக்கும் தத்தம்
குடிமைக்கும் தக்க செயல்.

## குறிப்புரை

1. வைகறை - விடியல். ஒண்பொருள் - நல்வழியில் ஈட்டிய பொருள். வாய்வது - பொருந்துவது.

2. நெறிப்பட்டார் - நல்லொழுக்கம் உடையவர். காய்ந்தது-காய்ச்சலென்னும் நோயைக் கொண்டது.

3. கிடவார் - தூங்கமாட்டார். அல்கு - சுருக்கமாக. உண்டு-உண வருந்தி. அடங்கல் - துயில் கொள்ளல் : தொழிற்பெயர் : அடங்கு - பகுதி.

4. சுடர்இடை - விளக்கிற்கும் அதன்முன் இருப்பவர்க்கும் இடையிலே. மாசுணி - அழுக்கேறிய ஆடை (மாசு + உணி). காட்சி - அறிவு: காண் - பகுதி. போகார் - போ : பகுதி.

5. நடை - நடத்தை. சொல் சோர்வு - பேசுதலில் தளர்ச்சி. குடிமை-குடிப்பிறப்பு.

## பயிற்சி

1. பொருள் உரைக்க : அல்கு, சுடர், மாசுணி, காட்சி, நடை, இடர்.

2. பிரித்துக் காட்டுக : துயிலெழுந்து, விளக்கிகழார், அல்குண்டு, மாசுணி.

3. பகுதி தருக : காட்சி, அடங்கல், போகார்.

4. துயில், தந்தை, அடங்கல், சோர்வு, வைதல், நான்கு, கல்வி, ஆண்மை—இவை என்ன பெயர் ?

## வினாக்கள்

1. ஆசாரக்கோவை என்று பெயர் வழங்கக் காரணம் என்ன ?
2. காலைக் கடன்களைப் பற்றி நீவிர் அறிவதென்ன ?
3. நீராடும்போது கைக்கொள்ளத் தக்க முறைகள் எவை ?
4. மாலையில் செய்யத்தகாதவை யாவை ?
5. ‘ கடனறி காட்சியவர் ’ எவ்வாறு நடத்தல் வேண்டும் ?
6. தத்தமக்குத் தக்க செயல் என்பது பற்றி நீவிர் அறிவது யாது ?

## கட்டுரையாக்கம்

‘ நல்லொழுக்க விதிகள் ’ என்ற தலைப்பில் இப்பாடல்களிலிருந்து நீவிர் அறிந்தவற்றைத் தொகுத்து எளிய நடையில் எழுதுக.

# III. தொடர்நிலைச் செய்யுள்

## 1. மணிமேகலை

### பாத்திரமரபு கூறிய காதை

இது தமிழிலுள்ள பழைய பெருங் காப்பியம் ஐந்தில் ஒன்று. இதனை இயற்றியவர் மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனுர் என்பவர். கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த மகளான மணிமேகலையின் வரலாறு இதில் கூறப்படுகிறது. இவ்வரலாறு முப்பது காதைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதில் அமைந்துள்ள இயற்கை வருணனைகளும் அறவுரைகளும் கற்போர்க்கு இன்பம் பயப்பன. பௌத்த சமயக் கொள்கை இந்நூலில் ஆங்காங்கே விளக்கப்படுகின்றன. இந்நூல் கடைச்சங்க காலத்தில் இயற்றப் பெற்றது.

**முன்கதை :** மணிமேகலை தன் தந்தைக்கு நேர்ந்த கதியை எண்ணி வருந்தி, உலக வாழ்வில் வெறுப்புற்றிருந்தாள். அவள் ஒரு நாள் மலர் பறிக்கும் பொருட்டு உவவனம் என்ற சோலையை யடைந்தபோது, இளவரசனுன உதயகுமரன் அங்குவந்து, அவள்மீது காதல்கொண்டு நெருங்க, மணிமேகலா தெய்வம் அவளை எடுத்துச்சென்று மணிபல்லவம் என்ற தீவில் விடுத்தது. அதுவரை மயங்கியிருந்த அவள் துயில் நீங்கி, தீவதிலகை என்பவள் துணையால் ‘அமுதசுரபி’ என்னும் அட்சயபாத்திரம் பெற்று, மணிமேகலா தெய்வம் உபதேசித்த மந்திரத்தை உச்சரித்து, வானவழியே காவிரிப்பூம்பட்டினத்திற்கு மீண்டு வந்து, அட்சய பாத்திரத்தைக் காண்பித்து அதன் வரலாற்றைக்கூறும்படி அறவண வடிகளை வேண்ட, அவர் கூறியது இக்காதையில் வருவது :

**ஆபுத்திரன் வரலாறு :** வாரணுசி என்னும் ஊரிலிருந்த ஓர் அந்தணன் மனைவி, தன் தீவினை தீர, தீர்த்தயாத்திரை செய்யும் பொழுது, வழியில் தான் பெற்ற ஆண்குழந்தையைச் சற்றும் இரக்கமின்றி, ஒரு தோட்டத்தில் விட்டுச் சென்ருள். அக் குழந்தை பசியால் அழுதது. அதுகேட்ட பசு ஒன்று அங்கு வந்து, அக்குழந்தைக்குப் பாலூட்டி வளர்த்தது. அதனுல் அக் குழந்தைக்கு ‘ஆபுத்திரன்’ என்று பெயராயிற்று. பூதி என்ற ஓர் அந்தணன் அக்குழந்தையைக் கண்டெடுத்து வளர்த்துக் கல்வி கற்பித்தான். ஒரு நாள் அக்குமரன் ஒருயாகத்தில் பலி

யாவதற்கிருந்த யாகபசுவைக் கவர்ந்து சென்றான் ; அதனால், அச்சமூகத்தாரால் வெறுத்துத் துரத்தப்பட்டு மதுரையை யடைந்து, சிந்தாதேவியின் கோயிலுக்கு முன்பிருந்த அம்பலத்தில் தங்கிப் பிச்சையெடுத்து, அங்கு வந்த குருடர், முடவர் முதலியோர்க் களித்து, எஞ்சியதைத் தான் உண்டு வாழ்ந்தான் என்பது.

### ஆபுத்திரன் தன்னை அடுத்தோர்க்கு உணவளிக்க இயலாமைக்கு வருந்துதல்

ஆங்கவற் கொருநா ளம்பலப் பீடிகை
பூங்கொடி நல்லாய் ! புகுந்தது கேளாய்
மாரி நடுநாள் வல்லிருள் மயக்கத்(து)
ஆரிடை யுழந்தோர் அம்பலம் மரீஇத்
துயில்வோன் தன்னைத் தொழுதனர் ஏத்தி
வயிறுகாய் பெரும்பசி மலைக்கு மென்றலும்
ஏற்றூண் அல்லது வேற்றூண் இல்லோன்
ஆற்றுவது காணான் ஆரஞர் எய்த,

### சிந்தாதேவி அமுதசுரபி என்னும் பாத்திரத்தை ஆபுத்திரனுக்கு அளித்தல்

“ கேளிது மாதோ கெடுகநின் தீ(து)” என
யாவரு மேத்தும் இருங்கலை நியமத்துத்
தேவி சிந்தா விளக்குத் தோன்றி
“ ஏடா ! அழியல் எழுந்திது கொள்ளாய் ;
நாடுவறங் கூரினுமிவ் வோடுவறங் கூராது
வாங்குநர் கையகம் வருந்துதல் அல்லது
தான்றொலை வில்லாத் தகைமைய ” தென்றே
தன்கைப் பாத்திரம் அவன்கைக் கொடுத்தலும்,

### ஆபுத்திரன் சிந்தாதேவியைப் போற்றி வணங்குதல்

“ சிந்தா தேவி ! செழுங்கலை நியமத்து
நந்தா விளக்கே ! நாமிசைப் பாவாய் !
வானோர் தலைவி ! மண்ணோர் முதல்வி
ஏனோ ருற்ற இடர்களை வா ” யெனத்
தான்றொழு தேத்தித் தலைவியை வணங்கி,

### அமுதசுரபியின் உதவியால் ஆபுத்திரன் மன்னுயிர்களின் அரும்பசி களைதல்

ஆங்கவர் பசிதீர்த் தந்நாள் தொட்டு
வாங்குகை வருந்த மன்னுயிர் ஓம்பலின்
மக்களு மாவும் மரஞ்சேர் பறவையுந்
தொக்குட னீண்டிச் சூழ்ந்தன விடாஅ
பழுமரத் தீண்டிய பறவையி னெழூஉம்
இழுமென் சும்மை யிடையின் றொலிப்ப
ஈண்டுநீர் ஞாலத் திவன் செயல்

### இந்திரன் வருகை

பாண்டு கம்பளந் துளக்கிய தாதலின் இந்திரன்
தளர்ந்த நடையிற் றண்டுகா லூன்றி
மாயிரு ஞாலத்து மன்னுயி ரோம்பும்
ஆருயிர் முதல்வன் றன்முன் றோன்றி
"இந்திரன் வந்தே னியாது நின்கருத்(து)
உன்பெருந் தானத் துறுபயன் கொள்" கென,

### தனக்கு வரம் வேண்டுவதில்லை என்றும், பிறர் பசிப்பிணி ஒழிக்கும் அரும்பேறு ஒன்றே போதுமென்றும் ஆபுத்திரன் கூறுதல்

வெள்ளை மகன்போல் விலாவிற நக்கீங்(கு)
எள்ளினன் போமென் றெடுத்துரை செய்வோன்
"ஈண்டுச் செய்வினை யாண்டு நுகர்ந்திருத்தல்
காண்டகு சிறப்பினுங் கடவுள ரல்ல(து)
அறஞ்செய் மாக்கள் புறங்காத் தோம்புநர்
நற்றவஞ் செய்வோர் பற்றற முயல்வோர்
யாவரு மில்லாத் தேவர்நன் னாட்டுக்(கு)
இறை வனாகிய பெருவிறல் வேந்தே!
வருந்தி வந்தோ ரரும்பசி களைந்தவர்
திருந்துமுகங் காட்டுமென் றெய்வக் கடிஞை,
உண்டி கொல்லோ வுடுப்பன கொல்லோ
பெண்டிர் கொல்லோ பேணுநர் கொல்லோ
யாவையீங் களிப்பன தேவர்கோன்" என்(றான்).

## குறிப்புரை

**அடி 1—8 :** அவற்கு - ஆபுத்திரனுக்கு. அம்பலம் - ஊர்ப் பொது இடம். பூங்கொடி நல்லாய் - பூங்கொடி போன்ற மணிமேகலையே. புகுந்தது - நேர்ந்தது. ஆர் இடை உழந்தோர் - அரிய வழியில் வருந்தி வந்தோராகிய கூத்தர் முதலியோர். மரீஇ (மருவி) - அடைந்து. மலைக்கும் வருத்துகின்றது. ஏற்று - யாசித்து. ஆர் அஞர் - மிக்க வருத்தம்.

9—16 : நியமம் - கோயில். அழியல் - வருந்தாதே. வறம் கூரினும் - பஞ்சம் மிகுந்தாலும். இ ஓடு - இந்த அட்சய பாத்திரம். தான் தொலைவு - தான் (உணவைத் தராமல்) ஒழிவது. 'கலை நியமம்' என்பது சிந்தா தேவி (சரசுவதி) கோயிலின் பெயர்.

17—21 : நந்தா - அழியாத. ஏனோர் - மற்றையோர். மண்ணோர் முதல்வி - பூமியிலுள்ளவர்களால் முதன்மையான தெய்வமாகக் கொண்டாடப்படுகின்றவளே !

22—27 : விடாஅ - நீங்காதனவாய், பழுமரத்து - பழுத்த மரத்திலே. இழும் என் சும்மை - இழுமென்னும் ஓசையைக் கொண்ட ஒலி. இடை இன்று - இடைவிடாமல்.

28—35 : ஈண்டு - மிகுந்த. பாண்டு கம்பளம் - வெள்ளைக் கம்பளத் திரளையன்ற ஆசனம். துளக்கியது - நடுங்கச் செய்தது. தண்டு கால் ஊன்றி - (தான் பிடித்த) தடியையே காலாக ஊன்றி. மன் - தங்கியுள்ள. ஓம்பும் - பாதுகாக்கும். இவ்வுலகில் தானம் சீலம் முதலியவற்றில் சிறந்தோர் உளராஞல் இந்திரனுடைய பாண்டுகம்பளம் நடுங்குமாம். அக் குறிப்பால் இந்திரன் வந்து அவர்களுக்கு வேண்டிய வரங்களைத் தருவானும்.

38—48 : வெள்ளை மகன் - அறிவில்லாத சொல்லையுடையவன். இறமுறியும்படி. எள்ளினன் - இகழ்ந்து. புறங்காத்து ஓம்புநர் - பாதுகாத்தலைச் செய்பவரும். திருந்து முகம் - (வருத்தம் நீங்கியதால்) மகிழ்ச்சி கொண்ட முகம். கடிஞை - அட்சய பாத்திரம்.

## பயிற்சி

1. பொருள் கூறுக : அம்பலம், மலைக்கும், இடர், சும்மை, கடிஞை.

2. பதம் பிரித்துக் காட்டுக : தான்றொலைவில்லா, விலாவிற, நற்றவம், வேற்றாண்.

3. குறிப்பு வரைக : அம்பலப் பீடிகை, கலைநியமம், பாண்டு கம்பளம்.

## வினாக்கள்

1. ஆபுத்திரன் வருத்தமடையக் காரண மென்ன ?
2. சிந்தாதேவி ஆபுத்திரன்முன் தோன்றிக் கூறியது என்ன ?
3. ஆபுத்திரன் சிந்தாதேவியை எவ்வாறு போற்றினுன் ?
4. அமுதசுரபியைப் பெற்ற ஆபுத்திரன் ஆற்றியது என்ன ?

5. அன்னதானத்தின் சிறப்பு யாது?

6. இந்திரன் ஆபுத்திரன் முன்பு எவ்வுருவில் தோன்றினான்? என்ன கூறினான்?

7. இந்திரனை நோக்கி ஆபுத்திரன் கூறியது யாது?

8. 'இந்திரன் பாண்டுகம்பளம் துளக்கியது' எது? ஏன்?

9. 'பழுமரத் தீண்டிய பறவை'—உபமேயம் என்ன?

10. ஆபுத்திரன் இந்திரனைப் 'பெருவிறல் வேந்தே' என்றதால் என்ன பொருள் தோன்றும்?

### கட்டுரையாக்கம்

இந்திரனுக்கும் ஆபுத்திரனுக்கும் நடந்த பேச்சை உரையாடல் அமைப்பில் எழுதுக.

## 2. சீகாளத்திப் புராணம்

இது சீகாளத்தி என்னும் தலத்தின் வரலாற்றைக் கூறும் நூல். சீ - சிலந்திப் பூச்சி, காளம் - பாம்பு, அத்தி - யானை; இம்மூன்றும் இத்தலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை வழிபட்டு முத்தி பெற்றதால், இத்தலம் இப்பெயர் பெற்றது.

சிவப்பிரகாச சுவாமிகள், கருணைப்பிரகாசர், வேலையர் என்ற சகோதரர் மூவரிருந்தனர். இவர்கள் தோன்றிய இடம் காஞ்சிபுரம். இம் மூவரே இந்நூலாசிரியர்கள்: இவருள் இரண்டாமவரான கருணைப் பிரகாசர் சீகாளத்திப் புராணத்தைப் பாடத் தொடங்கி முடிக்குமுன் காலமாகிவிட்டார். அதன் பின் மூத்தவரான சுவாமிகள் இப்புராணத்தைத் தொடர்ந்து பாடிக் கண்ணப்பச் சருக்கம், நக்கீரச் சருக்கம் ஆகிய இரண்டையும் முடித்தபின் இறைவன் திருவடியையடைந்தார். பிறகு வேலையர் என்னும் மூன்றுமவர் இப்புராணத்தின் எஞ்சிய பாகத்தைப் பாடி முடித்தார். இந்த நக்கீரச் சருக்கம் பாடியவர் சிவப்பிரகாசசுவாமிகளே யாவர். இவர்களது சமயம் - வீரசைவம். காலம் - ஏறக்குறைய முந்நூறு வருடங்களுக்கு முன்.

### நக்கீரச் சருக்கம்

நக்கீரச் சருக்கம், நக்கீரன் என்னும் புலவர் சீகாளத்தி நாதரை வழிபட்டுப் பேறு பெற்றதைக் கூறுகிறது. நக்கீரன் என்பவர் கடைச்சங்கப் புலவருள் தலைமை பெற்றவர். கீரன் என்பது இவர் பெயர். (கீரம் - பால்.) பால் போன்ற இனிய

சொற்களை யுடையவர் என்று பொருள். ந - என்பது சிறப்புப் பொருள் தரும் ஓர் இடைச்சொல். நக்கீரர் வரலாற்றைக் கூறும் இப்பகுதி, நக்கீரச் சருக்கம் எனப் பெயர் பெற்றது.

**முன்கதை :** மதுரையில் வங்கிய சூளாமணி என்ற பாண்டிய மன்னன் அரசு புரியும்போது, நக்கீரர் முதலிய தமிழ்ப் புலவர்கள் மதுரையிலே சங்கப் பலகையைப் பெற்றுத் தமிழ் வளர்ச்சி புரிந்து வந்தார்கள். ஒருகால் பாண்டியன் தன் மனைவியோடு அரண்மனையின் மேன்மாடத்தில் இனிதிருந்தான். அப்போது அவனுக்கு நேராக நறுமணத்தோடு தென்றற் காற்று வீச, காற்றுக்கு இந்நறுமணம் எவ்வாறு வந்ததென்று அவன் சிந்தித்து, அருகே தன்மனைவி யிருப்பது கண்டு, 'இது, நம் மனைவியின் கூந்தல் நறுமணமே' என்று தன் மனத்துள் நினைத்தான்.

### பாண்டியன் சங்க மண்டபத்தில் பொற்கிழி தூக்குதல்

1. மதித்த காவல னதுமனங்
கொண்டுதன் மனத்தில்
ததைத்த நுண்பொருள் தரவொரு
செய்யுள்செய் புலவர்
'இதைக்கொள் க'(எ)ன்றுபொன் ஆயிரம்
ஒருகிழி யியற்றி
அதைப்பொற் சங்கமண் டபத்தின்முற்
றூக்கின னன்றே.

### புலவர் பலரின் பயனற்ற முயற்சி

2. புலவர் யாவருந் தாங்கண்ட
வாறுபாப் புனைந்து
தலைவன் முன்புபோய்ச் சாற்றிய
அனைத்தையுந் தண்டார்
மலைகொ டோளினன் மறுத்தலின்,
வறிதகன் றனர் ;அவ்
விலகு பொற்கிழி யிருந்ததங்
கறுப்பவர் இன்றி.

3. சிலர்பி ழைத்தஅவ் வற்கடத்
திறையயர்ச் சிக்குந்
தலைமை பெற்றவன் தருமியென்
பவனுடல் தளர்ந்திங்(கு)
இலையு யிர்க்கரன் இனிநடந்
தெத்திசை யேனும்
மலிவி லைத்துநா டெய்துவம்
எனமனம் வலித்தான்.

4. கோயில் சென்றடைந் தருட்பெருங்
கடலினைக் குறுகித்
" தாயி லன்புடையாய்! இவ
னூறிலினிச் சாவேன்!
தேய முய்வதற் கேற்றது
புகுந்துறீஇச் செழுமை
ஆய பின்பவ ணடைகுவல் "
எனத்தொழு தழுதான்.

வேறு

5. குழவியந் திங்கள் வேணிக்
குரிசின்மற் றதனைக் கேளா
" அழுதகங் குழையல்; வாழி
யன்ப! ஒன் றறைவல் கேட்டி
வழுதிதூக் கினனோர் பாத்தன்
மனங்கொள உரைத்தோர்க் கென்று
கிழியதா யிரம்பொன் சங்கக்
கிளர்மணி மண்டபத்தே."

6. அங்கதை இப்பா வேந்தற்
கறைந்தனை பெறுதி " என்று
கொங்குதேர் வாழ்க்கை என்னும்
கோதில்தூக் கீந்து விட்டான்;
பொங்கிய களிப்பி னனும்
போய்த்தொடர் பமுதந் தன்னைத்
திங்கள்வெண் குடையி னன்தன்
செவிப்புலத் தூற்றி னனல்.

**பாண்டியன் சொற்படியே தருமி சங்கத்தவர்முன் பாடுதல்**

7. மற்றது கேட்டுத் திங்கள்
மருமான்தான் நினைந்த வண்ணம்
சொற்றலி னினிது வந்து
"தொகுசங்கத் தவர்பாற் போயிப்
பொற்றபாட் டிசைவி" என்றான்;
பொருக்கெனத் தருமி சென்று
கற்றவ ரவைமுன் சொன்னான்;
கவிகள் கேட்டலு முவந்தார்.

**நக்கீரன் தருமி உரைத்த பாட்டு குற்றமுடைத்து எனல்**

8. ஆங்கவர் தம்முட் கீரன்
அரும்பெறற் கல்விச் செல்வத்(து)
ஓங்கிய தருக்கி னால் "இவ்
வுரைத்தபாக் குற்றம்" என்றான்.
தாங்கிய வுவகை சிந்தித்
தருமிதான் துணைவிற் போந்து
தேங்கமழ் கடுக்கை வேணிச்
செல்வனோ டிதனைச் சொன்னான்:

**"என் பாடலுக்குக் குற்றம் கூறினோர் யாவர்?" என்று இறைவன் கேட்க, நக்கீரன் "நான்" எனல்**

9. கேட்டலும் அங்க யற்கண்
கிளியுறழ் கிளவி பங்கன்
பாட்டியற் புலவ னாகிப்
பாவலர் தம்பாற் போய், "எம்
கோட்டமில் கவிக்குக் குற்றம்
கூறின ரியாவர்?" என்றான்.
நாட்டிய புகழ்நக் கீரன் "நான்"
எனத் தருக்கிச் சொன்னான்.

**இறைவன் கேட்ட வினாக்களுக்கு நக்கீரன் இறுத்த விடைகள்**

10. சொல்லலும், "குற்றம் யாது?
சொல்"லெனா, நெடுங்க ணல்லார்
சில்லிருங் குழற்கு நாற்றஞ்
செயற்கையன் றியற்கை யுண்டோ?

9. பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.
10. உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு.

## இடுக்கணழியாமை

1. இடுக்கண் வருங்கால் நகுக அதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில்.
2. வெள்ளத் தனைய இடும்பை யறிவுடையான்
உள்ளத்தி னுள்ளக் கெடும்.
3. இடும்பைக் கிடும்பை படுப்பர் இடும்பைக்(கு)
இடும்பை படாஅ தவர்.
4. மடுத்தவா யெல்லாம் பகடன்னான் உற்ற
இடுக்கண் இடர்ப்பா டுடைத்து.
5. அடுக்கி வரினும் அழிவிலான் உற்ற
இடுக்க ணிடுக்கட் படும்.
6. அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்(று)
ஓம்புதல் தேற்றா தவர்.
7. இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல்.
8. இன்பம் விழையான் இடும்பை யியல்பென்பான்
துன்ப முறுதல் இலன்.
9. இன்பத்து ளின்பம் விழையாதான் துன்பத்துள்
துன்ப முறுதல் இலன்.
10. இன்னாமை யின்ப மெனக்கொளின் ஆகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு.

### குறிப்புரை

**ஊக்கமுடைமை:**—ஒரு தொழிலைச் செய்யும்போது சோர்ந்திராத மனக் கிளர்ச்சியை யுடையனாதல்.

முதல் நான்கு குறள்கள் கையிலுள்ள செல்வத்தைக் காட்டிலும் ஊக்கமே சிறந்ததென்று கூறுவன ; அடுத்த மூன்றும் ஊக்க முடையாரின் உயர்ச்சியைக் கூறுவன. இறுதியிலுள்ள மூன்றும் ஊக்கமில்லாதவரின் அழிவைக் கூறுவன.

1. உடையார் எனப்படுவது - (ஒருவர் சிறந்த பொருளை) வைத்துக் கொண்டுள்ளாரென்று சொல்லுதற்குச் சிறந்த காரணமாக வுள்ளது, ஊக்கம் - மனக்கிளர்ச்சியே. உடையது உடையரோ - (ஏற்கெனவே பெற்றுள்ள) பொருளையும் உடையவரோ ?

2. உள்ளம் உடைமை - ஊக்கமுடையவராயிருத்தல். உடைமை - (நிலையுள்ள) சொத்து.

3. ஒருவந்தம் - நிலையான, ஊக்கம் - ஊக்கத்தை, கைத்து உடையார் - (தம் கைப்பொருளாகப் பெற்றவர், ஆக்கம் இழந்தேம் என்று - (செல்வத்தை இழந்தாராயினும்) கைப்பொருளை இழந்து விட்டோமென்று, அல்லாவார் - மனங்கலங்கார்.

4. அசைவு இலா - தளர்தலில்லாத, அதர்வினாய் - வழியை வினவிக் கொண்டு, வினாய் - இறந்தகால வினையெச்சம், உழை - ஏழனுருபு.

5. வெள்ளத்து அனைய - வெள்ள நீரின் அளவின. உள்ளத்து அனையது - ஊக்கத்தின் அளவினது. (இக்குறளில் எடுத்துக் காட்டுவமை யணி வந்துள்ளது).

6. உள்ளுவது எல்லாம் - நினைப்பது எல்லாம், உயர்வு உள்ளல் - (மனிதர்) தம் உயர்ச்சியையே நினைக்கக் கடவர் ; அது - அவ்வுயர்ச்சி, தள்ளினும் - (கைகூடாது) தவறினாலும், தள்ளாமை நீர்த்து - (அவ்வண்ணம்) ஒழிக்கப்படாத தன்மையை யுடையது.

7. களிறு - ஆண்யானை. புதை அம்பிற்பட்டு - தொகுதியாகிய அம்புகளால் புண்பட்டாலும், பாடு ஊன்றும் - தன் பெருமையை நிலை நிறுத்தும் ; (அதுபோல) உரவோர் - ஊக்கமுடையவர், சிதைவு இடத்து - (உயர்ச்சிக்குக்) கேடு உண்டானபோதும். ஒல்கார் - மனத்தளர்ச்சியடையார்.

8. வள்ளியம் என்னும் செருக்கு - நாம் ஈகைக் குணத்தை யுடையோம் என்னும் தன்மதிப்பு.

9. யானை பரியது - யானை பெரிய உடம்பினையுடையது, கூர்ங் கோட்டது - கூரிய தந்தங்களையுடையது, ஆயினும் புலி தாக்குறின் வெரூஉம் - ஆனாலும் புலி எதிர்த்தால் அதற்கு அஞ்சும். (இக்குறளில் பிறிது மொழிதலணி வந்துள்ளது).

10. உரம் - திடமான அறிவு. உள்ளம் வெறுக்கை - ஊக்கத்தின் மிகுதி, அஃது இல்லார் மரம் - அவ்வூக்கமில்லாதார் மரங்களாவர். வேறு - (உலகத்து மரங்களுக்கும் இம் மரங்களுக்கும்) வடிவு வேற்றுமை, மக்கள் ஆதலே - மக்கள் வடிவினராயிருத்தலே (இக்குறளில் வேற்றுமை யணி வந்துள்ளது).

இடுக்கணழியாமை :—துன்பத்திற்காக மனங்கலங்கா திருத்தல், இடுங்கு + கண் = இடுக்கண். துன்பம் நேரும்போது கண் இடுங்கும் ; ஆதலால் துன்பம் இடுக்கண் எனப்பட்டது.

முதலிரண்டு குறள்கள் விதியினால் துன்பம்நேரினும் மனங்கலங்கா

திருப்பதற்குரிய உபாயத்தைக் கூறும். அடுத்த மூன்றும் தெய்வத்தால் துன்பம் நேரினும் மனங்கலங்கலாகாது எனக் கூறும். ஆறும் குறள் பொருளில்லாதது பற்றி மனங்கலங்காதிருக்க வேண்டுமெனக் கூறும். இறுதியிலுள்ள நான்கு மெய்வருத்தத்தாலேற்படும் துன்பத்திற்கு மனங் கலங்கலாகாதெனக் கூறும்.

1. இடுக்கண் வருங்கால் - (விதிவசத்தால்) துன்பம் நேரிடும்போது. நகுக - மனம் மகிழ்க. அதனை அடுத்து ஊர்வது - அவ்விடுக்கண்ணை மேன்மேலும் நெருக்கியழிக்கக் கூடியது. அஃது ஒப்பது இல் - அந்த மகிழ்ச்சியை ஒத்திருப்பதன்றி (வேறொன்று) இல்லை.

2. வெள்ளத் தனைய இடும்பை - வெள்ளத்தைப் போன்ற கரையில வான துன்பங்கள்; உள்ளத்தின் - ஊக்கத்தால், உள்ள - (அத்துன்பத் துக்கு மாறான இன்பம் என்று) நினைக்க.

3. இடும்பைக்கு - துன்பத்திற்கு, இடும்பை படாஅதவர் - துன்பப் படாதவர், இடும்பைக்கு - அத்துன்பத்திற்கே, இடும்பை படுப்பர் - துன் பத்தை உண்டாக்குவர். (இக்குறளில் வந்துள்ள அணி சொற்பொருட் பின்வருநிலையணி.)

4. மடுத்தவாய் - தடைப்பட்ட இடம். பகடு அன்னான் (வண்டியை இழுத்துச் செல்லும்) எருதை யொத்தவன். இடர்ப்பாடு உடைத்து - (தானே) துன்பப்படுதலை உடையது.

5. அழிவுஇலான் - மனவுறுதி நீங்குதலில்லாதவன், உற்ற இடுக் கண் - அடைந்த துன்பம். இடுக்கண்படும் - அழிந்துவிடும்.

6. பெற்றேம் என்று - (செல்வத்தைப்) பெற்றுள்ளோம் என்று, ஓம்புதல் தேற்றாதவர் - உலோபஞ்செய்தலை அறியாதவர். அற்றேம் என்று - (வறுமைக் காலத்து) யாம் பொருளற்றேமென்று, அல்லல்படுபஓ - துன்பம் அனுபவிப்பரோ?

7. மேல் - மேலோர்; அறிவுடையோர். உடம்பு இடும்பைக்கு இலக்கு என்று - உடம்புகள் துன்பம் (எனப்படும் வாளுக்கு) இலக்காகும் எனத் தெளிந்து. கையாறு ஆ - இடும்பையாக.

8. விழையான் - விரும்பாதவனாகி. என்பான் - என்று தெளிந்திருப் பவன். விழையான், என்பான் - வினையாலணையும் பெயர்கள்.

9. இன்பத்துள் இன்பம் விழையாதான் - இன்பம் நேர்ந்தபோது அதனை அனுபவித்துக்கொண்டே அதில் பற்றில்லாதவன், துன்பத்துள் - துன்பம் நேர்ந்த காலத்தில், துன்பம் - அத்துன்பத்தைத் (அனுபவித்துக் கொண்டே), உறுதல் - மனத்தில் துன்புறுதல், இலன் - இலனாவான்.

10. இன்னாமை - முயற்சியால் வருந்துன்பம். ஒன்னார் - பகைவர்.

## பயிற்சி

1. பொருள் கூறுக:—நீர்த்து, ஒருவந்தம், ஆக்கம், அதர், பாடு, உரவோர், கோடு, பகடு, ஒன்னார், கையாறு.

2. இப்பாக்களிலிருந்து எடுத்துக்காட்டுவமையணி, வேற்றுமை

யணி, சொற்பொருட் பின்வருநிலையணி—இவைகளுக்கு உதாரணங்கள் தருக.

3. வினையாலணையும் பெயர், ஆகுபெயர், வினையெச்சம், எதிர்மறை வினை, வியங்கோள்வினை, வினைத்தொகை—இவற்றிற்கு இரண்டிரண்டு உதாரணங்கள் கொடு.

## வினாக்கள்

1. உடையார் எனப்படுவோர் யார்? மற்றவர் ஏன் உடையரல்லர்?
2. பொருளுடைமை ஏன் உடைமையன்று?
3. எவர் கைப்பொருளை இழந்துவிட்டோமென்று மனங்கலங்கார்?
4. செல்வம் எவரிடம் வலிய வந்து சேரும்?
5. மனிதரின் உயர்ச்சி எவ்வளவினது?
6. ஏன் எப்போதும் உயர்வான எண்ணங்களையே நினைக்க வேண்டும்?
7. "சிதைவிடத்து" என்ற குறளிலுள்ள அணியை விளக்குக.
8. வள்ளியம் என்னும் செருக்கை எவர் எய்தார்? ஏன்?
9. "பரியது கூர்ங்கோட்ட தாயினும்" என்ற குறளில் வந்துள்ள அணியை விளக்கு.
10. எத்தகைய மக்கள் மரங்களாவர்? மரங்களுக்கும் அவர்க்குமுள்ள ஒற்றுமையென்ன? வேற்றுமையென்ன?
11. இடுக்கண் வரும்போது என்ன செய்யவேண்டும்? ஏன்?
12. வெள்ளத்தனைய இடும்பையையும் எவ்வகையால் அழிக்கலாம்?
13. "இடும்பைக்கிடும்பை படுப்பர்" என்ற குறளுக்குப் பதவுரை தருக. அதில் வந்துள்ள அணி யாது?
14. எவர் உற்ற இடுக்கண் தானே ஒழிந்திடும்? அவர் எதற்கு ஒப்பிடப்பட்டுள்ளார்? ஒப்புமையை விளக்குக.
15. எவருக்குத் துன்பம் அடுக்கிவரினும் இடுக்கண்படும்?
16. எவர் வறுமையுற்ற காலத்தும் 'அற்றேம்' எனத் துன்புறார்?
17. 'இலக்கமுடம்பு' என்ற குறளின் கருத்து யாது?
18. இன்பத்தையும் துன்பத்தையும் எவ்வாறு கருதுபவன் துன்பம் அடையான்?
19. 'இன்பத்துளின்பம்' என்ற குறளுக்குப் பதவுரை தருக.
20. 'ஒன்றார் விழையும் சிறப்பு' என்றால் என்ன? அதை ஒருவன் எவ்வாறு பெறலாம்?

## கட்டுரையாக்கம்

1. 'ஊக்கம்' என்பது பற்றி ஒரு பக்க அளவில் கட்டுரை வரைக.
2. 'மனங்கலங்காமை' என்பது பற்றி ஒரு பக்க அளவில் கட்டுரை வரைக.

## 2. பழமொழி

பழமொழி யென்னுஞ் சொற்றொடர் பழமையான மொழி என விரியும். இது கடைச்சங்க காலத்து நூல்களிலொன்றாகிய பதினெண் கீழ்க் கணக்குகளில் ஒன்று; பழமொழி ஒவ்வொன்று இறுதியில் அமைந்த நானூறு வெண்பாக்களால் ஆகியது. இந் நூலில் வரும் செய்யுட்களில் சில நாலடியார் திருக்குறள் என்னும் நூலிலுள்ள பாட்டுக்களின் சொற்பொருட்களைத் தழுவி யுள்ளன.

இதன் ஆசிரியர் முன்றுறையரையனார். இவர் முன்றுறை யென்னும் ஊரையாண்ட ஒரு சிற்றரசர். இவர் சைன சமயத் தவர்.

**தாம் நன்மை யடைதற்குத் தாமே காரணம்**

1. எமக்குத் துணையாவார் வேண்டுமென் றெண்ணித்
தமக்குத் துணையாவார் தாந்தெரிதல் வேண்டா;
பிறர்க்குப் பிறர்செய்வ துண்டோ?மற் றில்லை
தமக்கு மருத்துவர் தாம்.

**பெருஞ்செல்வர் தரித்திரப்பட்டாலும் தாழார்**

2. நாடறியப்பட்ட பெருஞ்செல்வர் நல்கூர்ந்து
வாடிய காலத்தும் வட்குபவோ?—வாடி
வலித்துத் திரங்கிக் கிடந்தே விடினும்
புலித்தலையை நாய்மோத்த லில்.

**பகைவரை வெல்லும் படை அரசனுடைய அன்பே**

3. மறுமணத்த னல்லாத மாநலத்த வேந்தன்
உறுமனத்த னாகி ஒழுகின்—செறுமனத்தார்
பாயிரங் கூறிப் படைதொக்கால் என்செய்ப?
ஆயிரங் காக்கைக்கோர் கல்.

**அற்பரிடத்தில் அதிகாரம் கொடார்**

4. உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை
அடக்கமி லுள்ளத்த னாகி—நடக்கையின்
ஒள்ளிய னல்லான்மேல் வைத்தல் குரங்கின்கைக்
கொள்ளி கொடுத்து விடல்.

## இயற்கை மனவலி யில்லார்க்கு வலிமையை உண்டாக்க முடியாமை

5. வன்சார் புடைய ரெனினும் வலிபெய்து
தஞ்சார் பிலாதாரைத் தேசூன்ற லாகுமோ?
மஞ்சுசூழ் சோலை மலைநாட! யார்க்கானும்
அஞ்சுவார்க் கில்லை அரண்.

### குறிப்புரை

1. எமக்கு - (தனியராயுள்ள) நமக்கு. தாம் தெரிதல் வேண்டா - தாம் தேடவேண்டியதில்லை. பிறர்க்குப் பிறர் - ஒருவருக்கு மற்றொருவர். 'தமக்கு மருத்துவர் தாம்' என்பது பழமொழி.

2. வாடிய - தளர்வுற்ற. வட்குபவோ - தாழ்வரோ? (தாழார்). வாடி - மெலிந்து. வலிந்து - நரம்பு இழுத்துக்கொண்டு. திரங்கி - உடல் சுருங்கி, கிடந்துஏ விடினும் - படுத்தேயிருந்தாலும். 'புலித்தலையை நாய் மோத்தலில்' என்பது பழமொழி. பிற்காலத்தில் இது வழக்கொழிந்தது போலும். நாடு - இடவாகு பெயராய் நாட்டாரைக் குறித்தது. இச் செய்யுள் எடுத்துக் காட்டுவமையணி.

3. மாநலத்த - பெரிய நன்மையையுடைய. உறு - அன்புற்ற. செறு மனத்தார் - அழிக்க வேண்டுமென்ற எண்ணமுடைய பகைவர். பாயிரம் - விருது. என் செய்ப - என்ன செய்ய வல்லார்? பகையரசர் படைகளை யோட்டக் குடிகள் மாட்டு அன்புள்ள ஒரு மன்னனே போதும் என்பது கருத்து. இச்செய்யுள் எடுத்துக் காட்டுவமையணி.

4. நடக்கையின் - நடத்தையினால். பெருமை - பெருமையை, மேன்மையை. ஒள்ளியன் அல்லான்மேல் - நல்லவனல்லாதவனிடத்தில் (ஒள் : பகுதி). கொடுத்துவிடல் - கொடுத்துவிடுவது போலும். இச்செய்யுளில் உபமேய உபமானங்கள் அபேதப்படுத்திக் கூறப்பட்டுள்ளதால் இது காட்சியணி.

5. மஞ்சு - மேகம். வல் சார்பு உடையர் எனில் உம் - வலிய சார்பை உடையவர் ஆனாலும். தம்சார்பு - தம்முடைய இயற்கையான மனவலிமை. தேசு - புகழையுண்டாக்கும் வீரம். அரண் - காவல்.

### பயிற்சி

1. இப்பாடல்களில் வந்துள்ள பழமொழிகளை மட்டில் எடுத்தெழுதுக.

2. 'நாடறியப் பட்ட', 'உடைப்பெருஞ் செல்வத்து' என்ற பாடல்களில் வந்துள்ள அணிகள் யாவை?

3. பொருள் கூறுக :—திரங்கி, வட்குபவோ, பாயிரம், ஒள்ளியன், மஞ்சு.

4. பிரித்துக் காட்டுக :—வட்குபவோ, ஒள்ளியன், விடல், யார்க்கானும்.

### வினாக்கள்

1. 'தமக்கு மருத்துவர் தாம்' என்னும் பழமொழியால் விளக்கப் படும் கருத்து யாது?

2. 'பெருஞ் செல்வர் வாடிய காலத்தும் வட்கார்'—எதுபோல?

3. 'ஆயிரங் காக்கைக்கோர் கல்' என்னும் உபமான முகத்தான் விளக்கப்படும் உபமேயம் யாது?

4. குரங்கின்கைக் கொள்ளி கொடுத்துவிடலாவது எது?

5. 'வன்சார் புடையர்' என்ற செய்யுளுக்குப் பொழிப்புரை கூறுக.

### கட்டுரையாக்கம்

நும் பாடப் பகுதியில் வந்துள்ள பழமொழிகளில் ஒன்றை விளக்க ஒரு கதை எழுதுக.

## 3. அறநெறிச் சாரம்

**அறநெறிச் சாரம்** என்ற தொடர் தருமவழிகளுட் சாரமானவற்றைக் கூறும் நூல் எனப் பொருள்படும். திருக்குறள் முதலிய நீதி நூல்களின் சாரங்களும், ஜைநசமய நூல்களிற் கூறிய சன்மார்க்கங்களின் சாரங்களும் இதில் அடங்கியுள்ளன. இதில் 226 வெண்பாக்கள் உள்ளன.

இந்நூலை இயற்றியவர் முனைப்பாடியார். இவர் திருமுனைப் பாடி நாட்டினர் என்பவர். இவர் ஜைன மதத்தினர். சுமார் 500 ஆண்டுகட்கு முன்னர்த் திரட்டப்பட்ட புறத்திரட்டு என்னும் நூலில் இவருடைய பாடல்கள் இடம் பெற்றுள்ளன. ஆதலால், இவர் காலம் இன்றைக்கு ஐந்நூறு வருடங்கட்கு முந்தியதென்று தெரிகிறது.

### நல்லற இயல்பு

1. வினையுயிர் கட்டுவீ டின்ன விளக்கித்
தினையனைத்தும் தீமையின் றாகி நினையுங்கால்
புல்லறத்தைத் தேய்த்துலகி னோடும் பொருந்துவதாம்
நல்லறத்தை நாட்டு மிடத்து.

### புறங்கூறலின் இழிவு

2. முன்னின்றொருவன் முகத்தினும் வாயினும்
கன்னின் றுருகக் கலந்துரைத்துப்—பின்னின்
றிழித்துரைக்குஞ் சான்றோரை அஞ்சியே தேவர்
விழித்திமையார் நின்ற நிலை.

### அன்போடு தருமோபதேசஞ் செய்பவர்

3. காலொடு கையமுக்கிப் பிள்ளையை வாய்நெரித்துப்
பாலொடு நெய்பெய்யும் தாயனையர்—சால
அடக்கத்தை வேண்டி அறன்வலிந்து நாளும்
கொடுத்துமேற் கொண்டொழுகு வார்.

### மீதூணால் வரும் கேடு

4. புகாப்பெருக வூட்டிற் புலன்கண்மிக் கூறி
அவாப்பெருகி யற்றந் தருமால்—புகாவுமோர்
பெற்றியா னூட்டிப் பெரும்பயன் கொள்வதே
கற்றறிந்த மாந்தர் கடன்.

### கெடுவார் இயல்பும் அறிவார் தொழிலும்

5. தண்டாமம் பொய்வெகுளி பொச்சாப் பழுக்காறென்
றைந்தே கெடுவார்க் கியல்பென்ப ; பண்பாளா !
ஈதல்அறிதல் இயற்றுதல் இன்சொற்கற்(று)
ஆய்தல் அறிவார் தொழில்.

### குறிப்புரை

1. நாட்டுமிடத்து - நிலைநிறுத்தும்போது. நினையுங்கால் - ஆராயுமிடத்து. வினை - இருவினைகளின் தன்மை. உயிர் - ஆன்மாவின் தன்மை. கட்டு - (உயிர்களுக்கு ஏற்பட்டுள்ள) பந்தங்களின் தன்மை. வீடு - விடுதலையுண்டாகும் வகை. இன்ன - (ஆகிய) இவற்றை. உலகினோடு பொருந்துவது - உலகத்தாரின் ஒழுக்கத்துடன் பொருந்தமுற நிற்பது. வினை உயிர் கட்டு வீடு - உம்மைத்தொகை.

2. சான்றோரை - பெரியோர்க்கு. (இது இகழ்ச்சிக் குறிப்பாகிய எதிர் மறையிலக்கணை). தேவர்கள் - கண்ணிமையா இயல்பினர். அவர்கள் கண்ணிமையா திருத்தற்குக் கவி சமத்காரமாகக் காரணம் கூறு முகத்தான் புறங்கூறலின் இழிவை விளக்குகிறார். இச்செய்யுள் ஏதுத் தற்குறிப் பேற்றவணி.

3. அறன் - தருமங்கள். வலிது கொடுத்து - வலிய உபதேசித்து. வாய்நெரித்து - (பாலடையை) வாயில் நெரித்து வைத்து. நெய் - மருந்தெண்ணெய். இச்செய்யுள் உவமையணி.

4. மீதூண் - பெருந்தீனி. புகா - உணவு. ஊட்டின் - உண்டால். மிக்கு ஊறி - மிகுதியாகக் கொழுத்து. அற்றம் - தீமை. ஓர் பெற்றியான் - ஒரு வகையால் (தகுந்த அளவில்). பெரும்பயன் - சிறந்த பயனாகிய மோட்சம்.

5. பண்பாளா - நற்குணத்தைக் கொள்ள விரும்புவோனே. தாண்டா- சிறப்பற்ற. மம் - மானம் (அல்லது மமதை). பொச்சாப்பு - மறதி. இயல்பு - சுபாவமாகிய தீக்குணங்கள். இயற்றுதல் - (நல்லன) செய்தல். கெடுவார்க்கு இயற்கையாய்த் தோன்றுவன சிறப்பில்லா மானம் முதலிய ஐந்து; அறிவார்க்கோ ஈதல் முதலிய ஐந்து.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—கட்டு, புகா, அற்றம், பெற்றி, மம், பொச் சாப்பு.
2. பிரித்துக் காட்டுக :—கன்னின்று, தண்டாமம், மீதூண்.
3. தொடரிலக்கணம் கூறுக :—வினையுயிர் கட்டுவீடு, புல்லறம்.

## வினாக்கள்

1. நல்லறம் என்பது யாது ?
2. தேவர் இமையாதிருப்பதற்குக் கவி கூறும் காரணம் யாது ?
3. அன்போடு தருமோபதேசம் செய்யும் பெரியோர் எவ்வாறு தாய் மாரை யொப்பர் ?
4. கற்றறிந்த மாந்தர் கடன் யாது ?
5. கெடுவார் இயல்புகள் யாவை ? அறிஞர் தொழில்கள் யாவை ?

## கட்டுரையாக்கம்

'நல்லறம்' என்பது பற்றி இருபது வரிகளில் ஒரு கட்டுரை வரைக.

# III. தொடர்நிலைச் செய்யுள்

## 1. பெரிய புராணம்

பெரிய புராணம்' என்பது பெருமை பெற்ற சிவனடியார் எழுபத்திருவருடைய பழமையான வரலாற்றை யுணர்த்தும் நூல். இதற்கு ஆசிரியர் இட்ட பெயர் திருத்தொண்டர் புராணம் என்பது. இதனை இயற்றியவர் சேக்கிழார்.

சேக்கிழார் தொண்டை மண்டலத்தில் குன்றத்தூரில் வேளாளர் குலத்தில் சேக்கிழார் மரபில் தோன்றியவர். இவருடைய இயற்பெயர் அருண்மொழித் தேவர் என்பது. அநபாய சோழன் இவரைத் தம் அமைச்சராகக் கொண்டான். அரசன் சமண மதச் சார்புள்ள காப்பியங்களைப் பயின்று மகிழ்வதைக் கண்ட சேக்கிழார், அவனைச் சைவ பரமாயுள்ள நூல்களில் ஈடுபடும்படி வற்புறுத்திக் கூறினார்; அவன் விருப்பப்படி திருத்தொண்டர்களது வரலாற்றைத் 'திருத்தொண்டர் புராணம்' என்னும் காப்பியமாகப் பாடினார். சோழன் அவருக்குத் தொண்டர் சீர் பரவுவார் என்னும் சிறப்புப் பெயரை யளித்தனன். இவர் இற்றைக்கு எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்தவர் என்பர்.

### ஏனாதி நாத நாயனார் புராணம்

புண்டரிகம் பொன்வரைமேல் ஏற்றிப் புவியளிக்கும்
தண்டரள வெண்கவிகைத் தார்வளவர் சோணாட்டில்
வண்டறைபூஞ் சோலை வயல்மருதத் தண்பணை சூழ்ந்(து)
எண்திசையும் ஏறியசீர் எயின்மூதூர் எயினனூர். (1)

வேழக் கரும்பினொடு மென்கரும்பு தண்வயலில்
தாழக் கதிர்ச்சாலி தானோங்குந் தன்மையதாய்
வாழக் குடிதழைத்து மண்ணியஅப் பொற்பதியில்
ஈழக் குலச்சான்றார் ஏனாதி நாதனார். (2)

தொன்மைத் திருநீற்றுத் தொண்டின் வழிபாட்டின்
நன்மைக்கண் நின்ற நலமென்றுங் குன்றாதார்
மன்னர்க்கு வென்றி வடிவாட் படைபயிற்றுந்
தன்மைத் தொழில் விஞ்சை யிற்றலைமை சார்ந்துள்ளார்.
(3)

வாளின் படைபயிற்றி வந்த வளமெல்லாம்
நாளும் பெருவிருப்பால் நண்ணுங் கடப்பாட்டில்
தாளும் தடமுடியும் காணுதார் தம்மையுந்தொண்(டு)
ஆளும் பெருமான் அடித்தொண்டர்க் காக்குவார். (4)

நள்ளார் களும்போற்றும் நன்மைத் துறையின்கண்
எள்ளாத செய்கை இயல்பின் ஒழுகுநாள்
தள்ளாத தங்கள் தொழிலுரிமைத் தாயத்தின்
உள்ளான் அதிசூரன் என்பான் உளனுனன். (5)

மற்றவனுங் கொற்ற வடிவாட் படைத்தொழில்கள்
கற்றவர்கள் தன்னிற் கடந்துள்ளார் இல்லையெனும்
பெற்றிமையான் மாநிலத்து மிக்க பெருமிதம்வந்(து)
உற்றுலகில் தன்னையே சால மதித்துள்ளான். (6)

தானுள் விருத்திகெடத் தங்கள்குலத் தாயத்தின்
ஆனுத செய்தொழிலாம் ஆசிரியத் தன்மைவளம்
மேனுளுந் தான்குறைந்து மற்றவர்க்கே மேம்படலால்
ஏனுதி நாதர்திறத் தேலா இகல்புரிந்தான். (7)

கதிரோன் எழமழுங்கிக் கால்சாயுங் காலை
மதிபோல் அழிந்துபொறு மற்றவனுஞ் சுற்றப்
பதியோ ருடன்கூடப் பண்ணியமர் மேற்சென்(று)
எதிர்போர் விளைப்பதற்கே எண்ணியது துணிந்தான். (8)

தோள்கொண்ட வல்லாண்மைச் சுற்றத் தொடுந்துணையாங்
கோள்கொண்ட போர்மள்ளர் கூட்டத் தொடுஞ்சென்று
"வாள்கொண்ட தாயம் வலியாரே கொள்வ"தென
மூள்கின்ற செற்றத்தான் முன்கடையில் நின்றழைத்தான். (9)

வெங்கண் புலிகிடந்த வெம்முழையில் சென்றழைக்கும்
பைங்கண் குறுநரியே போல்வான் படைகொண்டு
பொங்கிப் புறஞ்சூழ்ந்து போர்குறித்து நேர்நின்றே
அங்கண் கடைநின் றழைத்தான் ஒலிகேளா, (10)

"ஆர்கொல் பொர அழைத்தார்?" என்றறியேற் றிற்கிளர்ந்து
சேர்வு பெறக்கச்சில் செறிந்தவுடை மேல்வீக்கி
வார்கழலுங் கட்டி வடிவாள் பலகைகொடு
போர்முனையில் ஏனுதி நாதர் புறப்பட்டார். (11)

புறப்பட்ட போதின்கண் போர்த்தொழில் வான்கற்கும்
விறற்பெருஞ்சீர்க் காளையர்கள் வேறிடத்து நின்றார்
மறப்படைவான் சுற்றத்தார் கேட்டோடி வந்து
செறற்கரும்போர் வீரர்க் கிருமருங்குஞ் சேர்ந்தார்கள். (12)

வந்தழைத்த மாற்றான் வயப்புலிபோத் தன்னூர்முன்
"நந்தமது வாள்பயிற்று நற்றாயங் கொள்ளுங்கால்
இந்தவெளி மேற்கை வகுத்திருவேம் பொருபடையும்
சந்தித் தமர்விளைத்தால் சாயாதார் கொள்வதென, (13)

என்றுபகைத் தோனுரைப்ப ஏனாதி நாதர்''அது
நன்றுனக்கு வேண்டுமேல் நண்ணுவன்''என் றுள்மகிழ்ந்து
சென்றவன்முன் சொன்ன செருக்களத்துப் போர்குறிப்பக்
கன்றி இருபடையும் கைவகுத்து நேர்மலைவார். (14)

வாளொடு நீள்கை துடித்தன ; மார்பொடு வேல்கள் குளித்தன ;
தோளொடு வாளி நிலத்தன; தோலொடு தோல்கள் தகைத்தன ;
தாளொடு வார்கழல் இற்றன; தாரொடு சூழ்சிரம் அற்றன;
நாளொடு சீறி மலைப்பவர் நாடிய போர்செய் களத்தினில். (15)

இம்முனைய வெம்போரில் இருபடையின் வாள்வீரர்
வெம்முனையில் வீடியபின் வீடாது மிக்கொழிந்த
தம்முடைய பல்படைஞர் பின்னாகத் தாமுன்பு
தெம்முனையில் ஏனாதி நாதர் செயிர்த்தெழுந்தார். (16)

வெஞ்சினவாள் தீயுமிழ வீரக் கழல்கலிப்ப
நஞ்சணிகண் டர்க்கன்பர் தாம்எதிர்ந்த ஞாட்பின்கண்
எஞ்சிஎதிர் நின்ற இகல்முனையில் வேல்உழவர்
தஞ்சிரமுந் தோளுரமுந் தாளுரமும் தாந்துணித்தார். (17)

தலைப்பட்டார் எல்லாருந் தனிவீரர் வாளில்
கொலைப்பட்டார்; முட்டாதார் கொல்களத்தை விட்டு
நிலைப்பட்ட மெய்யுணர்வு நேர்பட்ட போதில்
அலைப்பட்ட ஆர்வமுதற் குற்றம்போ லாயினார். (18)

இந்நிலைய வெங்களத்தில் ஏற்றழிந்த மானத்தால்
தன்னுடைய பல்படைஞர் மீண்டார் தமைக்கொண்டு
மின்னொளிவாள் வீசி விறல்வீரர் வெம்புலியே(று)
அன்னவர்தம் முன்சென் றதிசூரன் நேரடர்ந்தான். (18)

மற்றவர்தஞ் செய்கை வடிவாள் ஒளிகாணச்
சுற்றிவரும் வட்டணையில் தோன்று வகைகலந்து
பற்றியடர்க் கும்பொழுதில் தானும் படைபிழைத்துப்
பொற்றடந்தோள் வீரர்க் குடைந்து புறகிட்டான். (20)

போன அதிசூரன் போரில் அவர்கழிந்த
மானமிக மீதூர மண்படுவான் கண்படான்
ஆனசெயல் ஓரிரவுஞ் சிந்தித் தலமந்தே
'ஈனமிகு வஞ்சனையால் வெல்வன்' என எண்ணினன். (21)

சேட்டாருங் கங்குல் புலர்காலைத் தீயோனும்
'நாட்டாரைக் கொல்லாதே நாமிருவேம் வேறிடத்து
வாட்டாயங் கொள்போர் மலைக்க வருக' எனத்
தோட்டார்பூந் தாரார்க்குச் சொல்லிச் செலவிட்டான். (22)

இவ்வாறு கேட்டலுமே ஏனாதி நாதனார்
"அவ்வாறு செய்தல் அழகி" தென அமைந்து
கைவாள் அமர்விளைக்கத் தான்கருதும் அக்களத்தே
வெவ்வாள் உரவோன் வருகஎன மேற்கொள்வார். (23)

சுற்றத்தார் யாரும் அறியா வகைகடர்வாள்
பொற்பலகை யுந்தாமே கொண்டு புறம்போந்து
மற்றவன்முன் சொல்லி வரக்குறித்த அக்களத்தே
பற்றலனை முன்வரவு பார்த்துத் தனிநின்றார். (24)

தீங்கு குறித்தழைத்த தீயோன் 'திருநீறு
தாங்கிய நெற்றியினார் தங்களையே எவ்விடத்தும்
ஆங்கவருந் தீங்கிழையார்" என்ப தறிந்தானாய்ப்
பாங்கில் திருநீறு பண்டு பயிலாதான். (25)

வெண்ணீறு நெற்றி விரவப் புறம்பூசி
உண்ணெஞ்சில் வஞ்சக் கறுப்பும் உடன்கொண்டு
வண்ணச் சுடர்வாள் மணிப்பலகை கைக்கொண்டு
புண்ணியப் போர் வீரர்க்குச் சொன்னஇடம் புகுந்தான். (26)

வென்றிமடங்கல் விடக்குவர முன்பார்த்து
நின்றாற்போல் நின்ற நிலைகண்டு தன்நெற்றி
சென்று கிடைப்பளவுந் திண்பலகை யான்மறைத்தே
முன்தனிவீ ரர்க்கெதிரே மூண்டான் மறம்பூண்டான். (27)

அடல்விடையே றென்ன அடர்த்தவனைக் கொல்லும்
இடைதெரிந்து தாள்பெயர்க்கும் ஏனாதி நாதர்
புடைபெயர்ந்த மாற்றான் பலகை புறம்போக்கக்
கடையவன்தன் நெற்றியின்மேல் வெண்ணீறு தாங்கண்டார்.(28)

கண்டபொழு தே''கெட்டேன் முன்பிவர்மேற் காணாத
வெண்திருநீற் றின்பொலிவு மேற்கண்டேன் வேறினிஎன் ?
அண்டர்பிரான் சீரடியார் ஆயினார்'' என்றுமனங்
கொண்(டு)''இவர்தங், கொள்கைக் குறிவழிநிற் பேன்''என்று(29)

கைவா ளுடன்பலகை நீக்கக் கருதியது
செய்யார் 'நிராயுதரைக் கொன்றார் எனுந்தீமை
எய்தாமை வேண்டும் இவர்க்(கு)' என்(று) இரும்பலகை
நெய்வா ளுடனடர்த்து நேர்வார்போல் நேர்நின்றார். (30)

அந்நின்ற தொண்டர் திருவுள்ள மாரறிவார் ?
முன்னின்ற பாதகனும் தன்கருத்தே முற்றுவித்தான்
இந்நின்ற தன்மை அறிவார் அவர்க்கருள
மின்னின்ற செஞ்சடையார் தாமே வெளிநின்றார். (31)

மற்றினிநாம் போற்றுவதென் ? வானோர் பிரான்அருளைப்
பற்றலர்தங் கைவாளால் பாசம் அறுத்தருளி
உற்றவரை என்று முடன்பிரியா அன்பருளிப்
பொற்றொடியாள் பாகனார் பொன்னம் பலமணைந்தார். (32)

குறிப்புரை

1. புண்டரிகம் - புலிக்கொடி. பொன்வரை - பொன்மையான இமய மலை. வளவர் - சோழவரசர். தண்தரளம் வெண்கவிகை - குளிர்ந்த முத்துக் கனிறாலாகிய வெண்குடை. புண்டரிகம் - புலி ; புலியின் உருவமெழுதிய கொடிக்குத் தானியாகு பெயர்.

2. வேழம் கரும்பு - நாணற் கரும்பு. சாலி - செந்நெற் பயிர். ஏனாதி யென்பது வேந்தனாற் கொடுக்கப்படும் பட்டப் பெயர்களிலொன்று. இச் சொல்லுக்குப் படைத்தலைவன் என்ற பொருளும் உண்டு.

3. வடி - கூரிய. பயிற்றும் - கற்பிக்கின்ற. விஞ்சை - வித்தை. குன்றாதார் : எதிர்மறை வினையாலணையும் பெயர்.

4. வந்த - கிடைத்த. நாளும் தடமுடியும் காணாதார் - (சிவபிரா னுடைய) அடியையும் பெரிய முடியையும் காணமாட்டாதவரான திருமா லும் பிரமனும், தொண்டாளும் - அடிமையாகக் கொண்டருளிய. கடப் பாடு - கடமை. தடம் : உரிச்சொல்.

5. நள்ளார் - பகைவர். துறை - (சிவபக்தி) மார்க்கம். எள்ளாத - பழிக்காத. தள்ளாத - தவறுதலில்லாத. தாயத்தின் உரிமை - பங்காளி யுரிமை. நள்ளார் × நட்டார்.

6. கொற்றம் - வெற்றி (கொன்று அடைவது கொற்றம்). பெற்றிமை - தன்மை. பெருமிதம் - கருவம்.

7. விருத்தி - பிழைப்பு. ஆறாத - குறைவில்லாத. ஏலா - (நீதிக்கு) ஏற்காத ; (ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்). இகல் - பகை.

8. மழுங்கி - ஒளி குறைந்து. கால் சாயும் - அழிவடைகின்ற. அமர் - போர்.

9. கோள்கொண்ட - வலிமையைக் கொண்டுள்ள. மள்ளர் - வீரர். செற்றம் - சினம். முன்கடை - தலைவாயில்.

10. வெம் முழை - கொடிய குகை. பைங்கண் - பசுமையான கண். பொங்கி - கோபித்து. அழைத்தான் ஒலி கேளா - அறை கூவின அதிசூர னுடைய குரலைக் கேட்டு.

11. அரிஏறு - ஆண் சிங்கம். வீக்கி - கட்டி. பலகை - கேடகம்.

12. விறல் - வலிமை. காளையர் - காளை போன்ற வீரர். மறம் படை - கொடுமையையுடைய படை. செறல் - அழித்தல்.

13. வயம்புலி போத்து - வலிமையையுடைய ஆண் புலி. தாயம் - பங்குப் பொருள். கைவகுத்து - அணிவகுக்கப் பெற்று. சாயாதார் கொள்வது - தோலாதவரே பெற்றுக் கொள்ள வேண்டியது. பொருபடை : வினைத் தொகை.

14. போர் குறிப்ப - போர் செய்யலாமென்று தெரிவிக்க. கன்றி - சினங்கொண்டு. மலைவார் - போர் செய்வாராயினர். ஏல்—'எனில்' என்பதன் மரூஉ.

15. நாளொடு சீறி - (தம்) வாழ்நாளைக் கோபித்து (இலட்சியஞ் செய்யாமல்) துடித்தன - (அறுபட்டுத்) துடித்தன. குளித்தன - முழுகின. வாளி - அம்பு. தோல் பரிசை - கேடகம்.

16. வீடியபின் - இறந்த பின்பு. தெவ் + முனை = தெம்முனை - போர்க் களம்.

17. நஞ்சு அணி கண்டர் - விடத்தையுண்டு அதனாலான நீலநிறத் தைக் கழுத்தில் அணியாகக் கொண்ட சிவபெருமான். ஞாட்பு - போர்க் களம். வேல் உழவர் - வேற்படையேந்திய வீரர். உரம்உம் - மார்பையும்.

18. முட்டாதார் - எதிர்த்துப் போர் செய்யாதவர். கொல்களம் - கொல் லப்படுகின்ற போர்க்களம். மெய்யுணர்வு தோன்றும்போது காமம் முதலிய குற்றம் நீங்கிவிடுவதுபோல நாயனாரைக் கண்டதும் பகைவர் ஓடினர் என்பது கருத்து. இது உவமையணி.

19. ஏற்று - எதிர்த்து. நேர் அடர்ந்தான் - போர் செய்தான். ஏற்று - 'ஏல்' என்னும் பகுதியினடியாகப் பிறந்த இறந்தகால வினையெச்சம்.

20. வட்டணையில் - கேடகத்தினால். கலந்துபற்றி - எதிர்த்துப் பிடித்து. பிழைத்து - உயிர் தப்பி- உடைந்து - தோற்று.

21. மீது ஊர - அதிகமாகத் தோன்ற. மண்படுவான் - வெறுந் தரையிற் படுப்பவனும். ஈனம் - அழிவு. மண்படுவான் கண்படான் - முரண்தொடை.

22. சேடுஆரும் - நீடித்தல் பொருந்திய. கங்குல் - இரவு. வாள் தாயம் கொள் போர் - வாள் வித்தையால் பங்குரிமையைப் பெற்றுக்கொள் வதற்குக் காரணமான போர். செலவிட்டான் - (ஆனைப்) போக்கினன்.

23. வெம் வாள் உரவோன் - வெவ்விய வாளையுடைய வலிமை மிக்க அதிசூரன். மேற்கொள்வார் - உடன்படுவாரானர்.

24. பற்றலன் - பகைவன். வரவு - தொழிற்பெயர்.

25. பாங்கின் - நன்மையையுடைய. பயிலாதான் - தரியாதவனு யிருந்தும்.

26. வஞ்சம் கறுப்பு - வஞ்சமாகிய களங்கம் : இருபெயரொட்டுப் பண்புத்தொகை. வண்ணம் - அழகு.

27. மடங்கல் - ஆண் சிங்கம். விடக்கு - மாமிசவுணவுக்குரிய மிருகம் (ஆகுபெயர்). மறம் - பாவச் செயல். கிடைப்பு அளவும் - எதிர்க்கத் தொடங்கும் வரையிலும். இச்செய்யுளில் உவமையணி வந்துள்ளது.

28. அடல் - வலிமை. விடைஏறு - சிறந்த காளை. தாள் - பாதம். கடையவன் - அதமன் ; கீழோன்.

29. இவர்தம் கொள்கை குறி வழி நிற்பேன் - இவருடைய எண்ணம் குறிக்கும் வழியில் நான் ஒழுகுவேன்.

30. இரு பலகை - பெரிய கேடகம். நெய்வாள் - நெய் பூசிய வாள். அடர்ந்து நேர்வார் போல் - எதிர்த்துப் பொருபவர் போல.

31. முற்றுவித்தான் - நிறைவேற்றினன். மின்நின்ற - மின்னலைப் போல் விளங்குகின்ற.

32. பாசம் - இருவினைப் பந்தம். பொன் தொடியாள் பாகனர் - பொன்னாலாகிய தொடி யென்னும் ஆபரணத்தைப் பூண்ட உமாதேவியைத் தம் வாம பாகத்திலே கொண்ட சிவபெருமான். பொன்னம்பலம் - சிதம் பரத்திலுள்ள கனகசபை.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—சாலி, நள்ளார், ஏலா, இகல், முழை, தோல், வட்டணை, விடக்கு.

2. ஆகுபெயர், வினையாலணையும் பெயர், வினைத்தொகை, பண்புத் தொகை, இருபெயரொட்டு—இவற்றிற்கு இப்பகுதியிலிருந்து ஒவ்வோ ருதாரணம் தருக.

3. பிரித்துக் காட்டுக :—பொற்பதி, வாட்படை, பைங்கண், தெம் முனை, ஞாட்பின்கண், வெண்ணீறு.

## வினாக்கள்

1. சோழனும் எயினனூரும் எவ்வாறு வருணிக்கப்பட்டுள்ளன ?

2. ஏனாதி நாதனார் எந்த நலங் குன்றாதவர் ? என்ன தொழில் செய்துவந்தார் ?

3. நாயனார் தாம் ஈட்டிய பொருளை எவ்வாறு செலவிட்டார் ?

4. அதிசூரன் என்பான் யார் ? எத் தன்மையினன் ? ஏன் நாயனார் மீது பகைமை கொண்டான் ?

5. அதிசூரன் நாயனாரை எவ்வாறு அறைக்கூவிப் போருக்கழைத் தான் ?

6. 'வெங்கண் புலி கிடந்த' என்ற செய்யுளில் வந்துள்ள அணியினை விளக்குக.

7. ஏனாதி நாயனார் போர்க்கோலம் பூண்டதை விவரி.

8. "இருவேம் பொருபடையும் சந்தித் தமர்விளைத்தால் சாயாதார் கொள்வது"—இதனை சந்தர்ப்பங் கூறி விளக்குக.

9. நாயனார் படைக்கும், அதிசூரன் படைக்கும் நிகழ்ந்த போரை விவரித்துக் கூறுக.

10. "தலைப்பட்டார் எல்லாரும்" என்ற செய்யுளில் வந்துள்ள அணியினை விளக்குக.

11. "ஈனமிகு வஞ்சனையால் வெல்வன்" எனக் கருதியவன் யார் ? ஏன் அவ்வாறு கருதினான் ?

12. அதிசூரன் நாயனாருக்கு என்ன செய்தி சொல்லியனுப்பினான் ?

13. ஏனாதி நாயனாரை வெல்ல அதிசூரன் செய்த சூழ்ச்சி யாது ?

14. அதிசூரன் திருநீறணிந்திருந்தமையைக் கண்ட நாயனார் என்ன எண்ணினார் ?

15. "இவர்தம் கொள்கைக் குறிவழி நிற்பேன்"—சந்தர்ப்பங் கூறுக.

16. நாயனார் படைக்கலங்களைக் கைவிடாமல் அதிசூரனை எதிர்ப்பவர் போல் நடிக்கக் காரணம் என்ன ?

17. "முன்னின்ற பாதகனுந் தன் கருத்தை முற்றுவித்தான்"— பாதகன் யார் ? அவன் கருத்து யாது ? அதனை எவ்வாறு முற்றுவித்தான் ?

18. மின்னின்ற செஞ்சடையார் செய்தது யாது ?

## கட்டுரையாக்கம்

ஏனாதி நாதரின் வரலாற்றை ஒன்றரைப் பக்க அளவில் வரைக.

# 2. வில்லிபாரதம்

**வில்லிபுத்தூரரால்** செய்யப்பட்ட பாரதம் வில்லிபாரதம் எனப்படும். பாரதம் என்பதற்கும் பரதனது வமிசத்தாரைப் பற்றிய நூல் என்பது பொருள். பரதனது வமிசத்திலுதித்தோர் பாண்டவரும் துரியோதனுதியருமாவர். இந்நூலை வேத வியாசமாமுனிவர் முதலில் வடமொழியில் இயற்றினூர். அதன் வழி நூல் வில்லிபாரதம். இதிகாசங்கள் இரண்டனுள் பாரதம் ஒன்று. மற்றது இராமாயணம்.

வில்லிபுத்தூரார் திருமுனைப்பாடி நாட்டில் சனியூரில் அந்தணர் குலத்தில் தோன்றியவர். இவர் மதம் வைணவம். இவர் வரபதியாட் கொண்டான் என்ற சிற்றரசனிடம் ஆஸ்தான பண்டிதராயிருந்தார். அவன் வேண்டுகோளின்படி தமிழில் பாரதத்தை (முதல் பத்துப் பருவங்களை)ப் பாடினூர். இவருடைய காலம் 14-ம் நூற்றுண்டு. இவர் வடமொழிச் சொற்களைத் தம் செய்யுட்களில் மிகுதியாகவும், நயத்துடனும் உபயோகித்திருக்கிறுர். இவர் பாடல்களில் பலவகை அணிகளும் அமைந்துள்ளன.

கதைத் தொடர்ச்சி : பாரதப்போர் மூண்டது. துரியோதனுதியர் பக்கத்தில் பீஷ்மர் பத்து நாள் வரையில் சேனைத் தலைவராயிருந்தார். பின்னர் துரோணர் ஐந்து நாள் சேனுபதியாயிருந்து மாண்டார். பிறகு கர்ணன் சேனுபதியானுன். பதினேழாம்நாள் நடந்தபோரில் அவன் வலிகுறைந்தவனுனுன்.

## கன்னபருவம்

### கண்ணன் கன்னனிடம் வருதல்

**1.** அத்தவெற் பிரண்டு விற்கிடை யெனப்போ
யாதவன்சாய்தல்கண் டருளி
முத்தருக் கெல்லா மூலமாய் வேத
முதற்கொழுந் தாகிய முதல்வன்
சித்திரச் சிலைக்கை விசயனைச் 'செருநீ
யொழி' கெனத் தேர்மிசை நிறுத்தி
மெய்தவப் படிவ வேதிய னுகி
வெயிலவன் புதல்வனை யடைந்தான்.

### இயைந்ததொன்று அளிக்க வேண்டுதல்

2. " தாண்டிய தரங்கக் கருங்கட லுடுத்த
தரணியிற் றளர்ந்தவர் தமக்கு
வேண்டிய தருதி நீயெனக் கேட்டேன் ;
மேருவி னிடைத்தவம் பூண்டேன் ;
ஈண்டிய வறுமைப் பெருந்துய ருழந்தேன்
இயைந்ததொன் றிக்கணத் தளிப்பாய்
தூண்டிய கவனத் துரகதத் தடந்தேர்ச்
கடர்தரத் தோன்றிய தோன்றல்."

### கன்னன்பாற் கண்ணன் விரும்பிய பொருள்

3. என்றுகொண் டந்த அந்தணன் உரைப்ப,
இருசெவிக் கமுதெனக் கேட்டு,
வென்றிகொள் விசயன் விசயவெங் கணையான்
மெய்தளர்ந் திரதமேல் விழுவோன்
நன்றென நகைத்துத் "தரத்தகு பொருணீ
நவில்" கென நான்மறை யவனும்
" ஒற்றிய படிநின் புண்ணியம் அனைத்தும்
உதவு'கென் றலுமுள மகிழ்ந்தான்.

### கன்னன் கூறுதல்

4. " ஆவியோ நிலையிற் கவங்கிய தியாக்கை
யகத்தோ புறத்ததோ வறியேன்
பாவியேன் வேண்டும் பொருளெல்லாம் நயக்கும்
பக்குவந் தன்னில்வந் திலையால்
ஓவிலா தியான்செய் புண்ணிய மனைத்தும்
உதவினேன் கொள்கநீ யுனக்குப்
பூவில்வாழ் அயனும் நிகரலன் என்றூற்
புண்ணியம் இதனினும் பெரிதோ !"

### கன்னன் தன் இதய இரத்தங்கொண்டு தானம் அளித்தல்

5. என்னமுன் மொழிந்து கரங்குவித் திறைஞ்ச
விறைஞ்சலர்க் கெழிலியே றனையான்
கன்னனை யுவகைக் கருத்தினுல் நோக்கிக்
" கைப்புன லுடன்றரு" கென்ன,

அன்னவன் இதயத் தம்பின்வாய் அம்பால்
அளித்தலும் அங்கையால் ஏற்ருன்
முன்னமோ ரவுணன் செங்கைநீர் ஏற்று
மூவுல கமுமுடன் கவர்ந்தோன்.

**வரங்கேட்குமாறு கண்ணன் கன்னனுக்குக் கூறுதலும் கன்னன் கேட்டலும்**

6. மல்லலந் தொடையல் நிருபனை முனிவன்
மகிழ்ந்து " நீ வேண்டிய வரங்கள்
சொல்லுக வுனக்குத் தருதும் என்றுரைப்பச்
சூரன்மா மதலையுஞ் சொல்வான் ;
" அல்லல்வெவ் வினையால் இன்னமுற் பவமுண்
டாயினு மேழெழு பிறப்பும்
இல்லையென் றிரப்போர்க் கில்லையென் றுரையா
இதயம்நீ யளித்தருள் " என்ருன்.

**கண்ணன் வரம் அளித்தல்**

7. மைத்துனன் உரைத்த வாய்மை கேட்டையன்
மனமல ருகந்துகந் தவனைக்
கைத்தல மலரான் மார்புறத் தழுவிக்
கண்மலர்க் கருணை நீ ராட்டி
"எத்தனை பிறவி யெடுக்கினும் அவற்றுள்
ஈகையுஞ் செல்வமு மெய்தி
முத்தியும் பெறுதி முடிவில் " என் றுரைத்தான்
மூவரும் ஒருவனும் மூர்த்தி.

**கண்ணன் அளித்த தரிசனம்**

8. போற்றிய கண்ணன் கண்டுகண் களிப்பப்
புணரிமொண் டெழுந்தகார் முகிலை
மாற்றிய வடிவும் பஞ்சவா யுதமும்
வயங்குகைத் தலங்களு மாகிக்
கூற்றுறழ் கராவின் வாயினின் றழைத்த
குஞ்சர ராசன்முன் அன்று
தோன்றிய படியே தோற்றினன் முடிவுந்
தோற்றமு மிலாதபைந் துளவோன்.

கன்னன் அடைந்த மகிழ்ச்சி

9. அமரரா னவரும் அமரயோ னிகளும்
அமரருக் கதிபனு னவனும்
கமலநான் முகனும் முனிவருங் கண்டு
கனகநாண் மலர்கொடு பணிந்தார் :
"சமரமா முனையிற் றனஞ்சயன் கணையாற்
சாய்ந்துயிர் வீடவுஞ் செங்கண்
அமலநா ரணனைக் காணவும் பெற்றேன்"
என்றுதன் னகமிக மகிழ்ந்தான்.

## வேறு

கண்ணன் கூறுதல்

10. "தருமன்மகன் முதலான அரிய காதல்
தம்பியரோ டமர்மலைந்து தறுக ணுண்மைக்
செருவிலென துயரனைய தோழற் காகச்
செஞ்சோற்றுக் கடன்கழித்தேன் தேவர் கோனுக்(கு)
உரைபெறுநற் கவசமுங்குண் டலமும் ஈந்தேன்
உற்றபெரு நல்வினைப்பே றுனக்கே தந்தேன்
மருதிடைமுன் தவழ்ந்தருளுஞ் செங்கண் மாலே,
மாதவத்தால் ஒருதமியன் வாழ்ந்த வாறே."

## குறிப்புரை

1. அத்தவெற்பு - அஸ்தமனகிரி (இருபெயரொட்டு). விற்கிடை - வில் கிடக்குந்தூரம். முத்தர் - முத்தியடைந்தோர். வெயிலவன் புதல்வன் - கன்னன்.

2. தாண்டிய - மோதுகிற. ஈண்டிய - மிகுந்த. இயைந்தது - கொடுக்கக்கூடியது. தளர்ந்தவர் - வினையாலனையும் பெயர். தூண்டிய - (அருணனால்) செலுத்தப்படுகிற. கவனம் - கதி. துரகதம்-குதிரை. சுடர் - சூரியன்.

3. விசயம் வெம் கணை - விசேஷ வெற்றியைத் தருகிற கொடிய அம்புகள். விழுவோன் - விழும் நிலையிலுள்ள கன்னன். ஒன்றிய படி - உள்ளபடியே.

4. நிலையின் - நிற்குமிடத்தினின்றும். யாக்கை - உடம்பு. வேண்டும் பொருள் - (வேண்டுவோர்) வேண்டும் பொருள். ஒவு இலாது - ஒழிதல் இல்லையாம்படி. அயன் - பிரமன். இதனினும் -(தானம் செய்து உன்னைக் கைக்கொள்கின்ற) இத் தொழிலைக் காட்டிலும்.

5. இறைஞ்ச - வணங்க. எழிலி ஏறு அனையான் - மேகத்தில்

தோன்றும் பேரிடியை ஒப்பவனாகிய கண்ணன். புனல் - நீர். அம்பு - (நீர்) இரத்தம். முன்னம் - முன்பு வாமனாவதாரத்தில். அங்கை - அகம் + கை - உள்ளங்கை.

6. மல்லல் - வளப்பம். தொடையல் - மாலை. சூரன் மதலை - சூரிய குமாரனாகிய கர்ணன். சொல்வான் - சொல்பவனாய். உற்பவம் - பிறப்பு.

7. மைத்துனன் - தன் அத்தை மகனாகிய கர்ணன். கண்மலர் : முன் பின்னாகத் தொக்க உவமைத் தொகை.

8. புணரி - கடல் நீர். மாற்றிய - (ஒப்பாகாதென்று) நீக்கிய. பஞ்சாயுதம் - ஐம்படை : சங்கு, சக்கரம், கதை, வாள், வில் என்பன. உறழ் - ஒத்த. கரா - முதலை. குஞ்சரராசன் - கஜேந்திரன். பைந்துளவோன் - பசிய துளவ மாலையை அணிந்த கண்ணன்.

9. அமர யோனிகள் - தேவசாதியிலுள்ளவர்கள். நாள் மலர் - அன்று அலர்ந்த கற்பகமலர். சமரம் முனை - போர்க்களம். அமலன் நாரணனை - குற்றமற்ற மகாவிஷ்ணுவை.

10. தறுகண் - அஞ்சாமை. செம்சோறு கடன் - செவ்வையாகப் போட்டு வந்த சோற்றுக்குப் பிரதியுபகாரம். மருதிடை - இரட்டை மருத மரங்களினிடையிலே.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—ஆதவன், தரங்கம், கவனம், இறைஞ்சலர், அம்பின் வாயம்பு, உற்பவம், புணரி, தறுகண்.

2. பிரித்துக் காட்டுக :—விற்கிடை, வெங்கணை, அங்கை, செங்கை, பைந்துளவோன்.

3. இப்பகுதியிலிருந்து உரிச்சொல், உவமைத் தொகை, இரு பெயரொட்டு, வினையாலணையும் பெயர்—இவைகட்கு உதாரணங்கள் தருக.

4. கர்ணன், சூரியன், மகாவிஷ்ணு இவர்களைக் குறிக்க இப்பகுதியில் வந்துள்ள வேறு பெயர்கள் யாவை ?

## வினாக்கள்

1. வேதிய உருவங்கொண்ட கண்ணன் கர்ணனை எவ்வாறு விளித்தனன் ? என்ன கூறினன் ?

2. வேதியன் கன்னனை யாசித்தது என்ன ?

3. வேதியனது வேண்டுகோளைக் கேட்ட கர்ணன் என்ன கூறினன் ?

4. "கைப்புனலுடன் தருக" என யார் கூறினர் ? அதைக் கேட்ட கன்னன் என்ன செய்தான் ?

5. கன்னன் கேட்ட வரம் யாது ?

6. கண்ணன் கன்னனுக்கு என்ன வரம் அளித்தான் ?

7. கண்ணன் எவ்வாறு கன்னனுக்குக் காட்சியளித்தான் ?

8. கர்ணன் எக்காரணங்களுக்காக மகிழ்ந்தான் ?

9. தம் சுய உருவைக் காட்டியருளிய கண்ணனிடம் கன்னன் யாது கூறினன் ?

### கட்டுரையாக்கம்

'கன்னன் கொடைத்திறம்' என்பதுபற்றி ஒன்றரைப் பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

## 3. பாகவத புராணம்

பழைய வரலாறுகளை உலகத்தின் தோற்றம் முதலிய பல செய்திகளுடன் விவரித்துக் கூறும் நூல் 'புராணம்' எனப்படும். இவ்வகைப் புராணங்களுள் பழமையானவை பதினெட்டு. அவற்றுள் பாகவத புராணம் ஒன்று. 'ஸ்ரீமத்' என்பது 'பொலிவை யுடையது' எனப்பொருள்படும் அடைமொழி. பாகவதம் என்னும் பெயர் பகவானைக் குறித்துச் சொல்வது என்ற பொருளது. இதனை வடமொழியில் இயற்றியவர் வியாச முனிவர். இதனைச் சொல்லியருளியவர் சுகமுனிவர். கேட்டவர் பரீட்சித்து மன்னர். இந்தத் தமிழ்ப் பாகவத புராணம் அந்த வடமொழி நூலின் வழிநூலாகச் செய்யப்பட்டது.

பாகவதத்தைத் தமிழில் ஆக்கியவர் செவ்வைச் சூடுவார் என்பவர். இவர் பிறந்து வாழ்ந்த இடம், வேம்பத்தூர். இது பாண்டிய நாட்டிலுள்ளது. செவ்வைச் சூடுவார் என்பது செவ்வையாகச் சூடும் பாமாலையையுடையவர் என்ற காரணம் பற்றி இவர் பெற்ற சிறப்புப் பெயர். இவரது இயற்பெயர் மாதவபண்டிதர் என்பது. இவர் அந்தண குலத்தினர். காலம்: முந்நூறு வருடங்கட்கு முன்.

### துருவன் பதம்பெற்ற அத்தியாயம்

#### உத்தானபாதன் அரசியற்றுதல்

முத்தார மார்பன் முடிமன் னவர்வந் திறைஞ்சப்
பைத்தா டரவஞ் சுமைகூர் கடற்பார் பரித்தான்
கொத்தா ரலங்கற் குளிர் வெண்குடைக் கோதை வெள்வேல்
உத்தான பாதனென வோது முலங்கொள் தோளான். (1)

#### உத்தானபாதன் சுநீதி, சுருசி என்பவரை மணஞ் செய்து கொள்ளுதல்

வெடிக்கும் புதுநாள் மலர்வேய்ந்(து) அகில்விம்மி வேலை
குடிக்குங் கமஞ்சூற் குலமாமுகில் வென்ற கூந்தல்
தொடிக்கைச் சுநீதி சுடற்பொற் குழைமேல டர்க்கும்
வடிக்கண் சுருதி யெனுமங்கை யர்தோள் மணந்தான். (2)

### சுநீதி வயிற்றில் துருவனும், சுருசி வயிற்றில் உத்தமனுந் தோன்றுதல்

வரையுற்ற சாயன் மயிலன்ன சுநீதி யென்னும்
தெரிவைக் குதித்தான் துருவன் : செருவென்ற செவ்வேல்
அரசர் கமுதாய் அலர்தாமரை யன்ன மொத்த
சுருதிக்கு மன்றல் தொடையுத் தமன்தோன்றி னுல். (3)

### தனது தொடைமீது உத்தமன் ஏறியிருக்க, அரசன் சிங்காதனத்தில் வீற்றிருத்தல்

மத்தமாக் களிற்று மன்னன் மாமணித் தவிசின் மீது
கத்திகைக் கருமென் கூந்தல் கன்னியர் கவரி வீசத்
தித்தியா நின்ற தெய்வத் தெள்ளமு தனைய தீஞ்சொல்
உத்தமன் குறங்கின் வைக உவந்துவீற் றிருந்தா னன்றே. (4)

### துருவன் உத்தமனைப் போலவே தானும் அரசன் மடிமீது ஏற எண்ணிச் சேர, சுருசி தடுத்துக் கூறுதல்

வண்டுளர் தெரியல் வேந்தன் மாமணிக் குறங்கின் ஏறி
ஒண்டொடி யுடுத்த செங்கை யுத்தம னுறைந்த செவ்வி
கண்டனன்; துருவன் தானும் ஏறுவான் கருதி நண்ணத்
தொண்டையங் கனிவாய் வேற்கண் சுருதியாங் கியம்பு வாளால்: (5)

### சுருசி துருவனை நோக்கிக் கூறுவன

'கோற்றொடிப் புதல்வ ! நீயெங்
    கோவிளங் குமர னென்று
மாற்றவள் வயிற்றின் வந்தாய் ;
    வரத்தினென் வயிற்றின் வந்து
தோற்றுதல் புரிநோன் பில்லாய் ;
    சொரிமதக் களிறு சாய்க்கும்
ஏற்றிளஞ் சிங்க மன்னன்
    குறங்கினென் ஏறு மாறே. (6)

" காதல ! வுலக மெல்லாங் கவிக்கும்
    வெண் கவிகைச் செங்கோற்
கோதைவேற் றடக்கை வேந்தன்
    குறங்கின் நீ யேற வேண்டில்

தாதலர் கமலச் செல்வி
    தலைவனை நோக்கி நின்று
மாதவம் புரிந்து வந்தென்
    வயிற்றிடைப் பிறத்தி'' என்றாள். (7)

**அது கேட்ட துருவன் தந்தையின் முகத்தை நோக்குதல்**

இழைபுரை மருங்குல் தேய்க்கும்
    இருங்குழல் மடந்தை மாற்றம்
அழல்விட முகுத்தா லென்ன
    அஞ்செவி நுழைதலோடும்
விழிமலர் சிவப்ப, நெஞ்சின்
    வெகுளிவந் தரும்ப, மைந்தன்
மழைமதக் களிற்று மன்னன்
    வாண்முகம் நோக்க லுற்றான். (8)

**துருவன் தன் தாயிடம் செல்லல்**

செஞ்சிலைத் தடக்கை வேந்தன்
    திருமுகத் தருளுங் காணான்
அஞ்செவி வெதும்ப நங்கை
    யறைந்தசொற் காற்ற ளாகிக்
கஞ்சநாண் மலரை வெல்
    செங் கண்ணிணை மாரிகால
மஞ்சனுங் கன்னை பாற்போய்
    மணியிதழ் துடிப்ப நின்றான். (9)

**சுநீதி துருவனது துயர்க்காரணத்தை வினவுதல்**

தன்னிளங் குழவி செங்கெண்
    தாமரை தழைத்த முத்தம்
பொன்னணிந் திலங்கு மார்பிற்
    பொழிதர நிற்றல் நோக்கி
"என்னுயிர் என்கண் ஏந்தால்!
    என்னை நீ யழுங்கல்'' என்னா
மின்னுயிர்த் தொளிரும் பைம்பூண்
    மெல்லியல் வினவி னளால். (10)

**துருவனது துயர்க் காரணத்தை யறிந்து சுநீதி வருந்துதல்**

பட்டமை கண்டோர் கூறப்
பசுஞ்சிறைக் கிள்ளை யன்னாள்
விட்டெரி கின்ற காட்டு
வெங்கனல் படர்ந்து முற்றிச்
சுட்டவெப் புண்ட பொன்னந்
துணர்க்கொடி போலவாடி,
நெட்டுயிர்ப் பெறிந்து செங்கண்
நித்திலஞ் சிந்தி நின்றான். (11)

**" திருமால் அருளால் நற்பதவி பெறுவாய் " என்று கூறி சுநீதி துருவனைத் தேற்றுதல்**

" குதலைதெள் ளமுதில் தேனில்
கொண்டமென் பவளச் செவ்வாய்
மதலை! நல் வினையி லேன்புல்
வயிற்றகம் பொருந்தி வந்தாய் ;
விதலையுற் றிரங்கல் வேண்டா
விளைந்ததண் ணளியிற் காக்கும்
முதலைவாய் உம்பல் காத்த
முழுமுதற் கடவுள் மாதோ. (12)

ஐதெழி லமுதின் சாயல்
ஆயிழை யுரைத்த வாறே
மைதப மனத்தி னேர்ந்து
வழுத்தினர் விழைந்த நல்கும்
நெய்தவழ் நேமி யானை
நினைத்தனை தவம்நின் றூற்றி
எய்தரும் பதமே மைந்த !
எய்துதி கலங்கல் ' என்றாள். (13)

**சுநீதி பின்னும் கூறுதல்**

" பனிமல ரண்ண லோங்கு
பதத்தினை யடைந்த வாறும்,
மனுமிகச் சிறந்த வாறும்
மாயனைக் கருதி யன்றே ?

தனய ! நீ கங்கை பூத்த
தாமரைத் தாளி ஞனே
நினையினென் எய்தா து''என்று
நெஞ்சகந் தெருட்டி ஞளால். (14)

துருவன் மனந்தேறி, தவஞ்செய்யச் செல்லுதல்

கிளிக்குலங் கடந்து தேனிற்
கிளைத்ததீங் குதலை யன்னை
தெளிக்கவம் மைந்தன் நெஞ்சு
தெள்ளிதின் தெளிந்தா ஞகி
நளிச்சினைக் குரவங் கோங்கு
நாகமு மகரு மோங்கிக்
கனிச்சுரும் பிமிர்பூங் கானங்
கலந்தனன் தவஞ்செய் கிற்பான். (15)

துருவன் தவஞ்செய்யத் தொடங்குதல்

விண்ணுலாம் பரிதி யீன்ற விரிதிரை நதிநீ ராடி
மண்ணெலா மளந்த பொற்று மரைமல ரன்ன பொற்றுள்
கண்ணனைக் கண்ணுள் வைத்துக் களியளி சிலம்ப விள்ளும்
தண்ணனைக் கழம்பூங் காவில் தவஞ்செயத் தொடங்கிஞுஞல்.(16)

துருவன் தவநிலை

ஒருமதி யிரண்டு வைக லொழிந்துதீங் கனிநு கர்ந்தான்
ஒருமதியாறு வைகல் ஒழிந்துவீழ் சருகு தின்றுன்
ஒருமதி வைக லொன்பான் ஒழிந்துதண் துறைநீ ருண்டான்
ஒருமதி வைக லீரா றெுழிந்துகால் பருகி ஞுஞல். (17)
திங்கள்நான் கிவ்வா றேகத் திங்களிற் றிகழா நின்ற
அங்கலுழ் முகத்தா ஞென்றும் அருந்தலன் ஐந்தாந் திங்கள்
பொங்குமுச் சடக்கி மென்பூப் பொருவுதாள் விரலொன் றூன்றிக்
கங்கைசூழ் கழற்பெம்மானைக் கருதினன் தவம்பு ரிந்தான். (18)

திருமாலினைத் தியானித்தலால் துருவனுக்கு
உண்டான மகிமை

திருவயிற் றுலகெ லாமாழ் செல்வனெஞ் சுறலான் மைந்தன்
ஒருவிர லூன்றி நின்று ஞயினும் உரவுத் தெண்ணீர்
இருநிலம் பொறுக்க லாற்று தெறிகதிர் முத்தஞ் சிந்து
பொருதிரைப் புனலிற் பட்ட புணையென அலைந்தன் றம்மா! (19)

### துருவனது தவக்கனலின் சிறப்பு

ஊழிவெம் பரிதி யுட்க ஒளிசெய்செங் கதிரா லொற்றை
ஆழியந் தடக்கை யம்மான் அகமிசை யமர்ந்த வாற்ருல்
தாழிருந் தடக்கை நம்பி தவக்கனல் தவாது பொங்கி
ஏழிரும் பரவை வேலி இருநிலங் கனன்ற தாமால். (20)

### துருவனது தவக்கனலைப் பொறுக்கமாட்டாது தேவர்கள் திருமாலைச் சரணமடைதல்

ஆவயிற் றுருவன் மூச்ச டக்கிய திறத்தி னுலெத்
தேவரும் உயிர்க்க லாற்ருர் தெருமந்தார் தெருண்டு மொய்த்துக்
" காவல ! காத்தி " என்று கண்ணனை யடைந்து கூறப்
பூவுரை விரிஞ்சன் தன்னைப் பூத்தவன் புகல லுற்ருன்: (21)

### திருமால் தேவர்களைத் தேற்றி, துருவன் தவஞ் செயுமிடத்திற்குச் செல்லுதல்

" விட்டிலன் துருவன் மூச்சு விழுத்தவம் புரித லானே
முட்டிய துமக்கு மாங்கே மூச்சுநாங் காத்தும் " என்று
மட்டறு வேத மேனி வரிச்சிறைப் புள்ளின் மேற்றிக்
கெட்டுநல் லுருவக் காந்தி யெறிதர வேகி னுனல். (22)

### திருமால் துருவனுக்குக் காட்சி தருதல்

நெடியவன் முன்னம் வந்து நிற்பது நிகழ்த்தலாக
ஒடிவரு தவத்தின் மைந்தன் காண்கல னுகவுள்ளம்
சுடர்தன துருவுத் தண்ணந் துளவினுன் கரத்த லோடும்
கடிகமழ் கமல மன்ன கண்மலர் விழித்தான் மன்னே. (23)

மண்டல நிறைந்த திங்கள் வதனமும், கமலக் கண்ணும்,
குண்டலஞ் சுடருங் காதும் குறுநகைப் பவள வாயும்
தண்டுழாய் அலங்கல் மார்பும் தடக்கையொர் நான்குமாகக்
கண்டனன் மறையுங் காணுக் கரியவன் உருவம் அம்மா ! (24)

### திருமாலைத் தரிசித்த துருவனது பெருமகிழ்ச்சி

பருகுவான் போல நோக்கும்
பங்கயக் கண்ணெம் மானை
இருகையாற் புல்லு வான்போல்
எய்திடும் இறைஞ்சா நிற்கும்,

உருகுநெஞ் சுவக்குங் கண்ணீ ருகுக்கும் ;
உள் அழுங்கும் ; துள்ளும்
முருகனு னுவகை வேலை
மூழ்கினன் துளைவான் மன்னே. (25)

### துருவன் துதி செய்தல்

" மூவா முதலே! முத்தொழிலு
மூவ ராகி இனிதியற்றும்
தேவா ! தேவர் சிகாமணியே !
சிந்தா மணியே ! தெள்ளமுதே !
நாவால் நின்சீர் எங்ஙனம்யா
னவில்கோ " வென்ன நகைமுகிழ்த்துப்
பூவாற் பொழில்பூத் தருளுந்திப்
பூவை வண்ணன் புகலு கிற்பான்: (26)

### திருமால் துருவனுக்கு வரம் தருதல்

"மின்னுஞ் சுடர்கான் றழல்குடுமி
வெள்வே லரச குமர ! வுணர்ந்(து)
இன்னும் பொலந்தார் முடியமரர்
எய்தற் கேக்கற் றிருப்பதுயர்
பொன்னங் கிரியி னுச்சிமிசைப்
பொலிவ துலகின் மேலதென்றும்
மன்னப் படுவ தொருபதம்யாம்
தருதும் வாழி மற்றுனக்கே. (27)

கரடம் கவிழ்க்கும் கலுழிமதக்
கடவுட் களிறு மொளிருகதிர்
சொரியு மருமா மணிச்சூட்டுத்
துத்தி யரவும் சுமந்தநிலம்
இருபத் தாறு யிரம்மருவ
எழில்வெண் கவிகை தனிநிழற்றித்
துருவப்பதம் நீ யடைதி "எனத்
தொன்மை முதல்வன் அகன்றனல். (28)

**திருமாலிடத்து முத்தியை வேண்டாத குறையொடு துருவன் தன் நகர் சார்தல்**

“ நஞ்சு சூழும் யெழுவேற்க ணங்கை
    யுரைத்த உரைகிடந்து
நெஞ்சு சுட,நீள்பதம் வேட்டுநின்றேன் ;
    நெகிழ்ந்த தாமரைக்கண்
மஞ்சைக் கண்டுங் கேட்டிலாமல்
    முத்தி” என்று மகிழ் கூரான்
துஞ்ச லில்லாச் சுடர்மணிப்பூண்
    தொடிக்கைத் துருவன் நகர்சார்ந்தான். (29)

குறிப்புரை

1. மார்பன் - சினையடியாகப் பிறந்த பெயர். பைத்து - படத்தையுடையது. ஆடு அரவம் - வினைத்தொகை. சுமை - தொழிற்பெயர். அலங்கல் - மாலை : தொங்கியசைவது : காரணப் பெயர்.

2. நாள் மலர் - அன்றலர்ந்த மலர். விம்மி - நிரம்ப ஊட்டப்பெற்று. வேலை குடிக்கும் கமம் சூல் குலம் மாமுகின் - கடலின் நீரைக்குடித்த நிறைந்த கருப்பத்தையுடைய கூட்டமான பெரிய காளமேகம். தொடி - கைவளை. அடர்க்கும் - மோதுகின்ற. வடிகண் - மாவடுவின் பிளவைப் போன்ற கண். கமம் - நிறைவுப் பொருளை உணர்த்தும் உரிச்சொல்.

3. தெரிவை - பெண். அமுது ஆய் - அமுதம்போல இனியவளாகிய. மன்றல் - மணம். தொடை - மலர்மாலை. சுநீதியைக் காட்டிலும் சுருசியினிடத்தில் உத்தானபாதன் அன்பு வைத்திருந்தான் என்பதை ‘ அரசற் கமுதாய் ’ என்பதனால் விளக்கினார். சாயல் - மென்மைப் பொருள் தரும் உரிச்சொல்.

4. மத்தம் - மதம். களிறு - ஆண் யானை. கத்திகை - ஒருவகை மலர் மாலை. தித்தியாநின்ற - தித்திக்கின்ற. தெள் தெய்வம் அமுது - தெளிந்த தேவாமிர்தம். தீம்சொல் - இனிய குதலைச் சொற்கள். குறங்கு - தொடை.

5. உளர் - ஒலிக்கப்பெற்ற. செவ்வி - அழகு. நண்ண - அருகிற் சேர. அம் தொண்டை கனிவாய் - அழகிய தொண்டைக் கனிபோன்ற சிவந்த வாய். வேல்கண் - வேற்படை போன்ற கண் : உவமைத்தொகை. ஏறுவான் - எதிர்கால வினையெச்சம்.

6. கோல்தொடி - அழகிய வளையல். மாற்றவன் - சக்களத்தி. நோன்பு - நல்வினை. மதம் சொரி களிறு சாய்க்கும் இளசிங்கம் ஏறு அன்னான் - மதம் சொரிகின்ற ஆண்யானைகளை அழிக்கவல்ல இளைய ஆண்சிங்கம் போன்ற அரசனது. புரிநோன்பு, சொரிமதம் - வினைத் தொகைகள்.

7. வெண் கவிகை - வெண்கொற்றக் குடை. தட - பெருமை உணர்த்தும் உரிச்சொல். "தடவும் கயவும் நளியும் பெருமை" என்பது தொல்காப்பியம்.

8. இழைபுரை - நூலிழையை யொத்த. மருங்குல் - இடை. அகம் + செவி = அஞ்செவி - காதினுள்ளே. வெகுளி - கோபம். வாள் முகம் - ஒளி பொருந்திய முகம். புரை - உவம உருபு. அழல் விடம் - உவமைத் தொகை. வாள் - ஒளி என்னும் பொருள் தரும் உரிச்சொல்.

9. மஞ்சன் - சிறுவனாகிய துருவன். நங்கை - பெண் : சுருசி. நாள் கஞ்சம் - அன்று மலர்ந்த தாமரை. கால - பொழிய. மணி இதழ் - அழகிய உதடுகள்: காணான் : முற்றெச்சம்.

10. தழைத்த - சொரிந்த. முத்தம் - முத்துப்போன்ற கண்ணீர்த் துளிகள். ஏந்தால் - சிறந்தோனே : 'ஏந்தல்' என்னும் ஆண்பாற் சிறப்புப் பெயர் ஈறு திரிந்து விளியாயிற்று. நீ அழுங்கல் என்னே - நீ வருந்துவது எக்காரணத்தால்? அழுங்கல் அழுங்கு—பகுதி.

11. பட்டமை - நிகழ்ந்ததை : தொழிற்பெயர். பசுமை சிறை கிள்ளை - பசுமையான இறகுகளையுடைய கிளி. பொன் அம் துணர் கொடி - மிக அழகிய பூங்கொத்துக்களையுடைய கொடி. நெடு உயிர்ப்பு - பெருமூச்சு. கண்டோர் - வினையாலணையும் பெயர். வெப்பு - 'பு' விகுதி : தொழிற் பெயர்.

12. விதலை உற்று - நடுக்கம் கொண்டு. உம்பல் - யானை : கஜேந்திரன். தண் அளி - இனிய அருள். மதலை - அண்மை விளி.

13. ஐது எழில் - வியக்கத்தக்க அழகு. மைதப - குற்றம் நீங்க. வழுத்தினர் - (தன்னைத்) துதித்தவர். விழைந்த - விரும்பியவற்றை. எய்துதி - முன்னிலை ஒருமை முற்று.

14. பனிமலர் அண்ணல் - குளிர்ந்த தாமரை மலரில் வாழுகின்ற பிரமதேவன். தெருட்டினன் - தெளியச் செய்தான் : தெருட்டு - பகுதி. மாயமாவது, கூடாததையும் கூட்டுவிக்குந் திறம்.

15. கிளி குலம் கடந்து - கொஞ்சிப் பேசுந் தன்மையுள்ள (கிளிக் கூட்டத்தைத் தனது இனிமையால்) வென்று. நளி சினை - பெரிய கிளை. குரவு - குராமரம். நாகம் - சுரபுன்னை. அகர் - அகில். இமிர் - ரீங்காரம் செய்கின்ற.

16. பரிதி - சூரியன். விரிதிரை நதி - பரந்த அலைகளையுடைய யமுனை நதி. அளி - வண்டு. சிலம்ப - ஒலிக்க. விள்ளும் - மலர்கின்ற. நனை - பூ அரும்புகள். ஈன்ற : 'ஈன்' பகுதி. விரிதிரை - வினைத்தொகை.

17. ஒரு மதி - முதல் மாதம். இரண்டு வைகல் ஒழிந்து - இரண்டிரண்டு நாள் இடைவிட்டு (மூன்று நாளைக்கொருமுறை). ஒரு மதி - அடுத்த மாதத்தில். ஆறு வைகல் ஒழிந்து - இடையே ஆறு நாட்கள் விட்டு (ஏழு நாளுக்கு ஒரு தரம்).

18. திங்களில் திகழா நின்ற அம் களும் முகத்தான் - பூரண சந்திரன்

போல விளங்குகின்ற அழகு ததும்புகின்ற முகத்தையுடைய துருவன். கங்கை சூழ் கழல் பெம்மான் - கங்கை பிறத்தற் கிடமாகி (வீரக்கழல்) சூழ்ந்த திருவடிகளையுடைய திருமால். அருந்தலன் - எதிர்மறை முற்றெச்சம்.

19. நெஞ்சு உறலால் - மனத்தில் தங்குவதனால். உரவு தெள் நீர் இரு நிலம் - வலிய தெளிந்த நீரையுடைய கடல் சூழ்ந்த இந்தப் பெரிய நிலவுலகம். புணை - தெப்பம்.

20. அகம் மிசை - மனத்தில். உட்க - அஞ்சும்படி. ஊழி - யுகத்தின் முடிவுக்காலம். தவாது - குறையாமல். பரவை-கடல். கனன்றது - எரித்தது. வேலி - சுற்றெல்லை.

21. உயிர்க்கல் ஆற்றார் - மூச்சுவிட மாட்டாதவராய். தெருமந்தார் - (முதலில்) மனம் கலங்கி. தெருண்டு - (ஒருவாறு) தேறி. விரிஞ்சன் - பிரம்மா.

22. முட்டியது - தடைப்படலாயிற்று. மட்டு அறுவேதம் - அளவில்லாத வேதம். காத்தும் - தன்மைப்பன்மை எதிர்காலமுற்று: 'தும்' விகுதியே காலங்காட்டும்.

23. ஒடிவு அறு - இடைவிடாத. கரத்தலோடும் - மறைத்த அளவிலே. கடி - உரிச்சொல்.

24. குறுநகை - புன்சிரிப்பு. குண்டலம் - காதணி. அம்மா - வியப்பிடைச் சொல்.

25. முருகு அனான் - குமாரக் கடவுளை யொத்த துருவன். உவகை வேலை - களிப்புக் கடல்.

26. மூவா - மூப்படையாத. சிந்தாமணியே - (நினைத்தவர் நினைத்ததை யெல்லாம் கொடுக்கவல்ல) சிந்தாமணி யென்னும் தேவமணியைப் போன்றவனே. பூவை வண்ணனன் - காயம்பூப் போன்ற திருமேனி நிறத்தையுடைய திருமால்.

27. குடுமி - நுனி. பொலம் தார் - பொன்மயமான மாலை. ஏக்கற்று இருப்பது - ஏக்கங்கொண்டிருப்பது. மன்னப்படுவது - அழியாமல் நிலை நிற்பது. தருதும் - கொடுப்போம். கான்று - இறந்தகால வினையெச்சம்: கால் - பகுதி. அழல் குடுமி - வினைத்தொகை.

28. கரடம் கவிழ்க்கும்-கன்னத்திலிருந்து கீழ்நோக்கிப் பெருகுகின்ற. கடவுள் களிறு - திக்கு யானைகள். துத்தி - (பாம்பின்) படப்புள்ளி. அரவு - ஆதிசேடன். பருவம் - வருஷம்.

28. துஞ்சல் இல்லா - ஒளி மங்குதலில்லாத. நீள்பதம் - உயர்ந்த பதவி. மஞ்சு - உவமையாகுபெயர். மகிழ் - முதல் நிலைத் தொழிற்பெயர்.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—அலங்கல், தெரிவை, கத்திகை, குறங்கு, கஞ்சம், கிள்ளை, விடுதலை, உம்பல், மகர், நனை, புணை, பரவை, விரிஞ்சன், கரடம், துத்தி.

2. பகுதி கூறுக :—வெகுளி, அழுங்கல், தெருட்டினான், ஈன்ற, மூவா, கான்ற, தெருண்டு.

3. பிரித்து எழுதுக :—பைத்தாடரவம், ஒண்டொடி, வேற்கண், கோற்றொடி, வேற்றடக்கை, அஞ்செவி, வாண்முகம், மெல்லியல், வயிற்றகம், வேற்கணங்கை.

4. தீஞ்சொல், வேற்கண், சொரிமதம், வெண்கவிகை, பிரிதிரை, குறுநகை—இவை என்ன தொடர்?

5. இப் பகுதியில் துருவன், உத்தானபாதன், சுருசி, சுநீதி, திருமால், பிரம்மா இவர்களுக்கு வழங்கப்பெற்றுள்ள பெயர்களையும் தொடர்களையும் கூறுக.

6. முற்றெச்சம், தொழிற்பெயர், உரிச்சொல், உவமை உருபு, வினையெச்சம், வினையாலணையும் பெயர்—இவைகளுக்கு இப்பகுதியிலிருந்து ஒவ்வொருதாரணம் தருக.

7. யானைக்கு வழங்கும் பெயர்களாக நீவிர் அறிந்தவற்றைக் கூறுக.

8. குரங்கு, குறங்கு ; பரவை, - பறவை பொருள் வேறுபாடு யாது?

9. கதைக் குறிப்பு வரைக :—முதலைவாய் உம்பல் காத்தது, மண்ணை மளந்தது.

## வினுக்கள்

1. தமிழில் பாகவதம் இயற்றியவர் யார்? அவர் வாழ்ந்த காலம் யாது?

2. சுநீதி, சுருசி என்பவர்களை ஆசிரியர் எவ்வாறு சிறப்பிக்கின்றார்?

3. சுருசியிடம் உத்தானபாதன் மிக்க காதலுள்ளவன் என்பதை ஆசிரியர் குறிப்பாக உணர்த்தும் இடங்கள் எவை?

4. அரசன் மடிமீது ஏறியுட்காரச் சென்ற துருவனை நோக்கிச் சுருசி கூறியது என்ன?

5. மன்னன் துருவனைத் தடுத்தபோது அவன் அடைந்த மனநிலை யாது?

6. சுநீதி துருவனை என்ன கூறித் தேற்றினாள்?

7. துருவன் தவஞ்செய்த கானகம் எவ்வாறு வருணிக்கப் பட்டுள்ளது?

8. துருவன் இயற்றிய தவத்தைப் பற்றிப் பத்து வரியில் எழுதுக.

9. துருவன் தவச்சிறப்பால் தேவர்கள் அடைந்த நிலை யாது?

10. தம்மைச் சரணமடைந்த தேவர்களை நோக்கித் திருமால் கூறியது என்ன?

11. துருவன் கண்ட திருமாலின் உருவத்தைக் கவி எவ்வாறு கூறுகிறார்?

12. திருமாலைத் தரிசித்ததும் துருவன் அடைந்த இன்பநிலை எத்தகையது?

13. திருமாலைத் துருவன் எவ்வாறு துதித்தான் ?

14. திருமால் துருவனுக்கு வரமளித்துக் கூறியது யாது ?

15. துருவன் மகிழ்ச்சியற்றவனாய் நகரம் சார்ந்ததன் காரண மென்ன ?

16. (a) " விட்டெரிகின்ற காட்டு வெங்கனல் படர்ந்து முற்றிச் சுட்ட வெப்புண்ட பொன்னந் துணர்க்கொடி " (b) " பொருதிரைப் புனலிற் பட்ட புணை "—பொருள்கூறி உவமைகளை விளக்குக.

## கட்டுரையாக்கம்

1. ' துருவன் தவநிலை ' என்பது பற்றிப் பதினைந்து வரியில் எழுதுக.

2. ' துருவன் கதையால் இளைஞர் அறிதற்குரியவை ' என்பதுபற்றி ஒரு பக்க அளவில் கட்டுரை வரைக.

# IV. சிறுநூற் கோவை

தமிழில் 'பிரபந்தம்' என வழங்கும் சிறு நூல்கள் பல உண்டு. அவை கலம்பகம், மாலை, பிள்ளைத்தமிழ், தூது, பரணி முதலாகப் பலவகைப்படும். இவற்றுள் சொற் சுவை, பொருட்சுவை ததும்பும் பாடல்கள் பல உள. அவற்றுள், சில இன்சுவைப் பாடல்களைக் கோவைசெய்து இப்பகுதியில் தருகின்றோம்.

## 1. சேக்கிழார் பிள்ளைத்தமிழ்

சேக்கிழாரைப் பற்றிய பிள்ளைத்தமிழ் என்பது இதன் பொருள். பிள்ளைத்தமிழ் என்பது தேவரையும் மக்களிலே சிறந்தவர்களையும் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு, அவர் களது பிள்ளைப்பருவ நிகழ்ச்சிகளை வருணித்துப் பாடப்படும் ஒருவகைப் பிரபந்தம். இச் சிறுநூல் சேக்கிழார் பெருமானைப் பாட்டுடைத் தலைவராகக்கொண்டு பாடப்பெற்றது.

இந்நூலை இயற்றியவர் திரிசிரபுரம் மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள். இவர் சமீபகாலத்தில் (1815–1876) விளங்கிய ஒரு பெரும் புலவர்; பல காவியங்களும் பிரபந்தங் களும் பாடியவர். மகாமகோபாத்யாய டாக்டர், உ. வே. சாமி நாத ஐயரவர்கள் பிள்ளையவர்களுடைய மாணாக்கருள் ஒருவர்.

பின்வருவது பிள்ளைத்தமிழுக்குரிய பத்துப் பருவங்களுள் ஒன்றாகிய செங்கீரைப் பருவத்தில் உள்ளது. செங்கீரைப் பருவ மாவது செவ்விய கீரை (சொற்களைப்) பேசும் பருவம். இது ஐந்தாம் மாதத்திற்குரியது. குழந்தை ஒரு காலை மடக்கி, ஒரு காலை நீட்டி, இரு கைகளையும் நிலத்தில் ஊன்றிய வண்ணம் தலை நிமிர்ந்து முகமசைத்து ஆடுவது செங்கீரை யாட்டம் எனப்படும்.

ஒண்கொண்ட பொதுவகத் துலகெலாம் உய்யநா(று)
'உலகெலாம்' என்ற தீஞ்சொல்
உவந்தே டெழுத்தாணி கொண்டெழு திரண்டுகை
யும்புவி யுறப்பதித்து,

வண்கொண்ட ஒருதாள் மடித்தூன்றி யொருதாள்
வயங்குற எடுத்தூன்றி ஒண்
வாய்கவிச் சுவையொழுக் கறிவிப்ப தெனவமுத
மாட்சிமை ஒழுக்கெடுப்ப,
வெண்கொண்ட நெற்றிநீ றிளநிலவும் ஒண்கா
திருங்குழை இருங்கதிரும் விட்
டெரிப்பஇள முடுவலும் தோன்றமலர் திருமுகம்
எடுத்துவான் அளவுநொச்சித்
திண்கொண்ட குன்றையம் பதியருள் மொழித்தேவ!
செங்கீரை யாடியருளே!
திருத்தொண்டை நன்னாட்டு வேளாளர் குலதிலக!
செங்கீரை யாடியருளே!

குறிப்புரை

பொதுவகம் - சிதம்பரத்திலுள்ள நடனசபை. உய்ய - பிழைக்கும்படி. 'உலகெலாம்' என்று சேக்கிழாருக்கு நடராசப் பெருமான் அசரீரியாக அடியெடுத்துக் கொடுத்தார் என்பது வரலாறு. அமுதம் - சொள்ளுநீர். நெற்றியிலணிந்துள்ள திருநீறும், காதில் உள்ள குழையும் முறையே நிலவையும் சூரிய கிரணத்தையும் எரித்தன என்பது. நொச்சி - மதின். அருண்மொழித் தேவர் என்பது சேக்கிழார் இயற்பெயர். குன்றை அம்பதி- குன்றத்தூர்; சேக்கிழார் பிறப்பிடம். மலர்முகம் - வினைத்தொகை. தீஞ்சொல் - உரிச்சொற்றொடர். இளநிலவு - பண்புத்தொகை.

பயிற்சி

1. பொருள் கூறுக :—குழை, முறுவல், நொச்சி, நீறு, வயங்கு.
2. தீஞ்சொல், இளநிலவு, மலர்முகம்—இவை என்ன தொடர்?

வினாக்கள்

1. பிள்ளைத்தமிழ் என்ற நூலின் இலக்கணம் என்ன?
2. செங்கீரைப் பருவம் என்பதன் பொருளை விளக்குக.
3. இச்செய்யுளில் வந்துள்ள செய்தியை நும் சொந்த நடையில் தொகுத்தெழுதுக.

## 2. மதுரைக் கலம்பகம்

மதுரையைப் பற்றிய கலம்பகம் என்பது இதன் பொருள். கலம்பகம் என்பது தமிழில் வழங்கும் பிரபந்த வகையில் ஒன்று. பலவகைப் பாக்களும், துறைகளும் கலந்து பாடப்படுவதால் கலம்பகம் எனப் பெயராயிற்று.

இந்நூலை இயற்றியவர் குமரகுருபர சுவாமிகள். இவர்

திருநெல்வேலியைச் சார்ந்த ஸ்ரீவைகுண்டம் என்னும் நகரின் ஒரு பகுதியான கைலாசபுரத்தில் தோன்றியவர்; சைவ வேளாள மரபினர். இவர் இயற்றிய அரிய பிரபந்தங்கள் பல. விளங்கியிருந்த காலம் முந்நூறுண்டுகட்கு முன்.

சம்பிரதம் : இந்திரசாலம் முதலிய மாயவித்தை வல்லவர் தமது சிறப்பைத் தாமே எடுத்துக் கூறுவதாகச் செய்யுள் செய்வது. மேல்நோக்கில் அருஞ்செயல்கள் செய்வேன் என்ற பொருளும், சற்று உற்று நோக்கின் இயல்பான பொருளும் இதில் அமைந்திருக்கும்.

மட்டறு கடற்புவி யனைத்துமொ ரிமைப்பினில்
    மறைத்துடன் விடுத்திடுவன் மற்று
எட்டுவரை யைக்கடலை முட்டியு ளடக்கிடுவன்
    இத்தனையும் வித்தை யலவால் ;
துட்டமத னைப்பொடி படுத்திமது ரைக்குளுறை
    சொக்கர்குண மெட்டி னெடுமச்
சிட்டர்கள் துதித்திடு மகத்துவ மனைத்துமொரு
    செப்பினுள் அடக்கிடு வனே.

## குறிப்புரை

மட்டு அறு - அளவில்லாத. எட்டு வரையை - அஷ்டகுல பருவ தங்களையும். முட்டி - கைப்பிடி (முஷ்டி) மதனை - மன்மதனை. சொக்கர் - சொக்கநாதர். சிட்டர்கள் - அடியார்கள். மகத்துவம் - மகிமை. செப்பு - சிமிழ்.

முதலடியில் கடல்சூழ்ந்த பூமியைக் கண்ணைமூடுங் காலத்து மறையச் செய்து, உடனே விழிக்குங் காலத்துத் தெரியச் செய்வேன் என்றும், இரண்டாம் அடியில் எள்ளையும் துவரையையும் கடலையையும் கைப்பிடியில் அடக்கி விடுவேன் என்றும், மூன்று நான்காம் அடிகளில் சொக்கருடைய அஷ்ட குணங்களோடும் கூடிய மகிமை முழுவதையும் பஞ்சாக்ஷரம் என்னும் ஒரு சொல்லில் அடக்கிவிடுவேன் என்றும் சாமானியப் பொருள் தோன்றுதல் காண்க.

## பயிற்சி

1. இரு பொருள் கூறுக :—எட்டுவரை, கடலை, செப்பு.
2. கடற்புறவி, உறைசொக்கர்—இவை என்ன தொடர் ?

## வினாக்கள்

1. நுமக்குத் தெரிந்த சில கலம்பகங்களின் பெயர்களைக் கூறுக.
2. சம்பிரதம் என்ற உறுப்பின் இலக்கணம் என்ன ?
3. மாயவித்தைக்க ரன் தன் சிறப்பை எவ்வாறு கூறுகிறுன் ?
4. இதில் தோன்றும் பொருள் நயம் யாது ?

# 3. தமிழ் விடுதூது

தமிழ் விடுதூது என்பது தமிழை (த்தூதாக) விடுத்த தூது என்று பொருள்படும். தூது என்பது பிரபந்த வகைகளுள் ஒன்று. ஒருவன் அல்லது ஒருத்தி தன் காதலைப் பாணன் முதலிய உயர்திணைப் பொருளோடேனும், கிள்ளை முதலிய அஃறிணைப் பொருளோடேனும் சொல்லித் தூது போய்வருமாறு கூறுவது, இதன் இலக்கணம். மதுரைச் சோம சுந்தரரிடத்துக் காதல்கொண்ட ஒரு தலைவி தமிழை அக்கடவுளிடத்துத் தூது விடுத்ததாக இது அமைந்துள்ளது. இது 268 கண்ணிகளால் ஆகியது.

இதனை இயற்றியவர் இன்னாரெனத் தெரியவில்லை. இவர் தமிழ்மொழிப் பயிற்சி மிக்கவரென்பதும், சைவ மதாபிமானம் மிகுந்தவரென்பதும் விளங்குகின்றன.

1. மண்ணிற் புகழுறுவாய் வாழ்வதற்கும் வாழுநர்
விண்ணிற்போய்த் தேவுருவாய் மேவுதற்கும்—எண்ணி

2. கொண்டுபுகழ் கொண்டவர்க்கே கூடுமுனைக் கூடாத
தொண்டருக்குத் தென்பாலேதோன்றுமால்—தண்ட

3. ஈங்குனது சங்கத்தா லீச ருயர்ந்தாரோ [மிழே!
ஓங்குமவ ரானீ யுயர்ந்தாயோ !—பூங்கமல

4. வீடாளும் வாணியங்கை மேலே யிருந்தாயோ
ஏடாக வுன்மே லிருந்தாளோ—ஆடரவத்

5. தாழ்பாய லாளரைநீ தானே தொடர்ந்தாயோ
சூழ்பாயோ டுன்னைத் தொடர்ந்தாரோ–வாழ்வேயென்

6. றோதிமுனி கேட்க வுனைமுருகர் சொன்னாரோ
சோதி யவரைநீ சொற்றனையோ—பேதியா

7. நேசருனக் கேபொருளாய் நின்றாரோ நீண்மதுரை
வாசருக்கு நீபொருளாய் வந்தாயோ—பாசமுறும்

8. என்செய்தி நீகண் டிரங்குவது நீதியல்லால்
உன்செய்தி நானோ வுரைசெய்வேன்—இன்சொல்லால்

9. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தகவென்ற—சொற்குள்ளே

10. எல்லார்க்கும் புத்தி பியம்பிக் கரையேற்ற
வல்லா யுனக்குரைக்க வல்லேனே—சொல்லியவுன்

11. ஈரடிக்குள் ளேயுலக மெல்லமடங்கு மெனின்
நேரடிக்கு வேறே நிலனுண்டோ ?

## குறிப்புரை

தண்டமிழே - விளி.

1, 2. வாழுநர் - (புகழுருவினராய்) வாழ்பவர். தேஉரு ஆய் மேவு தற்கும் - தேவருருவத்தைப் பெற்றிருப்பதற்கும். எண்ணி - ஆராய்ந்து. உனைக்கொண்டு - உன்னால். புகழ்கொண்டவருக்கே கூடும் - (தமிழ்ப் பாடல்களால் பாடப்பெற்ற) புகழுள்ளோர்க்கே முடியும். தென்பாலே தோன்றும் : தென்திசைப் பகுதியே (நரகமே) காணப்படும்.

3, 4. சங்கம்—(1) வித்துவான்களின் கூட்டம். 2. சேர்க்கை, பற்று. சிவபிரான் தமிழ் சங்கத்தில் ஒருவராக (இறையனாராக) இருந்ததா லுயர்ந் தாரா அல்லது தமிழிடத்தில் பற்று வைத்ததா லுயர்ந்தாரா ? வீடு ஆளும் - (தான் வாழும்) மனையாகக் கொண்டுள்ள. அம்கை மேலே இருந்தாயோ - அழகிய கையில் (ஏட்டுப் புத்தகமாய்) தங்கியிருந்தாயோ ? ஏடு அக - பனையோலை (தன் கையில்) இருக்க. ஆடு அரவம் - படமெடுத்தாடும் அநந்தன்.

5. தாழ் பாயல் ஆளரை - தங்கும் பாயாகக் கொண்டுள்ள திருமாலை. நீ தொடர்ந்தாயோ - நீ பின் சென்றாயோ ? சூழ்பாயோடு உன்னைத் தொடர்ந்தாரோ - (அல்லது திருமால்) படுக்கையோடு உன்னைத் தொடர்ந்து சென்றாரோ ? (கச்சிப் பதியில் வாழ்ந்த கணிகண்ணன் என்னும் திருமாலடியாரைப் பல்லவ அரசன் நாட்டை விட்டுச் செல்லுமாறு உத்தரவிட, அது கேட்ட திருமழிசைப்பிரான் பகவானை நோக்கிப் 'பைந் நாகப் பாய் சுருட்டிக் கொள்' என்று கூறலும், திருமால் அப்பதியை விட்டுச்சென்றாரென்பதும், பிழை பொறுக்குமாறு அரசன் அவரை வேண்டிக் கொண்டதும் "பைந்நாகப்பாய் படுத்துக் கொள்" என அவர் மாற்றிப்பாடத் திருமால் மீண்டும் கச்சிக்கு எழுந்தருளினர் என்பதும் இங்குக் குறிக்கப்பட்டுள்ளன.) வாழ்வே - வாழ்வைத் தரும் பொருளே. என்றேதி - என்று கொண்டாடிச் சொல்லி.

6. முனி - அகத்திய முனி. உனை முருகர் சொன்னாரோ - உன்னை முருகக் கடவுள் அம்முனிவருக்கு உபதேசித்தாரோ ? சொற்றனையோ - புகழ்ந்து பாடினையோ ? பேதியா - மாறுபடாதே.

7. நேசர் - அன்புடைய சொக்கநாதர். பொருளாய் - அர்த்தமாய். வாசர் - வாசம் செய்யும் சொக்கர். பாசம்உறும் - (உன்னிடம்) பற்றுக் கொண்டுள்ள.

8. உன் செய்தி - உனக்குச் சொல்லவேண்டிய செய்தியை (நீ எனக்குச் செய்ய வேண்டிய காரியத்தை).

9, 10. 'கற்க......தக.'—குறள். தக - ஏற்றபடி. சொல்லிய - யாவராலும் புகழ்ந்து சொல்லப்படுகின்ற.

11. ஈரடி - ஈரடியாலான குறள். நேரடி - நான்கடிப்பா. வள்ளுவர் ஈரடிக் குறளினால் உலகத்தார் நினைப்பன எல்லாவற்றையும் அளந்து ஓர்ந்து கூறினர். அவர் போன்றார் ஈரடிக்கு இருமடங்காகிய நான்கடிப் பாவினால் கூறத் தொடங்கினால், அளந்து ஓர்ந்து கூற வேறு உலகு இல்லையே என்பது கருத்து.

### பயிற்சி

1. பொருள் கூறுக :—தென்பால், ஏடு, பாயல், ஈரடி, நேரடி.
2. பிரித்துக் காட்டுக :—தென்பால், சொற்றனை, தண்டமிழ், ஈரடி.
3. சிவபிரானைக் குறிப்பதற்கு இக்கண்ணிகளில் பயின்றுள்ள சொற்களையும், சொற்றொடர்களையும் கூறுக.

### வினாக்கள்

1. 'எண்ணியுனைக் கொண்டு புகழ் கொண்டவர்க்கு' எவை கூடும்?
2. 'உனைக் கூடாத தொண்டர்' எனப்பட்டோர் யார்?
3. "ஈங்குனது......உயர்ந்தாயோ"—இதன் பொருளை விளக்குக.
4. "வாணியங்கை மேலே யிருந்தாயோ? ஏடாகவுன் மேலிருந்தானோ?" இதன் நயத்தை விளக்குக.
5. ஐந்தாங் கண்ணியில் குறிக்கப்பட்டுள்ள வரலாறு யாது?
6. 'முனிகேட்கவுனை முருகர் சொன்னரோ? சோதியவரை நீ சொற்றனையோ?" இதன் பொருளை விளக்குக.
7. ஏழாங் கண்ணியின் பொருள் நயத்தை விளக்கிக் கூறுக.
8. "ஈரடிக்குள்ளே......நிலனுண்டோ?" இக்கண்ணியின் கருத்தை விளக்குக.

### கட்டுரையாக்கம்

ஆசிரியர் தமிழை முன்னிலைப்படுத்திப் புகழ்ந்து கூறுவனவற்றைத் தொகுத்து ஒரு பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

## 4. கலிங்கத்துப் பரணி

கலிங்க நாட்டில் நடந்த செய்தியைக் கூறும் பரணியென்னும் நூல் கலிங்கத்துப் பரணி எனப்படும். பரணி என்பது ஒருவகைப் பிரபந்தம். பரணியென்ற சொல், யானைப்போர் வெற்றியினைக் குறிக்கும்; மேலும் பரணி நட்சத்திரத்திற்குரிய காளியை வழிபட்டுக் கூறும் ஒரு வகை நூலையும் குறிக்குமென்பர். கருணாகரத் தொண்டைமான் என்னும் படைத்தலைவன் விசயதர சோழனிடம் விடைபெற்றுக் கலிங்க நாட்டிற்

சென்று யானைப் போர் வென்ற செய்தியை இந்த நூல் கூறுகிறது.

இந்நூலை இயற்றியவர் சயங்கொண்டார் என்னும் புலவர். இவர் பிறந்த ஊர் தீபங்குடி. இவரைப்பற்றிய வேறு விவரங்கள் தெரியவில்லை. இவர் சைவ சமயப் பற்றுடையவர். இவரைச் சைன ரென்றும் கூறுவர். இவர் காலம் பதினோராம் நூற்றாண் டின் பிற்பகுதி. ' பரணிக்கோர் சயங்கொண்டான் ' என இவர் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளார்.

கலிங்கப்போரின் வரலாறு: கலிங்க நாட்டு அரசனான அனந்தபன்மன் தனக்குரிய திறைப்பொருளைச் செலுத்த வில்லையென அறிந்த விசயதர சோழன் தன் தானத்தலைவரைக் கலிங்கத்தின் மீது படையெடுக்குமாறு கட்டளையிட்டான். உடனே தலைமைச் சேனாதிபதியாகிய கருணாகரன், ' யான் ஏழு கலிங்கங்களையும் அழித்து வருவேன் ' என்று கூறி மூன்று உப சேனாதிபதிகளுடனும், யானைச் சேனையுடனும் பிற சேனையுட னும் புறப்பட்டுச் சென்று கலிங்க நாட்டை முற்றுகையிட்டான். கலிங்கவரசனும் பெருஞ் சேனையுடன் வந்து எதிர்த்தான். கருணாகரன் இப் போரில் ஆயிரக்கணக்கான யானைகளை அழித்து, எழுவகைக் கலிங்க நாட்டரசரையும் வென்று திரும்பினன்.

## போர்

1. எடுமெடு மெடுமென வெடுத்ததோ
   ரிகலொலி கடலொலி யிகக்கவே
   விடுவிடு விடுபரி கரிக்குழாம்
   விடும்விடு மெனுமொலி மிகைக்கவே

2. வெருவர வரிசிலை தெறித்த நாண்
   விசைபடு திசைமுகம் வெடிக்கவே
   செருவிடை யிளையவர் தெழித்ததோர்
   தெழியுல குகள்செவி டெடுக்கவே,

3. எறிகட லொடுகடல் கிடைத்தபோ
   லிருபடை களுமெதிர் கிடைக்கவே
   மறிதிரை யொடுதிரை மலைத்தபோல்
   வருபரி யொடுபரி மலைக்கவே.

4. கனவரை யொடுவரை முனைத்தபோற்
கடகரி யொடுகரி முனைக்கவே
யினமுகி லொடுமுகி லெதிர்த்தபோ
லிரதமு மிரதமும் மெதிர்க்கவே,

5. பொருபுலி புலியொடு சிலைத்தபோற்
பொருபட ரொடுபடர் சிலைக்கவே
யரியினோ டரியின மடர்ப்பபோ
லரசரு மரசரு மடர்க்கவே.

## குறிப்புரை

1. எடும் - படை யெடுத்துச் செல்லுங்கள். இகல் ஒலி - மாறுபட்டுச் செய்யும் ஒலி. கடல் ஒலி இகக்க - கடலொலியினும் மேம்பட்டு ஒலிக்க. விடு விடு விடு - விரைந்து செல்லுகின்ற (விரைவுக் குறிப்பு). பரி, கரிக் குழாம் - குதிரைக் கூட்டம், யானைக் கூட்டம். விடும் - செலுத்துங்கள். மிகைக்க - மேம்பட (மிகைக்கப் போர் நடந்தது என்று வினை கொடுத்து முடிக்கவும். பிற விடங்களிலும் இவ்வாறே கொள்க.)

2. வெருவர - அஞ்சும்படி. தெறித்த நாண் - விரலினுலெறியப்பட்ட நாணொலி. வெடிக்க - வெடிப்பது போல் ஒலிக்க. தெழி - அதட்டலொலி. வரிசிலை - வினைத்தொகை.

3. கிடைத்த போல் - எதிர்ப்பட்டதுபோல. எதிர் கிடைக்க. (பொறு மாறு) எதிராக நிற்க. மறி - மடங்குகின்ற.

4. கனம்வரை - பருத்தமலை.. முனைத்தபோல் - மாறுபட்டுப்பொரு ததுபோல. கடம்கரி - மதயானை. இனமுகில் - திரளாகிய மேகங்கள்.

5. பொரு - போர் செய்கின்ற. .சிலைத்தபோல் - ஒலி செய்துகொண்டு பொருததுபோல. படர் - வீரர். அரி - சிங்கம்.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—இகல், கரி, வெருவர, கடம், அரி, படர்.

2. கரிக்குழாம், வரிசிலை, எறிகடல், கனவரை :—இவை என்ன தொடர் ?

## வினாக்கள்

1. எவ்வொலி கடலொலியினும் மேம்பட்டிருந்தது ?

2. " விடு விடு......மிகைக்க " :—இதன் பொருள் யாது ?

3. நாணொலியும், இளையோர் அதட்டலொலியும் எவ்வாறிருந்தன ?

4. படைகளெதிர்த்ததும், பரிகள் மலைந்ததும் எவற்றுடன் ஒப்பிடப் பட்டுள்ளன ?

5. படரொடு படரும், அரசருடன் அரசரும் எவ்வாறு எதிர்த்தனர் ?

## கட்டுரையாக்கம்

இச்செய்யுட்களின் திரண்ட கருத்தைத் தெளிவாக வரைக.

# V. பல்சுவைப் பகுதி

## 1. தனிப்பாடல் திரட்டு

கதையைத் தெரிவித்து வரும் தொடர்நிலைச் செய்யுளைப்போலல்லாமல், பல புலவர்களால் அவ்வப்போது பாடப்பட்ட பாடல்களையுடைய நூல் தனிப்பாடல் திரட்டு எனப்படும். பின்வரும் செய்யுளை இயற்றியவர் காளமேகப் புலவர். இவர் திருவரங்கத்தில் கோயில் பரிசாரகராயிருந்து, பின் மோகனாங்கி என்பவள் தூண்டுதலால், திருவானைக்காவில் சிவாலயப் பரிசாரகராகிக் கலைமகள் திருவருளால் ஆசுகவியானவர். இவர் பாடிய பாடல்கள் பல. இவர் காலம் : கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டு.

### பாம்புக்கும் எள்ளுக்கும் சிலேடை

ஆடிக் குடத்தடையும், ஆடும்போ தேயிரையும்,
மூடித் திறக்கில் முகங்காட்டும்—ஓடிமண்டை
பற்றில் பரபரெனும் : பாரில்பிண் ணாக்கு முண்டாம் ;
உற்றிடுபாம் பெள்ளெனவே ஓது.

## 2. பாரதியார் பாடல்

ஸ்ரீ சி. சுப்பிரமணிய பாரதியார் எட்டையபுரத்தில் 1882-ஆம் ஆண்டில் பிறந்தவர் ; ஆங்கிலம், தமிழ், ஹிந்தி முதலிய பல மொழி அறிந்தவர் ; தமிழன்பு ததும்பப் பெற்றவர் ; சுதந்திர வேட்கையும், சமத்துவ உணர்ச்சியும், தேசப்பற்றும் கொண்டவர்.

### நாட்டு வணக்கம்

(ராகம்—காம்போதி. தாளம்—ஆதி)

1. எந்தையும் தாயு மகிழ்ந்து குலாவி
யிருந்தது மிந்நாடே—அதன்
முந்தைய ராயிர மாண்டுகள் வாழ்ந்து
முடிந்தது மிந்நாடே—அவர்

சிந்தையி லாயிர மெண்ணம் வளர்ந்து
சிறந்தது மிந்நாடே—இதை
வந்தனைகூறி மனத்திலிருத்தி யென்
வாயுற வாழ்த்தேனோ—இதை

பல்லவி

வந்தேமாதரம், வந்தேமாதரம்
என்று வணங்கேனோ—இதை

2. இன்னுயிர் தந்தெமை யீன்று வளர்த்தரு
ளீந்தது மிந்நாடே—எங்கள்
அன்னையர் தோன்றி மழலைகள் கூறி
அறிந்தது மிந்நாடே—அவர்
கன்னிய ராகி நிலவினி லாடிக்
களித்தது மிந்நாடே—தங்கள்
பொன்னுட லின்புற நீர்விளை யாடியில்
போந்ததுமிந் நாடே—இதை

பல்லவி

வந்தேமாதரம், வந்தே மாதரம்
என்று வணங்கேனோ?

3. மங்கைய ராயவர் இல்லறம் நன்கு
வளர்த்தது மிந்நாடே—அவர்
தங்க மதலைக ளீன்றமு தூட்டித்
தழுவிய திந்நாடே—பின்னர்
அங்கவர் மாய அவருடற் பூந்துகள்
ஆர்ந்தது மிந்நாடே—இதை

(பல்லவி)

வந்தேமாதரம், வந்தேமாதரம்
என்று வணங்கேனோ?

## குறிப்புரை

1. ஒரு சொல் அல்லது சொற்றொடர் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள் தருமாறு அமைப்பது, சிலேடை. இரையும் - பெருமூச்சுவிடும், ஒலி செய்யும். முகம் - பாம்பினுடைய தலை, பார்த்தவருடைய முகம். பிண்ணுக்கு - (பிள் + நாக்கு) பிளவுபட்ட நாக்கு, பிண்ணாக்கு என்னும் எள் சக்கை.

2. முந்தையர் - முன்னோர். வந்தனை - வணக்கம், வழிபாடு. வந்தே மாதரம் - தாய்நாட்டை வணங்குகின்றேன். மதலை - குழந்தை. பூம்துகள் - மென்மையான சாம்பல். ஆர்ந்தது - நிறைந்தது.

## பயிற்சி

1. இருபொருள் கூறுக :—இரையும், பிண்ணாக்கு.

2. அடையும், இரையும், வணங்கேனே—இவை என்ன வினை முற்றுக்கள் ?

3. முகங்காட்டும், பொன்னுடல்—இவை என்ன தொடர் ?

## வினாக்கள்

1. காளமேகப் புலவர் பாடல் பாம்புக்கும் எள்ளுக்கும் ஆகித்தரும் சிலேடைப் பொருளை விளக்குக.

2. தாய்நாட்டின் பெருமையைப் பாரதியார் எவ்வாறு கூறுகின்றார் ?

3. நம் நாட்டு மங்கையர் சிறப்பினைப் பாரதியார் கூறுவது எங்ஙனம் ?

## கட்டுரையாக்கம்

பாரதியார் பாடல்களை ஆதாரமாகக் கொண்டு 'தமிழ் நாட்டுப் பெண் பாலார்' என்பது பொருளாக ஒரு சிறு கட்டுரை வரைக.

# உரைநடைப் பகுதி

## 1. சிறை நீக்கிய செய்யுள்

**மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள்**

திருச்சிராப்பள்ளியில் சொக்கநாத நாயக்கர் அரசாட்சி செய்துவந்தகாலத்தில், திருநெல்வேலிச் சீமையை வட மலேயப்பப் பிள்ளேயென்பவர் (கி. பி. 1620-1676) பிரதிநிதியாக இருந்து ஆண்டுவந்தார். அவருடைய அதிகாரத்தின் பெருமையினுல் தென்பாண்டிநாட்டில் குடிகள் யாவரும் சுகமாக வாழ்ந்து வந்தனர். அவரைப் பிள்ளேயன் என்றே பெரும்பாலும் வழங்குவர். அவர் தெய்வ பக்தி மிக உடையவர். அவரால் இயற்றப்பட்ட தருமங்களும், தேவாலயத் திருப்பணிகளும், பிற அருமைச் செயல்களும் பல புலவர்களுடைய செய்யுட்களில் மணியைப்போல அமைக்கப்பட்டு, அவருடைய புகழை வெளியிட்டுக் கொண்டிருக்கின்றன. அவர் சிறந்த கல்விமானுக இருந்தார். தமிழிலே நிறைந்த புலமையுடையவர். மச்ச புராணம், நீடூர்த்தல புராணம் முதலிய சில நூல்களே அவர் இயற்றி யிருக்கிருர். தமது சிறந்த புலமைக்கேற்பப் புலவர்களுடைய பெருமையையும், அவர்கள் இயற்றும் செய்யுட்களின் அருமையையும் அறிந்து, அவர்களே மதித்துப் போற்றிப் பாதுகாக்கும் தன்மையுடையவர். புலவர்களிடத்தில் பேரன்புடையவராக அவர் இருந்தமையால், அவரைச் சார்ந்த பலருக்கும் அங்ஙனமே புலவர்களிடத்தில் அன்பு உண்டாயிற்று. அவர் காலத்து உத்தியோகஸ்தர்களிற் பலர் சிறந்த தமிழ்க் கல்விமான்களாக விளங்கினுர்கள் ; 'மன்னவனெப்படி மன்னுயிரப்படி' என்பது உண்மையன்ருே?

அக்காலத்தில் தென்திருப்பேரை என்ற விஷ்ணு ஸ்தலத்தில் உள்ள தலவகார ஸாமவேதிகளாகிய ஸ்ரீவைஷ்ணவர்களுள் நாராயண தீக்ஷிதரென்னும் ஒரு வித்து

வான் இருந்தார். பல வருஷங்களுக்குமுன் சுந்தர பாண்டியரென்னும் அரசர் பல ஊர்களில் வசித்த நூற்றெட்டுத் தலவகார ஸாமவேதிகளாகிய ஸ்ரீ வைஷ்ணவர்கள் குடும்பத்தைத் தென் திருப்பேரையில் அமைத்து, அக்குடும்பத்தினருக்கு வீடுகளும் நிலங்களும் வழங்கினரென்பர்; அந் நூற்றெட்டுக் குடும்பத்தின் வழிவந்தவர்கள் இன்றும் அவ்வூரில் வாழ்ந்து வருகின்றனர்.

முற்கூறிய நாராயண தீக்ஷிதரென்பவர் அப்பரம்பரையில் வந்தவரே. அவருக்கு நிலம் வீடு முதலிய சொத்துக்கள் இருந்தன. அவர், தம்முடைய குலவொழுக்கத்திற்கேற்ற கடமைகளைச் செய்தும், தமிழ் நூல்களைப் படித்து இன்புற்றும், செய்யுளியற்றியும், தென் திருப்பேரையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ மகர நெடுங்குழைக்காதரென்னுந் திருநாமமுள்ள திருமாலைத் தரிசித்து மகிழ்ந்தும் வாழ்ந்துவந்தார்.

இங்ஙனம் இருந்த காலத்தில், வரி வசூலிக்கும் பொருட்டு வடமலையப்பப் பிள்ளையனால் நியமிக்கப்பட்ட அதிகாரிகளுள் ஒரு வன்னெஞ்சர், தென் திருப்பேரையிலிருந்த வைஷ்ணவர்களிற் சிலர் வரி செலுத்தவில்லையென்ற காரணத்தால் அவர்களைத் திருநெல்வேலிக்குக் கொணர்ந்து சிறையிலிட்டார். அவர்களுள் நாராயண தீக்ஷிதரும் ஒருவர். அவர்கள் தாம் வரிகொடாமைக்குக் காரணங்களை மிகவும் பணிவாகக் கூறி, இயன்ற காலத்திற் செலுத்திவிடுவதாக நயந்து கேட்டுக்கொண்டும் அவ்வதிகாரியின் மனம் இளகவில்லை. ஒரே பிடிவாதமாகச் சிறையிலிட்டுக் காவல் வைத்துவிட்டார். அச்சிறைக் கூடம் இருந்த தெருவிற்கு இப்போதும் **காவற்புரைத் தெரு** என்னும் பெயர் வழங்கி வருகிறதாம்.

சிறைப்பட்ட நாராயண தீக்ஷிதர், 'நம்முடைய பிராரப்த வினையின் பயனாக இந்தத் துன்பம் வந்தது' என்று எண்ணி ஏங்கினர். சுதந்திரமான வாழ்க்கையும், நாள்தோறும் அதுவரை செய்துவந்த குழைக்காதர் தரிசனமும் அவருக்கு அப்பால் இல்லாதனவாயின. நாம் எவ்வளவோ நயந்து கல்லும் கரையும்படி கேட்டுக்கொண்

டும் இந்தக் கொடியவன் இரங்கவில்லையே! இனி என் செய்வோம்! எல்லாத் துன்பத்தையும் நீக்கிப் பாதுகாக்குங் குழைக்காதரே நமக்குக் கதி. இந்தக் கொடியவனிடம் செய்துகொண்ட விண்ணப்பம் இவன் காதில் சிறிதும் ஏறவில்லை; இனிமேல் குழைக்காதர் காதில் ஏறும்வண்ணம் விண்ணப்பித்துக் கொள்வதுதான் முறை' என்று தெளிந்தார். அதுமுதல் ஒவ்வொருநாளும் குழைக்காதர் விஷயமாக மனமுருகிச் செய்யுட்கள் சிலவற்றை இயற்றித் திருப்பித் திருப்பி வாயாரச் சொல்லிப் பிரார்த்திக்க ஆரம்பித்தார். அவரைப் பார்த்து உடன் இருந்தவர்களும் சில செய்யுட்களை இயற்றத் தொடங்கினூர்கள்.

நாராயண தீக்ஷிதர் "குழைக்காதர் பாமாலை" என்று பெயரிட்டு, தம்முடைய செய்யுட்களை முறையாக அமைத்து வந்தார். 'குழைக்காதரைப் பிரிந்திருக்கும் கொடிய காலமும் வந்ததே!' என்று அவர் எண்ணி எண்ணி நைந்தார்.

" கன்றுக் கிரங்கிய கற்றுவைப் போலக் கருணையுடன்
என்றைக் கிரங்குவ ரோவறி யேனெழு பாருமுய்யக்
குன்றைக் கவிகை யெனத்தரித் தோர்குழைக் காதரையான்
சென்றெப் பொழுது தொழுவதும் பாவங்கள் தீர்வதுமே"

என்பது பாமாலையிலுள்ள முதற் பாட்டு. இதில், 'குழைக்காதரை யான் சென்று தொழுவதும் பாவங்கள் தீர்வதும் எப்பொழுது!' என்று அவர் உள்ளந் துடித்துப் பாடியிருக்கின்றூர்.

சிறை வாழ்க்கையை மேற்கொண்டு ஒரு மாதகாலம் ஆயிற்று. ஒருவழியும் தோன்றவில்லை;

" திங்களொன் றுகச் சிறையிருந் தோமிச் சிறையகற்றி
எங்கடம் பாலிரங் காததென் னேவிசை நான்மறையின்
சங்கமுங் கீதத் தமிழ்ப்பாட லுஞ்சத்த சாகரம் போற்
பொங்குதென் பேரைப் புனிதா கருணைப் புராதனனே"

என்று குழைக்காதரை நினைந்து இரங்கினூர். தம்முடைய ஊரில் பெருமாள் சந்நிதியில் நான்மறை முழக்கமும், திவ்யப் பிரபந்த முழக்கமும் கடல் முழக்கம்போல நிறைந்து விளங்குமென்பதை அவர் எண்ணிக்கொண்டு,

'அந்தத் திவ்ய சப்தங்களைக் கேட்டு ஈடுபடாமல் இங்கே அழுகையொலியும், சிணுங்குஞ் சப்தமும், அதிகாரத் தொனியும் கேட்டுத் துன்புறுந் தலைவிதி நமக்கு வாய்த் ததே!' என்று புலம்பினார். 'குழைக்காதர் அருள் செய் வார், அருள் செய்வார்! இன்றைக்குள் ஏதாவது நன்மை ஏற்படும்; நாளைக்குள் அநுகூலம் உண்டாகும் என்று எண்ணி ஏமாந்தார்; பிறகு,

"இன்றாகும் நாளைக்குள் நன்றாகும் என்றிங் கிருப்பதலால்
ஒன்றா கிலும்வழி காண்கில மேயுன் உதவியுண்டேல்
பொன்றாமல் நாங்கள் பிழைப்போம் கருணை புரிந்தளிப்பாய்
அன்றா ரணந்தொழ நின்றாய்தென் பேரைக் கதிபதியே"

என்று குழைந்து நைந்தார்.

வடமலையப்பப் பிள்ளையன் நல்ல நீதியுடையவரென் றும், தமிழ் அன்புடையவரென்றும் அறிந்தவராதலின், தாமும் பிறரும் சிறையில் இருப்பதை அவர் அறிந்தால், அவரால் நன்மையுண்டாகுமென்ற நினைவு தீக்ஷிதருக்கு உண்டாயிற்று; அப்பொழுது, 'அவருக்குத் தெரிவிப்ப வர் ஒருவருமில்லையே!' என்ற எண்ணம் அடுத்தாற் போல் தோற்றியது; உடனே,

"வள்வார் முரசதிர் கோமான் வடமலை யப்பன்முன்னே
விள்வாரு மில்லை யினியெங்கள் காரியம் வெண்டயிர்பாற்
கள்வா அருட்கடைக் கண்பார் கருணைக் கனிறழைத்த
புள்வாக னாவன்பர் வாழ்வேதென் பேரைப் புராதனனே"

என்று கதறினார்.

இப்படிச் சிலநாள் கழிந்தன. புதிய செய்யுள் இயற்றி மனங்கரைந்து பாடுவதும், முன்பே இயற்றியுள்ள பாடல் களைப் பாடிப் புலம்புவதும் நாராயண தீக்ஷிதர் வழக்க மாயின. அந்தச் சிறைக்கூடக் காவலதிகாரி தமிழறி வுடையவர். ஒருநாள் நாராயண தீக்ஷிதர், 'வள்வார் முரசதிர் கோமான்' என்ற செய்யுளைமட்டும் சொல்லிக் கொண்டிருந்தபோது, அவ்வதிகாரியின் காதில் அது பட்டது. நம்முடைய எசமான் பெயர் இந்தப் பாட்டில் அமைந்திருக்கிறதே! உள்ளே இருப்பவர் தமிழ் வித்து வான்போலத் தோற்றுகிறது என்று எண்ணினார். தமிழ்ப்

புலவர்களுக்கு மரியாதை செய்வதும், அவர்களுக்குக் குறைவு வராமற் பாதுகாப்பதும் பிள்ளையனுக்கு உவப்பான காரியங்களாதலின், அதிகாரி உடனே சென்று தமிழ் வித்துவானொருவர் சிறையில் இருப்பதையும், அவர் பிள்ளையன் பெயரைப் பாட்டிற் கூறிப் புலம்புவதையும் எசமானிடம் சொன்னார்.

அவர் சொன்னதுதான் தாமதம்; தண்டமிழ் வாணர் துயரத்தைக் கேட்கப்பொருத வடமலையப்பப் பிள்ளையன் எல்லாக் காரியங்களையும் விட்டுவிட்டு, உடனே தம் குதிரைமீதேறிக்கொண்டார்; சிறைக்கூடத்தை நோக்கி விரைந்து வரலானார்.

சிறிது நேரத்திற்குள் குதிரை சிறை வாயிலில் வந்து நின்றது. பிள்ளையன் சிறைக்கூடத்தைத் திறக்கச்செய்து உள்ளே சென்றார்; அப்பொழுதும் குழைக்காதர் திருவடிகளைத் தியானித்துக்கொண்டு பாட்டுப் பாடிய வண்ணமாய்க் கண்ணும் கண்ணீருமாக அங்கேயிருந்த புலவரைக் கண்டார். அவருடைய நிலை, பிள்ளையன் நெஞ்சில் உருக்கத்தையும் கண்ணில் நீரையும் உண்டாக்கின; 'குழைக்காதரை நினைந்து தமிழ்க்கவியால் முறையிடும் இந்தப் புலவர் பெருமானைப்பற்றி இதுகாறும் அறிந்துகொள்ளவில்லையே. நாம் தமிழறிந்ததனால் என்ன பயன்? இவர் எவ்வளவு நாட்களாக இங்ஙனம் துன்புறுகின்றாரோ?' என்று மனம் வருந்தினார்; அவரை நோக்கி அவர் வரலாற்றை வினவினார்; அவரது வாய்மொழியால் எல்லாம் தெளிந்தார்.

பிள்ளையன் உத்தரவினால் பல வண்டிகள் சிறைவாயிலில் வந்து நின்றன. நாராயண தீக்ஷிதரும் அவருடன் இருந்த வேறு தமிழறிஞர்களும் அவற்றில் ஏறிக்கொண்டனர். பிள்ளையன் தீக்ஷிதரையும் பிறரையும் தம் அரண்மனைக்கு அழைத்துச்சென்று உபசரித்தார்; அவர் கொடுக்கவேண்டிய வரியை நீக்கியதோடு அவர் நிலங்களை என்றும் வரியில்லாத இனம் நிலங்களாகச் செய்துவிட்டார்.

தீக்ஷிதர் பாடிய பாமாலையைப் பிள்ளையன் கேட்டார்.

அப்புலவருடைய மனம் எவ்வளவு வருந்தி நைந்திருக்க வேண்டுமென்பதை அச்செய்யுட்கள் நன்ருக எடுத்துக் காட்டின. அதுகாறும் அறுபத்தைந்து பாடல்கள் இயற்றப்பட்டிருந்தன. பிள்ளையன் தீக்ஷிதரைப் பார்த்து, 'இந்நூலை முற்றும் பாடி முடிக்கவேண்டும்' என்று விரும்பினுர். அப்படியே அப்புலவர் பின்னும் முப்பத்தைந்து செய்யுட்களை இயற்றி நூறு பாடலாகப் பூர்த்தி செய்தனர்.

தாம் சிறைக்கூடத்திலிருந்து முறையிட்ட முறையீடு குழைக்காதர் காதில் விழுந்தமையால் அப்பெருமாள், பிறர் காதுகளிலும் விழும்படி செய்து சிறைத்துன்பத்தை நீக்கியருளினுரென்று தீக்ஷிதர் உறுதியாக நம்பினுர். அதனுல் சிறையிலிருந்து விடுதலைபெற்ற பின்பு பாடிய செய்யுட்களில் குழைக்காதர், தம் துன்பத்தைப் போக்கியருளியதாகச் சொல்லியிருக்கிருர். விடுதலை பெற்ற நிலையில் பாடிய முதற் பாட்டிலேயே,

" ஆடகச் சேவடி யாலெம தாவி யளித்தனை கார்க்
கோடகப் பாவிகள் வாராமற் காத்தனை "

என்று குறிப்பித்திருக்கின்ருர். இதில், 'கார்க்கோடகப் பாவிகள்' என்றது தம்மைச் சிறையிட்ட அதிகாரியையும் அவரைச் சார்ந்தவைகளையுமே யென்று தோன்றுகிறது.

இந்தப் பாமாலை தென்திருப்பேரை முதலிய இடங்களில் பலரால் மிக்க பக்தியோடு பாராயணம் செய்யப்பட்டு வருகிறது. அங்ஙனம் செய்வதனுற் சில துன்பங்கள் நீங்கி இன்பம் உண்டாவதாகச் சிலர் கூறக் கேட்டிருக்கிறேன். பள்ளிக்கூடத்திலும் முன் காலத்திலே இது பாடமாக இருந்துவந்தது.

## குறிப்புரை

தலவரம் - இது சாமவேதத்தின் ஒரு பிரிவு. மகர நெடுங்குழைக் காதர் - சுறுமீன் வடிவமாகச் செய்யப்பட்ட நீண்ட குழையை யணிந்த காதையுடையவர். குழை - காதணி. நயந்து - கெஞ்சி. காவற்புரைத் தெரு - சிறைக்கூடமுள்ள தெரு. நைந்தார் - வருந்தினர்.

**“கன்றுக்கு”:** எழு பார் உம் - ஏழு தீவுகளைக் கொண்ட பூமியிலுள்ளார் யாவரும். குன்றை - கோவர்த்தன மலையை. கவிகைஎன - குடையாக.

**“திங்களொன்றாக”:** திங்கள் ஒன்று ஆக - ஒரு மாத காலமாக. எங்கள் தம்பால் - எங்களிடத்தில்.

**“இன்றாகும்”:** பொன்றாமல் - அழியாமல். அன்று - வெகுகாலந் தொடங்கி. ஆரணம் - வேதம்.

**“வள்வார்”:** வள்வார் முரசு - வலிய தோல்கயிற்றினால் கட்டப்பட்ட பேரிகை. விள்வார் - வாய் திறந்து சொல்லுபவர். புள் - கருடன். முறையீடு - நீதிவேண்டிக் குரையிரத்தல்: ஆடகச் சேவடி - பொன் போல் அருமையான சிவந்த திருவடிகள். ஆவி அளித்தனை - உயிரைப் பாதுகாத்தாய்.

## பயிற்சி

1. பொருள் கூறுக: மகரம், கவிகை, ஆரணம், புள், ஆடகம்.
2. பிரித்துக் காட்டுக: வன்னெஞ்சர், வெண்டயிர், நான்மறை, கற்று, சேவடி.

## வினாக்கள்

1. பிள்ளையன் என்ற பெயர் யாருக்கு வழங்கியது?
2. பிள்ளையனுடைய குணங்களைப்பற்றிச் சுருக்கிக் கூறுக.
3. பிள்ளையன் இயற்றிய நூல்கள் எவை?
4. ‘மன்னவனெப்படி மன்னுயிரப்படி’—சந்தர்ப்பங் கூறி விளக்குக.
5. நாராயண தீக்ஷிதர் என்பவர் யார்? அவர் சிறைப்படக் காரணமென்ன?
6. இவர் இயற்றிய நூல் யாது? அதனை இயற்றக் காரணமென்ன?
7. புலவர் சிறைநீக்கம் பெற்றது எவ்வாறு?
8. தீக்ஷிதர் விடுதலை பெற்றபோது பாடிய பாட்டில் தமது நம்பிக்கையை எப்படி வெளியிட்டிருக்கிறார்?
9. ‘கார்க்கோடகப்பாவிகள்’ என்றது யாரைக் குறிக்கும்? ஏன்?
10. சிறு குறிப்பு வரைக: தலவகாரம், காவற்புரைத் தெரு.

## கட்டுரையாக்கம்

‘பிள்ளையன் தமிழ்ப் பற்று’ என்பதுபற்றி இருபது வரியில் ஒரு சிறு கட்டுரை வரைக.

# 2. ராடார்

திரு. ஆர். கிருஷ்ணமூர்த்தி, பி. ஏ., பி. ஓ. எல்.,

சென்ற இரண்டாவது உலக மகாயுத்தத்தின் நன்மையான விளைவுகளில் ராடார் சாதனம் கண்டுபிடிக்கப்பட்டதும் ஒன்ருகும். எதிரி விமானங்கள் தாக்க வரும் போது அவை எங்கிருந்து வருகின்றன, எத்திசையில் இருக்கின்றன, எவ்வளவு தூரத்தில் இருக்கின்றன என்று கண்டு பிடிப்பதற்கு இச்சாதனம் உதவுகிறது. கண்டு பிடித்த பிறகு விமான எதிர்ப்புப் பீரங்கிகளைக் கொண்டு அவற்றைச் சுட்டு வீழ்த்தித் தற்காப்பு செய்து கொள்ளலாம். இவ்வளவு உபயோகமான இச்சாதனத்தைக் குறித்துச் சிறிது தெரிந்து கொள்ளுவோம்.

ராடார் என்பது ரேடியோவினுல் திசையறிதல். இது ஆகாயத்தில் விமானங்களின் திசையையும், இருப்பிடத்தையும், கடலில் கப்பலின் திசையையும் இருப்பிடத்தையும் அறிய உதவுகிறது. இதில் உள்ள விசேஷம் என்னவென்ருல் ஆகாயத்திலுள்ள விமானங்கள் அல்லது கடலில் உள்ள கப்பல்களின் உதவி அல்லது ஒத்துழைப்பு இன்றியே, இது அவற்றின் திசையை அறியும் சக்தி வாய்ந்தது.

இந்த ரேடியோவுக்கு உபயோகிக்கப்படும் ஏரியல் (Aerial) ஒரு செங்குத்தான இருசின்மீது சுழலும் சட்டம் ஆகும். இது எத்திசையிலிருந்து 'செய்தி' வருகிறதோ அத்திசைக்கு நேர்க்குத்தாக (அதாவது 90°) இராமல், ஒரே, தளத்தில் இருக்கும்படி வைக்கப்பட்டால், அச்செய்தியை இது பெற்றுக்கொள்ளும்; நேர்க்குத்தாக இருந்தால் பெற்றுக் கொள்ளாது. நேர்க்குத்துக்கும் சமதளத்திற்கும் இடையில் ஏதேனும் ஒரு கோணத்தில் பொருத்தி வைக்கப்பட்டால் அக்கோணத்தின் அளவுக்கு ஏற்றபடி செய்தியைப் பதிவு செய்து கொள்ளும். எனவே, பதிவு செய்யப்பட்ட செய்தியின் தன்மை அல்லது, தீக்ஷண்யத்திலிருந்து அச்செய்தி தரும் மூலத்தின்

(Source) திசையை அறியலாம். இதுதான் ராடாரின் சுருக்கமான தத்துவம்.

முதலில் ராடார் சாதனத்திலிருந்து ரேடியோ செய்தி அனுப்பப்படுகிறது. அச்செய்தி ஒரு விமானத்தின் மீதோ, கப்பலின் மீதோ பட்டவுடன் அங்கிருந்து எதிரொலிபோலப் பதில் செய்தி திரும்பி வருகிறது. அப்படித் திரும்பிவரும் செய்தியின் திசையைத்தான் ராடார் கருவி பிறகு கண்டு பிடிக்கிறது. இரண்டு அல்லது, பல ராடார் கருவிகளிலிருந்து தனித்தனியாக ரேடியோ செய்திகள் அனுப்பப்பட்டால் அவை ஒரு கப்பலின்மீது மோதித் திரும்பி வரும் திசைக் கோடுகளைப் படத்தில் வரைந்து நீட்ட, அக்கோடுகள் சந்திக்கும் இடமே அக் கப்பல் உள்ள இடமாகும்.

ஆகவே, கண்டுபிடிக்கப்பட வேண்டிய பொருளின் உதவி யில்லாவிட்டாலும் மற்றொரு ராடார் ஸ்தாபனத்தின் உதவி இதற்குத் தேவையாக இருக்கிறது. இவ்வுதவி எதிர்பாராத விதத்தில் கூடக் கிடைக்கலாம். எவ்வாறெனின், கள்ளத்தனமாகச் செய்தியனுப்பும் ஸ்தாபனம் எங்காவது இருந்தால் அதன் மூலம் கூட இவ்வுதவி கிடைத்துவிடும். ஆகவே, கள்ளத்தனமான ஸ்தாபனமும் தன்னைத்தானே காட்டிக் கொடுத்து விடுகிறது. இதுவும் ஓர் எதிர்பாராத பலன்! இவ்வாறாக ராடார் அல்லது ரேடியோவினால் திசையறிவதற்குப் புறம்பான பொருளின் ஒத்துழைப்பும் தேவையில்லை. அது தானாகவே காரியத்தைச் சாதித்து விடுகிறது.

ராடாரினால் விமானம் அல்லது கப்பலின் தூரத்தை அறிவதற்கு, அதிலிருந்து பதில் செய்தி வருவதற்கு ஆகும் நேரம் கணக்கிடப்பட வேண்டும். பிறகு அந்த நேரத்தையும் ரேடியோ அலைகளின் வேகத்தையும் பெருக்கினால், அக்கப்பல் அல்லது விமானத்தின் தூரம் தெரியும். ரேடியோ அலைகளின் வேகமும், ஒளி அலைகளின் வேகமும் ஏறக்குறைய ஒன்றே; அதாவது ஒரு செகண்டுக்கு 1,86,000 மைல்.

ரேடியோ அலைகள் இவ்வளவு வேகமாகச் செல்வதால்

அவை போய்த் திரும்பும் நேரத்தைக் கணக்கிடுவதற்கு வெகு நுட்பமான கால அளவுக் கருவி வேண்டும். அது லக்ஷத்தில் ஒரு பாகம் செகண்டையும் அளக்கக் கூடியதாக இருக்க வேண்டும். இதற்கு குறைக்கதிர்க் குழாய் 'ஆசிலோகிராப்' (Cathode Ray Tube Oscillograph) என்ற கருவியை உபயோகிக்கிருர்கள். இதில் காற்று நீக்கப்பட்ட கூருருளையான கண்ணுடிப் பாத்திரம் ஒன்றில் இரண்டு மின்முனைகள் (Electrodes) வைக்கப் பட்டிருக்கும். அவை ஒரு பாட்டரியுடன் இணைக்கப்பட் டிருக்கும். குறுகிய பகுதியில் வைக்கப்பட்டுள்ள குறை அல்லது எதிர்மின் முனை (Negative electrode) மற்ருரு பாட்டரியிலிருந்து வரும் மின்னருவியால் சூடாக்கப்பட்டு ஒரு எலெக்ட்ரான் பிரவாகத்தை வெளிவிடுகிறது. இது மிகை அல்லது நேர் மின் முனை (Positive electrode) யில் உள்ள ஒரு துவாரத்திலும் குழாய் நெடுகிலுமாக நுழைந்து அகன்ற பகுதியைத் தாங்குகின்றது. இப்பகுதியில் ஓர் ஒளிரும் திரை (Fluorescent screen) வைக்கப்பட்டிருக் கிறது. எலெக்ட்ரான்கள் அதன்மீது மோதும்போதெல் லாம் அதில் ஒரு பிரகாசமான புள்ளி தோன்றும். இப்போது மிகை முனைக்கும் ஒளிரும் திரைக்கும் இடையில் இரண்டு உலோகத் தகடுகள் வைக்கப்பட்டு, அவற்றில் ஒன்றை நேர் மின்னேற்றமும் மற்ருென்றை எதிர் மின்னேற்றமும் உடையதாகச் செய்தால், குறை முனையிலிருந்து வரும் எலெக்ட்ரான் பிரவாகம் நேர் மின்னேற்றமுள்ள தகட்டி னிடம் இழுக்கப்படும். இப்போது அத்தகடுகளை மாறி மாறி நேர் மின்னேற்றமும் எதிர் மின்னேற்றமும் உடை யவையாகச் செய்து கொண்டே இருந்தால் † அவற்றுக் கிடையில் எலெக்ட்ரான் கற்றை மாறி மாறி ஊசலாடிக் கொண்டிருக்கும். இப்படி இது ஊசலாடும் வேகமும் செய்தி அனுப்பும் ரேடியோ ஸ்தாபன அலைகளின் வேக மும் ஒன்ருக இருக்கும்படி செய்யப்படும். இப்படிச் செய்யப்படுவதனுல் இத்தகடுகளுக்கிடையே எலெக்ட்ரான்

† அனுபவத்தில் இதற்காக மின்னேற்றப்பட்ட 'கண்டென்ஸர்' ஒன்றுடன் இத்தகடுகளில் ஒன்றை இணைத்து விடுவார்கள்.

கற்றை இருக்கும் தூரத்தைக் கொண்டு ரேடியோ அலைகளின் தூரத்தைக் கணக்கிடலாம். தகடுகளுக்கிடையே உள்ள தூரத்தை அளவு கோடுகள் இட்டுப் பிரித்திருப்பதால் அதைக் கண்டவுடன் செய்தியைப் பிரதிபலிக்கும் பொருள் (கப்பல் அல்லது விமானம்) எவ்வளவு தூரத்தில் இருக்கிறதென்று தெரிந்துவிடும்.

வானத்தில் உள்ள அயனமாக்கப்பட்ட * (Ionised) வாயுக்களின் அடுக்குகளிலிருந்தும் ரேடியோ அலைகள் பிரதிபலிக்கப்படுகின்றன. வானத்தில் செல்லும் எரி நட்சத்திரங்களாலும் (Meteors) ரேடியோ அலைகள் அடிக்கடி பிரதிபலிக்கப்படுகின்றன. இவை ஆகாயத்தில் 12½ மைல் உயரத்தில் இருக்கும்போதும் கண்ணுக்குத் தெரிகின்றன. இவை காற்று மண்டலத்தில் பயங்கரமான வேகத்துடன் நுழைவதால், காற்றை உஷ்ணப்படுத்தி அயனமாக்கி விடுகின்றன. அதனால் அப்போது வானத்தில் நீண்ட கீற்றுப் போன்ற ஒளி தெரிகிறது. இதிலிருந்து-தான் ரேடியோ அலைகள் பிரதிபலிக்கப்படுகின்றன. இவ்வொளி நம் கண்ணுக்கு இரவில்தான் தெரியும்; பகலில் தெரிவதில்லை. ஆனால் ராடார் சாதனமோ இதைப் பகலிலும் கண்டுபிடித்து விடுகிறது.

1943-ல், அதிக சக்தியுள்ள ராடார் சாதனங்களால் ஆகாயத்தில் நம் கண்ணுக்குத் தெரியாமல் எங்கெங்கோ பறக்கும் பறவைகள் கூடக் கண்டுபிடிக்கப் பட்டுவிட்டன. இவை ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த எதிரொலிகளைக் கண்டுபிடிப்பதற்கு இடையூறாக இருந்தன. ஆகையால், பறவைகளிடமிருந்து வரும் எதிரொலிகளையும் ராணுவ முக்கியத்துவம் வாய்ந்த எதிரொலிகளையும் பிரித்தறிவதற்குத் தனிப் பயிற்சிகள் அளிக்கப்பட்டன. பறவைகளிலிருந்து வந்த எதிரொலி பல தடவை எதிரிகளின் E—படகுகளிலிருந்து வந்த எதிரொலியோ என்னும் அச்சத்

---

* அதாவது வாயு அணுக்கள் நேர் மின்னேற்றமும் எதிர் மின்னேற்றமும் உள்ள இருவகை அணுக்களாகப் பிரிக்கப்பட்டிருத்தல். இயற்கையாகவே ஆகாயத்தில் உயரமான இடங்களில் இவ்வாறுதான் இருக்கிறது.

தையும் எதிரிகளின் கப்பற்படை எடுப்பு அச்சத்தையும் உண்டாக்கிவிட்டது.

கனத்த மழையும் எதிரொலியை உண்டாக்குகிறது. ஆகாயத்தில் மேகங்கள் உள்ள தூரத்தைக் கணக்கிடவும் ராடார் சாதனம் உபயோகப்படுகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக சந்திரன், செவ்வாய் முதலிய கோளங்களுக்குச் செய்தியனுப்பிப் பதிலைப் பெறவும் ராடார் உபயோகப் படுகிறது. சமீபத்தில் சந்திரனிடமிருந்து ரேடியோ பதில் செய்தி வந்ததாகச் சில விஞ்ஞானிகள் அறிவித் தார்கள். உண்மையில் அங்குள்ள அல்லது இல்லாத எவ்வித உயிரினின்றும் அப்பதில் வரவில்லை; வெறும் பிரதிபலனச் செய்திதான் வந்தது. 1946 ஜனவரி 10-ம் தேதி இவ்வதிசயம் நிகழ்ந்தது. சந்திரனிடமிருந்துதான் பிரதிபலனம் கிடைத்ததென்பதற்கு ருசு, விஞ்ஞானிகள் ஏற்கெனவே, கணக்கிட்டிருந்தபடி ஒரு குறிப்பிட்ட அதிர்வு எண் (Frequency) உள்ள அலையும், சந்திரனுக்கும் பூமிக்கும் இடையில் உள்ள தூரத்தை உத்தேசித்து. 2, 4 செகண்டு இடைவெளியிட்டுப் பதில் கிடைத்ததும் ஆகும். எனவே, இதை விஞ்ஞானத் துறையில் ஒரு புது சகாப்த சிருஷ்டி என்றே சொல்லவேண்டும்.

குறிப்புரை

விளைவு - பலன். புறம்பான - வேறான. கோளம் - கிரகம்.

பயிற்சி

1. வாக்கியங்களில் அமைக்க:—சாதனம், பயிற்சி, தளம், தத்துவம், நுட்பமான.

2. பகுபத உறுப்புக் கூறு:—கொள்ளும், வரைந்து, தோன்றும்.

3. பிரித்துக் காட்டுக:—கீற்றுப்புள்ளி, எதிரொலி, தற்காப்பு.

வினாக்கள்

1. ராடார் சாதனம் எவ்விதத்தில் உதவுகிறது?

2. ராடாரின் தத்துவம் யாது?

3. ராடாரினால் ஏற்பட்ட எதிர்பாராத பயன் யாது?

4. 'குறைக்கதிர்க் குழாய் ஆசிலோகிராப்' என்ற கருவியின் உபயோகம் யாது?

5. ராடார் கருவியைச் சமீப காலத்தில் எதற்குப் பயன்படுத்தினார்கள்?

கட்டுரையாக்கம்

"ராடார்" என்பது பொருளாக 25 வரிகளில் ஒரு கட்டுரை வரைக.

# 3. இந்திய சிற்பங்கள்

## எல்லோராக் குகைக் காட்சிகள்

**திருமதி ஆர். எஸ். ருக்மிணி அம்மாள், எம். ஏ.**

எல்லோராக் குகைக் கோயிலைப் பார்க்கச் செல்கின்றவர்கள் நிஜாம் அரசாங்கத்தார் கட்டியிருக்கும் முஜாபரி பங்களாவில் தங்கலாம். யாத்திரிகர்களை அழைத்துக் கொண்டு போய்க் குகைக்கோயில்களைக் காட்டுவதற்கு அதிகாரி ஒருவரைச் சமஸ்தான அரசாங்கத்தார் நியமித்திருக்கின்றனர். இவர் பண்டைப்பொருள் பாதுகாப்பிலாகாவைச் சார்ந்தவர். இந்த அதிகாரியே எல்லோராக் குகைகளைப் பாதுகாக்கும் 'க்யுரேட்டர்' (Curator) என்னும் பதவியைத் தாங்குபவர். எல்லோராக் குன்றுகளில் முப்பத்து நான்கு குகைகள் உள்ளன. இவற்றைத் தென் கோடியினின்று ஒவ்வொன்ருகப் பார்த்துக் கொண்டே போவது நலம். இக் குகைகளைத் தென் கோடியிலிருக்கும் குகையிலிருந்து வடகோடியிலிருக்கும் குகை வரையில் வரிசையாக, ஒன்று இரண்டு, மூன்று என்று இலக்கமிட்டு எண்களால் குறிப்பிடுவது வழக்கம். தென்கோடியிலிருந்து பார்த்து வருங்கால் முதல் பன்னிரண்டு குகைகள் பௌத்த சமயத்தைச் சார்ந்தவைகளாக இருக்கின்றன. அவை கயிலாய ஆலயத்தை விடப் பழமையானவை.

பௌத்தர்களது குகைகளை இரண்டு விதமாகப் பாகுபாடு செய்யலாம். ஒருவகையான குகைகள் **விகாரங்கள்** எனப்படும். மற்றெரு வகையான குகைகள் **சைத்தியங்கள்** எனப்படும். விகாரங்களின் நடுவில் பிக்ஷுக்கள் தியானத்திற்காகவும் வழிபடுதலுக்காகவும் கூடுகிற ஒரு நடுக் கூடமும், இதனைச் சூழ அவர்கள் தங்கும் அறைகளும் இருக்கும். சைத்தியம் என்னும் குகைகளில் தூண்களோடு கூடிய சுற்றுப் பிரகாரமும், நடு மண்டபமும், அதன் கோடியில் குடை கவிழ்த்தாற் போன்ற மூலத்தானமும், மூலத்தானக்கோடியில் புத்த ஸ்தூபமும்

இருக்கும். முதல் பன்னிரண்டு பௌத்தக் குகைகளில் பத்தாவது குகை நீங்கலாக மற்றவை யாவும் விகாரங்களே யாகும். பத்தாவது குகை ஒன்றுதான் சைத்தியமாக அமைந்துள்ளது.

முதல் ஐந்து குகைகளை இரண்டாவது நூற்றாண்டி லும் மூன்றாவது நூற்றாண்டிலும் செய்திருக்கவேண்டும் எனச் சரித்திராசிரியர்கள் துணிகின்றனர். இரண்டாவது குகையில் இருக்கும் தூண்களின் போதிகைகள் அஜந்தா வின் 24-வது குகையிலுள்ள தூண்களிற் காணும் போதி கைகளைப்போல் அமைந்துள்ளன. சிற்பி, குகையில் சிங்காதனத்தின்மேல் அமர்ந்திருக்கும் புத்தரை வெகு அழகாகச் செதுக்கியிருக்கிறான்; புத்தருக்குப் பின்பக்கத் தில் நிற்கின்ற போதி சத்துவர்களைப் பக்கத்துச் சுவர் களில் மிகப் பெரிய உருவத்தில் செதுக்கியிருக்கிறான். மூன்றாவது குகையில், சிற்ப வேலை முற்றுப் பெறாத சில தூண்கள் உள்ளன. இக்குகையிலும் நான்காவது குகை யிலும் உள்ள தூண்களின் போதிகைகளைப் போன்றவை, அஜந்தாவில் சில குகைகளிற் காணப்படுகின்றன. ஐந்தாவது குகையில் தூண்களுக்கு மத்தியில் பிக்ஷுக் கள் படுத்து இளைப்பாறுவதற்காக அகலமான கட்டில் களைக் கல்லில் வெட்டி யமைந்திருப்பதைக் காணலாம். இங்கே இருபது பிக்ஷுக்கள் தங்க இருபது அறைகள் இருக்கின்றன. சிற்பி ஆறாவது குகையில் மூலத்தானத் தின் வாசலிலே துவாரபாலகர்களாகப் போதிசத்துவர் களையே செதுக்கி வைத்திருக்கிறான்.

ஏழாவது குகை முதல் பத்தாவது குகை வரைக்கும் தனிக் காட்சிகள் ஒன்றும் இல்லை. இவை யாவும் பாறையைக் குடைந்து செய்த சாதாரணக் குகைகளே யாம். அங்கங்கே சில அழகிய சிற்ப வேலைகள் காணப் படுகின்றன. பதினோராவது குகையைத் ‘தோதால்’ (இரட்டை அடுக்கு மாடி) என்றும், பன்னிரண்டாவது குகையை ‘தீன்தால்’ (மூன்று அடுக்கு மாடி) என்றும் கூறுகிறார்கள். பதினோராவது குகையில் மூன்று அடுக்கு மாடிகளாகக் குகைகள் அமைந்திருந்த போதிலும்,

அதனைமட்டும் ஏன் இரண்டு அடுக்கு மாடிகள் என்று குறிப்பிடுகின்றனரோ தெரியவில்லை.

தீன்தால் வெகு அழகான சிற்ப வேலைப்பாடுகளோடு விளங்குகின்றது. தரைமட்டத்திலிருக்கும் கூடத்தில் வழக்கமாக மூலத்தானம் அமைந்திருக்கும் இடத்தில் மிகப் பெரிய புத்த விக்கிரகம் ஒன்று வெகு அழகாக அமைந்துள்ளது. புத்தரைச் சூழப் போதி சத்துவர்கள் நிற்கின்றனர். தீன்தாலில் திறந்த வெளியான திண்ணையும் தூண்களோடு அமைந்த கூடமும் காணப்படுகின்றன. கூடத்தின் பின்கோடிச் சுவர் மிகவும் சிறந்த சிற்ப வேலைப்பாடுகளோடு மூலத்தானமும் அமையப் பெற்றுள்ளது. மேல்மாடியில் நாற்பத்திரண்டு தூண்களோடு அமைந்த கூடம் வெகு அழகாக இருக்கின்றது. தூண்கள் யாவும் சதுரமாக அமைந்துள்ளன. இவை அளந்து வைத்ததைபோலச் சமசதுரத்தில் இருக்கின்றன. தீன்தாலைக் கட்டிய சிற்பி கூடத்தின் கோடியில் புத்தர் பெருமான் அரியணையில் வீற்றிருக்கும் முறையில் சித்திரித்திருக்கிறான் : புத்தரின் அரியணையோடு இரண்டு மான்களையும் செதுக்கியிருக்கிறான்.

பத்தாவது குகை விச்வகர்மாவின் குகை எனப்படும். இதில் காணப்படுகின்ற சிற்ப வேலைகள் ஏழாவது நூற்றாண்டைச் சரர்ந்தவை எனச் சிற்பக்கலைஞர் துணிகின்றனர். சிற்பிகள் இக்குகைக்குள் வெளிச்சம் வருவதற்காகச் சாளரங்கள் அமைத்திருக்கிறார்கள். இதில் உள்ள ஸ்தூபம் மற்றைக் குகைகளில் இருக்கும் ஸ்தூபங்களை விடப் பெரிதாக இருக்கின்றது. இங்குள்ள புத்த விக்கிரகமும் மிகப் பெரியது. மரத்திலே சிற்றுளித் தச்சர்கள் செய்யும் வெகு நுட்பமான சிற்ப வேலைகளையெல்லாம் கல்லுளித் தச்சர்கள் குகையின் கற்களில் செய்து காட்டியிருக்கிறார்கள். இதில் உள்ள சிற்ப வேலைப்பாடுகள் யாவும் பிற பௌத்தக் குகைகளில் காணப்படுகின்றவைகளைவிட அதிசயமாகவே இருக்கின்றன.

பதின்மூன்றாவது குகை முதல் எட்டுக் குகைகள் இந்து சமயத்தைச் சார்ந்தவை. இவற்றுள் மிகவும்

பெரியவை கயிலாயக் கோயிலும், 'டுமார்லேனு' என்ற குகைக் கோயிலுமேயாம். முப்பதாவது குகையிலிருந்து முப்பத்துநான்காவது குகை முடிய ஐந்து குகைகள் சமண சமயத்தைச் சார்ந்தவை. எல்லோராவிலுள்ள குகைக் கோயில்களை நன்ருக ஆராய்ந்து காணவிரும்பினுல், முதல் நாளில் பன்னிரண்டு பௌத்தக்குகைகளையே பார்க்கமுடியும். ஒரு நாள் முழுவதும் கயிலாயக் கோயிலைப் பார்க்கச் செலவிடவேண்டும்.

இரவிலே எல்லோராவின் அமைதி மனிதரைத் திடுக்கிடச் செய்யும். எல்லோரா என்ற சிறிய குக்கிராமந்தான் இன்று அங்கே எஞ்சி இருக்கிறது. முன்னெரு காலத்தில் இங்கே இருந்த மாட்சிமையான நகரம் மறைந்து போயிற்று. நெடுந்தொலைவில் உள்ள குன்றுகளில் வாழும் நரிகள் தாலாட்ட, முஜாபரி பங்களாவில் அயர்ந்து உறங்கலாம். மறுநாள் உதயத்தில் எழுந்ததும், நாட்கடன்களை முடித்துக் கொண்டு, காலை உணவருந்திய பின்பு கயிலாயக் கோயிலைக் காணப் போவதே நலம். எல்லோராவில் அகலியாபாய் என்னும் அரசி கட்டிய கோயில் ஒன்று உளது. அதில் பூசாரியாக இருக்கின்றவனிடம் முன்னரே சொல்லி ஏற்பாடு செய்துகொண்டால், அவன் வேளை தோறும் உணவு ஆக்கிக் கொடுப்பான்.

இரண்டாவது நாள் பார்வையிடப்போகும் பதினேழு குகைக் கோயில்கள், ஏழாவது நூற்ருண்டு முதன் ஒன்பதாவது நூற்ருண்டிற்குள் ஆக்கப்பட்டவை எனத் துணியலாம். இவை இந்து சமயத்தைச் சார்ந்தவை; இராட்டிரகூட மன்னரின் ஆதிக்கம் ஓங்கியிருந்த காலத்தில் உருவாக்கப் பட்டவை. இவ்வரசர் பரம்பரையைச் சார்ந்த ஒரு மன்னனைப் பற்றிய சிலாசாசனங்கள் தசாவதாரம் என வழங்குகின்ற பதினைந்தாவது குகைக் கோயிலிலும், பதினுருவது குகைக்கோயிலாகிய கயிலாயத்திலும் காணப்படுகின்றன. இப்பதினேழு குகைக்கோயில்களிலும் அம்மையப்பரின் உருவங்களைச் சிற்பிகள் செய்து வைத்திருக்கின்றனர். இச்சிலை உருவங்கள் யாவும் அக்

காலத்துச் சிற்ப நூல் இலக்கணத்திற்குப் பெரிதும் பொருத்தமானவை.

பதினுன்காவது குகைக் கோயிலில் தூண்களோடு அமைந்த பெரிய கூடம் ஒன்றுளது. இக்கூடத்தின் சுவர்களில் நடராசர், கயிலையங்கிரியைப் பெயர்த்த இராவணன், மாகாளி, திருமால், இலக்குமி முதலிய சிறந்த உருவங்களைச் சிற்பிகள் சிறப்புறச் செதுக்கி யிருக்கிறுர்கள். கானகத்தில் உலவுகின்ற கொடிய வேங்கைப் புலியும் தான் ஈன்ற குட்டிக்கு இடர் உறும்பொழுது தன் நிலை மறந்து தன் உயிரைத் துரும்பாய்க் கருதிக் குட்டிகளைக் காக்கத் துணியும். இவ்வாறே உலகிலுள்ள எவ்வுயிரும் தன்னினத்தைக் காக்கும் தாயுள்ளம் பெற்று விளங்குகின்றது. இத்தகைய தாயுள்ளத்தையே நம் முன்னேர் காளி என்னும் சகுணமூர்த்தியாகச் சித்திரங்களிலும் சிற்பங்களிலும் அமைத்துக் காட்டியுள்ளனர். பராசக்தி தன் மக்களுக்குத் தீங்கிழைக்கின்றவைகளை ஒழிக்கும் பொருட்டு மிகக் கொடிய உருக்கொண்டு தோன்றித் தீமையோடு போராடுவாள்.

பதினைந்தாவது குகைக் கோயிலாகிய **தசாவதாரக் கோயிலின்** சிறு மூலத்தானங்களை உடைய நடுக்கூடம் ஒன்று உளது. இக்குகைக் கோயில் இரண்டு மாடிகளை உடையது. இதில் சைவ வைணவச் சிற்பங்களைக் காணலாம். ஈங்குச் சிவபெருமானைக் காலபைரவனுக் காட்டியிருக்கும் சிற்பம் வெகு கவர்ச்சியானது. இத்தொகுதியைச் சார்ந்த குகைக் கோயில்களில் இராவணனது கோயில் எனப் பெயர்பெறும் இருபத்தோராவது குகைக் கோயிலும், 'டுமார்லேஞ' எனப்படும் இருபத்தொன்பதாவது குகைக்கோயிலுமே சிறந்த பொலிவுடையவை. இருபத்தைந்தாவது குகையும், இருபத்தெட்டாவது குகையும் இந்து சமயக் குகைக்கோயில்களில் வெகு புராதனமானவை. இவைகளிலும் இந்த புராணச் சிற்பங்கள் வெகு அழகாக அமைந்திருக்கின்றன. ஈரைந்தலையானது குகைக் கோயிலின்கண் அமைந்துள்ள சிற்பங்கள் நுண்ணிய வேலைபாடுகளோடு திகழ்கின்றன. 'டுமார்

லேணு ' என்னும் குகைக்கோயில் நூற்றைம்பது சதுர அடி உடைய பெரிய கூடமாக அமைந்துள்ளது. இதில் தூண் கள் வரிசையாக அமைந்துள்ளன. இதற்குச் செல்லும் மூன்று மணிவாயில்களும் வெகு அழகான சிற்ப வேலைப் பாடுகளோடு திகழ்கின்றன. இக் கோயிலுள் மிகவும் அழகாக அமைந்த மூலத்தானமும் இருக்கின்றது. இதன் இருமருங்கிலும் ஆறு அறுத்த மலைப் பக்கங்கள் காணப் படுகின்றன. இப்பக்கங்களில் கோயிலுக்குள் செல்லும் படிக்கட்டுகளும் வாசல்களும் அமைந்திருக்கின்றன. படிக்கட்டின் வழியாக இறங்கினால் கீழே ஓடும் புண்ணிய நதிக்குச் செல்லலாம். கல்லில் செதுக்கிய சிங்கங்கள் வாசல்களில் காவலாக அமைந்திருப்பதைக் காணலாம். அம்மையப்பர் தம் திருமண விழாவைச் சிற்பி வெகு அழகாக உட்பக்கச் சுவரில் செதுக்கியிருக்கிறான்.

எல்லோராக் குகைக் கோயில்களின் நடுநாயகமாய்த் திகழ்வது கயிலாயக் கோயிலேயாம். இதனைப் பதினாறு வது குகைக் கோயிலாக வரிசை இலக்கம் இட்டுக் குறிப் பிடுவது வழக்கம். இக்கோயில் திருப்பணி முடிவுற்றுப் பதினொரு நூற்றாண்டுகள் கடந்து விட்டன. பூமத்திய ரேகையில் எழுகின்ற கதிரவனின் கொடிய ஒளியாலும் மழைகளாலும் பல்லாண்டுகளாகத் தாக்குண்டபோதி லும், இக்கயிலாயக் கோயில் பழுதுறாது இன்றளவும் இருப்பதே இயற்கை அதிசயம் எனலாம்.

எல்லோராவின் குகைக்கோயிலுள், தனி மாண் புடையதாய்க் கம்பீரமான தோற்றத்தோடு திகழ்கின்ற கயிலாயக் கோயிலின்கண் ஆயிரக்கணக்கான சிற்பப் பொலிவுகளைப் பார்க்கலாம். ஈங்குள்ள காட்சிகள் யாவும் காணுந்தோறும் காணுந்தோறும் வியப்பைத் தருபவை. ஒவ்வொரு சிற்ப வேலைப்பாடும் தனித்தனிச் சிறப்போடு அமைந்தது. இவற்றை ஆக்கிய சிற்பியின் ஆர்வத்தை யும் சிற்பக் கலையில் அவர்தமக்கு இருந்த பக்தியையும் ஈங்குள்ள சிற்பங்கள் தெளிவாக எடுத்துக் காட்டு கின்றன.

நாம் கைலாயக் கோயிலில் நுழைந்ததும், முதன்

முதலில் இரண்டு மாடிகளோடு விளங்கும் நந்தி விமானத்தைக் காண்போம். இந்த விமானம் முழுவதும் வெகு உயர்ந்த சிற்ப வேலையின் நுட்பங்கள் நிறைந்துள்ளன. செதுக்கு வேலையும், பிறவும் வெகு கவர்ச்சியாக அமைந்துள்ளன. இந்த விமானத்தின் அடியில் சிவபெருமானது ஊர்தியாகிய நந்தியின் சிலை உருவம் வெகு அழகாக அமைந்துள்ளது. அந்த விமானத்தின் ஒரு பக்கத்தில் நிற்கும் கோபுரத்தையும், மற்றொரு பக்கத்தில் இருக்கும் தலைமைக் கோயிலையும் சேர்த்து இணைக்கின்ற கற்பாலம் ஒன்று அமைந்துள்ளது. கூடத்தின் இருமங்கிலும் ஒரே அளவில் ஒரே அமைப்பாகச் செய்யப்பெற்றிருக்கும் இரண்டு கற்றூண்கள் அழகிய சிற்ப வேலைப்பாடுகளோடு விளங்குகின்றன. இக் கற்றூண்கள் நாற்பத்தொன்பது அடி உயரம் உடையவை. இவற்றின் வடிவ அமைப்பு வெகு நேர்த்தியாக இருக்கின்றது. இவற்றின்மீது சிவ பெருமானின் முத்தலைச் சூலங்கள் அமைந்துள்ளன. ஒவ்வொரு தூணின் அடியிலும் முழு அளவிலே செய்த கல்யானையொன்று நிற்கின்றது. இவை இமய மலையின் கண் இடையறுது கவிகின்ற கார்முகிலைக் குறிக்கின்றதெனச் சிலர் கருதுகின்றனர். இக் கம்பங்களின் இடது பக்கத்தில் கங்காதேவியின் ஆலயம் முற்றுப்பெறுதிருக்கின்றது. இவ்வாலயத்தினுள் பலவகைச் சிற்பமாகச் செதுக்கு வேலையுடன் சரஸ்வதி, கங்கை, யமுனை ஆகிய மூன்று நீர்த்தேவியரின் சிலையுருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இம்மூன்று திருநதிகளும் இமயக்குன்றுகளினின்று எழுகின்றவையாதலின் தூய நதிகளாக விளங்குபவை. சிற்பி, இத்தூயநதித்தேவியின் சிற்பத்தைச் சூழ்ந்திருக்கும் நெற்றி மாடங்களில் தண்ணீர்த் தொட்டிகளை வெகு அழகாய்ச் செதுக்கியிருக்கிறுன்.

சூழவுள்ள சிற்ப அலங்காரக் குவியல்களின் நடுவண். தொண்ணூற்றுறு அடி உயரமுள்ள விமானத்தோடு அமைந்த கயிலாச நாதரது ஆலயம் அமைந்துளது. அக்கோயிலின் விமானத்திற்கு அமைந்த அடிப்பீடம் இருபத்தேழு அடி உயரமுடையது. இந்தப் பீடத்தின் பக்கங்

களில் தந்தங்களையும், துதிக்கைகளையும், தலைகளையும், பாதி உடலையும் வெளியே நீட்டிக்கொண்டு தோளோடு தோள் பொருந்த நிற்கின்ற கல் யானைகள் வரிசையாக அமைத்துள்ளன. கயிலாய விமானம் முழுவதையும் நாற் புறமும் வரிசையாக நிற்கின்ற கல் யானைகளின் முதுகின் மேல் தூக்கி வைத்திருப்பது போன்ற காட்சியைச் சிற்பி காட்டியிருக்கின்றான். இந்த மதகரிப் பீடத்தின் மேல் அமைந்துள்ள கயிலாய விமானம் உலகத்தின் எட்டாவது அதிசயமெனப் புகழ்பெற்றது.

கைலாயக் கோயிலுள் ஐம்பத்து மூன்று சமசதுர அடி அளவுடைய மணிக்கூடமும் கூடத்தின் கூரையைத் தாங்கும் பதினாறு தூண்களும் இடையரு வியப்பை விளைக் கின்ற அரிய பெரிய சிற்ப வேலைப்பாடுகளோடு விளங்கு கின்றன. இக்கூடத்தினின்று மூலத்தானத்திற்குச் செல் கின்ற மணிவாயில் முழுவதும் சந்தன மரத்தில் செதுக்கிக் காட்டுகின்ற சித்திர வேலைப்பாடுகளை யெல்லாம் சிற்பி வெகு திறமையாகச் செதுக்கிக் காட்டியிருக்கின்றான்.

அந்த மணிவாயிலைக் கடந்ததும் ஆறு படிகள் இறங் கினால் கயிலாயப் பெருமானார் திருக்கோயில் கொண் டெழுந்தருளி யிருக்கும் உட்கோயிலின்கட் புகலாம். இந்து சமயக் கோயில்களின் மூலத்தானம் இருள் மிகுந்த சிறு அறையாகவே யிருக்கும். அவ்வாறே இவ்விடத்திலும் மூலத்தானம் அமைந்துளது. இதனுள் சிவலிங்கம் இருப் பதைக் காணலாம். உட்கோயிலின் திண்ணிய ஒற்றைக் கற்சுவர்களின் மீது நடுவிமானம் வெகு மாட்சியான சிற்பப் பதுமைகளோடு அமைந்துள்ளது. கர்ப்பக் கிரு கத்தைச் சூழச் சுற்று மண்டபம் அமைந்திருக்கின்றது. இதன்கண் பிள்ளையார், உமையம்மையார், முருகன் முத லியோர் ஆலயங்களும், அவற்றோடு வேறு இரு கோயில் களும் காணப்படுகின்றன. கைலாயக் கோயிலின்கண் சிற்ப நுணுக்கங்களோ, சிலை உருவங்களோ இல்லாத தூணையும் சுவரையும் காணமுடியாது. புராணக் கதை களைச் சித்திரித்துக் காட்டுகின்ற சிற்பங்களும் தாமரை மலரும், அன்னமும், கிளியும், மயிலும், பல்வகைக் கொடி

களும், தளிர்களும் அமைந்த பொதிகைகளும், தூண்களும், தூண்களின் அடிப்பீடங்களும் உத்தரங்களும் முடிவிலா அலங்காரக் குவியலாக இக்கயிலாயக் கோயிலில் விளங்குகின்றன.

வான்மீகி இராமாயணத்தின் உத்திர காண்டத்தில், பதினாறுவது சருக்கத்தில் இராவணனது திக்குவிசய வரலாற்றின் ஒரு பகுதி சைவசித்தாந்தத்தின்கண் மிகப் பெரிய உண்மையை விளக்கும் திருட்டாந்தமாக அமைவது. இராவணன் கயிலையங்கிரியைப் பெயர்க்க முயன்றதும் சிவபெருமான் காற்கட்டைவிரலால் கயிலையங்கிரியை அழுத்தி அரக்கனது செருக்கை அடக்கியதும் அரக்கனது செயலால் கயிலைக் குன்று குலுங்கியதும் அப்பொழுது ஊடிப் பிரிந்த உமையம்மையார் அஞ்சி ஓடி வந்து இறைவனைத் தழுவியதும், இராவணன் தன் கரங்களில் ஒன்றைப் பெயர்த்து அதில் தன் உடல் நரம்பை இழுத்துக் கட்டி வீணை ஒன்றைச் செய்து சிவபெருமானைப் போற்றிப்பாடி அருள் பெற்றதுமாகிய நிகழ்ச்சிகள் சிற்ப ஓவியக் கலைஞருக்குச் சிறந்த செய்திகளாயின. இந் நிகழ்ச்சிகளைக் கயிலாயக் கோயிலை ஆக்கிய சிற்பியும் இராவணேச்வரனது ஆலயத்தில் வெகு அழகான பலகைச் சித்திரமாகச் செதுக்கி வைத்திருக்கின்றான். இது கண்ணாரக் கண்டு களித்தற்கேற்ற அழகேயன்றிப் புத்தக வாயிலாய்த் தெளிவதற்கமைந்த அழகன்று.

## குறிப்புரை

போதிகைகள் - தூண்மேல் வைக்கும் தாங்கு கட்டை. பிக்ஷுக்கள் - பௌத்தத் துறவிகள். துவார பாலர் - வாயில் காப்போர். ஸ்தூபம் - கோபுரம். ஈரைந்தலையான் - பத்துத் தலைகளுடைய இராவணன். அம்மையப்பர் - உயிர்கட்குத் தாயுந்தந்தையுமாயுள்ள சிவபெருமான். ஊர்தி - வாகனம். நடுவண் - நடுவில். இடையறு - இடைவிடாத. நெடுந்தொலை - வெகுதூரம்.

## பயிற்சி

1. *சிற்றுளி, கற்பாலம், கற்றூண்*—பிரித்துக் காட்டித் தொடர் இலக்கணமும் கூறுக.

2. இரு மருங்கிலும், தரைமட்டம் நெடுந்தொலை, தன்னினத்தைக் காக்கும் தாயுள்ளம், நடுக்கூடம்—இத்தொடர்களை நும் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக.

## வினாக்கள்

1. எல்லோராக் குகைக் கோயில்களைப் பார்க்கச் செல்பவர் அவ்விடத்தை அடைவது எப்படி?

2. பௌத்தர்களது குகைகளை எவ்வாறு பாகுபாடு செய்யலாம்?

3. சைத்தியங்கள் எவ்வாறு அமைந்திருக்கின்றன?

4. முதல் ஐந்து குகைகளைப்பற்றி நீயிர் அறிந்ததைக் கூறுக.

5. ஏழு முதல் பத்து வரையுள்ள குகைகளில் காணத்தக்கவை எவை?

6. தீன்தாலின் காட்சிகளைச் சுருக்கி வரைக.

7. விசுவகர்மாவின் குகையின் அமைப்பு எவ்வாறுளது?

8. டுமார்லேனு, தசாவதாரக் கோயில், கயிலாயக் கோயில் உலகத்தின் எட்டாவது அதிசயம்—இவைகளின் சிற்பச் சிறப்பைக் கூறுக.

## கட்டுரையாக்கம்

'இந்திய சிற்பமும் எல்லோராவும்' என்னும் பொருள் பற்றி ஒன்றரைப் பக்க அளவில் கட்டுரை வரைக.

# 4. தமிழகத்துக் கோவில்கள்

டாக்டர் மா. இராசமாணிக்கம் பிள்ளை,
எம்.ஏ., எம்.ஓ.எல்., எல்.டி.

தமிழகத்தில் இன்றுள்ள கோவில்கள் எப்போது தோன்றின? அவற்றிற்கு மூலம் என்ன? கோவிற்கலை உணர்வு தமிழர்க்கே உரியதா? பண்டைக் காலத்தில் 'கோவில்கள் எவற்றிற்குப் பயன்பட்டன? நமது கடமை என்ன?' என்பன போன்ற கேள்விகட்கு விடை காணலே இவ்வாராய்ச்சிக் கட்டுரையின் நோக்கமாகும்.

**கோவிலும் கல்வெட்டும்**

"செங்கல், சுண்ணும்பு, மரம், உலோகம் இவை இல்லாமல் மும்மூர்த்திகட்கு விசித்திர சித்தன் (மகேந்திர பல்லவன்-அப்பர் காலத்தவன்) அமைத்த கோவில் இது" என்னும் கல்வெட்டு, மண்டபப்பட்டு என்னும் இடத்துக் கோவிலிற் காணப்படுகிறது. இதன் காலம் கி. பி. 615–630 ஆகும். இக் கல்வெட்டால் அறியத்தக்க செய்திகளாவன :

(1) மகேந்திரன் காலத்திற்குமுன் தமிழகத்தில் கற்கோவில்கள் இல்லை. இருந்த கோவில்கள் செங்கல், சுண்ணும்பு, மரம், உலோகம் இவற்றால் ஆனவை.

(2) மகேந்திரன் காலத்திற்கு முன்னரே தமிழர் கோவில் கட்டத் தெரிந்திருந்தனர். ஆயின் அவை மண், மரம் முதலியவற்றாலாகி அழியத்தக்கன.

(3) இங்ஙனம் அழியத்தக்க பொருள்களால் அமைத்த கோவில்களையே மகேந்திரன் கற்களில் செதுக்கி அமைத்தனன்.

தரையும் சுவர்களும் செங்கற்களால் ஆனவை. மேற்கூரை மரத்தால் ஆயது. அங்கங்கு இணைப்புக்காக ஆணிகள் முதலியன பயன்பட்டன. இங்ஙனம் இயன்ற கோவில்களை இன்று மலையாள நாட்டிற் காணலாம். இங்ஙனம் கோவில்களை அமைப்பதில் தமிழர் பண்பட்டிராவிடில், திடீரெனக் கி. பி. 7-ஆம் நூற்றாண்டிலிருந்து பல

கோவில்கள் தமிழ் நாட்டில் தோன்றிவிட்டன எனல் பொருளற்றதாய்விடும்.

விமானங்கள், 'தூயது, கலப்பு, பெருங்கலப்பு' என மூவகைப்படும். கல், செங்கல், மரம் முதலியவற்றில் ஒன்றைக் கொண்டே அமைக்கும் விமானம் 'தூய விமானம்' எனப்படும். பல பொருள்களால் அமைவது 'பெருங் கலப்பு விமானம்' ஆகும். இது கட்டடக் கலைநூற் கூற்றுகும். இதனாலும், பண்டைக் காலத்திற் கோவில்கள் இருந்தமையும் விமானங்கள் உண்மையும் அறியலாம்.

இனி, தமிழகத்தில் மகேந்திரனுக்கு முன்பே கோவில்கள் இருந்தமைக்குக் கல்வெட்டுக்களே சான்றுதல் காண்க.

திருக்கழுக்குன்றத்துக்குக் கோவிற் பெருமானுக்குக் **கந்த சிஷ்ய பல்லவன்** (கி. பி. 436-460) நிலம் விட்டதாகவும் அதனை நரசிம்மவர்மன் தொடர்ந்து நடத்தியதாகவும் ஆதித்தசோழன் கல்வெட்டுக் கூறுகிறது.

'தென்னவனாய் உலகாண்ட' கோச்செங்கணான் (கி. பி. 450-500) திருவக்கரையில் பெருமானுக்கு ஒரு கோவில் கட்டியிருந்தான்; அதிராசேந்திரன் அதனைக் கல்லாற் புதுப்பித்தான்; செம்பியன் மாதேவியார் திருவக்கரைக் கோவிலைக் கல்லாற் புதுப்பித்தார்; திருக்கோடிகாவில் இருந்த செங்கல் விமானத்தையும் கருங்கல் விமானமாக அமைத்தார்.

## சங்க காலத்துக் கோவில்கள்

பண்டைத் தமிழகத்தில் தொல்காப்பியர் காலத்திலே வீரர் வணக்கத்துக்குரிய கோவில்கள் இருந்தன. முருகன், திருமால், காடுகிழாள் முதலிய தெய்வங்கட்குக் கோவில்கள் இருந்தன. தொகை நூல்களில் சிவபெருமான், முருகன், திருமால் பலராமன் இவர்கள் சிறப்புடைக் கடவுளாகக் கூறப்படுவதை நோக்குக. ஆலமர் செல்வற்கு நீல நாகம் நல்கிய கலிங்கத்தை, ஆய்வேள் அளித்தனன் என்று புறநானூறு புகலல் காண்க. இதனால் அக்காலத்தில் கோவிலும் கடவுள் உருவச் சிலையும் இருந்

தமை நன்கறியலாம். கி. பி. 2-ஆம் நூற்றுண்டில் இயற்றப்பெற்ற சிலப்பதிகாரத்தும் மணிமேகலையிலும் காணப்படும் கோவில்கள் பல. மணிமேகலையில்,

" காடமர் செல்வி கழிபெருங் கோட்டமும்
அருந்தவர்க் காயினும் அரசர்க் காயினும்
ஒருங்குடன் மாய்ந்த பெண்டிர்க் காயினும்
நால்வேறு வருணப் பால்வேறு காட்டி
இறந்தோர் மருங்கில் சிறந்தோர் செய்த
குறியவும் நெடியவும் குன்றுகண் டன்ன
சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டமும் "

என வரும் அடிகள் வீரர், அருந்தவர், அரசர், பத்தினி மார் இவர்க்குக் கோயில்கள் இருந்தமையை வலியுறுத்து கின்றன. சுடுமண் 'செங்கல்' கோயில்கள் குன்றுகள் போல உயர்ந்திருந்தன என்பது அறியத்தக்கது.

## அற்புத வேலைப்பாடு

இக்கோயில்களும் அரசர் மாளிகைகளும் மண்டபங் களும் சிற்பநூல் வல்லுநரால் நாள் முறித்து, நாழிகை பார்த்து, நேரறி கயிறிட்டுத் திசைகளையும், அத்திசை களில் நிற்கும் தெய்வங்களையும் நோக்கி வகுக்கப்பட்டன என்பது,

" ஒருதிறம் சாரார் அரைநாள் அமையத்து
நூலறி புலவர் நுண்ணிதிற் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வம் நோக்கிப்
பெரும்பெயர் மன்னர் கொப்ப மனைவகுத்து "

என வரும் 'நெடுநல்வாடை' அடிகளாலும்,

" அறக்களத் தந்தணர் ஆசான் பெருங்கணி
சிறப்புடைக் கம்மியர் தம்மொடு சென்று
மேலோர் விழையும் நூல்நெறி மாக்கள்
பால்பெற வகுத்த பத்தினிக் கோட்டம் "

என வரும் சிலப்பதிகார அடிகளாலும் நன்குணரக்கிடைத் தல் காண்க.

'அரசர் கோயில்களும் தெய்வங்களின் கோயில்களும் சுற்றுமதில் உடையன ; உயர்ந்த வாயில்களைப் பெற்றன; அவ்வாயில்கள்மீது உயர்ந்த மண்ணீடுகள் (கோபுரங்கள்)

உடையன ; அம்மண்ணீடுகளில் வண்ணம் தீட்டப்பெற்ற வடிவங்கள் அமைந்திருந்தன' என்பது மணிமேகலை, மதுரைக்காஞ்சி முதலிய நூல்கள் நுவலும் செய்தியாகும்.

இக்கோயில்கள் அனைத்தும் செங்கற்களால் அமைந்தவை. மேலே உலோகத்தகடுகள் வேயப்பட்டிருந்தன ; சாந்து பூசப்பட்டிருந்தது. இங்ஙனமே உயர்ந்த மாட மாளிகைகளும் இருந்தன.

"விண்பொர நிவந்த வேயா மாடம்"
"சுடுமண் ஓங்கிய நெடுநகர் வரைப்பு"
"நிறைநிலை மாடத்து அரமியந் தோறும்"

இவ்வாறு அமைந்த பெரிய கட்டிடங்களைச் சுற்றியிருந்த சுவர்கட்கு உயர்ந்த கோபுரங்களையுடைய வாயில்களும், அவ்வாயில்கட்குத் துருப்பிடியாதபடி செந்நிறம் பூசப்பட்ட இரும்புக் கதவங்களும் பொருத்தப்பட்டிருந்தன என்பது நெடுநல்வாடை அடிகள் (76, 88) அறிவிக்கும் அரிய செய்தியாகும். சிதம்பரத்தில் பதஞ்சலி முனிவர்க்கு இறைவன் நடன கோலத்தைக் காட்டி அருளினன் என்பது புராணச் செய்தி. பதஞ்சலி முனிவர் காலம் கி. மு. 150 என்று ஆராய்ச்சியாளர் அறிவர். எனவே, கோயில் எனச் சிறப்புப் பெயர் பெற்ற சிதம்பரத்தில் உள்ள திருக்கோவில் கி. மு. 150-க்கு முற்பட்டதாதல் அறிக. அங்குள்ள நடராசர் மண்டபம் மரத்தால் கட்டப்பட்டிருத்தலும் அதன் பழமைக்குச் சான்றாகும்.

கி. பி. 200 முதல் 250-க்குள் தமிழகத்தை யாண்ட கோச்செங்கட் சோழன் 70 கோவில்கள் கட்டியதாகத் திருமங்கையாழ்வார் கூறியுள்ளார். அவர்க்கு முன்னரே அப்பரும் சம்பந்தரும் இதனைத் தம் பதிகங்களிற் குறித்துள்ளனர்.

### தேவார காலத்துக் கோயில்கள்

தேவார காலத்தில் தமிழகத்தில் ஏறத்தாழ 200 கோவில்கள் இருந்தன. அவை அனைத்தும் மரம், செங்கல், மண், உலோகம் இவற்றால் ஆனவை. அவை (1) பெருங்கோவில் (2) இளங்கோவில் (3) மணிக்கோவில்

(4) கரக்கோவில் (5) தூங்கானை மாடம் முதலிய பல வகைப்படும். இவற்றுள் தம் காலத்தில் பெருங்கோவில்கள் 78 இருந்தன என்று அப்பரே அறைந்துள்ளார். பெரிய கோவில்களைப் பழுது பார்க்குங்கால் மூர்த்தங்களை எழுந்தருளச் செய்து வந்துள்ள (பெரிய கோவில் திருச்சுற்றில் உள்ள) சிறிய கோவிலே இளங்கோவில் எனப்படும். பெரிய கோவிலுக்கு அண்மையில் உள்ள சிறிய கோவிலும் இளங்கோவில் எனப் பெயர் பெறும். எனவே, தேவார காலத்திற்கு முன்பே பல கோவில்கள் புதுப்பிக்கப்பட்டன என்பது தெளிவாகிறதன்றோ? தேவார காலத்தில் விமானம் கொண்ட கோவில்கள் இருந்தன என்பது பெண்ணுடைகம், தூங்கானை மாடம் கோவில்களின் அமைப்பைக் கொண்டு நன்கறியலாம். விமானம் 'தூங்கும் யானை' வடிவில் அமைந்ததாகும். திரு இன்னம்பர், திருத்தணிகைக் கோவில் விமானங்கள் இம்முறையில் அமைந்தவை. திரு அதிகைக் கோவில், திருக்கடம்பூர் (இவற்றின் உள்ளறைகள் மூலஸ்தானம்) தேர் போன்ற அமைப்பு உடையவை; உருளைகளும் குதிரைகளும் பூட்டப் பெற்றவை. திருச்சாய்க்காட்டுக் கோவிலை ஒட்டித் தேர் போன்ற விமானம் ஒன்று உருளைகளுடன் உள்ளது.

### பழைய கோவில்கள்

இந்த விமான அமைப்புடைய தேர் போன்ற கோவில்களே பழையவை. இன்று காணப்படும் கோவில்களை அடுத்துள்ள தேர்கள் மிகப்பழைய காலத்தில் மரக்கோவில்களாக இருந்தவை. மனிதன் மரக்கோவில்களைப் போலச் செங்கற்களைக் கொண்டு பிற்காலத்தில் கோவில்களை அமைத்தான். சான்றாக, நகரியில் உள்ள சில கோவில்களைக் காணலாம். அவை கி. மு. 250-இல் ஆக்கப்பட்டவை. அவற்றைச் சுற்றிக் கற்சுவர்கள் உள்ளன. ஆயின், கோவில்கள் மரத்தால் கட்டப்பட்டவையே யாகும்.

மாமல்லபுரத்தில் உள்ள ஒற்றைக்கல் கோவில்கள் எல்லாம் பல்லவர் காலத்தில் இருந்த தமிழ்நாட்டுக்

கோவில்களைப் போன்றவையே என்பதைப் பார்த்தவுடன் கூறிவிடலாம் என அறிஞர் லாங்ஹர்ஸ்ட் குறித்தல் காண்க.

### திராவிடக் கலை

கோவில் கட்டுதல் திராவிடரது பழக்கம் ஆகலாம். அதனைப் பிற்காலத்தில் ஆரியர் கைக்கொண்டனர். தூபி, சைத்தியம் என்பன திராவிடருடையன. இவற்றை ஆரியர் கடன் பெற்றனர். இவை பிற்காலத்தில் இந்து சமயக் கோவில்களிற் காணப்பட்டன. இவற்றையே பௌத்தர் மேற்கொண்டனர். விமான வகைகள் பல தென் இந்தியாவில் உண்டு. அவை யாவும் கல்லறைகளி லிருந்து தோன்றின என்பது தவறாகாது. தென் கன்னடக் கோட்டத்தில் உள்ள 'முதுபித்ரி' என்னும் இடத்திற் காணப்படும் குருமார் கல்லறைகளில் மூன்று முதல் ஏழு அடுக்குகள் கொண்ட விமானம் காணலாம். சதுரத்தின்மேல் சதுரம் வைத்துக் கட்டப்பட்ட ஏழு அடுக்குகள் கொண்ட சதுரக் கல்லறைகள் பல இந்நாட்டில் உண்டு. இவ்வமைப்புக்கள் நாளடைவில் பெரிய விமானங்களாக மாறிவிட்டன என்பதில் ஐயமில்லை.

தென்னாட்டுக் கட்டடக்கலை தமிழகத்துக்கே உரியது. இன்றுள்ள வானளாவிய கோபுரங்கள் விமானங்கள் இவற்றிற் காணப்படும் வேலைப்பாடுகள் அனைத்தும் இந்நாட்டுப் பழைய வேலைப்பாடுகளிலிருந்து வளர்ச்சியுற்றனவே ஆகும். இந்த வளர்ச்சி பல நூற்றாண்டுகளாக உண்டானவை. மனிதக் குரங்கின் மண்டை ஓட்டிலிருந்து இன்றைய மனிதனது மண்டை ஓடு வளர்ச்சியுற்றாற் போலவே தமிழகக் கட்டடக் கலையும் வளர்ச்சி பெற்று வந்ததாகும். இதன் உண்மையை மாமல்லபுரத்துத் தேர்களைக் கொண்டும், திருப்பாதிரிப் புலியூரில் உள்ள சிவனார் கோவில் வேலைப்பாட்டைக் கொண்டும் செவ்வனே அறியலாம்.

**கோயில்கள் பயன்பட்ட வகை**

(1) சங்ககாலத்துக் கோவில்கள் அழியக் கூடிய பொருள்களால் ஆனவை. ஆதலால் நமக்குக் 'கல் வெட்டுகள்' கிடைக்கவில்லை. பின்வந்த பல்லவர் கற் கோயில்கள் அமைத்தனர். ஆதலின் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. அவர்க்குப் பின் வந்த சோழர் பழைய கோவில்களைக் கற்கோவில்களாக மாற்றினர்.

ஆதலின் அழியா நிலையுடைய கல்வெட்டுகள் தோன் றின. அவை கோவில் அறப்பணிகளைக் குறிக்க எழுந் தன. ஆயினும் அரசர் மரபு, போர்கள், அரிய செயல்கள் இன்ன பிறவும் முதலில் பொறிக்கப்பட்டிருந்தன. அக் குறிப்புக்களே இன்று தமிழக வரலாற்றிற்கு அடிப்படை யாக இருந்து உதவுகின்றன.

(2) கோயிலை அடுத்துச் சமய வளர்ச்சிக்குரிய மடங் கள் இருந்தன. அவை சமயக் கல்வியைப் புகட்டின. விழாக்களைக் காணவந்த அடியார்கட்கு உண்டியும் உறை யுளும் உதவின. அம்மடங்கட்குப் பலர் தானம் அளித் துப் பாதுகாத்துவந்தனர்.

(3) கோவிலை அடுத்து மருத்துவச் சாலை இருந்தது. இதனை தஞ்சாவூர்ப் பெரிய கோவில் கல்வெட்டால் அறியலாம்.

(4) நடனம், இசை, நாடகம் முதலிய நாகரிகக் கலை கள் கோவில்களில் வளர்க்கப்பெற்றன. இவற்றில் பண் பட்ட பெண்மணிகள் இருந்தனர். அவர்கள் அடிகள்மார், மாணிக்கத்தார், கணிகையர், உருத்திர கணிகையர் எனப்பட்டனர். தஞ்சைப் பெரிய கோவிலில் மட்டும் 400 பேர் இருந்தனர். காஞ்சி முத்தீசுவரர் கோவிலில் 42 அடிகள்மார் இருந்தனர். பெருங்கோவில்களில் எல்லாம் நடன அரங்கு, இசை அரங்கு, நாடக அரங்குகள் இருந்தன.

(5) கோவிலில் 'தருக்க மண்டபம்', 'பிரசங்க மண் டபம்' என்பனவும் இருந்தன என்பதைத் திருவொற்றி யூர்க் கோவிற் கல்வெட்டுக் கொண்டு அறியலாம். பாரதம், ஆகமம் போன்ற நூல்களைப் பொதுமக்கட்குப்

படித்துக் காட்டக் கோவில்களில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

## குறிப்புரை

பெருங்கணி - தலைமை நிமித்திகன். கோட்டம் - கோயில். வண்ணம் - நிறம். நிவந்த - உயர்ந்த, நெடு நல்வாடை - எட்டுத் தொகை நூல்களுள் ஒன்று. மூர்த்தங்கள் - விக்கிரகங்கள். ஆலமர் செல்வர் - கல்லால விருக்ஷத்தினடியில் எழுந்தருளியுள்ள சிவபெருமான். கலிங்கம் - ஆடை. காடமர் செல்வி - துர்க்கை, காளி.

## பயிற்சி

1. இப்பகுதியில் கோயிலாகக் குறிக்கப்பட்டவற்றின் பெயர்களைக் குறிக்க.
2. மணிமேகலை, நெடுநல்வாடை, பூங்கோயில், கோச்செங்கணான்—குறிப்பு எழுதுக.

## வினாக்கள்

1. மண்டபப்பட்டுக் கல்வெட்டால் நாம் அறியத்தக்கவை யாவை?
2. விமானங்களின் வகைகளும், அவற்றின் அமைப்பும் எவை?
3. தமிழகத்தில் மகேந்திரனுக்கு முன்பே கோவில்கள் இருந்தன என்பதற்குச் சான்று தருக.
4. மகேந்திரனுக்கு முற்பட்ட காலத்துக் கோயில்கள் எவ்வாறு அமைந்திருந்தன?
5. தேவாரக் காலத்துக் கோயில்களைப்பற்றி நீவிர் அறிவதென்ன?
6. சங்க காலத்துக் கோயில்களைப்பற்றிச் சுருக்கி வரைக.

## கட்டுரையாக்கம்

'திராவிடக்கலை' என்பதுபற்றி ஒரு பக்கத்தில் கட்டுரை எழுதுக.

# 5. பத்திரிகையின் செய்திகளும் கருத்துக்களும்

'சுதேசமித்திரன்' பத்திராதிபர்,
திரு. ஸி. ஆர். ஸ்ரீனிவாசன், பி. ஏ.

தினசரிப் பத்திரிகையைப் புரட்டுவோருக்கு அதன் பொருளடக்கம் பழக்கமானது. பத்திரிகையின் சரக்கு செய்தியே; அதுவே பத்திரிகையின் ஜீவநாடி. செய்திப் பத்திரிகை (நியூஸ் பேப்பர்) என்ற பெயர் பிறந்ததும் இதன் பொருட்டே. இப்பெயருக்குச் செய்திகளை அறிவிக்கும் பத்திரிகை என்பது பொருள்.

## செய்தியின் குணங்கள்

ஆனால், 'செய்தி' என்பது என்ன? இதற்கு விளக்கங்கள் பலவிதம்; தெளிவுதான் தோன்றவில்லை. சொல்லின் முழுப் பொருளை அலசி அதற்குச் சகல விதத்திலும் சரியான விளக்கம் வெளிவரவில்லை. ஒரு அடிப்படை வியாக்கியானம், செய்தியாக எவைகளைச் சொல்லக்கூடுமோ அவை யாவும் செய்தி என்று கூறுவது. இது வீணான வியாக்கியானம்; ஏனென்றால் எல்லாவிதச் செய்திகளும் செய்திகளாகா.

செய்திகளுக்கு மதிப்பு எவ்வாறு உண்டாகின்றது? பொதுப்படையாக, இரண்டு அம்சங்கள் செய்திக்கு மதிப்பைக் கொடுக்கின்றன; அவை கவர்ச்சி முக்கியத்துவம் என்ற இரண்டுதான். யாரைக் கவர வேண்டும்? எப்படி முக்கியத்துவத்தை அளவிடுவது? விசாலமான வாசகர் குழாத்திடையே பத்திரிகைகள் புழங்குகின்றன. இந்தக் கூட்டத்திற்குக் கவர்ச்சியும் முக்கியத்துவமும் பொருந்திய விஷயங்களே நம் அளவுகோல்கள். பத்திரிகைதோறும் அதன் சூழ்நிலைக்கும் சந்தாப் பரப்புக்கும் ஏற்றவாறு, அளவுகோல்கள் மாறுதல் அடையலாம். வர்த்தகத்தைப் பற்றிய பத்திரிகை விளையாட்டைப்

---

மொழிபெயர்ப்பாசிரியர், திரு. ஜெ. பார்த்தசாரதி, எம். ஏ.

பற்றிய செய்திகளை விவரிக்காது. தேசம் முழுவதும் போகும் பத்திரிகை பிரதேசவாரிச் செய்திகளுக்கு அதிக இடம் அளிப்பது அரிது. இன்று, செய்திப் பத்திரிகை நடத்துவதில், சுவையுள்ள செய்திகளைச் சேமிப்பதற்கும், பத்திரிகைப் பத்திகளைப் பங்கிடுவதற்கும் படும்பாடு பெரிதாகிவிட்டது. உற்பத்தி யம்சம் தொழில் முழுவதையும் விழுங்கும் அளவுக்கு விரிந்துவிட்டது. காரணம் பத்திரிகை பல வகுப்பினரையும், பல தேவைகளையும் திருப்தி செய்து சந்தா எண்ணிக்கையில் கண்ணும் கருத்துமாய் இருப்பதே.

அநுபவமுள்ள ஆசிரியன் தான் கையாளும் செய்திகளில் கவர்ச்சியும் முக்கியத்துவமும் பொருந்தியவைகளைப் பார்த்தவுடனேயே புரிந்துகொள்ளுகிறுன். பிறவிக் குணங்களுடன் ஒன்ருக இச்செயற்கைக் குணம் சமைந்து விடுகின்றது. ஆசிரியனின் நீலப் பென்ஸில் கையெழுத்துப் பிரதிகளின்மேல் குறிதவருத கூர்மையுடனும் இயந்திர வேகத்துடனும் ஓடுகிறது. செய்திகளின் இரு குணங்களும் அவைகளைப் பத்திரிகைகளின் பக்கங்களுக்கும் பத்திகளுக்கும் ஏற்றவாறு பிரித்து விடுகின்றன. தராதரத்தையும் சமய சந்தர்ப்பத்தையும் ஒட்டி, செய்திகள் பத்திகளின் மேலும் கீழும் சென்று சேருகின்றன. திருவாங்கூர்ப் பத்திரிகை யொன்றையும், சென்னைப் பத்திரிகை யொன்றையும் ஒப்பிடுங்கள். அல்லது ஒரே பதிப்பின், முன் பின் பிரசுரங்களைப் பாருங்கள். நான் கூறியதற்குப் பிரத்யக்ஷப் பிரமாணம் காணலாம்.

### செய்தி ஸ்தாபனங்கள்

செய்தியென்பது உத்தரவின்பேரில் உற்பத்தியாகக் கூடிய ஆலைப் பொருளோ அல்லது இஷ்டப்படி விலைக்கு வாங்கக்கூடிய பண்டமோ அன்று. பல இடங்களிலிருந்தும் சேகரிக்கப்பட்ட சம்பவங்களின் பதிவுதான் அது. நியூஸ் அல்லது செய்தி என்ற சொல் இதற்கேற்பப் பொருள் செய்யப்பட்டிருக்கிறது. 'N. E. W. S.' என்ற நான்கு எழுத்துக்களும் நான்கு திசைகளையும் (வடக்கு,

கிழக்கு, மேற்கு, தெற்கு) குறிக்கும். இவ்வெழுத்துக்களைக் கொண்ட சொல்லின் பொருள் நான்கு திசைகளிலிருந்தும் திரட்டப்படுவது என்பதுதான்.

செய்தியைச் சேகரிக்க, நிருபர்களை ஒவ்வொரு பத்திரிகையும் உலகம் முழுவதும் அனுப்புவது அசாத்தியம். பத்திரிகைகளுக்குச் செய்தியளிக்கும் தேவை தீர, செய்தி ஸ்தாபனங்கள் தோன்றின. இந்த ஸ்தாபனங்களில் நம் தேசம் வரை, மிகக் கீர்த்திபெற்றது, ராய்ட்டர்ஸ்தான். ஆரம்பத்தில் ராய்ட்டர்ஸ் பத்திரிகைச் சேவைக்குரிய ஸ்தாபனமாகத் தோன்றவில்லை என்பது ருசிகரமானவிஷயம். இந்தஸ்தாபனத்தின் ஆரம்பகர்த்தா ஜூலியஸ் ராய்ட்டர் என்பவராவார். தொழிலைத் துவக்கியதின் காரணம், பண மார்க்கெட்டுச் செய்திகளைப் பணக்காரர்களுக்குப் பரப்புவதுதான்; பத்தொன்பதாம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் பிறந்த இந்த ஸ்தாபனத்தின் மூலம் பொதுவாகப் பத்திரிகைகளுக்கு உண்டாகக்கூடிய வசதிகளை ராய்ட்டர் உணர்ந்தார். வாசகர்கள் ரசிக்கக் கூடிய செய்திகளைத் திரட்டப் புதுச் சங்கம் ஏற்படுத்தினார்; பிரெஞ்சு ஹாவாஸ், ஜெர்மன் உல்ப் என்பவர்களுடன் ஐரோப்பாவைச் செய்திகளுக்காக வளையமிட்டார். ஐரோப்பாக் கண்டத்தார்களுக்கு உலகம் முழுவதிலும் உறவு உண்டு. ஸ்தாபனம் விஸ்தாரமாகிக் கொண்டு வந்தது; காலப்போக்கில் கௌரவமடைந்தது.

பொறுப்பு மிகுந்தது செய்தியளிக்கும் சேவை. செய்தியின் மூலாதாரம் சந்தேகத்துக்குச் சற்றும் இடமின்றி இருக்கவேண்டும். இதற்குரிய வாய்ப்புக்கள் ராய்ட்டர் ஸ்தாபனத்துக்குக் கிடைத்தன. ஸ்தாபகர் குடும்பம் இறந்த பிறகுதான் ஸ்தாபனத்தை நடத்துவதற்கு ஒரு டிரஸ்டு ஏற்பட்டது; இப்பொழுது இந்த டிரஸ்டை, ஆங்கிலப் பத்திரிகைகளின் கூட்டுச் சங்கமான 'இங்கிலாந்து பிரஸ் சங்கம்' வாங்கிவிட்டது. உலகத்திலேயே இன்று மிகச் சிறந்த செய்தி ஸ்தாபனம் ராய்ட்டர்ஸ். அதன் பிரதிநிதிகள் இல்லாத இடமில்லை; குறிப்பிட்ட பிரதேசங்களில் விசேஷ செய்தி ஸ்தாப

ணங்கள் சேகரிக்கும் செய்திகளை உபயோகிக்கும் உரிமையும் அதற்கு உண்டு.

அயல்நாட்டுச் செய்திகளை இன்றுவரை நமக்கு ராய்ட்டர் ஸ்தாபனமே அளித்து வந்தது. சமீபகாலத்தில் அதன் பேரில் அதிருப்தி; செய்திகள் குறைவு, தேசீய நோக்கம் அற்றவை என்ற எண்ணம் தோன்றியது. செய்திகளைப் பொறுக்குவதிலும் பரப்புவதிலும் ஆங்கில சாம்ராஜ்ய நிலைக்குப் பரிவு; இந்திய இஷ்டங்களுக்குப் புறக்கணிப்பு. காரணம் எதுவாயிருந்தாலும், கசப்பு இருந்ததால், பத்திரிகைகள் ராய்ட்டர்ஸுடன் செய்து கொள்ளும் ஒப்பந்தங்களில் ஏகபோக உரிமையைக் கொடுக்கத் தயங்கின; அமெரிக்க யுனைட்டெட் பிரஸ் போன்ற போட்டி ஸ்தாபனங்களைப் பயன்படுத்திக் கொள்ள முன்வந்தன. ஆனால், இவைகளுக்கு ராய்ட்டர்ஸுடன் சமவசதிகள் இல்லாததால் சேவையின் தரம் ஓங்கக்கூடவில்லை. இன்றுவரை கனவாக இருந்த ஒரு புதுச் செய்தி ஸ்தாபனத் திட்டம் நனவாகிவிட்டது; செய்திச் சேவை குறைபாடுகள் நீங்கும் என நம்பவும் இடம் உள்ளது. இந்தியப் பிரஸ் டிரஸ்டு என்ற பெயருடன் இந்தியப் பத்திரிகைகளின் கூட்டுச் சங்கம் ராய்ட்டர்ஸின் இந்தியக் கிளையே வாங்கிவிட்டது. இதன் மூலம், சுதேசப் பத்திரிகைகளுக்குச் செய்திகளை உருவாக்க வாய்ப்பு உண்டாகிவிட்டது.

உள்நாட்டுச் செய்திகளைப் பரப்பும் ஸ்தாபனம், நம் தேசத்தில், இந்த இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் தான் ஏற்பட்டது. 'அசோஸியேடட் பிரஸ் ஆப் இந்தியா' என்று பெயர் பெற்ற ராய்ட்டர்ஸுக்குச் சொந்தமான சங்கந்தான் பலம் பெற்ற முதல் ஸ்தாபனம். இன்று இந்திய பிரஸ் டிரஸ்டு என்று தேசீய பத்திரிகைச் சங்கம் அசோஸியேடட் பிரஸின் உள்நாட்டுச் செய்திச் சேவையையும் கூட மேற்கொண்டுள்ளது முன்னேற்றத்திற்கு நல்ல அறிகுறி.

அசோஸியேடட் பிரஸ் ஆரம்பித்த விவரம் கேட்க அருமையானது. இந்திய கவர்மெண்டின் தலைநகரில்

சர்க்கார் செய்திகளைச் சேமிப்பதற்கு, முக்கிய பத்திரிகைகளின் விசேஷ நிருபர்கள் வேலைபார்த்து வந்தனர். பயோனீர் பத்திரிகை சலுகை மிகுந்திருந்தது அக்காலத்தில்; சிம்லாவில் இருந்த அதிகாரிகள் அதற்கு உதவி வந்தனர். இதனால், செய்திகள் பரப்புவதில், இப்பத்திரிகை நிருபர் மற்றப் பத்திரிகைக்காரர்களுக்கு எப்பொழுதும் ஒருபடி மேலேயே சென்றார்.

போட்டியில் தோல்வியுற்ற, 'இங்கிலீஷ்மன்', 'ஸ்டேட்ஸ்மன்', 'இந்தியன் டெய்லி நியூஸ்' என்ற பத்திரிகைகளின் நிருபர்கள் ஒன்று கூடி, பலம் திரட்டி, ஒரு புதுச் செய்தி ஸ்தாபனத்தைப் பிறப்பித்தார்கள். முதன்முதலில் தங்கள் பத்திரிகைகளுக்கு மாத்திரம் செய்திகள் என்ற தடை ஏற்பட்டது. அடுத்தபடியாக ஸ்தாபனத்துக்குச் சந்தா செலுத்தியவர்களுக்கும் செய்திகள் செல்ல ஆரம்பித்தன. இந்த முயற்சியில் முக்கியஸ்தர்கள் பக், கோட்ஸ், கே. ஸி. ராய் என்போர். ஸ்தாபனம் மதிப்பையும் முதன்மையும் பெற்றது ராயின் நுட்ப அறிவினால்தான். ஆரம்பத்தில் முதலிருவரும் ராயைக் குழிபறிக்கப் பார்த்தார்கள்; கடைசியில் அவருடன் சேர்ந்து செல்வதின் சிறப்பை உணர்ந்தார்கள். பக், கோட்ஸ் தொடங்கிய சங்கம், ராய்ட்டர்ஸ் ஸ்தாபனத்தால் வாங்கப்பட்டது; செல்வாக்கும் சக்தியும் அசோஸியேடட் பிரஸைப் பெருக்கி நிரந்தரமாக்கின.

நன்றாக அமைக்கப்பட்ட அசோஸியேடட் பிரஸ் அரசாங்க உதவியும் பெறவாரம்பித்தது. அடிமை நாட்டில் அரசாங்க உதவியை மக்கள் விபரீதமாக வியாக்கியானம் செய்வது சுலபம். தடையற்ற சுதந்திரச் செய்தி ஸ்தாபனங்களை நிறுவத் தனிப்பட்டோர் முன்வந்தனர். ஆனால் இந்த முயற்சிகள் நிரந்தரமாவதற்குப் போதிய பத்திரிகை ஆதரவு இல்லை. பிரீ பிரஸ் செய்திகள் ஆரம்பத்தில் நேர்மை பெற்று விளங்கின. ஆனால் முதலாளிகள் கெடுத்தார்கள் இந்த ஸ்தாபனத்தை; லாபத்திலும் பிரசாரத்திலும் அவர்கள் கவனம் சென்றது. செய்திகள் நடுநிலைமை இழந்து கெட்டன. இந்த க்ஷீண நிலையில்

யுனைடெட் பிரஸ் தோன்றியது; ஆனால் தேசீய நோக்குடன் சேவை புரியும் துணை ஸ்தாபனமாக இது நின்றுவிட்டது; விரிவு பெற்ற சங்கமாக ஆசை கொள்ளவில்லை. ஓரியண்ட் சர்விஸ் என்னும் ஸ்தாபனம், முஸ்லிம் கண்ககளுடன் செய்திகளைப் பொறுக்கிப் பரப்ப ஏற்பட்டுள்ளது. இச் சிறிய ஸ்தாபனங்களின் வரவினால் அசோஸியேடட் பிரஸின் மதிப்பும் சேவையின் தரமும் உயர்ந்துவிட்டன; விந்தையான விளைவு!

## நிருபர்கள் சேவை

பத்திரிகைச் செய்திகளில் பெரும்பாகம் செய்தி ஸ்தாபனங்களிலிருந்து வருவது. இச்செய்திகளுக்கு இரண்டு முக்கியமான குறைகள்; ஒன்று, சந்தாதாரர்கள் எல்லோருக்கும் சமமான சேவை; போட்டியிடும் பத்திரிகைகளுக்குள் ஒன்றுக்கு மற்றொன்றைக் காட்டிலும் விசேஷ வசதியில்லாதது. இரண்டு, செய்திகள் பரிமாறுவதில், சுவையோ அல்லது உயிர்க்களையோ இல்லாதது. எல்லாப் பத்திரிகைகளுக்கும் பயன்பட வேண்டிய செய்திகள் இப்படி இருப்பதுதான் இயல்பு. குறைகளை நீக்குவது எப்படி ?

பத்திரிகைக்குப் பத்திரிகை வேறுபாடு, ஓரளவு பொது விஷயங்களைப்பற்றிய அபிப்பிராய பேதங்களையும் கருத்து வேற்றுமைகளையும் பொறுத்தது. ஆனால், முக்கியமாகச் செய்திப் பத்திரிகைகள் விஷயத்தில், செய்தி விஸ்தரிப்பிலும் வெளியீட்டிலுந்தான் வித்தியாசம் புலனாகும். வித்தியாசம் மிக நுட்பமானது; அற்பமானதும் கூட. ஆனால், அர்த்தமற்றது என்று அலட்சியம் செய்ய முடியாதது. தனிப்பட்ட நோக்குடன் செய்திகளைத் திரட்டவேண்டும். செய்தி ஸ்தாபனங்களிலிருந்து வரும் பொதுப்படை விவரங்களை விஸ்தரித்துச் சூழ்நிலையை விளக்கவும் வேண்டும். இக்காரணங்கள் பொருட்டு, பத்திரிகைகள் சந்தர்ப்பத்திற்கேற்ப, சொந்த நிருபர் கூட்டத்தை வைத்துக்கொள்வது வழக்கம்.

பிரபல ஆங்கிலப் பத்திரிகைகளுக்கு, இங்கிலாந்தின்

முக்கிய நகரங்களில் நிரந்தர நிருபர்கள் உண்டு. இது மட்டும் அன்று. உலகத்தின் பல்வேறு பாகங்களிலும் நிருபர்கள் அமர்த்தப்பட்டிருக்கிறார்கள். இங்கிலாந்தின் பொருளாதார, அரசியல் உறவுகள் உலகம் முழுவதும் பின்னிக் கிடப்பதால், இந்தத் துணைச் சேவைக் கூட்டத்தாரின் தேவை சொல்லாமலே விளங்கும். நம் நாட்டுப் பத்திரிகைகள் இவ்வளவு தூரம் முன்னேற்றமடையவில்லை. இங்கிலாந்தில் நடக்கும் சம்பவங்களும் சக்திகளும், நம் நாட்டைப் பாதிப்பவை. இதனால் நமது பத்திரிகைகளில் சிலவற்றிற்கு லண்டன் நிருபர்கள் அமர்த்தப்பட்டிருக்கின்றனர். இதற்கு அடுத்தபடியாகப் பத்திரிகைகளுக்குக் கிடைக்கும் பேருதவி, மாகாணத் தலைநகர்களில் விசேஷ நிருபர்களை அமர்த்துவதே. மேற்கொண்டு, மாகாணச் செய்திகளைத் திரட்ட, பத்திரிகைகள் சொந்த நிருபர்களை வைத்துக் கொள்ளுகின்றன. சென்னை மாகாணத்தில் இம் மாதிரி நிருபர்களுக்குத் திரட்டப்படும் செய்தியளவின் பேரில் ஊதியம் அளிப்பது வழக்கம்.

பத்திரிகைகளின் பணக்கஷ்டம் பலவிதம். மிகச் சிறந்த பத்திரிகைகளின் சந்தா எண்ணிக்கை பத்தாயிரக் கணக்கில்தான்; இன்னும் லட்சத்தை எட்டிப் பார்க்கவில்லை. இந்தியாவோ பரந்த தேசம்; இருபத்து நான்கு மணி நேரத்திற்குள் எட்டமுடியாத பிரதேசங்களில் எந்தப் பத்திரிகைக்கும் வியாபகம் இருப்பது அரிது. பத்திரிகைகள் பெரும்பாலும் குறிப்பிட்ட எல்லைகளைக் கடந்து, பரந்த பிரதேசங்களிலே சந்தாவை நோக்கி நிற்கின்றன. முட்டுப்பாடுகள் மிகுந்த வியாபகத்தினால், வரும் குறுகிய லாபத்தில், விசேஷ நிருப சேவையைப் பத்திரிகைகள் அமைத்திருப்பது ஆச்சரியமே.

முப்பது வருஷங்களுக்குமுன் இருந்ததைக் காட்டிலும் இப்பொழுது, மாகாண நிருபர்களின் பிழைப்பு சீரடைந்து விட்டது கண்கூடு. ஒரு காலத்தில் கட்டுரைகளுக்கு ஊதியம் கொடுப்பது என்பது விதி விலக்கு. விஷயத்தைத் தானாகவே அளித்தார்கள்; அளித்தவர்கள் ஊதியத்தை எதிர்பார்க்கவும் இல்லை. பெரிய மனிதர்

களாக இருந்தால் பிரசுரம் பெறுவதே போதிய வருமானம். சம்பளத்துக்கு வேலை செய்வோராக இருந்தால் வேலை செய்யுமிடத்தில்தான் சம்பளம் கிடைக்குமே! இயற்கை யறிவு படைத்த சிலர், சொந்த நலனுக்காக, பத்திரிகை களுடன் 'நிருபர்' என்ற தொடர்பை வைத்துக்கொண் டார்கள். இந்தச் சம்பந்தம், மக்களை மயக்கி, லாபம் பெற உதவியது. செய்திகள் கொடுப்பதற்கு மட்டும் அல்ல, அவைகளை மறைப்பதற்கும் பணம் பெற்றார்கள். அதனால், செய்திகளும் மனம் போனவாறு புரண்டன. சிற்சில சமயங்களில், இந்த ஒழுங்கற்ற ஒழுக்கம் பற்றிய புகார்களும் பத்திரிகை ஆபீசுகளில் புகுந்துவிடும். பத்திரிகைத் தலைமைக் காரியாலயஸ்தரோ, தகராறுகளில் தலையிட அதிகாரம் அற்றவர்கள். பெருத்த மானக்கேடு விளையாதவரை, குருட்டுக் கண்ணுடன் பார்த்ததும் பாராததுமாய் இருந்தார்கள். நிலைமை, சென்ற இருபத் தைந்து வருஷங்களில் மாறிவிட்டது; இன்று செய்திப் பத்திரிகைகளில் பிரசுரமாகும் செய்திகளில், ஊதியம் பெறுதவை வெகு சொற்பம்.

### நிருபர்களின் தகுதிகளும் பயிற்சியும்

நிருபர்களுக்கு ஊதியம் அளித்தது, செய்திச் சேவை யில் சீர்திருத்தமும் கட்டுப்பாடும் கொண்டுவந்தது. ஆனால் முழுவதும் திருப்திகரமான நிலை இன்னும் ஏற்பட வில்லை. ஆனால் ஒன்றுமட்டும் நிதரிசனமான உண்மை. புதிதாக நியமிக்கப்பட்டுள்ள நிருபர்களின் செய்திகளில் விஷமமோ பக்ஷபாதமோ கிடையாது. தெரியாமல் தவறு செய்பவர்கள் காலக்கிரமத்தில் குற்றத்தை உணர்ந்து, அதிகப் பொறுப்புடன் பணி செய்வது சகஜம். நிரந்தர நிருபர்கள்தான் கௌரவத்திற்குக் காரணம் என்பதைப் பத்திரிகைகளும் உணர்ந்து விட்டன. நிருபர்கள் உழைப்பு, கண்களும் கைகளும் உதவும் உதவி போன்றது.

முன்போலன்றி, இந் நாட்களில் நிருபர்களின் வேலை வசதிகளில் பத்திரிகைகள் கருத்தும் கவனமும் காட்டு கின்றன. பொறுப்புள்ள சேவை வேண்டுமென்றால்,

தகுதியும் ஒழுக்கமும் உள்ளவர்களை அமர்த்தவேண்டும் என்ற உணர்ச்சி தோன்றிவிட்டது. பழைய காலத்தில் நிருபராகப் புகலிடம் பெற்ற 'உதவாக்கரை'களுக்கு இப்பொழுது இடமே கிடையாது. வாழ்க்கையில் எந்தத் துறையிலும் வெற்றி பெறுவதற்கு வேண்டிய தகுதிகள் பத்திரிகைத் துறையில் பன்மடங்கு தேவை என்பது என் அநுபவ சிந்தாந்தம். இதுமட்டும் அன்று. பத்திரிகைத் தொழிலில் வெற்றி பெறுபவன் மற்றத் துறைகளிலும் வெற்றி பெறுவது நிச்சயம்.

பத்திரிகைத் தொழிலைச் சிறப்பாகக் கூறுவது 'மிகை படக் கூறல்' ஆகாது. பத்திரிகைக்காரனின் வாழ்க்கை சோதனைகள் நிறைந்தது; அதில் தப்பிப் பிழைத்து வெற்றி பெறுபவன் சிறந்த பண்புகளைப் பெற்றிருத்தல் வேண்டும். சம்பளம் சொற்பம். ஆனால் சில கௌரவங் கள் உண்டு. எங்குச் சென்றாலும் நல்ல உபசரிப்பு. ஒவ்வொரு பொதுக்கூட்டத்திலும் விரும்பியழைக்கப்படும் விருந்தாளி. ஆனால் நகைச்சுவையுடைய ஆசிரியன், ஏதோ மாய விருந்துக்குச் செல்வதுபோல் நினைக்கக் கூடும். வாழ்க்கையில் சிறந்த சம்பவங்கள் அவன் இழந்த சிறப்புக்களை நினைவூட்டுகின்றன. பிறர் பெருஞ் செயல் களை எழுதும்போது, தான் பறிகொடுத்த பெருமையைப் புரிந்து கொள்ளுகிறான். அரசியல் நாடக அரங்கின் பக்கங்களில்தான் அவனுக்கு முதல் இடம். சமூக வாழ் விலோ, பின்னணியில் உட்காரவேண்டும். லாப நஷ்டத் திற்கு ஈடே இல்லை. பத்திரிகைக்காரனுக்கு உறுதியும் ஆறுதலும் அளிக்கக்கூடிய தியாக புத்தி மிகத் தேவை. உழைப்புடன் தியாகத்தையும் புகுத்தி, உயர்ந்த பயிற்சி கொடுக்கக்கூடிய துறை பத்திரிகைத் தொழிலைப்போல் வேறு கிடையாது.

பத்திரிகை நிருபர்கள், ஓரளவு பிரயாசைப்பட்டால், தொழிலின் நடைமுறை நுட்பங்களை உணருவது எளிது. சிறந்த நிருபராவதற்கு இது மாத்திரம் எப்படிப் போதும்! திறமையற்ற நிருபர், பத்திரிகைக்குப் பெரும் பாரம் என்று சொல்லவேண்டாம். எல்லா நிரந்தர நிருபர்க

ளுக்கும் பத்திரிகைத் தலைமைக் காரியாலயத்தில் குறைந்த பட்சம் மூன்று மாதமாவது பயிற்சி யளிப்பது நலம். இப்பயிற்சி, தலைமைக்காரியாலய நோக்குடன் செய்திகள் சேமிக்க உதவும். தொழிலில் 'புதிதாகச் சேருவோருக்கு நடைமுறைகளைக் கற்பிக்கும்; பிழைகளைத் திருத்த அடி கோலும்.'

## செய்திப் பிரசுர விந்தை

செய்திச் சேமிப்புக்குத் திரும்பவும் நாம் செல்வோம். பத்திரிகாலயத்தில், ராய்ட்டர்ஸிலிருந்தும், அசோஸி யேடட் பிரெஸிலிருந்தும் (இனி, இந்தியப் பிரெஸ் டிரஸ்டி லிருந்தும்) வரும் செய்திகளைத் தூரத் தந்தியச்சுக்கருவி, பதிவு செய்து கொள்ளுகிறது. மற்றச் செய்தி ஸ்தாபனங் களிலிருந்து வேறு விஷயங்கள் வந்து சேருகின்றன. நிரந்தர நிருபர்களின் செய்திகளைத் தந்திகளும் டெலி போன்களும் அறிவிக்கின்றன. தினசரித் தபால் தூரப் பிரதேசங்களிலிருந்து, இரண்டாந்தரமான செய்திகளைக் கொண்டுவருகிறது. தலைநகரில் திரியும் நிருபர்கள் நாள் முழுதும் அவ்வப்பொழுது சேமிக்கும் சமாசாரங்களைக் கொடுத்த வண்ணமாயிருக்கிறார்கள். இவை யெல்லாம் போதாவென்று கவர்மெண்டு ஆபீஸ், கம்பெனி போன்ற பலதிறப்பட்ட இடங்களிலிருந்து, உத்தியோகஸ்தர்கள் 'கிடைத்த பிரசாரம் லாபம்' என்று விளம்பரத் தாள் களைத் தள்ளுகிறார்கள். செய்திக் குவியல், தினந்தோறும் மலைபோல் குவிகிறது. குப்பையை உடனே கவனித்தாக வேண்டும். ஆறின கஞ்சி பழங்கஞ்சி. பத்திரிகையிலோ செய்திகள் மேலும் மேலும் வந்து விழுகையில், இருப்பிடம் சுருங்கிக் கொண்டே வருகிறது. இங்கிலாந்தில் செய்திக் குவியலின் அளவு உத்தேசம் ஒரு நாளைக்குப் பதினைந்து லக்ஷம் வார்த்தைகள். இடமென்னவோ, ஐம்பதினாயிரம் வார்த்தைகளுக்குத்தான்.

இப்பொழுது, பத்திரிகாசிரியர் வேலையின் இயல்பு உங்களுக்கு ஒருவிதமாக விளங்கியிருக்கும். விஷயங் களைப் பொறுக்கிச் சுருக்கமாகப் பரிமாறும் திறமை

மிகுந்த அநுபவத்தின் பேரில்தான் கைகூடுவது. ஒன்றுக் கொன்று ஒவ்வாத பிரச்னைகளைப் பிணைக்கவேண்டும்; சண்டையிடும் சக்திகளைச் சமமாகச் சீர்தூக்கி இணைக்க வேண்டும். இவை யெல்லாவற்றிலும் பெரிய காரியம், பிரசுரத்தால் வரும் பேராபத்துக்களைத் தவிர்ப்பது. பத்திரிகைப் பிரசுரம் காலத்தோடு போட்டியிடவேண்டி யிருப்பதால், காரியாலயங்கள் யாவும் சக்கரம் போல் சுழன்று கொண்டிருக்கின்றன. விஷயங்களுக்கு ஏற்ற இடமும் பத்தியும் அமைத்துக் கொடுப்பது, படங்களைத் தயாரித்துத் தலைப்பு எழுதுவது முதலிய காரியங்கள் இயந்திர வேகத்துடன் நடைபெறுகின்றன. போக்கு வரவு சௌகரியம், செய்திகளின் முக்கியத்துவம் முதலிய வற்றை அநுசரித்து அநுதினமும் பத்திரிகைப் பதிப் புக்கள் வெளிவருகின்றன. தபாலைத் தவற விடாமல் இருக்கவேண்டு மென்றால் மணிக் கணக்குத் தப்பாமல் பதிப்புக்கள் பிறந்தாக வேண்டும். செய்திப் பத்திரிகா லயம் வேலைசெய்யும் நெருக்கடி நிலையைச் சிந்தனை செய்து பாருங்கள். உருவான பத்திரிகை ஓர் உற்பத்தி விந்தை என்பதை யார் மறுக்கமுடியும்? குறையே அற்ற நிலையில் பத்திரிகைத் தாள்கள் இல்லை என்பது உண்மை. ஆனால், அந்த நிலையை நெருங்கி விட்டதாகக் கூறலாம். இன்னும் ஒரு விஷயம் நம் கவனத்துக்குரியது. மனித சாதுரியத்தால், எவ்வளவு அபிவிருத்தி அடையமுடி யுமோ, அவ்வளவு அபிவிருத்தியையும் பத்திரிகைக் கலை பெற்றுக்கொண்டுதான் இருக்கிறது.

### செய்தியறிவிப்பின் துணை வேலைகள்: கருத்துக்கள்

செய்திப் பத்திரிகை கொடுப்பன யாவும் செய்தி யாகவே இருப்பதில்லை. செய்தியைத் தவிர, செய்தியை ஒட்டியும், செய்தியிலிருந்து பிறப்பதுமான மற்றப் பொறுப்புக்கள் பத்திரிகைகளுக்கு உண்டு. பொதுஜன அபிப்பிராயத்தை சிருஷ்டி செய்து, சீருடன் விளங்கச் செய்வது பத்திரிகை. அதனைக் கண்ணாடிபோல் பிரதி பலிக்கிறது பத்திரிகை; அதற்கேற்ப, தன்னையும் மாற்றி

யமைத்துக் கொள்ளுகிறது. செய்தியளிக்கும் முக்கிய சேவையிலிருந்து நேரடியாகத் தோன்றும் துணை வேலைகளே இவைகள். முக்கியத்துவம் வாய்ந்த செய்தி பிரசுரமாகும் பொழுது, பத்திரிகை அதற்கு விளக்கமொன்றையும் கொடுக்கிறது. இதனால் வாசகர்கள், செய்தியின் உண்மை மதிப்பை அறிந்து அளவிட உதவி பெறுகிறார்கள். செய்தித் தாளில் ஆசிரியர் அபிப்பிராயங்களை அனுமதிப்பதும் இதன் பொருட்டே. தவிர செய்திகளைப் பற்றி வாசகர்கள் கருத்துக்கள் கடிதமூலம் கிடைக்கின்றன. பல முறைகளில் விசேஷப் பாண்டித்தியம் பெற்ற அறிஞர்களைக் கொண்டு, அன்றாடச் செய்திகளுடன் இணைத்து, எழுதச்சொல்லவும் வேண்டியிருக்கிறது. இவர்கள் எழுதுவதைக் 'கட்டுரைகள்' என்று சொல்லுகிறோம். பிரத்தியேகப் பதிவு உரிமை இல்லாவிட்டால் மற்றப் பத்திரிகைகளிலும், வாசகர் நன்மைக்காக இக் கட்டுரைகள் இடம் பெறலாம்.

செய்திப் பத்திரிகையில், சாதாரணமாகச் சேர்க்கப் பட்டுள்ள விஷயங்கள் பலவகைச் செய்தி, ஆசிரியர் கருத்து, கடிதப் போக்குவரத்து, (வேறு பத்திரிகைகள், புத்தகங்களிலிருந்து) பெயர்க்கப்பட்டவை என்ற இனங்களில் அடங்கும். கருத்து எவ்விடத்திலிருந்து எழுந்தது என்பதைக்கொண்டு, இவ் வினங்களை வேற்றுமைப் படுத்தலாம். ஆசிரியரால் கருத்து வெளியிடப்பட்டால், 'தலையங்கம்' ஆகிறது; வாசகரிடமிருந்து வெளிவந்தால், கடிதப் போக்குவரத்தாகிறது; விசேஷ அறிஞரிடமிருந்து வந்தால், கட்டுரையாகிறது. மூலம் எதுவாயிருந்தாலும், கருத்துக்கள், செய்திகளுக்குப் பின்னதாகத்தான் பிறக்கின்றன. அப்படியென்றால், பத்திரிகை முதலில் செய்தித் தாளாகத் தினந்தோறும் வெளி வந்ததாகவும், பின்னர், திட்டப்படி கருத்துக்கள் சேர்க்கப்பட்டன என்றும் எண்ணக் கூடாது.

**கருத்து—செய்திப் போட்டி**

செய்திப் பத்திரிகை உயிர் பெற்றபோது, வெறும் கருத்துப் பத்திரிகையாகவும் பிரசாரத்துக்குரிய துண்டுப் பிரசுரமாகவும் இருந்தது. குறிப்பிட்ட காலந்தோறும் பிரசுரிக்கப்படும் பழக்கம், பத்திரிகைக்கு நிரந்தரத்தை நிறுவியது. காலம் மாறி, தேவைகள் விரிந்து, பத்திரிகை உயர்ந்துவிட்டது ; ஆரம்பத்திலிருந்த அபிப்பிராயங்கள் காலச் சக்கரத்தில் சிக்கிக்கொண்டு விட்டன. பத்திரிகையின் பரப்பும் வழங்கப்படும் விஸ்தீரணமும் கொஞ்சங் கொஞ்சமாக விரிவடைந்தன. நகரத்திலிருந்து ஜில்லாவுக்கும், மாகாணத்திற்கும், தேசம் முழுமையும் பத்திரிகை சென்றது. வளர்ச்சி விரிவுடன், தனிப் பிரதேசங்களில், செலாவணிப் பெருக்கமும் பெற்றது. மேல் வகுப்பினரிடமிருந்து, நடுத்தர வகுப்பினர் கைகளுக்கு நழுவியது. ஓய்வுள்ள வகுப்பினரிடமிருந்து உழைக்கும் மக்களுக்கு எட்டியது. இந்த அடிப்படை வளர்ச்சியில், கருத்துக்களைக் காட்டிலும் செய்திகள் முக்கியத்துவம் பெறுவது தவிர்க்க முடியாததாகிவிட்டது. பத்திரிகைச் செய்திகளும் விஸ்தாரம் பெற்றன. கருத்துக்களோ, செய்தி விஸ்தரிப்புடன் போட்டியிட வழியில்லை. கருத்துக்களின் இடத்தைப் படிப்படியாகச் செய்திகள் அபகரித்துக் கொண்டன. இப்புரட்சியைப் பற்றிய இரண்டு அம்சங்கள் கவனிக்க வேண்டியவை. ஒன்று, முன்போல் ஆசிரியர், பத்திரிகையின் முழு ஆட்சியையும் தன் கைகளில் வைத்துக் கொள்வது அசாத்தியம். இரண்டு, ஆசிரியனின் வேலையை இன்று, வெவ்வேறு விசேஷ அறிவுபடைத்த கூட்டத்தார்கள்தான் உண்மையில் நடத்துகின்றனர். தனி ஆசிரியனுக்கு, பல திறப்பட்ட விஷயங்களைப்பற்றித் தானே எழுதக் கூடிய வல்லமையும், அவகாசமுமிருப்பது அருமை.

ஆசிரியனின்றிப் பத்திரிகை நடப்பது எப்படி என்று ஆச்சரியப்படுவோர்க்கு, மர்மம் இப்பொழுது விளங்கக் கூடும். பத்திரிகாலயத்தில் ஆசிரிய பீடத்தில் அமருபவர்க்கு உள்ள புதுப் பெயர், 'நிருவாக ஆசிரியர்'. பத்தி

ரிகையின் செய்திகளேயும் தொழில் முறையையும் சேர்த்துக் கவனிப்பது அவர் கடமை என்று எண்ணலாம். அவருடைய வேலை சுலபமல்ல என்று நான் சொன்னுல், நம்புங்கள். இவ்வேலையில் வெற்றி பெறுவோர்க்கு எவ்வளவு கௌரவம் கொடுத்தாலும் தகும்!

## குறிப்புரை

வியாக்கியானம் - விவரித்துக் கூறுதல். குழாம் - கூட்டத்தார். பிரத்தியக்ஷப் பிரமாணம் - காட்சியளவையால் மெய்ப்பித்தல். முட்டுப்பாடு - இடர். வியாபகம் - பரவுதல். கண்கூடு - காணக்கூடிய உண்மை. புகலிடம் - அடைக்கலம்.

## பயிற்சி

1. சொந்த வாக்கியங்களில் அமைக்கவும் :—ஜீவநாடி, சந்தா, நீலப் பென்ஸில், நிருபர், வாய்ப்பு, அறிகுறி, கண்கூடு.

2. பொருள் கூறுக :—துணை ஸ்தாபனம், நிரந்தர நிருபர், உதவாக்கரை, தராதரம்.

## வினுக்கள்

1. செய்திகளுக்கு மதிப்பைக் கொடுப்பவை எவை?

2. ராய்ட்டர்ஸ் ஸ்தாபனத்தைப் பற்றிச் சுருக்கமாக வரைக.

3. அசோஸிேயடட் பிரஸ் எவ்வாறு தோன்றியது? அதன் மதிப்பும், சேவையின் தரமும் எவ்வாறு உயர்ந்தன?

4. முப்பது வருஷங்களுக்கு முன்னிருந்த நிருபர்களுக்கும், இப்போதுள்ள நிருபர்களுக்கும் உள்ள வித்தியாசங்கள் என்ன?

5. செய்திகளேப் பிரசுரிப்பதில் பத்திரிகை ஸ்தாபனங்களுக்கு உள்ள கஷ்டங்கள் யாவை?

6. எவ்வகை விஷயங்கள் பத்திரிகைகளில் இடம்பெறுகின்றன?

7. பத்திரிகையின் ஆசிரியரை இப்போது நிர்வாக ஆசிரியர் என்றழைக்கக் காரணம் என்ன?

## கட்டுரையாக்கம்

1. நிருபரின் வேலைகள். 2. செய்திப் பிரசுரம். 3. இந்திய பிரஸ் டிரஸ்டு—இவை ஒவ்வொன்றையும் பற்றி ஒவ்வொரு பக்க அளவில் கட்டுரை வரைக.

# 6. வெற்றிலை

வித்துவான் திரு. தே. வீரராகவன், எம். ஏ.

ஓர் இனத்தாரிடையே காணப்படும் பழக்க வழக்கங்களே அவர்களின் சரித்திரத்தையும் நாகரிகப் பண்புகளையும் அறிந்து கொள்வதற்கு உதவும் அளவுகோலாகும். மனித சமூகம் வளர்வதுபோல் சரித்திரமும் பண்புகளும் அதனுடன் வளர்ந்து கொண்டே வரும். ஆதலால் அவைகளும் ஜீவனுடையனவே. நம் நாட்டிலே, சிறப்பாகத் தமிழ் நாட்டிலே, வெற்றிலை சுவைக்கும் வழக்கம் எல்லாச் சாதியார்களிடமும், எல்லாச் சமயத்தார்களிடமும் பரவியிருப்பதைப் பார்த்தால், சாதி சமய வேறுபாடில்லாமல், அனைவரையும் ஆட்கொள்ளும் ஒரு கவர்ச்சி இதனிடம் இருப்பது புலப்படுகிறது.

வெறும் இலைதான் வெற்றிலையாயிற்று. வெறுமை என்ற பண்புப் பெயர் இலை என்ற சொல்லுடன் பண்புப் பெயருக்குக் கூறப்பட்டுள்ள விதிப்படி புணர்ந்து வெற்றிலையாயிற்று என்று தமிழ் இலக்கணம் கூறும். 'தனிமை' என்ற பொருளில் 'வெறும்' என்ற சொல் வழங்கப்படுவதற்கு வெற்றிலை ஒரு சிறந்த எடுத்துக் காட்டாகும். இன்றும் உலக வழக்கில் "வெறும் சோறு மட்டும் உண்டேன்", "இன்று வீட்டில் வெறுஞ் சாறு தான்" என்று வழங்குவதிலிருந்தும் வெறுமை என்ற சொல்லுக்குத் தனிமை என்ற பொருள் இருப்பதை அறியலாம். பூ, காய்களின்றித் தனித்த இலையாயிருத்தல் பற்றி இவ்விலைக்கு வெற்றிலை யென்று பெயர் வந்தது என்று கூறுவர். இது தனித் தமிழ்ச் சொல்.

தமிழர் சமூக வாழ்விலே வெற்றிலைப் பழக்கம் எப்போது ஏற்பட்டது என்று அளவிட்டுக் கூற முடியாவிடினும், இது தமிழ் நாட்டுக்கே உரிய பழக்கமாயிருக்கலாம் என்று ஊகிக்கப் பல சான்றுகள் இருக்கின்றன. குச்சு வீடு முதல் மச்சு மாளிகை வரையிலும், ஆண்டிவாய் முதல் அரசன் வாய் வரையிலும், பிறப்பு முதல் இறப்பு

வரையிலுள்ள மங்கல அமங்கலச் சடங்குகளிலும் இந் நாட்டில் வெற்றிலை பரவியிருப்பதும், வெற்றிலையின்றி வாழமுடியாத சோழ நாட்டவரும், மலையாளிகளும் பல லக்ஷக் கணக்கில் இருப்பதும் இதன் பிறப்பிடத்தை ஒரு வாறு துணிந்தறிய உதவும்.

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர்த் திகழ்ந்த கடைச் சங்க காலத்தில் கூட இந்தப் பழக்கம் மிக்கிருந்ததென்பதற்கு இலக்கியங்கள் சான்று கூறு கின்றன. பத்துப் பாட்டில் ஒன்ருகிய பட்டினப்பாலை யில், அதன் ஆசிரியர் உருத்திரங்கண்ணனுர், புகார் நக ரில் பல்வகைக் கொடிகள் பறந்த மாடங்களைக் குறிப் பிட்டு வரும் பகுதியில் "பாகுகுத்த மஞ்சிகை" என்று சில மாடங்களைக் குறிப்பிடுகின்ருர். அதற்கு உரைகாரர் நச்சினுர்க்கினியர், "பாக்கு வெற்றிலை சொரிந்த கட்டி டம்" என்று பொருள் கூறுகிருர். மதுரைக் காஞ்சி என்ற மற்ெருரு சங்கப்பாட்டில் மாங்குடி மருதனுர் என்ற புலவர் மதுரை நகர வீதியில் வெற்றிலை, பாக்கு, சுண் ணும்பு விற்கப்பட்ட செய்தியை,

> "தகைசெய் தீஞ்சேற்று இன்னீர்ப் பசுங்காய்
> நீடுகொடி இலையினர் கோடுசுடு நீற்றினர்"

என்று குறிப்பிடுகிருர். இதற்கு உரையாசிரியர், "உடம்பிற்கு அழகைக் கொடுக்கும் இனிய கருங்காவி சீவிக் காய்ச்சின களிக் கலந்த இனிய நீரினையுடைய பசிய பாக்குடனே வளர்ந்த கொடியீன்ற வெற்றிலையினை யுடையாரும், சங்கு சுடுதலால் உண்டான சுண்ணும் புடையாரும்" என்று உரை வரைகிருர். கழாத்தலையார் என்னும் மற்ெருரு கடைச் சங்கப் புலவர், புறநானூற் றில் 62-ஆம் பாடலில், "கணவனை இழந்த மகளிர் வெற் றிலை சாப்பிட மாட்டார்கள்; குளிர்ந்த நீரில் மூழ்கமாட் டார்கள்" என்று பொருள்படும்படி

> "......பெண்டிரும் பாசடகு மிசையார்; பனிநீர் மூழ்கார்"

என்று வெற்றிலை சுவைக்கும் வழக்கம் இருந்ததைப் பற்றிச் சொல்கிருர். சங்க காலத்துக்கு அணித்தாக எழுதப்பட்ட சிலப்பதிகாரத்திலே, இந்திரவிழவூரெடுத்த

காதையில் புகார் நகரிலுள்ள பல வீதிகளைப் பற்றியும் கூறிக்கொண்டு வரும் இளங்கோவடிகள்,

"பாசவர், வாசவர், மைந்திண
விளைஞரொடு......இருக்கையும்"

என்று கூறும் பகுதியில் பாசவர் என்ற சொல்லுக்கு "வெற்றிலை கட்டுவார்" என்று அரும்பத உரையாசிரியரும், "இலையமுதிடுவார் (இலையமுது - வெற்றிலை) என்று அடியார்க்கு நல்லாரும் உரை எழுதுகிறார்கள். அதே நூலில் ஊர்காண் காதையில் "தமனிய அடைப்பை" என்று ஆசிரியர் கூறுவதற்கு, "பொன்னாற் செய்த வெற்றிலைப் பெட்டி" என்று அரும்பதவுரைகாரர் எழுதுகிறார். கொலைக்களக் காதையில்,

"உண்டினி திருந்த உயர்பெய ராளற்கு
அம்மென் றிரையலோ டடைக்கா யீந்த"

என வருகிறது. அதாவது "உண்டிருந்த கோவலனுக்குக் கண்ணகி அழகிய மெல்லிய திரையலுடன் (வெற்றிலைச் சுருளுடன்) பாக்குக் கொடுத்த" எனக் குறிப்பிடுவதும் கருதத் தக்கது.

திருமால், சிவன் கோயில்களுக்கு நிபந்தங்கள் ஏற்படுத்திய தமிழ் மன்னர்கள் வெற்றிலைப் பாக்குக்கென்றே தனி நிபந்தங்கள் ஏற்படுத்தியிருந்த செய்தி கல்வெட்டுக்களால் அறியக் கிடக்கின்றது. அடைக்காய் (அடை - இலை, காய் - பாக்கு), இலையமுது, வெள்ளிலை அமுது என்ற சொற்றொடர்களால் கல்வெட்டுக்களில் வெற்றிலையும் பாக்கும் குறிக்கப்பட்டிருக்கின்றன. ஏழாம் நூற்றாண்டில் இருந்தவராகக் கருதப்படும் நம்மாழ்வார், திருவாய் மொழியில் திருக்கோளூர்ப் பதிகத்தில், "உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலையுமெலாம் கண்ணன் எம்பெருமான் என்றென்றே" என்று குறிப்பதிலிருந்து அக்காலத்திலும் இறைவனுக்கு இலையமுது படைக்கும் வழக்கம் இருந்ததாகத் தெரிகிறது. வெற்றிலைப் பாக்குப் போட்டதால் சுரக்கும் எச்சிலை உமிழப் பெரிய இடங்களில் "காளாஞ்சி" என்ற வட்டில் இருந்தது.

"மின்வட்டச் சுடராழி வேங்கடக் கோன் தானுமிழும்,
பொன் வட்டில் பிடித்துடனே புகப் பெறுவேன்"

என்று குலசேகரர் கூறுகிருர்.

மனித சமூகத்துக்கு வெற்றிலே புரியும் பலவித உதவிகளேக் கருதித்தான் அதை மங்கலப் பொருள்களில் சிறந்ததாக வைத்தனர் போலும். தொடக்க காலத்தில் தனித்த வெற்றிலே ஒரு மூலிகையாகக் கருதப்பட்டிருக்க வேண்டும் என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது. நீர்க் கோவையைக் கெடுத்து, வாதத்தைப் போக்கி, மந்தத் தைத் தடுத்து, அஜீரணத்தை எடுத்து, கபத்தை அறுத்து, சுறுசுறுப்பைக் கொடுத்து குருதியோட்டத் தைத் துரிதப்படுத்தி உடல் வளர்ச்சியை அளிக்கும் ஒரு சிறந்த பொருள் வெற்றிலே" என்று வெற்றிலேயைப் பற்றி ஒரு மருத்துவர் எழுதியிருக்கிருர். தேள் கடி போன்ற சாதாராண நஞ்சுக்கு மாற்ருக வெற்றிலேச் சாறு கொடுக்கப்படுவது கிராம மக்களுக்குத் தெரியும். மருந்துப் பொருளாக இருந்த வெற்றிலேதான் பின்பு இன்ப மூட்டும் பொருளாக மாறி, உண்ட பிறகு பாக்கு, சுண் ணும்பு, இலவங்கம், ஏலக்காய் முதலிய பொருள்களுடன் இப்போது உண்ணப்பட்டு வருகிறது. உண்ட பிறகு வெற்றிலேச் சுருளே மெல்லுவதால் உண்டாகும் மணம் வாய்க்கு ஒரு தனி இனிமையைத் தருகிறது. வெற்றிலே சுவைத்த பின்பு உள்ளத்தில் உண்டாகும் இன்பத்தை வெற்றிலே சுவைப்பார் அனேவரும் அறிவர். "இந்தியர் கள் சாராயத்துக்குப் பதில் போதை தரும் ஒரு பொரு ளாக வெற்றிலேயை உண்டபின் உபயோகிக்கின்றனர். வெற்றிலே போட்டுக்கொள்வதால் மூளே வேகமாக வேலே செய்கிறது; அறிவு வளருகிறது; கவலே நீங்குகிறது" என்று ஓர் அராபிய நூலாசிரியர் எழுதுகிருர்.

ஸுச்ருதர் என்ற ஒரு பண்டைய மருத்துவப் புலவர் தாம் எழுதியுள்ள ஒரு நூலில், "உண்டபிறகு வெற் றிலே போட்டுக் கொள்வதால், பற்களுக்கு அடிப்பாகத் தில் உள்ள பள்ளங்களிலும் இடுக்குகளிலும் புகுந்து கொண்டிருக்கும் அழுக்கால் உற்பத்தியாகும் பூச்சிகள்

கொல்லப்படுகின்றன” என்று வரைந்திருக்கிறார். பிராகிருத மொழியிலுள்ள புத்த ஜாதகக் கதைகளிலும், வடமொழியிலுள்ள ஹிதோபதேசத்திலும் வெற்றிலையின் உபயோகம் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த நாட்டில் எந்தச் சிறிய மங்கலச் சடங்கும் வெற்றிலை இல்லாமல் தொடங்கவும் பெறாது; முடியவும் பெறாது.

ஔரங்கசீப் மன்னர் பாரசீகத்துக்குத் தூதனுப்பிய போது, அந் நாட்டு மன்னர்க்குத் தம் அன்பின் அறிகுறியாக அங்குக் கிடைக்காத வெற்றிலையும் மாங்கனியும் அனுப்பியதாகச் சரித்திரம் குறிப்பிடுகிறது. பதினாறும் நூற்றாண்டில் விஜய நகரத்துக்கு வந்த தோமிங்கோஸ் பேஸ் (Domingos Paes) என்பவர், அந்த நகரத்து மக்களில் பெரும்பாலோர் வெற்றிலை சுவைப்பதில் பேரார்வம் காட்டியதாக எழுதியிருக்கிறார். வெற்றிலை வாங்கிக் கொள்வதற்கு ஏற்படும் செலவிற்காக ஒவ்வோர் இஸ்லாமியப் பெண்ணுக்கும் ஏற்பாடு செய்ய வேண்டும் என்று மகமதியச் சட்டத்தில் பெண்களுக்கு ஓர் உரிமை கொடுக்கப் பட்டிருக்கிறதாம். வெற்றிலை கொடுக்கும் விஷயத்தில் வங்காளத்தில் ஒரு வேடிக்கையான பழக்கம் இருக்கிறதாம். அதாவது ஒரு பீடா (வெற்றிலைச் சுருள்) கொடுத்தால் அது சாதாரண மரியாதையையும், இரண்டு பீடாக்கள் கொடுத்தால் அது விசேஷ மரியாதையையும், வெற்றிலைத் தட்டை அப்படியே கொடுத்தால் அது பேரன்பையும் தனிப்பட்ட மரியாதையையும் குறிக்குமென்று அந் நாட்டுப் பழக்கமறிந்தவர்கள் கூறுகிறார்கள். ஒரே தட்டிலிருந்து வெற்றிலையை எடுத்துப் போடுவது ஒரு தன்மையான நிலையையோ நேசத்தையோ காட்டுமென்று இன்னும் நம்மவர் கருதுகின்றனர்.

ஆங்கில ஆட்சி இந்நாட்டில் ஏற்படுவதற்கு மூன்று நான்கு நூற்றாண்டுகட்கு முன்பு, இங்கு வந்து போன மேல் நாட்டாரில் சிலர் நம்மிடையே காணப்படும் வெற்றிலைப் பழக்கத்தைக் குறித்துப் பல சுவையான குறிப்புகளை எழுதி வைத்திருக்கிறார்கள். ஹீரட்டைச் சேர்ந்த அப்துல் ரசாக் என்பவரை விஜயநகர மன்னன் வெற்றிலையும் கர்ப்

பூரமும் கொடுத்து வரவேற்ருளும். "ஐரோப்பிய மன்னர் களிடமிருந்து பெறும் வீரப் (Knighthood) பட்டத்தைப் போன்ற சிறப்புடையதாகும், இந்திய மன்னர்களிட மிருந்து வெற்றிலே பெறுவது" என்று தாமஸ் பௌரி (Thomas Bowrey) என்ற மற்ருெரு யாத்திரிகர் குறிப்பிடு கிருர். இவற்றையெல்லாம்விட அலெக்சாந்தர் ஹாமில்டன் (Alexander Hamilton) என்பவர் கூறும் வரலாறு சற்று விசித்திரமாக இருக்கிறது. 1694-ஆம் ஆண்டில் ஹாமில் டன் கடார நாட்டு (Kedha) மன்னரைக் காணச் சென்ரு ராம். அம்மன்னர் ஹாமில்டனைத் தம்மருகில் உட்கார வைத்து அவருக்கு மரியாதை காட்டும் முறையில் தாம் தின்று கொண்டிருந்த வெற்றிலேயை ஒரு பொற் கிண் ணத்தில் உமிழ்ந்து அதை 'மரியாதையுடனும்' அடக்கத் துடனும் ஹாமில்டனை உண்ணும்படி செய்தாராம். அரசர் உண்டு உமிழ்ந்த தம்பலத்தை உண்பது அரசரால் மிகுதியும் பாராட்டப்படும் ஒரு செயலாக இருந்ததாம்.

தூக்கிலிடப்படுவதன் முன்னர்க் கொலைக் குற்றவாளி களுக்கு வெற்றிலே பாக்குக் கொடுக்கும் வழக்கம் நீண்ட காலம் இந்நாட்டில் இருந்து வந்ததாம். சிறையில் அடை பட்டுக் கிடப்போருக்கு மலேரியா போன்ற நச்சுக் காய்ச் சல்கள் வராமலிருக்கும் பொருட்டு நெதர்லாந்து அர சாங்கம் கைதிகளுக்கு வெற்றிலே கொடுத்து வந்ததாம். மலேயா நாட்டில் சண்டையிட்டுக் கொண்ட இருவர் தங்க ளுக்குள் வெற்றிலே மாற்றிக் கொண்டால் சமாதானமாகப் போய்விட்டதாகக் கருதுவாராம். ஒன்றைப் பற்றித் தங்களுக்குள் ஒப்பந்தம் செய்து கொள்ளும் இருவர் முடிவில் தங்களுக்குள் வெற்றிலே மாற்றிக் கொள்ளும் பழக்கம் இன்னும் நம் நாட்டில் உண்டல்லவா?

வெற்றிலேயைப் பற்றிச் சில மூடக் கொள்கைகளும் ஒட்டிக் கொண்டிருக்கின்றன. சைனுக்காரர்கள் வெற் றிலேயை ஒரு பொழுதும் இடது கையால் வாங்கமாட்டார் களாம். மதுரையை ஆண்ட அரசி மங்கம்மாள் ஒரு சமயம் வெற்றிலேயை இடது கையால் எடுத்துவிட்ட குற்றத்துக்காகக் கழுவாய் பல செய்து நோன்பு நோற்ற

தாக அவள் சரித்திரம் கூறுகின்றது. மலேயாள நாட்டில் இழிவர் என்ற இனத்தாரிடையே ஒரு பழக்கம் இருக்கிற தாம். அதாவது சூல் கொண்ட ஒருத்திக்கு இன்ன குழந்தை பிறக்கும் என்பதை அறிய அக்குலத்தில் மூத்தாள், ஒரு வெற்றிலையை எடுத்து அதன் மேல் எண் ணெயை வார்த்து அந்த வெற்றிலையைக் கர்ப்பிணி உந்தி மேல் பிடிக்க எண்ணெய் எந்தப் பக்கம் வழிந்தோடு கிறதோ அதிலிருந்து இன்ன குழந்தைதான் அவளுக்குப் பிறக்கும் என்று கூறிவிடுவாளாம்!

வெற்றிலை வியாபாரத்தில் அரசாங்கத்துக்கு நல்ல வருமானம் பழங்காலத்திலிருந்து வந்ததாகத் தெரிகிறது. வெற்றிலை விற்போருக்கு வரி விதிக்கப்பட்டிருந்ததைப் பண்டை நூல்களிலிருந்து அறியலாம். பதினாறாம் நூற் றூண்டில், கிழக்கிந்தியக் கம்பெனி, இந்திய மன்னர்களிட மிருந்து வெற்றிலை வியாபாரத்தைத் தனிச் சலுகையாகப் பெற்றுக் கொண்டது என்று போர்த்துகீசிய அதிகாரி ஒருவர் எழுதியுள்ளார். கிழக்கிந்தியக் கம்பெனியில் வேலை பார்த்து வந்த ஆங்கிலேயர்களின் சொந்த வருமா னத்தைப் பெருக்க, 1765ஆம் ஆண்டில், கிளைவ் வங்கா ளத்தில் ஒரு வியாபாரக் கழகத்தை ஏற்படுத்தி அதன் மூலமாய் வெற்றிலை, உப்பு, புகையிலை முதலியன விற்று லாபம் பெற உரிமை கொடுத்திருந்த வரலாறும் இங்கு நினைவுகூரத் தக்கது.

தமிழ் நாட்டில் வெற்றிலைப் பயிர் செய்வதற்கென்றே ஓர் இனத்தார் பண்டை நாட்களில் இருந்ததாகத் தமிழ் நூல்கள் குறிப்பிடுகின்றன. "இலை வாணியர்கள்" என்றும், "கொடி வேளாளர்கள்" என்றும் அவர்கள் நூல்களில் குறிப்பிட்டுள்ளனர். அக்காலத்தில் காவிரிப் பூம்பட்டினத்தில் வெற்றிலை விற்கும் இடமாக இருந்த ஓர் இடம் இக்காலத்தும் "இலையமுது கூடம்" என்ற பெயருடன் அவ்வூருக்கு மேற்கே சற்றுத் தூரத்தில் இருந்துவருகிறது.

பிற நன்செய்ப் பயிர்களைப் போன்று அவ்வளவு எளிதாக வெற்றிலையைப் பயிர் செய்துவிட முடியாது.

செம்மண் கலந்த களிப்பு நிலத்தில்தான் வெற்றிலை நன்கு பயிராகும். தஞ்சை ஜில்லாவில் பண்டார வாடை, கும்பகோணம் முதலிய இடங்களிலும், தென்னார்க்காட்டில் கூடலூர், நெல்லிக்குப்பம் முதலிய இடங்களிலும், செங்கற்பட்டு ஜில்லாவில் மதுராந்தகம், கருங்குழி முதலிய இடங்களிலும், மலையாளத்திலும் கிடைக்கும் வெற்றிலை சிறந்ததாம். வெள்ளை வெற்றிலை, பச்சை வெற்றிலை, கர்ப்பூர வெற்றிலை, ரவேசி வெற்றிலை என வெற்றிலையில் பல இனங்கள் உண்டு. இரண்டாண்டு களுக்கு மேற்பட்ட வெற்றிலைக் கொடிகளைக் கத்தரித்து வரிசையாக நடுவார்கள். கொடிகள் நன்கு தளிர்த்து இலைகள் விட்ட பிறகு இரண்டு வருஷங்களிலிருந்து ஐந்து வருஷ காலம் வரையில் வெற்றிலையைக் கிள்ளுவார்கள். மழைக் காலத்தில் வெற்றிலை நிறையக் கிடைக்கும்; ஆனால் சுவை குறைந்திருக்கும். வெயிற் காலத்தில் கிடைக்கும் வெற்றிலை அளவில் சுருங்கியிருப்பினும் சுவை மிக்கதாய் இருக்கும். நம் தேசத்தில் சில மாகாணங்களில் வெற்றிலை வியாபாரம் கூட்டுறவு முறையில் நடை பெற்று வருகிறது. வெற்றிலைப் பயிரால் அதனுடன் தொடர்புடைய பாக்குத் தொழில், சுண்ணாம்பு சுடல், வெற்றிலைக் கூடை முடைதல், புகையிலை பதனிடல் போன்ற வேறு பல குடிசைத் தொழில்களும் வளர்ச்சி பெறுகின்றன.

குறிப்புரை

தகைசெய்......பசுங்காய் - சாயம் ஏற்றப்பட்ட பாக்கு. பாசடகு - பசுமையாகிய வெற்றிலை. திரையல் - வெற்றிலைச் சுருள். போதை - அறிவு மயக்கம். நிபந்தங்கள் - நிலையான நன்கொடை ஏற்பாடுகள்.

பயிற்சி

1. வெற்றிலைக்கு வழங்கும் வேறு பெயர்களையும் தொடர்களையும் குறிக்க.

2. பதம் பிரித்து எழுதுக :—அளவிட்டு, துணிந்தறிய, தூதனுப்பிய, நூற்றுண்டு, குறைந்திருக்கும்.

3. பழக்க வழக்கங்கள், குச்சு வீடுமுதல் மச்சு மாளிகைவரை, ஆண்டி முதல் அரசன் வரை, பிறப்பு முதல் இறப்பு வரை—நும் சொந்த வாக்கியங்களில் அமைத்து எழுதுக.

## வினாக்கள்

1. 'வெற்றிலை' என்னும் பெயரின் காரணத்தை ஆராய்க.

2. வெற்றிலை சுவைக்கும் பழக்கம் தமிழ் நாட்டிற்கு மிகவும் பழமை யானது என்பதற்கு இலக்கியங்களிலிருந்து சான்று தருக.

3. சிலப்பதிகாரத்தில் வெற்றிலை சுவைக்கும் பழக்கத்தைப் பற்றிக் கூறப் பெற்றுள்ளது யாது?

4. வெற்றிலை செய்யும் நன்மையைப் பற்றி மருத்துவர் கூறுவ தென்ன?

5. வெற்றிலை உண்பதால் உண்டாகும் நன்மையைப் பற்றிய பலரது கருத்துக்களைத் தொகுத்துக் கூறுக.

6. முஸ்லிம்களிடையே வெற்றிலை எவ்வாறு போற்றப்படுகிறது?

7. வெற்றிலையை ஒட்டிச் சமூகத்தில் ஏற்பட்டுள்ள கொள்கைகள் எவை?

8. வெற்றிலையை அயல் நாட்டார் எவ்வாறு போற்றுகின்றனர்?

9. 'வெற்றிலை வியாபாரம்' என்பது பற்றி நீவிர் அறிவதென்ன?

10. வெற்றிலைப் பயிர் எவ்வித நிலத்தில் செழிக்கும்? தமிழ் நாட்டில் வெற்றிலை பயிராகும் பேர்போன இடங்களைக் குறிப்பிடுக.

## கட்டுரையாக்கம்

வெற்றிலை தன் சிறப்பைத் தானே சொல்லுவதுபோல் 25 வரியில் எழுதுக.

# 7. பொறியூர்தி

திரு. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியார்

உலகில் இயல்பாகக் காணப்படுவதையே மனம் நம்பு கின்றது. அங்ஙனமல்லாதவற்றை நம்பத் துணிவதில்லை. இருங்கள்; பரகாய பிரவேசமென்று ஒரு வித்தையுண்டு என்று ஒருசார் பண்டைய நூல்களிற் படிக்கிறோம். இவ்வாறுனவற்றைப் படிக்கும்போதெல்லாம், இவை



நிகழக்கூடியனவா என்ற ஐயம் மனத்தகத்துத் தோன்று கின்றது. இவ்வாறு மனந் தடுமாறுமிடத்து, 'எல்லாம் வல்ல இறைவனது அருளை முன்னிட்டு முயன்று நிற் பார்க்கு, எதுதான் செய்ய இயலாது' என்று ஒருசார் மனம் சமாதானப்படும். இங்ஙனம் தோன்றப் பெறுதவரே கண்டதே பொருளென்றும் மற்றவை கற்பிதமென்றும் நினைப்பராதலால், அவர் மனம் தெளிவுறுது.

இவ்வண்ணம் சிலர் சில பொருள்களில் நம்பிக்கை கொள்ளாமை குறித்து அவர்மீது குறைகூறுவதிற் பயனில்லை. ஆனால், தாம் கண்கூடாகக் காணாதவையெல்லாம் உண்மையல்லவென்று கூறத் துணிவது நல்லறிவுக்கு அழகல்ல என்பதை மட்டும் வற்புறுத்திக் கூறலாம். நாம் காணாத எத்தனையோ வெளிநாடுகளிலுள்ள பொருள்களைப் பற்றிப் பத்திரிகை வாயிலாக அறிகிறோம்; அங்ஙனம் உணரும்போது அவை மெய்யென்று நம்பவில்லையா? அவ்வண்ணமே முற்காலத்து நூல்களிற் காணப்படுஞ் சில 'இங்ஙன மிருக்குமா? என்று நம்மிளமையில் ஐயுற்றவை, அங்ஙன மிருந்திருக்கலாமென்று ஓரெண்ணம் நம் நெஞ்சில் தோன்றுமாறு பிற்காலத்துச் செய்வன இல்லையா? அவற்றில் ஒன்றைப்பற்றி இங்குக் கூறுவேன்.

இராமபிரான் இராவணனைச் சங்கரித்துச் சீதையை மீட்டதும், நாட்களைக் கணக்கிட்டுப் பார்த்தான். 14 வருஷங் கழித்துத் தான் மீண்டு வருவதாகப் பரதனிடம் குறித்த நாள் அன்றே என்று தெரியவந்தது. அப்போது இராமன் விபிஷணனை நோக்கி,

> " ஆண்டு பத்தொடுநாலு மின்றோ டறுமாயின்
> மாண்ட தாமினி யென்குலம் பரதனே மாயின்
> ஈண்டுப் போகவோ ரூர்தியுண் டோ ?...... "

"பதினான்கு ஆண்டுகள் வனத்திற் கழித்துவிட்டு நான் மீண்டு வருவதாகப் பரதனுக்கு வாக்களித்தேன். அதன்படி நான் இன்று வருவேன் என்று பரதன் எதிர்பார்த்து நிற்பான். என்னைக் காணாவிடின் பரதன் உயிர் நீப்பான். பரதன் மாள என் குலமே அழியும். ஆதலின் கடுவேகமாகச் சென்று இன்று சூரியாஸ்தமனத்திற்குள் என்னை அயோத்தி சேர்ப்பிக்கக்கூடிய ஊர்தி ஏதேனுமுண்டோ?" என்று வினவினான். விபீஷணன் 'தாண்டு(வி)மான முண்டென்று தொழுது,'

> " ஈங்குளாரெலா மிவருவது இவரி னீயினிது
> பூங்குலா நகர் புகுதியிஞ்ஞான்று...... "

"எம்மிடம் ஒரு விமானமுளது. அது இங்குள்ளவரெல்

லாரும் ஏறக்கூடியது. நீ அதன்மீது இவர்ந்து சென்ருல் இன்றே அயோத்தி சேர்வாய்'' என்று புகன்ருன்.

பின்னர்த் தன்ருணையால் விபீஷணன் கொணர்ந்த புஷ்பக விமானத்தின்மீது சேனையோடு சேர்ந்து இராம பிரான் அன்றே பரத்துவாசாச்சிரமஞ் சார்ந்து, தான் மீண்டுவந்த செய்தியைப் பரதனிடம் கூறுமாறு அனு மனை அனுப்பினுன். அனுமான், அக்கினிப் பிரவேசஞ் செய்யச் சித்தனுயிருந்த பரதனுக்கு இராமபிரான் மீண்டு வந்த செய்தியை யுணர்த்தி, அவனை அங்கியிற் புக வொட்டாது தடுத்துக் காத்தனனென்று இராமாயணத்திற் படித்திருக்கிருேம்.

தாம் காணுதவையெல்லாம் மெய்யென்று எண்ணும் மனப்பான்மையார், இன்றைக்கு வெகு சிலவே ஆண்டு கட்கு முன்பு இது கட்டுக்கதை யென்று எண்ணியிருப் பார். இப்போது படைகளுடன் வானத்துப் பறந்து செல் லும் வானக் கப்பலைப் பற்றி யறிந்திருத்தலால், இராமா யணத்துக் கூறிய புஷ்பக விமானச் செய்தியும் ஒருகால் உண்மையாயிருக்கலாமென்று எண்ணுதற்கு இடந்தருகிற தன்ருே ?

இராமாயணத்துக் கூறிய புஷ்பகவிமானம் போன்று சீவகசிந்தாமணியென்ற பெருங்காப்பியத்தில் ஒரு வகை யான ஊர்தியைப் பற்றிய நிகழ்ச்சி சொல்லப்பட்டுள்ளது. இராசமாபுரத்திலே குருகுலத்துதித்த சச்சந்தனென்னும் அரசன், விசயை யென்பாளை மணந்து அவளது பேரழ கில் ஈடுபட்டு நாட்டைக் கட்டியங்கார னென்பானிடம் ஒப்புவித்துத் தான் அந்தப்புரத்திலேயே இன்புற்றிருந் தான். இங்ஙனிருக்கையில் விசயை கருவுற்றவள், ஒரு நாள் மூன்று கனுக்கண்டு அவற்றை அரசனிடங் கூறி னுள். அரசனும் அவற்றின் பயனைக் கனுநூலின்படி ஆய்ந்துரைத்தனன். பின்னர் விசயையுற்ற கருவு நாடோ றும் வளரலாயிற்று. அப்போது மன்னனுக்கு எந்திர வூர்தி ஒன்று இயற்றுவிக்க வேணுமென்ற ஓரெண்ணந் தோன்றிற்று. அதனுல் மன்னன் அந்தக் கலையில் வல்லா னெருவனைக் கூவி ஓரெந்திரவூர்தி யியற்றக் கட்டளை

யிட்டனன். அந்தத் தச்சனும் மன்னவன் கட்டளைப் படி,

“ பல்கிழி யும்பயி னுந்துகி னூலொடு
நல்லரக் கும்மெழு கும்நலஞ் சான்றன
அல்லன வும்மமைத் தாங்கெழு நாளிடைச்
செல்வதோர் மாமயில் செய்தன னன்றே.”

அவ்வாறு இயற்றிய அந்த மயிற்பொறி உயிருடனிருக்கும் மயில்போலத் தோன்றிற்று. அந்த மயிற்பொறியின் மீதேறி வானவழியாகச் செல்லவும், பூமியிலிறங்கவும் தன்னுடைய தேவியைச் சச்சந்த மன்னவன் பயிற்றுவித்தான். பின்னர் ஒரு சமயம், கட்டியங்காரனென்பான் அரசை வௌவக் கருதி அந்தப்புரத்தை முற்றுகை செய்தபோது, சச்சந்தன் மனைவியான விசயை அந்த மயிற் பொறியின் மூலமாகவே அரசன் அனுமதியின்மேல் அந்தப்புரத்தினின்று வெளியேறினாள் என்பதே இந் நிகழ்ச்சி. சிறிது காலத்திற்குமுன் இந்தப் பகுதியைப் படித்தவரிற் பலர், பறக்கும் மயிற்பொறி அரசன் இயற்றித்தர அதன் மூலமாக விசயை பறந்து அந்தப் புரத்தினின்று வெளியேறினாளென்ற செய்தியைப்பற்றி, ‘இது நிகழ்ந்திருக்குமா?’ என்று நினைத்திருப்பார். விஞ்ஞான சாஸ்திரம் வளர்ச்சியுற்று மயிற்பொறி போன்ற வான விமானம் பறந்து செல்வதைப் பல்காலும் கண்கூடாகக் கண்டறியும் இக்காலத்திலோ, இது நிகழ்ந்தது கூறியதாகவே கருத இடந் தருகின்றதல்லவா?

இங்ஙனம் வானத்தியங்கும் பொறிகளே யன்றி, நிலத்திலூர்ந்து செல்லும் பொறியும் இருந்ததாகக் காண்கிறது. அது கூறுவேன்.

அவந்தி நாட்டில் உஞ்சைப்பதியில் சண்டமகாசேனன் என்னும் பெயர் பூண்ட பிரச்சோதனன் என்பான் ஓர் அரசனிருந்தான். அவனுக்கு வாசவதத்தை என்ற ஓர் அருமை மகளிருந்தாள். அன்னாளுக்கு உதயணனை யாழ் பயில்விக்குமாறு செய்யப் பிரச்சோதனன் விரும்பினான். பிறகு மந்திரிமாரோடு ஆலோசித்து, அவனை யகப்படுத்தச் சூழ்ச்சி செய்தான். அதன்படியே சண்ட

மகாசேனனென்ற பிரச்சோதனன் வேழப் பொறி யொன்றை இயற்றுமாறு பணிக்கப் பணியாளரும்,

" அரக்கி னும்மெழுக் காகிய நூலினும்
மரத்தி னும்இழி மாவின் மயிரினும்
விரித்த தோலினும் வேண்டிய வற்றினும்
தரித்து யானையைத் தாமியற்றி னார்."

இவ்வாறு இயற்றிய வேழப்பொறி செய்தொழில் வன்மை யால் போலியானையாகப் புலப்படாது இயற்கை யானை யாகவே புலப்பட்டதென்பது உதயணன் சரிதையைப் படிப்பார்க்கு இனிது விளங்கும்.

மற்றும் உதயணன் கதையை யுற்று நோக்குவார்க்கு நிலத்தியங்கும் மற்றோர் ஊர்தியும் இருந்ததென்பது விளங்கும். உதயணனுக்கு உயிர்த்தோழனும் மந்திரியு மான யூகியென்பான், உதயணனைத் தன் மதியின் வலி யால் பிரச்சோதனனிடமிருந்து வாசவதத்தையோடு வெளியேற்றிச் சயந்தி நகரம் புகுவித்த பிறகு, தான் உஞ்சையம்பதியில் முடிக்க வேண்டுவன முடித்துத் தனது நட்பினனான யவனப் பாடித் தலைவன்,

" கையிற் புனைந்த கழிநுண் சிறப்பொடு
வையகத் தியங்கும் வெய்யவ னூரும்
தேரி னன்ன செலவிற் றாகி
யாவரு மறியா வரும்பொறி யாணியின்
இருப்புப் பத்திர மிசையக் கவ்வி
மருப்புப் பலகை மருங்கணி பெற்றுப்
பூணி யின்றியும் பொறியி னியங்கும்
மாண்வினை வையம் மனத்தினி தெறப்பக்
கடுப்பும் தவிர்ப்புங் கண்டன னாகி
வத்தவ னன்னா டத்திசை முன்னி
வித்தக வாணி வேண்டுவயின் முறுக்கி
பூந்தார் மார்பிற் புரந்தர குமரனிற்
போந்தனன் ".

(பெருங்கதை—இலாவா, யூகிபோதரவு—178–198)

என வருவது காண்க.

இங்ஙனமிருந்த நம் கலையறிவுகள் இடையிற் பிற நாட்டாரின் போராட்டத்து நேர்ந்த குழப்பத்தினால் மங்கி

விட்டன. இனியாவது நம் நாட்டார் மனவமைதியுற்று விஞ்ஞான சாஸ்திரம் முதலிய கலைகளில் வல்லுநராய் மேம்பட்டுத் திகழ்வார்களாக.

### குறிப்புரை

இன்றேடு அறுமாயின் - இன்றேடு முடியுமானல். மாமயில் - சிறந்த மயிலின் உருவமாக. எழுநாளிடை - ஏழு நாட்களில். பொறி - எந்திரம். வௌவ - கைப்பற்ற, அபகரிக்க. முன்னி - முற்பட்டு. வித்தகம் - ஞானம், அறிவு. புரந்தரன் - இந்திரன்.

### பயிற்சி

1. யானை, எந்திரம், வாகனம் என்பவற்றிற்கு வரும் வேறு பெயர்களைக் குறிக்க.

2. உயிரெழுத்து முதலெழுத்தாகவுள்ள சொற்களை யடுத்து 'ஓர்' என்னும் எண்ணிடைச் சொல் வரும் என்பது விதி: (உ-ம்.) ஓர் எண்ணம் இவ்வாறு வருவதற்கு இப் பகுதியிலிருந்து நான்கு உதாரணம் தருக.

### வினுக்கள்

1. வானவூர்திபற்றி இராமாயணத்தில் கூறப்பட்டுள்ள இடம் யாது?

2. சீவகசிந்தாமணியில் வரும் பறக்கும் பொறியைப்பற்றிய செய்தியைக் கூறுக.

3. நிலத்தில் ஊர்ந்து செல்லத்தக்க எந்திரப்பொறி முற்காலத்திலுண்டென்பதைச் சான்றுடன் விளக்குக.

### கட்டுரையாக்கம்

"நமது முன்னோர் கலையறிவு" என்பதுபற்றி ஒரு பக்கம் அளவில் கட்டுரை வரைக.

# 8. பெனிஸிலின் விந்தை மருந்து

காப்டன், என். சேஷாத்திரிநாதன்

கடந்துபோன ஒருநூறு ஆண்டுகளுக்குள்ளே வைத்திய முறை புரட்சி அடைந்துவிட்டது. ஸர் ஜேம்ஸ் ஸிம்சன் (Sir James Simpson) இரண வைத்தியத்துக்கு ஆளாகும் நோயாளிக்கு நோவு தோன்ருதிருக்கப் பெரிதும் பயன்படுகின்ற குளோரொப்பாரம் என்னும் மயக்க மருந்தை முதன் முதலில் உபயோகித்தார். லிஸ்டர் பிரபு (Lord Lister) கார்பாலீக் அமிலத்தை அணுவுயிர்ச் சங்காரியாக முதன் முதலில் பயன்படுத்திஞர் ; சீழ் பிடிக்காமல் இரண வைத்தியம் செய்யும் முறைகளைச் சீர்திருத்திஞர். எர்லிச் (Ehrlich) என்பார் ஸல்வார்ஸன் மருந்தைக் கண்டுபிடித்து ஸிஃபிலிஸ் என்னும் கொடிய மேக நோயை ஒழிக்க வழி கண்டார். 1932-ம் ஆண்டில் டொமாக் (Domagk) என்னும் ஜர்மானிய விஞ்ஞானி சல்ஃபா மருந்தைக் கண்டுபிடித்துச் சீழ் பிடித்தலையே ஒழித்துவிடலாம் என்ருெரு நம்பிக்கையை எழுப்பிஞர். மக்களுடைய உடலில் இருந்து நிமோனியா, மெனிஞ்சைட்டிஸ் என்னும் கொடிய ஜுரங்களையும் சல்ஃபா மருந்துகள் துரத்தியடித்தன. நெடுங்காலமாக பிரசவ ஜன்னியோடு பெரும் போர் நடைபெற்று வந்தது. கடைசியாக இப்போரில் சல்ஃபா மருந்துகள் வெற்றிபெற்றன.

இத்தகைய நூதன வைத்திய முறைகளும் மருந்துகளும் செய்த புரட்சியைவிட மிகவும் விந்தையானது பெனிஸிலின் மருந்து செய்த புரட்சிதான்.

1928-ம் ஆண்டில் டாக்டர் அலெக்ஸாண்டர் ஃபிளெமிங் (Dr. Alexander Fleming) என்பார் லண்டன் மாநகரில் ஸெயின்ட் மேரி வைத்தியசாலையைச் சார்ந்த ஆராய்ச்சி நிலையத்தில் அணுவுயிர் விஞ்ஞான நிபுணராக வேலை பார்த்து வந்தார். இதுவே பெனிஸிலின் வரலாற்றின் ஆரம்பம் என்று கூறலாம். இவர் அணுவுயிர் விஞ்

ஞானத்தில் தேர்ந்தவர். அணுவுயிர்ச் சங்காரி யென வழங்கிவந்த பல மருந்துகளை ஆர்வங்கொண்டு ஆராயத் தொடங்கினர். இதற்காகப் பகையணுவுயிர் பலவற்றைப் பயிர் செய்து வந்தார். பகையணுவுயிர்களைக் கலப்பில்லாமல் தனித்தனியே பயிர் செய்வது எளிதன்று. நீரில் அணுக்கள் மிதப்பதுபோல் வாயுமண்டலத்திலும் பலவகை அணுவுயிர்-விதைகள் உலவுகின்றன. பகையணுவுயிர்களை வகுத்து உணர் கலவையுடைய பயிர்த் தட்டுகளிலும், ஆராய்ச்சிக்குழாய்களிலும் தனித்தனியே பிரித்துப் பயிர் செய்து காக்கும்பொழுது வாயு மண்டலத்திலிருந்து வேறு அணுவுயிர் விதைகள் புகுந்து பயிராவது, ஆராய்ச்சி ஆலயங்களில் காணும் சாதாரண நிகழ்ச்சியேயாம். அலெக்ஸாண்டர் ஃபிளெமிங் சீழ்ப்பிடித்தலுக்குக் காரணமான



ஸர் அலெக்ஸாண்டர் ஃபிளெமிங்

ஸடஃபிலொகாக்ஸ் என்னும் அணுவுயிரைப் பயிர்த்தட்டில் பயிர் செய்த போது, அதில் வேறு அணுவுயிர் விதை வாயு மண்டலத்திலிருந்து புகுந்து வளர்வதைக் கண்டு வியப்புற்றார். இவ் வியப்பிற்குக் காரணமும் உண்டு. இப்படி வளர்ந்த அணுவுயிர் வெண்மையான ஒருவகைப் பூஞ்சணமேயாம். பயிர்த் தட்டில் வளர்ந்த ஸ்டஃபிலொகாக்கஸ் அப்பூஞ்சணத்தை அணுகாமல் சிறிது விலகி நின்று வளர்ந்த காட்சி வியப்பாகவே இருந்தது. இவ்வணுவுயிர் ஏன் பூஞ்சணத்தை அணுகவில்லை? ஸ்டஃபிலொகாக்கஸ் என்னும் அணுவுயிர் அஞ்சி விலகுவதற்குக் காரணமாகிய பூஞ்சணத்தினின்று சுரந்த பொருள் எத்



பெனிஸிலின் பூஞ்சணத்தை ஸ்டஃபிலொகாகஸ் அணுகாது இருத்தல்

தன்மை வாய்ந்தது? இத்தகைய பிரச்னேகள் அலெக் ஸாண்டர் ஃப்ளெமிங் மனத்தில் உதித்திருக்க வேண்டும் என்பது இப்புதிய பூஞ்சணம் புகுந்து பயிரான ஆராய்ச்சித் தட்டைப் புறக்கணிக்கின்ற வழக்கத்திற்கு மாருகப் பத்திரப்படுத்தி, இப்பூசணத்தையும் தனியாகப் பயிர் செய்து காப்பாற்றிஞர் என்பதஞல் தெளிவாகிறது. நாள்தோறும் செய்வதற்குஇருந்த அலுவல்களே முடித்த பின் ஒழிந்த நேரம் கிடைத்தபோது, இப்பூஞ்சண ஆராய்ச்சியில் ஈடுபட்டார். ஸ்டஃபிலோகாக்கஸ் அணுவு யிரை அணுகாமல் தடுத்த இப்பூஞ்சணத்தின் ஆற்றலே யெல்லாம் ஆராயத் தொடங்கிஞர். வேறு பல அணுவுயிர் களேயும் அணுகவிடாத ஆற்றல் இப்பூஞ்சணத்திற்கு உண்டா என்பதை ஆராய்ந்தார்.

கிராம முறைப்படிச் சாயம் ஏற்றுக்கொள்ளும் வகுப் பெனவும், கிராம சாயம் ஏற்று முறைக்கு இணங்காத வகுப்பெனவும் அணுவுயிர்களே இருவகையாக வகுக்கலாம். கிராம முறையில் சாயம் ஏற்றுக்கொள்ளும் வகுப்பைச் சார்ந்த அணுவுயிர்களில் பல இப்பூஞ்சணத்தை அணுகி வளரா என்பதை ஃப்ளெமிங் ஆராய்ச்சியால் தெரிந்து கொண்டார். இப்பூஞ்சணத்தின் உருவ அமைப்பையும் பிற தன்மைகளேயும் கண்டபொழுது, இது பெனிசிலியம் வகுப்பைச் சார்ந்தது என்பதும், வளரும்போது ஒரு வகைச் சாரத்தை உணுக்கலவைப்பொருளில் சுரக்கும் என்பதும், அணுவுயிர்கள் வளராமல் தடுக்கும் ஆற்றல் இக்கலப்புக்கு உண்டு என்பதும் பிறவும் ஆராய்ச்சியால் தெளிவாயின. பெனிஸிலியம் என்னும் பூஞ்சணம் சுரந்த சாரத்திற்குப் பெனிஸிலின் என்னும் பெயுரையும் வழங் கிஞர். இப்பூஞ்சணம் உணுக்கலவை நீரில் பயிராகின்ற பொழுது சுரக்கின்ற சாரத்தைப் பிரித்து எடுத்தார். இந் நிலேயில் பெனிஸிலின் ஆராய்ச்சிக்குத் தடை ஏற்பட்டது. டாக்டர் ஃப்ளெமிங் வேலேபார்த்துவந்த ஸெயின்ட் மேரி ஆராய்ச்சியாலயம் மிகச்சிறியது. ஆகையால், பெனி ஸிலின் ஆராய்ச்சியைத் தொடர்வதற்குப் போதிய வசதி கள் இவருக்குக் கிடைக்கவில்லே. எனினும் முடிந்த

வரையில் முயற்சி குன்றுமல், அணுவுயிர்ச் சங்காரியாகத் தோன்றிய பெனிஸிலின் ஆற்றலைப் பலவாறு பரிசோதனை



பெனிஸிலின் பூஞ்சணம் பயிராவது



ஹீட்லி முறைப்படி பெனிஸிலின் உயர்வு

செய்து வந்தார். நோயாளியினுடைய சளி முதலிய கழிவுப் பொருள்களிலிருந்து பகையணுவுயிர்களைத் தனியாகவே பிரித்துப் பயிர் செய்வதற்குப் பெனிஸிலின் உதவியது. ரணங்கள்மீது பெனிஸிலின் கலவை நீரைப் பரப்பி ரணங்களை விரைவிலே ஆற்ற முடியுமென்று அவர் அறிந்தார்.

ஃப்ளெமிங் செய்த ஆராய்ச்சிகள் 1932-ம் ஆண்டு வரைக்கும் பிரபலம் அடையவில்லை. பெனிஸிலின் வைத்திய உலகத்தையே கலக்கும் என்று எவரும் எதிர் பார்க்கவில்லை. ஃப்ளெமிங்குக்கு ஆப்த சிநேகிதரான ரெயிஸ்ட்ரிக் (Raistrick) என்பாரொருவரே பெனிஸிலின் பிரபலமடையலாம் என்று நம்பியவர். இவர் ரசாயன விஞ்ஞானி; வைத்தியத்திலும் தேர்ந்தவர். பெனிஸிலின் ஆராய்ச்சியில் ஃப்ளெமிங் பண்டிதருக்கு ரெயிஸ்ட்ரிக் தம்மாலியன்ற உதவிகள் புரிந்தார். ஆராய்ச்சிக்காகச் சீரான முறையிலே உணுக்கலவை நீரிலிருந்து பெனிஸிலினைப் பிரித்துப் பரிசுத்தம் செய்து திரட்டிக் கொடுத்தார். இதனை எலிகளுக்குச் செலுத்தியபொழுது எவ்விதத் தீங்கும்

விளையவில்லை என்பதையும் நிரூபித்தார்; நியுமோனியா ஜுரத்திற்குக் காரணமாகிய அணுவுயிரை இவ்வெலிகளின் உடலில் புகுத்தி, அதனோடு பெனிஸிலினையும் செலுத்தினார். சில எலிகளுக்குப் பெனிஸிலினைச் செலுத்தாமல் நியுமோனியாவை விளைக்கும் பகையணு உயிரைச் செலுத்தினார். பெனிஸிலின் செலுத்தப்பட்ட எலிகள் நோயால் வருந்தாமல் பிழைத்தன. பெனிஸிலின் செலுத்தப்படாத எலிகள் அனைத்தும் நோய்க்கு இரையாகி இறந்தன. இவ்வாறு தெளிவான ஆராய்ச்சிகள் பல செய்து, பெனிஸிலினின் ஆற்றல்களை விளக்கிய போதிலும் வைத்தியர்கள் பெனிஸிலினுடைய மகிமையை அறிந்து கொள்ளவில்லை. "பூஞ்சணத்திலிருந்து சுரக்கின்ற மருந்தை நோயாளிக்கு எப்படிப் பயன்படுத்தலாம்?" என்றார்கள்.

1939-ம் ஆண்டில் இரண்டாவது உலகப் போர் நெருங்குவதை வைத்தியர்களும் இராணுவ அதிகாரிகளும் அறிந்து கொண்டனர். போர்க்களத்தில் படுகாயமேற்று வருந்தும் இராணுவ வீரர்களுக்கு அணுவுயிர்களால் உயிர்ச் சேதம் வராமலிருக்க என்ன செய்யலாம் என்று வைத்திய விஞ்ஞானிகள் வெகு தீவிரமாகச் சிந்திக்கத் தொடங்கினார்கள். டாக்டர் ஃப்ளோரி (Dr. Florey) என்பாரும் அவருடைய உடனுழியர்களும் அணுவுயிர்ச் சங்காரிகளைத் தேடத் தொடங்கினார்கள். பெனிஸிலின் சிறந்த அணுவுயிர்ச் சங்காரியாகலாம் என்று சிந்தித்து அதைத் திரும்பவும் ஆராயத் தொடங்கினார்கள். இரண வைத்தியத்திற்கும் நியுமோனியா போன்ற பலவகை ஜுரங்களைக் குணம் செய்வதற்கும் பெனிஸிலின் ஆற்றலுடையதெனவும், அதுகாறும் பகையணுவுயிர்களைக் கண்டித்த மருந்துகள் அனைத்திலும் பன்மடங்கு அதிகமான ஆற்றலுடையது இந்தப் பென்ஸிலினெனவும், உடலுக்கு எத்தகைய கேடும் விளைக்காது எனவும், டாக்டர் ஃப்ளோரியும் உடனுழியர்களும் தெளிவான அத்தாட்சிகளுடன் நிரூபித்தனர். ஆக்ஸ்போர்ட் ஆராய்ச்சி நிலையத்திலிருந்தும், அமெரிக்காவில் ராக்ஃபெல்லர் ஆராய்ச்சிக் கழகத்திலிருந்தும், இவர்களுடைய ஆராய்ச்சிக்குப்

போதிய அளவு பொருளுதவி கிடைத்தது. போர்முனை யில் இரண சிகிச்சைக்குப் பென்ஸிலின் இன்றியமையாத மருந்தாகும் என்று எண்ணி அதைப் பெரிதளவிலே உற்பத்தி செய்வதற்குரிய வழிவகைகளை அமெரிக்காவிலேயே தேடினார்கள். அமெரிக்காவிலுள்ள வைத்திய ஆராய்ச்சிக் கழகங்களும், மருத்துவ உற்பத்திச் சாலைகளும், ஊக்கத் தோடும் உற்சாகத்தோடும் இவர்களுக்கு உதவி புரிந்தன; பெனிஸிலினை நன்றாய்ச் சுத்தம் செய்யவும், ஏராளமாய் உற்பத்தி செய்யவும் வழிவகைகளை வகுத்துக் கொடுத்தன. பல வைத்தியசாலைகளிலுள்ள நோயாளிகளுக்குப் பெனிஸிலினைக் கொடுத்தபோது, அப்பிணியாளிகள் விரைவில் குணமடைவதைக் கண்ணுற்ற வைத்திய விஞ்ஞானிகள் அம்மருந்தின் ஆற்றலை வியந்து கொண்டாடினர்.

பெனிஸிலின் செய்யும் முறையும் விரைவிலே மாறுதல் அடைந்தது. இதற்குமுன் கிடைத்த பெனிஸிலினைவிடப் பன்மடங்கு வீறுள்ள பெனிஸிலினை உற்பத்தி செய்யத் தொடங்கினார்கள். போர் முனையில் போர் வீரர்களுக்குச் சிகிச்சை செய்ய ஏராளமாய்ப் பெனிஸிலின் கிடைத்தது. இம்மருந்து போர் வீரர்களின் மரணத் தொகையைக் குறைத்தது. இரணங்கள் விரைவிலே குணமாயின. உடைந்த எலும்புகள் சீர்குலையாமலே வெகு விரைவில் பொருந்திக் கூடின. போர்முனையில் காங்கிரீன் (Congrene : அங்கமே அழுகிப் போவது) நோய்க்கு ஆளாகாமல் போர் வீரர்கள் தப்பிப் பிழைத்தனர். நீடித்த கால தாமதமில்லாமலே குணம் அடைந்து போர் வீரர்கள் போர்முனைக்குத் திரும்பினார்கள்.

அணுவுயிர்ச் சங்காரியாக வைத்தியத்திற்கு உதவுகின்ற மருந்து பெரிதளவிலே இரத்தத்தோடு கலந்திருந்தாலும், உடலுக்குத் தீங்கு விளைக்காமல் இருப்பதோடு மிகச் சிறிதளவிலும் பகையணுவுயிர்களைத் தாக்கும் ஆற்றல் பெற்றிருப்பது இன்றியமையாதது. பெனிஸிலின் மருந்து தோன்றுவதற்குமுன் கண்டுபிடித்த அணுவுயிர்ச் சங்காரிகளில் எதுவுமே இத்தன்மைகளைப் பெற்றிருக்கவில்லை. இரண்டாயிரத்தில் ஒரு பங்கு என்ற அளவிலே

கலந்த பெனிஸிலின் கலவை மருந்துகூட, திசுக்களுக்கும் ஜவ்வுகளுக்கும் எத்தகைய தீங்கும் விளைக்கவில்லை. பத்து லட்சத்திற்கு ஒரு பங்கு அளவுள்ள பெனிஸிலின் கலவை நீரும் அணுவுயிர்களை நாசம் செய்யும் ஆற்றல் பெற்றது.

பெனிஸிலினுக்கு அடங்குகிற பகையணுவுயிர்களில் தலைமை பெற்றவை சீழ் பிடித்தலுக்குக் காரணமான ஸ்டஃபிலொகாக்கஸும் ஸ்ட்ரெப்டொகாக்கஸுமேயாம். கூற்றுவனது சன்னிதானத்திற்கு விரைவிலே அழைத்துச் செல்லும் யமகிங்கரன் போன்றது ஸ்ட்ரெப்டொகாக்கஸ் அணுவுயிரேயாம். இரணஜன்னி, பிரஸவ ஜன்னி நியு மோனியா ஜுரம் என்னும் கொடிய நோய்களுக்குக் காரணமானவை ஸ்ட்ரெப்டொகாக்கஸ் வகுப்பைச் சார்ந் தவை. இந்நோய்களுக்கு ஆளானவர்களுடைய உடலுக் குள் பென்ஸிலினை இஞ்சக்ஷன் முறையிலே செலுத்தி விரைவிலே சுகநிலை அடையச் செய்துவிடலாம். மெனிஞ் சொகாக்கஸ் என்னும் அணுவுயிர் மூளைக்காய்ச்சலை விளைக்கும். ஸ்டஃபிலோகாக்கஸ் வேறு இடங்களில் சீழ் பிடித்தலை விளைப்பதோடு, எலும்பிலும் சீழ் பிடித்தலை விளைக்கும். நிலத்தில் இருக்கும் அணுவுயிர்கள் கொடிய காயம் பட்டவர்களுடைய புண்ணில் புகுந்து இரத்தத் தோடு கலவையாகிக் கா்ங்கிரீனை விளைக்கிறது. இத்தகைய நோய்களை வேர் அறுக்க பென்ஸிலின் இன்றியமையாத மருந்தாகிறது. முதல் உலகமகா யுத்தம் நிகழ்ந்த பொழுது பெனிஸிலின் மருந்து தோன்றாததினாலே அந் நாட்களில் மேற்கூறிய தொத்து நோய்களால் மாண்டவர் களின் எண்ணிக்கை, பகைவர்களுடைய குண்டுகளால் மாண்டவர்களின் எண்ணிக்கையிலும் பன் மடங்கு அதிகம். இரண்டாவது உலகமகா யுத்தத்தில் இத்தகைய நோய்களால் நிகழ்ந்த மரணத்தொகை பெரும்பாலும் குறைந்துபோயிற்று.

வரன்முறை கெட்ட காம வாழ்க்கையால் விளையும் நோய்களின் காணரியா என்பதும் சிஃபிலிஸ் என் பதும் மேக நோய்களைச் சார்ந்தவை. இவை சமூகத்தில்

இன்றைக்கும் மறைந்து உலவுகிற பேய்களாகவே இருந்து வருகின்றன.

ஸல்வார்ஸன் மருந்துகள், சல்ஃபா மருந்துகள், பெனிஸிலின் முதலிய நவீன மருந்துகள் கண்டுபிடிப்பதற்கு முன்னே இந்நோய்கள் எளிதில் குணமாகாமல் நோயாளிக்குத் துன்பம் விளைத்தன. இந் நோய்களால் அடையும் துன்பங்களைக் கண்ணுறுபவரும் வினைப்பயன் என்று இரங்கி வந்தனர். துன்புறுபவனும் கருமவினை என்று தன்னைத்தானே ஆற்றித் தேற்றிக்கொண்டு நோயைத் தாங்கி வந்தான்.

பெனிஸிலினும் சல்ஃபா மருந்துகளும் ஸல்வார்ஸன் மருந்துகளும், இந்நோய்களை உலகிலிருந்து வெகு சிரமமில்லாமலே அகற்றி விடுகின்றன. பெனிஸிலின் இவ்விரு நோய்களுக்கும் பயன்படக்கூடியது. காணரியாவை ஒரே நாளில் உடலிலிருந்து அகற்றிவிடும் ஆற்றல் உடையது. ஸிஃபிலிஸ் நோய் ஆரம்பமான உடனேயே ஏழு நாட்களுக்கு விடாமற் பெனிஸிலின் சிகிச்சை செய்தால் நோய் முற்றிலும் மறைந்து போய்விடும்.

இரணத்தின்மீது பெனிஸிலினைப் பரப்பிச் சாதாரண வைத்தியத்திற்கு இணங்காத இரணத்தையும் எளிதில் ஆற்றிவிடலாம்.

பெனிஸிலின் மருந்தினுடைய ஆற்றல்களை ஆராய்ந்து விளக்கிய ஃப்ளோரி என்பாருக்குப் பின் வந்தவர்களும், பல துறைகளில் இடையறு முயற்சியோடு ஆராய்ந்து பல உண்மைகளைக் கண்டறிந்தனர். இன்று பெனிஸிலினை முற்றிலும் சுத்தமாக உற்பத்தி செய்வதோடு ஏராளமாகவும் குறைந்த விலைக்கு யாவருக்கும் அகப்படுமாறும் உற்பத்தி செய்கின்றனர்.

பாக்டீரியாக்களைக் கிராம் சாயம் ஏற்றும் முறைப்படி இருவகையாகப் பிரிக்கலாம் என்று முந்தியே சொன்னோம். இவ்விரு வகுப்பிலும் கிராம் சாயம் ஏற்றுக் கொள்கிற வகுப்பில் அடங்கிய அணுவுயிர்கள் பெனிஸிலினுக்கு அடங்குவன; கிராம் சாயம் ஏற்றுக் கொள்ளாத வகுப்பைச் சார்ந்த அணுவுயிர்கள் பொதுவாகப் பென்ஸி

லினுக்கு அடங்காதவை. ஆனல், இதற்கும் சில ஒழிபுகள் உள்ளன. ஒருவகை மூளைக் காய்ச்சலுக்குக் காரண மாகிய மெனிஞ்சொகாக்கஸ் எனவும் ஒருவகை மேக நோய்க்குக் காரணமாக காணக்காக்கஸ் எனவும் பெயர் கொண்ட அணுவுயிர்கள் பெனிஸிலினுக்கு எளிதில் இணங்கக் கூடியவை. இவ்விரு அணுவுயிர்களும் கிராம் சாயம் ஏற்றுமுறைக்கு இணங்காவாம். டைஃபாயிட் ஜுரம் விளைக்கும் அணுவுயிரும், சீதபேதி அணுவுயிரும், காலரா அணுவுயிரும் பெனிஸிலினுக்கு வசப்படாதவை. க்ஷயரோகம், குஷ்டம் இவைகளுக்கு காரணமாகிய அணு வுயிர்கள் கிராம் சாயம் ஏற்றுமுறைக்கு இணங்குமாயினும் பெனிஸிலினுக்கு இணங்காவாம்.

பெனிஸிலின் சிகிச்சைக்கு ஆளாகும் நோயாளிக்கு ஒரு பிரச்னை உண்டு. அவன் நிலையில் அதுவும் முக்கிய மான பிரச்னைதான். இரவும் பகலும்மூன்று மணி நேரத்திற் கொருதரம் தேள் கொட்டுவதுபோல் இஞ் சக்ஷன் முறைப்படி பெனிஸிலினைச் செலுத்துவதைத் தவிர்த்து வேறு முறையிலே இம் மருந்தைச் செலுத்த முடியாதா என்பதே இவனுடைய பிரச்னை. வைத்தியன் நோயாளியாகும் போதல்லவா நோயாளியின் இந்தப் பிரச்னை எவ்வளவு முக்கியமானதென்று உணருவான்! பெனிஸிலினுடைய அதிசயச் செயலே வேதனையைத் தாங்க நோயாளிக்கு உதவி செய்கிறது. 'இந்த வேதனை யைச் சிறு குழந்தைகள் எப்படித் தாங்குவார்களோ! அவர்களுக்கு இப்படி வேதனை விளைப்பது கொடுஞ்செய லன்றோ?' என்று சிலர் கேட்கலாம். இப்பிரச்னைகளுக்கு விடைகாணச் சில வருஷங்களாயின. குழந்தைகளுக்கும் பெரியோர்களுக்கும் புதிய முறையில் செய்த பெனிஸிலின் மாத்திரைகளை வாய் வழியாகக் கொடுத்து இஞ்சக்ஷன் முறை அளவிலேயே நோய்களைக் குணமாக்கும் வைத்திய முறைகளும் தோன்றத் தொடங்கியிருக்கின்றன. மேலும் புதிய முறைப்படி இஞ்சக்ஷன் செய்வதற்குப் புது வகைப் பெனிஸிலின் என்றும் அகப்படுகிறது. அதை இருபத்து நான்கு மணி நேரத்திற்கு ஒருதரம் இஞ்சக்ஷன் செய்

தால் போதும். பழைய முறைப்படி மூன்று மணி நேரத்திற்கு ஒரு தரம் பென்ஸிலின் இஞ்சக்ஷன் செய்வதற்குச் சமமாக உதவுகிறது இப்புதிய மருந்து.

புதிய மருந்துகளைக் கண்டுபிடித்தபிறகு. அப்புதிய மருந்துகள் தாறுமாறுமாக உபயோக மாகும்போது அவைகளுடைய பெயரையே கெடுத்துவிடுகின்றனர். பெனிஸிலின் மருந்தும் இப்படி வீணுக்கப் படுகிறது. அதனுடைய பெயர் கெடும்படி இடையூறுகள் உண்டாகலாம். வைத்தியன் எதிர்பார்க்கும் அளவிலே பெனிஸலின் மருந்து நோயாளிக்கு எப்பொழுதும் நன்மை விளைவிப்பதில்லை. இதற்குச் சில காரணங்கள் உள்ளன என்பதை வைத்தியர்கள் உணர வேண்டும். இல்லாவிடில் பெனிஸிலின் மருந்து வீணுகிவிடலாம். கலவை செய்த பெனிஸிலினைப் பனிக் கட்டியின் தட்ப நிலையிலேயே காப்பது இன்றியமையாதது. இல்லாவிட்டால் இம் மருந்தின் வீறு குன்றிப் போகும். வீறு குன்றிய பெனிஸிலினைச் செலுத்தும்பொழுது எதிர்பார்த்த நன்மை விளையாது. பெனிஸிலினுடைய வீறு குறைவதற்கு வேறு காரணங்களும் உள்ளன. அவற்றில் முக்கியமானது பெனிஸிலின் கலப்பதற்கு உபயோகமாகும் நீர் அசுத்தப்படுவதேயாம். நிலத்தில் சாதாரணமாக வாழும் ஒரு வகைப் பாக்டிரியம் கலவைநீர் வழியாகவோ அல்லது, அசுத்தமான இஞ்சக்ஷன் கருவியூடோ பெனிஸிலில் கலந்து பெனிஸிலினுடைய ஆற்றலைக் குறைத்து விடும். பெனிஸிலினை இஞ்சக்ஷன் முறையில் கையாளும்போது அதற்குற்ற நிபந்தனைகளைச் சீராக அனுசரிக்க வேண்டும். ஆஸ்டியொமயலைட்டிஸ் என்னும் நோய் எலும்புச் சீழுக்குக் காரணமானது. இந்நோய் விளைக்கின்ற ஸடீஃபிலொகாக்கஸ் அணுவுயிர் எலும்புக்குள்ளே பதுங்கி மருந்துக்கு விலகி வாழ்கின்றது. இதனாலேயே பெனிஸிலினை ஆரம்பத்திலிருந்தே ஏராளமாகக் கையாள வேண்டும்.

பெனிஸிலினைப் போன்ற அணுவுயிர்ச் சங்காரிகளுக்கு ஆன்டிபயோட்டிக்ஸ் (antibiotics : அணுவுயிரை

எதிர்க்கும் மருந்துகள்) என்று பெயர். இவ்விந்தை மருந்தாகிய பெனிஸிலினை டாக்டர் ஃப்ளெமிங் கண்டுபிடித்ததற்காக ஆங்கில அரசாங்கத்தார் இவருக்கு "ஸர்" பட்டம் வழங்கினர். இவர் உலகப்பிரசித்தியான "நோபல்" பரிசும் பெற்ருர். டாக்டர் ஃப்ளோரியும் அவருடைய உடனுழியர்களும் பெனிஸிலினுடைய விந்தை ஆற்றல்களை வைத்தியத்திற்குச் சர்வசாதாரணமாகப் பயன்படுமாறு உற்பத்தி செய்யும் வழி வகைகளைத் தேடிக் கொடுத்துப் புகழ் பெற்றனர்.

இதன் பின்னர் உலகெங்கும் பல விஞ்ஞானிகள் ஆண்டி பயோட்டிக் ஆராய்ச்சியில் புகுந்தனர். பல அணுவுயிர் எதிர்ப்பு மருந்துகளையும் கண்டுபிடித்தனர். ஆனல் அவைகளில் வைத்தியத்திற்குப் பயனுகக் கூடியவை மிகச்சில. ஒன்று மட்டும் பயனுகும் என்று தெரிய வருகிறது. இதன் பெயர் ஸ்ரெப்டொமைசின் (streptomycin). க்ஷயரோகத்தை அடக்கும் சக்தி இதற்கு உண்டு. பெனிஸிலினுக்கு அடங்காத டைஃபாயிட் அணுவுயிர் போன்றவைகளை அடக்கும் ஆற்றலுடையது. ஆனல் இதை ஏராளமாய்ச் செய்ய வசதிகள் ஏற்படவில்லை.

நமக்குப் பகையாயிருக்கும் அணுவுயிரின் வேட்டைக்கு போர்க் கருவிகளை உண்டுபண்ணுவதிலே குன்ரு முயற்சிகள் பல நடைபெற்று வருகின்றன. இவ்விடா முயற்சிகளுக்குப் பெனிஸிலின் மருந்துதான் வெற்றிக் கொடி ஏந்தி முன்னே செல்கின்றது. மக்களுடைய சுகவாழ்வு இதனுல் முன்னேற்றம் அடைந்திருக்கிறது. ஆனல் பகை அணுவுயிர்கள் பல பெனிஸிலின் போன்ற மருந்துகளுக்கு அடங்காமல் மக்களுடைய சுக வாழ்வைக் குலைக்கின்றன. இவைகளில் ஒன்று, வைரஸ் (Virus) என்பது. இது அணுதர்சனியின் (Microscope) உதவியாலும் காணமுடியாதது. இவ்வகுப்பு அணுவுயிர்களை அடக்க எதிர்ப்பு மருந்து கிடைத்தால், இளம்பிள்ளை வாதம் முதலிய பல நரம்பு நோய்கள், அம்மை நோய்கள் ஆகிய நோய்களைத் தவிர்க்கலாம். மக்களுக்கு உதவியாக

வாழும் பிராணிகளையும் நோய் பாதியாமல் காக்க வேண்டும். தாவர இனங்கள் நமக்கு உணவாக இருப்பதால், அவற்றிற்கு நோய் விளையாமல் காப்பதிலும் நாம் கருத்தைச் செலுத்தவேண்டும். இதற்கமைந்த ஆராய்ச்சிகளும் நடை பெறுகின்றன. இதற்கெல்லாம் பயன்படவல்ல பூஞ்சண மருந்துகளை விஞ்ஞானிகள் கண்டுபிடிக்கிருர்கள்.

இப்போது வைத்திய உலகம் எங்கும் ஆராய்ச்சி ஆராய்ச்சி என்பதே பேச்சு. நோயற்ற வாழ்வாகிய குறைவற்ற செல்வம் மக்களனைவருக்கும் உறுதியாகும் காலமும் வரலாயிற்று. கோடிக் கணக்கிலே பொருள் செலவழித்து மக்கள் ஒருவரை ஒருவர் கொன்று ஒழிப்பதற்கான கொடிய கருவிகளைச் செய்வதற்கமைந்த ஆராய்ச்சிகள் ஒருபுறம் நடைபெற்று வருகின்ற அதே நேரத்தில், வைத்திய விஞ்ஞானிகள் மானிட வாழ்வின் சுகநிலைக்காக உலகத்தின் செல்வத்தில் ஒரு சிறு பகுதியையாவது மக்களுடைய உயிரைக் காக்கும் பொருட்டுச் செலவழிக்க மாட்டார்களா என்று ஏங்கி நிற்கிருர்கள். இவர்களுடைய ஏக்கம் தீராதா ? உலகம் விரைவில் சுகம் உருதா ?

## குறிப்புரை

உணுக்கலவை - அணுவுயிர்கள் உணவாகக் கொண்டு பெருகுவதற்காகத் தயாரிக்கப்படும் திரவம். சங்காரி - கொல்லும் பொருள். வீறு - சக்தி. திசு - Tissue. ஒழி - விலக்கு.

## பயிற்சி

1. பிரித்துக் காட்டுக : நூற்ருண்டு, நெடுங்காலம், பகையணு, பன்மடங்கு, இடையூறு.

2. பகுபத உறுப்புக் கூறுக :—கண்டார், பெற்றன, தொடங்கினர், அறிந்தார்.

## வினுக்கள்

1. ஸிம்ஸன், லிஸ்டர், எர்லிச், டொவாக் என்பார் ஒவ்வொருவரும் வைத்திய முறையில் உண்டாக்கிய புரட்சி யாது ?

2. ‘பகையணுவுயிர்களைக் கலப்பில்லாமல் தனித்தனியே பயிர் செய்வது எளிதன்று’—ஏன் ?

3. அலெக்சாண்டர் ஃப்ளெமிங் கண்டுபிடித்ததற்குக் காரணமாயுள்ள அணுவுயிரைப் பயிர்த்தட்டில் பயிர் செய்தபோது கண்ட அதிசயம் யாது?

4. அணுவுயிர்களை எவ்விரு வகைகளாகப் பிரிக்கலாம்?

5. பூஞ்சண ஆராய்ச்சியால் ஃப்ளெமிங் தெரிந்துகொண்ட விஷயங்கள் யாவை?

6. பெனிஸிலின் பிரபலமான மருந்தாகலாம் என்று நம்பிய ரசாயன விஞ்ஞானி யார்? அவர் ஃப்ளெமிங்குக்கு எவ்விதம் உதவிபுரிந்தார்?

7. இரண்டாம் உலக யுத்தம் நெருங்கும் சமயத்தில் பெனிஸிலினைப் பற்றித் தீவிரமாக ஆராய்ச்சி செய்தவர்கள் யாவர்? அவர்கள் கண்ட உண்மை என்ன?

8. காயமடைந்த போர்வீரர்களுக்குப் பெனிஸிலின் எவ்வாறு உதவியது?

9. மற்ற அணுவுயிர்ச் சங்காரிகளுக்கும், பெனிஸிலினுக்கும் உள்ள இரு வேற்றுமைகள் யாவை?

10. பெனிஸிலினால் குணமாகும் நோய்கள் யாவை?

11. பெனிஸிலின் மருந்தில் சமீபகாலத்தில் எவ்வகை முன்னேற்றங்கள் ஏற்பட்டுள்ளன?

12. சிறு குறிப்புக்கள் வரைக :—வைரஸ்; ஸ்ட்ரெப்டொமைசின்.

## கட்டுரையாக்கம்

"பெனிஸிலின்" என்பதைப்பற்றி ஒன்றரைப் பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

# 9. சுவீடன்

**திரு. சோம. லெ. இலக்குமணச் செட்டியார், பி. ஏ.**

ஐரோப்பாக் கண்டத்திலுள்ள ஏராளமான சின்னஞ் சிறு நாடுகளிலே, பொருளாதாரத் துறையில் பெரும் முன்னேற்ற மடைந்துள்ள நாடு, சுவீடன். இரு உலகப் பெரும்போர்களிலும் சுவிட்சர்லாந்தைப்போலச் சுவீட னும் நடுநிலைமை வகித்தது. முதலாளித்துவம் அபேத வாதம் ஆகிய இரண்டுக்கும் நடுவழியான ஒரு பொரு



ளாதார அமைப்பும் சுவீடனிடம் பொருந்தியுள்ளது. 'கள்ள வாணிகம் (Black Market) என்பதே இல்லாத நாடு உலகில் ஒன்று இருக்கிறது என்றால் அதுதான் சுவீடன். இக்காரணங்களால், சுவீடனைப்பற்றி அறிந்து கொள்வது இன்றியமையாதது.

### விஸ்தீரணமும் ஜனத்தொகையும்

சென்னை மாகாணமும் சுவீடனும் நிலப்பரப்பில் அநேகமாகச் சமமானவை. ஆனால் சுவீடனில் பாதிப்

பிரதேசம் காடுகள் நிரம்பியது. மேலும் ஒரு லக்ஷம் ஏரிகளும் பல மலைகளும் ஏராளமான ஆறுகளும் உள்ளன. சுவீடனின் ஜனத்தொகை 70 லக்ஷம்தான். அதாவது, மைசூர் சமஸ்தானத்தைவிடக் குறைவானது. சுவீடனில் ஒவ்வொரு 11 பெண்கட்கும் 10 ஆண்கள் வீதந்தான் இருக்கின்றனராம்!

மூன்று குழந்தைகள் உடையவர் பெரிய குடும்பத்தாரெனச் சுவீடனில் கருதப்படுகின்றனர். ஏனெனில், ஒவ்வொரு 100 குடும்பங்களிலும், 83 குடும்பத்தார் ஒரு குழந்தை உடையவராகவும், 12 குடும்பத்தார் இரண்டு குழந்தைகள் உடையவர்களாகவும், ஐந்து குடும்பத்தார்கள் மட்டுமே மூன்று குழந்தைகள் உடையவர்களாகவும் இருக்கிறார்கள்.

### சரித்திரம்

பல நூற்றாண்டுகள் பெரிய வல்லரசாக விளங்கியதும் கி. பி. 862 முதல் 500 ஆண்டுகள் வரை ரஷ்யாவில் அரசு செலுத்தியதும் ஆகிய சுவீடன் இப்போது ஆதிக்க அரசியலிலிருந்து விலகி நிற்கிறது. ஏகாதிபத்தியங்களே உலக யுத்தங்கட்குக் காரணம் என்பதை சுவீடன் நாட்டவர் உணர்ந்திருப்பதே இதற்கு மூல காரணம். கி. பி. 1800 முதல் பிறநாட்டு விவகாரங்களில் சுவீடன் தலையிட்டதில்லை. ரஷ்யா, ஜெர்மனி ஆகிய இரு பெரு நாடுகட்கு அருகிலிருந்தும், யுத்தத் தீ தன்னைப் பற்றாதபடி இந்நாடு தன்னைப் பாதுகாத்துக் கொண்டிருக்கிறது. இதன் பயனாகச் சுவீடனில் சமாதானமும் சுபிட்சமும் நிலவின. இவைதான் இந்நாட்டின் பொருளாதாரச் செழிப்புக்கு அடிப்படை.

### விஞ்ஞான முன்னேற்றம்

தீப்பெட்டி, டைனமைட், ஐஸ் பெட்டி, சிக்கலைக் குறைக்கும் ரவைகள் (Ball bearings) டெலிபோன், டிசல் எஞ்சின், கிரசின் ஸ்டவ் ஆகிய கருவிகள் அனைத்தும் சுவீடன் நாட்டினராலேயே முதன் முதலில் கண்டுபிடிக்கப்

பட்டன. இவற்றிலிருந்து சுவீடனில் விஞ்ஞானம் அடைந்திருக்கும் முன்னேற்றத்தை ஒருவாறு அறிந்துகொள்ளலாம்.

**கூட்டுறவு**

கூட்டுறவு இயக்கம் உலகில் பரவியதற்கு, சுவீடனில் இவ்வியக்கம் வெற்றி பெற்றமையே காரணம். பல பெரிய தொழிற்சாலைகள் சுவீடனில் கூட்டுறவு முறையில் நடைபெறுகின்றன. சில்லறை வியாபாரத்திற் பெரும்பகுதி இந்த ஸ்தாபனத்தாரிடமே இருக்கிறது. கள்ள வாணிகம் இங்கு இல்லை எனின், இவற்றின் நிருவாகத் திறமையைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ?

**தொழில்கள்**

சிமிண்டு, இரும்பு, மரச்சாமான்கள், செயற்கை வீடுகள் ஆகிய இவற்றைச் செய்யும் தொழிற்சாலைகள், நெசவு ஆலைகள், சுரங்கங்கள், பலவகை யந்திரங்கள் உற்பத்தி செய்யும் சாலைகள் போன்ற எத்தனையோ வகைத் தொழில்கள் இந்த நாட்டில் இருந்தபோதிலும், முக்கியமானவை—காகிதத் தொழிற்சாலைகளும் கண்ணுடித் தொழிற்சாலைகளுமே.

காகிதத்தால் சுவீடிஷ்காரர்கள் செய்யாதது ஒன்றுமே இல்லை. காகிதப் போர்வை கூடச் செய்கிறுர்கள்! கரன்ஸி நோட்டு என்ற காகித நாணயத்தை உலகுக்கு வழங்கியவர்களும் சுவீடிஷ்காரர்களே ஆவர்.

**பொருளாதார செழிப்பு**

சுவீடனின் நாணயமாகிய குரோணர் (குரோணர்=14 அணு) டாலருடன் இணைக்கப்பட்டிருக்கிறது. (நமது நாட்டு நாணயமாகிய ரூபாய் இங்கிலீஷ் ஸ்டர்லிங்குடன் இணைக்கப்பட்டிருப்பது போல டாலர் கிராக்கியான நாணயமாயிருப்பதால், சுவீடனின் நாணயமும் மிக வலுவான நிலையில் உளது.

சுவீடிஷ்காரர்கள் பொதுவாகப் பணம் படைத்தவர்

கள். அண்டை நாடுகளில் உள்ள சொத்துக்களிலும் தொழில்களிலும் பெரும்பகுதி இவர்கட்குச் சொந்தமான வையே.

வேலையில்லாத் திண்டாட்டம் என்பதே சுவீடனில் கிடையாது. மக்களின் பாதித் தொகையினர் பணப் பாது காப்பு நிதிகளிற் கணக்குகள் வைத்திருக்கின்றனராம். கீழ்க்கண்ட புள்ளி விவரங்களிலிருந்து, சுவீடனின் செழிப்பை மேலும் ஊகிக்கலாம் :—

| | |
|---|---|
| ரேடியோ நிலையங்கள் | ... 33 |
| ரேடியோ கருவிகள் | ... 20 லட்சம் |
| சினிமாக் கொட்டகைகள் | ... 2242 |
| டெலிபோன் | ... 1 லட்சம் |
| ஆகாய விமானங்கள் | ... 30 |
| மோட்டார் கார்கள் | ... 2 லட்சம் |
| ரயில் பாதையின் நீளம் | ... 10400 மைல்கள் |
| தினசரிப் பத்திரிகைகள் | ... 230 |

**கல்வி**

எட்டு வருஷ இலவசக் கட்டாயக் கல்வி முறை ஸ்வீ டனில் அமலில் இருக்கிறது. அவ்விதம் கற்க இயலாத வர்கள் ஏழு வருஷங்கள் கற்றபின்பு, வாரம் இரு நாட்கள் வீதம் மேலும் இரு ஆண்டுகள் கல்வி கற்க வேண்டும். எல்லா மாணவர்கட்கும் காலை ஆகாரமும் ஏழை மாணவர் கட்கு உணவும் உடையும் அரசியலாரால் இனாமாகக் கொடுக்கப்படுகின்றன. ஓராண்டில் 360 மைல்கள் இலவச உல்லாசப் பிரயாணமும் மாணவர்கட்கு உண்டு! கல்லூரி கள், நேர்த்தியான கண்ணைக் கவரும் கட்டடங்களில் அமைந்துள. உயர்தரக் கல்லூரிகளில், தாய்மொழி தவிர, ஆங்கிலம், பிரெஞ்சு, ஜெர்மன், ஸ்பானிஷ், போர்ச்சுகீஸ் ஆகியவற்றில் இரண்டு மொழிகள் கட்டாய பாடமாக இருக்கின்றன. ஸ்டாக்ஹோம் சர்வகலாசாலையில் சமஸ் கிருதமும் கற்பிக்கப்படுகின்றது. வியாபாரம் பற்றிய கல்வி சுவீடனில் சிறந்துள்ளது. பல ஜெர்மன் பேரறிஞர் கள் இப்போது சுவீடன் சர்வகலாசாலைகளிற் பணி

யாற்றுகின்றனர். எல்லா மாணவர்கட்கும் 9 மாத மால ராணுவப் பயிற்சி உண்டு.

### சுகாதாரமும் வைத்தியசாலைகளும்

சுவீடனில் பொதுச் சுகாதாரம் மிகத் திருப்தியான முறையில் இருக்கிறது. சுவீடன் மக்கள் உயரமானவர்கள் ; நல்ல உடலமைப்பு உள்ளவர்கள். அவர்களுடைய சராசரி வயது 70. (நம் நாட்டில் 27) இந்நாட்டவர் நம் தேசத்திலும் பல நகரங்களில் கண் வைத்தியசாலைகளையும் பிற வைத்தியசாலைகளையும் ஏற்படுத்தியிருக்கின்றனர். உலகிலேயே மிகச் சிறந்த டாக்டர்களும், ஆஸ்பத்திரிகளும் சிகிச்சைக் கருவிகளும் சுவீடனில் உண்டு. விமானப் படையெடுப்பு ஏற்பட்டால் அப்போது நோயாளிகளைக் காப்பாற்றுவதற்காக மலைகளுக்குள் தங்குமிடங்கள் (Shelters) கட்டி, அம்மலைகளின்மீது ஆஸ்பத்திரிகள் அமைத்திருக்கின்றனர். ஆபத்துக் காலத்தில், 'லிப்ட்' என்ற கருவி மூலம் நோயாளிகள் உடனே அவ்விடங்களுக்குக் கொண்டு போகப்படுவார்கள்.

சுவீடிஷ் அரசியலார் தங்களுடைய வைத்தியசாலைகளில் ஒரு நோயாளிக்குத் தினசரி ரூ. 18 வீதம் செலவிட்ட போதிலும், 4 ரூபாய் மட்டுமே அவனிடமிருந்து வசூலித்து மீதச் செலவைத் தாங்களே ஏற்றுக்கொள்ளுகின்றனர்.

### இருப்புப் பாதைகள்

அமெரிக்க இருப்புப் பாதைகளுக்கு அடுத்தபடியாக உலகிற் சிறந்தவை சுவீடனில் உள்ளவையே. மிக அழகிய மின்சார ரயிலொன்றில் 5 மணி நேரத்தில், கோதன்பர்க்கிலிருந்து 300 மைல் தூரத்திலுள்ள ஸ்டாக்ஹோமுக்கு நான் ஒரு முறை சென்ற பிரயாண அனுபவம் என் மனத்தைவிட்டு என்றும் அகலாது.

சுவீடனில் பகற் பிரயாணத்துக்கும் இராப் பிரயாணத்துக்கும் தனித்தனி ரயில் வண்டிகள் உண்டு. இரவில் ஓடும் ரயில்களில் எல்லா வகுப்புப் பிரயாணிகட்கும் தூங்கும் வசதி தரப்படுகிறது.

எல்லா ரயில்களிலும், புகை பிடிப்பவர்க்கும் பிடியாத வர்க்கும் தனித்தனி வண்டிகள் உண்டு. ஓடும் ரயிலிலேயே பிரயாணிகள் ஒரு கோடியிலிருந்து மற்ருெரு கோடிக்கு நடந்து செல்வதற்குத் தக்கபடி வழி விடப்பட்டிருக் கின்றது. இந்த நடை பாதைகளிலுள்ள, தானே மடக்கிக் கொள்ளும் நாற்காலிகளில் உட்கார்ந்து கொண்டு, பிரயாணிகள் இயற்கைக் காட்சிகளைக் கண்டு களிக்கலாம். இன்றியமையாப் பொருள்கள் பலவற்றை வணிகர் ரயிலி லேயே விற்கின்றனர். குப்பையைப் போடுவதற்குத் தொட்டிகளும் ரயிலில் வைக்கப்பட்டுள்ளன ; குடி தண் ணீர்க் குழாய்களும், காகிதத்தாலான குவளைகளும், கைக் குட்டைகளும் ரயில்களில் வைக்கப்பட்டுள்ளன ; வேக மாகச் செல்லும் ரயில்களில் 'டைனிங் கார்' என்னும் சாப்பாட்டு விடுதிகளும் உண்டு. மேல் வகுப்புப் பிரயாணி கட்கு ரயில்வேப்படமும் தினசரிப் பத்திரிகையும் இலவசமாய்க் கிடைக்கும். நம் நாட்டில் பஸ்களில் இருப்பது போன்று சுவீடன் ரயில்களில் கண்டக்டர் இருக்கிருர். இவர் குறிப்பிட்ட ரயில் அடுத்தாற் போல் எந்த இடத்தில் நிற்கும் என்பதை ஒலி பரப்பும் கருவி மூலம் அறிவித்துக்கொண்டே யிருப்பார்.

### அரசியலமைப்பு

நம் நாட்டைப் போலவே, (ஆனுல், ஒரு முடியரசின் கீழ்) கட்சி முறையில் ஜனநாயக ஆட்சி சுவீடனில் நடை பெறுகிறது. சுவீடிஷ் மக்களுக்கு அரசியல் விஷயங்களில் அதிக அக்கரை இல்லை. ஆயினும் மன்னரிடத்தில் மக்கள் மிகவும் பற்றுள்ளவராக இருக்கின்ருர்கள்.

### சீதோஷ்ணநிலை

சுவீடனில் மழை அபரிமிதமாகவே பெய்கின்றது. மழை போதுமான அளவு பெய்யாவிட்டால், அக்காலங் களில் விவசாய வேலைகட்குப் போதிய மின்சாரம் கிடைப் பதற்காக மின்சாரத்தைப் பங்கீடு செய்கின்றனர்.

சுவீடன்தான் உலகிலேயே மிகவும் வடக்கேயுள்ள

நாடு. ஆகையால், இங்குள்ள கால நிலையே மிக விசித்திர மானது. மே மாதம் தொடங்கி மூன்று மாதங்கள் இள வேனிற்காலம். இக்காலத்தில் சுவீடனில் சூரியன், அல்லும் பகலும் பிரகாசிக்கின்றது. அதாவது மே மாதத்தில் உதயமாகும் சூரியன் ஜூலை மாதத்தில்தான் அஸ்தமிக் கிறது. இதனால் இந்த நாட்டுக்கு நள்ளிரவுச் சூரியன் நாடு என்று பெயர் வழங்குகின்றது.

நவம்பர், டிசம்பர் மாதங்களில் மூடுபனிக்காலம். அப் போது உறைந்த பனிக்கட்டியில் ஓடி விளையாடுவது இந் நாட்டவருக்கு மிகவும் இன்பம் தருவதாகும்.

### மக்களின் குணங்கள்

சுவீடிஷ் மக்கள் மிகவும் சுறுசுறுப்பானவர்கள் ; எவ் வேலையையும் முகமலர்ச்சியோடும் திறமையோடும் செய் யும் இயல்புடையவர்கள். தமிழ் மக்களைப் போலவே சுவீ டிஷ் மக்களும் நகைச்சுவை நிரம்பியவர்கள், இவர் களுடைய தேசீய விளையாட்டு, கால் பந்தாட்டம்; தேசீய உணவு, மீன். அடுத்தபடியாக இவர்கட்குக் காப்பியில்—பால் சேர்க்காத கறுப்பு நிறக் காப்பியில்—மோகம் அதிகம். இந்தியக் காப்பி உலகெங்கும் புகழ் பெற்ற தாகையால் சில சுவீடிஷ் பெண்கள் காப்பி தயாரிப்பது பற்றி என்னை வினவினர். சாமர்த்தியமாக ஏதோ சொல்லி மழுப்பிவிட்டேன்.

தந்தை பிரபலமாயிருந்தால், மகன் தன் பெயரை விட்டு விட்டு அவர் பெயருக்குப் பின்னால் "மகன்" என்ற வார்த்தையைச் சேர்த்துக் கொள்வது சுவீடிஷ் மக்களின் பண்பாடு.

பொதுவாகச் சுவீடிஷ்காரர்கள் கணக்கில் வல்லு நரல்லர். இதனால்தான் தசாம்ச முறையிலேயே நீட்டல், முகத்தல், நிறுத்தல் அளவுகள், நாணயம் இவற்றை சுவீடிஷ்காரர்கள் அமைத்துக் கொண்டனர் போலும்! மிகச்சிறிய கூட்டல் கழித்தல் கணக்குகட்குக்கூட அவர்கள் எந்திர உதவியை நாடுகின்றனர்.

**நகரங்கள்**

சுவீடனின் தலைநகராகிய ஸ்டாக்ஹோம் உலகின் மிக அழகிய நகரங்களில் ஒன்று; சரித்திரப் பிரசித்தி பெற்றது. பதின்மூன்று ஏரிகள், பல மலைகள்—இவற்றிற்கிடையே அமைந்துள்ள இந்நகரின் பெருமையை "ஸ்டாக்ஹோம் நகரை இரவில் பார்த்துவிட்டு இறந்து போ" என்ற பழமொழியிலிருந்து அறியலாம். திறந்த வெளியில் மிருகக் காட்சிசாலை இருப்பது உலகிலேயே இந்த நகரில் மட்டுந்தான். இந்நகரிற் பல கட்டடங்களில்



ஸ்டாக்ஹோம் நகரின் ஒரு காட்சி

பத்தாவது மாடியில், குழந்தைகள் விளையாடுவதற்காகத் தோட்டங்கள் இருக்கின்றன. இங்குள்ள டவுன்ஹால் என்னும் மண்டபம் சுவீடனின் சிற்பக் கலைக்கு எடுத்துக் காட்டாகும். உலக சமாதானத்துக்கு உழைத்தவர்கட்கும் பிற மேதாவிகட்கும் நோபல் பரிசுகள் ஏற்படுத்திய சுவீடிஷ்காரரான ஆல்ப்ரட் நோபல் என்பவர் நினைவு நிலையமாக ஒரு பெரிய நூல் நிலையம் ஸ்டாக்ஹோம் நகரில் உளது. சுவீடனின் இதர முக்கிய நகரங்கள்—கோதன்பர்க்கும், மால்மோவும்.

## முடிவு

சுவீடன் கடந்த நூறு ஆண்டுகளில்தான் இந்த மேகோன்னத நிலையை அடைந்திருக்கிறது. இதற்குக் காரணமாயுள்ளவர்கள் கைதேர்ந்த தொழிலாளிகளும், சிறந்த பொறியியல் வல்லார்களும், பிரசித்திபெற்ற விஞ்ஞானிகளும் திறமையான நிர்வாகிகளுமாவர். மேலும், மிக மலிவான மின்சார வசதியும், தொழிலாளரிடையே அமைதியும் இங்கே காணப்படுகின்றன. நம் நாட்டுக்கும் இவை அனைத்தும் வேண்டும். இவை இருந்தால், இந்தியாவும் இந்த வையத்து நாட்டிலெல்லாம் உயர்வுற்று, வறுமை நீங்கி வாழலாம்.

### பயிற்சி

1. சின்னஞ்சிறு, விஞ்ஞானம், முன்னேற்றம், அரசியல்,—பிரித்துக் காட்டுக.

2. ஆதிக்கம், மூலகாரணம், கூறவும் வேண்டுமோ, பணியாற்று— இவற்றை நும் சொந்த வாக்கியங்களில் அமைக்க.

### வினாக்கள்

1. ஐரோப்பிய நாடுகளுள் சுவீடனுக்குரிய தனிச் சிறப்பு யாது?

2. சுவீடன் நாட்டின் சரித்திரம், பொருளாதாரம், கல்வி, இருப்புப் பாதை, மக்களின் குணங்கள் இவற்றைப்பற்றிச் சிறு குறிப்பு வரைக.

### கட்டுரையாக்கம்

"சுவீடன் நாடு" என்பது பொருளாக ஒன்றரைப் பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

# 10. சங்ககால வள்ளல்கள்

## (நாடகம்)

கரந்தைக் கவியரசு ரா. வேங்கடாசலம் பிள்ளை

உறுப்பினர்கள்: ஔவையார்; அதியமான்; கருணாகரர்; வீரவேள்மா; பிறைசூடி; காவலன். நங்கை—இயல்மொழி; செல்வி—அருண்மொழி. தேவி—தேமொழி.

இடம்: அதியர் கோவிலின் அரசப்பெருமன்றம்.

பொழுது: முற்பகல்.

(திருக்கோவலூர் மலையமான் தோல்வியும் அதியற்குத் திருமகள் தோற்றமும்.)

ஔவையார்: வென்றி நலந்தோன்ற வீற்றிருக்கும் கோவே! நினது சினம் அடங்குக. நின் படைப்பெரு மக்கள் ஈண்டு, மலையமானை யோட்டி வாகை சூடிய நினது வெற்றியைப் போற்ற, விழைந்து நிற்கின்றனர். திருமுடிக்காரி போரிலாற்றாது புறங்காட்டி யோடியும் ஏனோ உனக்கு இன்னும் அவன்பால் சினந்தணிந்திலது! நின்பகை யொழிந்தது; நீ வீரவாகை சூடினாய்; நின்னை எதிர்ப்பவர் இந்நானிலத்தும் இலர்; ஆதலால் அதிய, நினது நெஞ்சம் அமைதியுறுவதாக.

அதியமான்: அன்னாய்! தாங்கள் அம்மலையனை நன்கு அறியாதவர்கள் போலும்! அவன் நெஞ்சம் என்றும் வஞ்சகத்தாலாயது. புறங்காட்டி இன்று ஓடிய அவன், நாளை ஒரு படையுடன் நம்முன் நிற்பினும் நிற்பன். அவன்தான் திருமுடி, என் சினத்தீ அவியுமாறு இம்மண் மீது உருண்டோடாமற் போயினும், அவனை யான் சிறை செய்து தளையிடாது தவிர்ந்தமையே என்னை வருத்துகின்றது. என் செய்வது? அவனன்றி நம்மாலாவது என்?

கருணாகரர்: எம்பெரும! நம் யானைகள் பகைவர்களது எதிர்ப்பு ஒழியுமாறு போர்முனையில் பொருதமையால் அவற்றின் கொம்பு நுனிகள் தேய்ந்து குறுகின. அவை செல்வதைக் கண்ட நம் பகைவர் தம் மதில் வாயிற் கதவுகளின் பழைய தாழ்ப்பாள்களை நீக்கிப் புதியனபொருத்துகின்றனர். மற்றும் நம் பரிகள் போர்க்

களத்தில் மாண்டவர் தம் உருவு அழியுமாறு பிணங்களின் மீது உழக்கிச் சென்றமையால் குருதிக் கறை மிகுந்த குளம்புகளோடு உள்ளன? அவற்றின் செலவைக் கண்டு காடுகளின் சிறு வழிகள் யாவும் சுவைத்துள்ள வேல் முள்ளால் அடைக்கப் பெறுகின்றன. அண்ணலே, இவை யாவும் நின்பாற் கொண்ட அச்சத்தால் நிகழ்வனவேயாம்.

**வீரவேள்மா:** வீரர்தம் தலைவ, உறைக்குள் கட்டி வைக்கப் பெருத நினது வேற்படைக்கு அஞ்சிப் பகைஞர் கேடகப்பிடியுடன் தமது கைப்பிடிப்பினை நெருக்கிக் கொள்ளுகின்றனர். ஏனெனில் 'நின் வேல் அவரது மார் பகத்தே எறியப்படும்போது அவர்தம் பரிசையையும் ஊடுருவிச் செல்லும்' என்பதனை உணர்வர். இன்னும் வாள்பட்ட புண்ணால் வடுப்பெற்ற நம் வீரமிக்க படைஞர் தம் வலிமையைக் கண்டு, புண்ணிலிருந்து ஒழுகும் குருதி யால் நனையப் பெற்ற அம்புகளை நம் பகைவர் தூணி யகத்தே எடுக்காமல் வைத்துள்ளனர்.

**பிறைசூடி:** எம் நாயக, உயிரினைக் காக்கும் பொருட்டு வெண் சிறு கடுகைப் புகைத்தாலும் தடைப் படாது விரைந்து சென்று, தக்க முறையில் இயல்பின் புற மாயிருந்து ஆவியைக் கைக்கொள்ளும் இயமனையே ஒத்துள்ளாய் நீ. ஆதலால், தலைசாய்ந்துள்ள நெற் கதிர்கள், வரப்புடன் சேர்ந்து சுழலும் கழனிகளோடு நீர்வளம் மலிந்த, பகைஞர்தம் அகன்றநாடு, நின் சினம் பெற்ருல், அப்பகைவர் வாடும்படி அழிவது திண்ணம்.

**ஔவையார்:** எம் தலைவ, நின் ஆற்றலழியுமெனக் கருதி, மலையமான் தப்பினமைக்குக் கவல்கின்றனையோ? அம்மலையமான் தப்பினமைக்குக் கவல்கின்றனையோ? அவ்வாறெனில் அதனை விட்டொழிக, நினக்கு நிகர் நீயே. (காவலன் பணிவுடன் வருதல்) ஏடா! என் செய்தி?

**காவலன்:** அம்மையே,! வணங்குகிறேன். நமக்கு பெறுதற்கரிய நன்னாளாம். இந்நாளின் இந்நற்பொழுதில், முருகன் திருவருட் பெருக்கால், பூப்போலும் வடிவினை யுடைய மைபூசப்பெற்ற கண்கள் மயங்கவும் தோள்கள் மெலியவும் தன்னை நோக்கிய மகளிர்தம் நெஞ்சைப்

பிணிக்குமாறுள்ள அழகுடன் இளஞாயிறு போன்ற ஓர் இளவரசர் நம் அன்னையார்பால் தோன்றியுள்ளார்.

ஔவையார் : நல்ல செய்தியே! இதனைப் பெற்று மகிழ்க. (ஒரு பொற்காசு அளித்தல்) நமது இறைமகன் வாழ்க. வேந்தே, நும்பால் எத்தகைய உளநைவும் தோன்றுதலாகா. மகன் பிறந்த இம்மங்கல நாளில் நினது உளம் பெருமகிழ்ச்சியால் பொலிவதாகுக. ஏடா காவலா! நீ விரைந்து சென்று நம் வள்ளுவனை அழைத்து, நம் மன்னர் மகன் பிறந்தமையை, இம்மாநகர் உணருமாறு முரசொலி செய்து தெரிவிக்க. மற்றும், நகர்ப் பெருந்தகை அம்பலவாணரை யணுகி அரசர் இளவரசர் பிறந்த நாட் சிறப்புக்கு வேண்டுவன விரைவினி லியற்ற ஒரு திட்டம் விரும்புகிருர் எனவும் அறிவிக்க. (காவலன் பணிந்து செல்லுதல்) ஓ! அதோ, செவிலித் தாயர்களும் மகவுடன் வருகின்றனரே!

நங்கை—இயன்மொழி : (திரைக்குள்)

மாணிக்க மால் வரைமேல் மன்னுசெக்கர் வானமென
வேணிப் பிரான் தோளில் மேவும் சிறு குருந்தோ!

செல்வி—அருண்மொழி ; (திரைக்குள்)

செஞ்சதங்கை கொஞ்சச் சிறுகிண் கிணியாடக்
கஞ்சமலர்த் தாளுமையாள் கண்களிக்க வந்தானோ!

தேவி—தேமொழி : (திரைக்குள்)

பெண்ணூர்ந்த கற்புப் பிடியும் பிணைமானும்
கண்ணாரக் கண்டு களிக்கவரு கற்பகமோ!

மூவரும் : (மகவுடன் மன்னன் முன்)

நீலமயில் வாகனனே நெட்டிலைவே லாயுதனே
கோலநிறைக் கோழிக் கொடிபடைத்த சேவகனே!

நங்கை : குன்றமும் கொக்கும் குரைகடலும் சூர்மார்பும்
குன்றவடி வேல்எறிந்த கொற்றவனே நற்றவனே!

செல்வி : உள்ளத் திமிரம் ஒழித்துச் சிவானந்த
வெள்ளத்துள் அன்பர் விளையாட வைத்தோனே!

தேவி : முத்தோ குலிசமோ மூதொளிமா ணிக்கமோ
சித்தோ தென்போரூர்ச் சிவானந்த வாரிதியோ!

மூவரும் : ஞானக் கருப்போமெய்ஞ் ஞானனந் தக்கடலோ
தானற்றுப் போற்றும் தமிழமுதத் தண்ணளியோ.

ஔவையார் : (அண்மையிற் சென்று நோக்கி) செவிலியர்காள் ! நீவிர் கூறியன மெய்தான். நம் வேந்தன் முருகவேளைத்தான் திருமகனுகக் கொண்டுள்ளான். வாழ்க நம் மன்னன் ! வேந்தே உன் அருமை மகனை இவன் இனிது காண்க. (அதியமான் அமைதியின்றி நோக்குதல்) மன்ன ! அரும் பெறல் திருமகனைக் கண்டுமா நினக்கு இன்னும் அமைதி ஏற்படவில்லை? அரசே! விண்ணவரை வழிபட்டு நல்வேளையில் ஆவுதி அளித்து, இவ்வுலகிற்குப் பெறுதற்கரிய மரபு வாய்ந்த கரும்பைக் கொண்டு வந்து, இந்நில உலகத்தில் ஆணை செலுத்திய தொன்மை நிலைபெற்றுயர்ந்த நினது மரபின் முன் ஞேர்களை யொப்பவே நீயும் பொன் வீரக் கழல் புனை காலினையுடையாய்.

பெரிய பனம்பூ மாலையைப் பூண்டுள்ளாய்; மலர் மலிந்த பொழிலையும் பெற்றுள்ளாய். இன்னும், நாளும் புதிய புலால் மணநாறும் நீண்டவேலையும் தமிழ்நாட்டு ஏழு மன்னர்களோடும் ஒன்றுகூடி நாடும் நீங்காத அரச வுரிமையையும் குறைவிலாது பெற்றுள்ளாய். எனினும், அமைதி பெருது போரினை விரும்பி, ஒளிமிகும் முரசு முழங்க மன்னர் எழுவருடன் பகைத்து மேற்சென்று போரில் வெற்றிவாகை சூடி, நின் வலிமையை விளங்கக் காட்டிய அந்நாளிலும், உனது புகழின் மேன்மையைப் பாடவியலாது போயினர். ஆனல் இன்று, எதிர்ப்பு மிகுந்த கோவலூரை யழித்து வென்று, மற்றும் பகைஞர்தம் அரண்களை அழிக்கும் திறல் மிகுந்த ஆழியைத் தாங்கி யுள்ள நினது தோளை, மாபெரும் புலவன்—பரணன், தன் பெருமை தோன்றப் பாடினன். இதனல் நின் வலிமையின் நிலைமை விளங்குவதன்றே !

(இந்நிலையிலும் சினம் நீங்காமைகண்டு) "கையி லுள்ளது வேல்; காலில் இருப்பது புனைகழல்; மெய் யினில் வேர்வையுள்ளது; குருதி நிரம்பிய பசியபுண் தொண்டையின்பால் ஏற்பட்டுள்ளது. பகைவர் ஒழியு மாறு, வளர்கின்ற இளம் பனையினுச்சியில் ஊசிபோன் றுள்ள வெண்மலரையும், பெரிய வெட்சிப் பூவினையும்,

வேங்கை மலரோடு சேர்த்துச் சுருண்ட கரிய மயிரினில் வனப்புற அணிந்து புலியுடன் போர்செய் வலிமை மிகுந்த யானை போலச் சினம் இன்னமும் தணியவில்லை. பகைஞரை வெகுண்டு நோக்கிய அவன் கண்கள், தனக்குற்ற அருமைச் சிறுமகவைக் கண்டும், சிவப்பு மாறுதுள்ளன. ஆதலின் இவனைச் சின மூட்டியவர்கள் ஐயோ, பிழைக்க மாட்டார்கள்.

கருணாகரர்: தண்ணளி வேந்தே! தாயின் தனிமொழியை ஓம்புக. அவர் தம் உணர்ச்சியும் உளமும் வெறுத்த எவையும் தாங்களிதுவரையில் புரிந்ததில்லையே! பெரும! எமது, முழுமதி நிகர்க்கும் திருநிறை இளவரசைப் பெற்று உளமகிழ்வு பெற்றருள்க.

அதியமான்: அன்னாய்! எனது அடங்காச் சினத்தை இன்னே அவித்தேன். தங்கள் உள்ளம் வாட மனங்கொளேன். தேவி, தருக என் மகனை. (மன்னன் தன் மகனை ஏந்தி மகிழ்தல்).

கருணாகரர்: தண்மதி நிகர்க்கும் பொன் இளங்கோவுடன் எம்மிறை அதியமான் என்றும் வாழ்க.

யாவரும்: வாழ்க, வாழ்கவே.

## குறிப்புரை

கோ - அரசன். வாகை - வெற்றிமாலை. தனை - விலங்கு. கவைத்துன்ன - இருபிரிவாயுள்ள. பரிசை - கேடகம்.

## பயிற்சி

(1) பிரித்துக் காட்டுக: நானிலம், தணிந்திலது, தண்ணளி.

(2) நிகழ்வன, அகத்தே, ஆற்றல், மங்கலநாள், இவண், நிகர்க்கும்—இவற்றைச் சொந்த வாக்கியங்களில் அமைக்க.

## வினாக்கள்

1. வெற்றிமாலை சூடிய பின்பும் அதியமான் அமைதியின்றி இருந்தமைக்குக் காரணம் யாது?

2. "நினக்கு நிகர் நீயே"—சந்தர்ப்பம் கூறுக.

3. இளவரசன் பிறந்த செய்தியை யறிந்ததும் ஔவையார் யாது செய்தனர்? காவலனிடம் யாது கூறினர்?

## கட்டுரையாக்கம்

'அதியமானின் சீற்றமும், ஔவையாரின் தேறுதல் மொழியும்' என்பது பொருளாக ஒரு பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

# தமிழ் இலக்கியத் திரட்டு

## ஐந்தாம் படிவம்—சிறப்புத் தொகுதி

[புதிய பாடத்திட்டப்படி அமைந்தது]

தொகுப்பாளர் :
P. துரைக்கண்ணு முதலியார், M.A., L.T.,
தலைவர்,
டாக்டர் அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி,
அழகப்பா நகர், காரைக்குடி.

வித்துவான் S. V. வரதராஜ ஐயங்கார், M.A., M.O.L.,
தமிழ்த்துறைத் தலைவர்,
A. M. ஜெயின் கல்லூரி, சென்னை.



T. G. கோபால் பிள்ளை
பதிப்பாளர்

தெப்பக்குளம் | 2/27, பிராட்வே
திருச்சிராப்பள்ளி | ஜி. டி., சென்னை

 1954 [விலை ரூ. 0-12-0

# முகவுரை

சென்னை அரசியல் கல்வித் துறையாளர் அண்மையில் வெளியிட்டுள்ள புதிய பாடத்திட்டத்தை யொட்டி உயர்நிலைப் பள்ளிகளில் நான்கு, ஐந்தாம் படிவங் (Forth and Fifth Forms)களில் பயிலும் மாணவர்க்கு ஏற்கும்படி 'தமிழ் இலக்கியத் திரட்டு' என்னும் புத்தகங்கள் இரண்டையும் தொகுத்துள்ளோம்.

இப் புத்தகங்களில் பாடத்திட்டத்தில் வகுத்துத் தரப்பெற்றுள்ள பிரிவுகளை முற்றும் தழுவிச் செய்யுட் பகுதியில் இனிய அரிய பாடல்களையும், உரைநடைப் பகுதியில் தமிழ் நாட்டுப் பேரறிஞர்கள் எழுதி வெளியிட்டுள்ள அரிய கட்டுரைகளையும் தேர்ந்து சேர்த்திருக்கின்றோம். இவைகளைத் தேர்ந்து கொள்வதில் மாணவர் சுவை, நோக்கம், பண்பாடுகளை உணர்ந்து, அவைகளுக்குப் பொருத்தமான தக்க பகுதிகளையே தொகுத்துச் சேர்த்துள்ளோம்.

மாணவர்க்குத் தமிழ் மொழியில் தேர்ச்சி உண்டாகும்படி செய்வதே பாடத் திட்டத்தின் சீரிய நோக்கமாதலால், செய்யுள் உரைநடையாகிய இரு பகுதிகளிலும் ஒவ்வொரு பிரிவின் முடிவிலும் குறிப்புரை, பயிற்சி, வினாக்கள், கட்டுரையாக்கம் என்பன சேர்க்கப்பெற்றுள்ளன. இவற்றால் மாணவர்க்குத் தாய் மொழியில் தேர்ச்சி ஏற்படுவதுடன், கட்டுரை எழுதும் வன்மையும் அமைதல் கூடும்.

இப் புத்தகங்கள் பாடத் திட்டத்தில் தரப்பெற்றுள்ள பொது, சிறப்பு (General and Special Courses) ஆகிய இரண்டிற்கும் பயன்படுமாறு தொகுக்கப்பெற்றுள்ளன.

இவைகளைத் தமிழாசிரியர்கள் ஆதரித்துப் பாடபுத்தகமாக ஏற்படுத்தியுதவுமாறு வேண்டுகின்றோம்.

ஆசிரியர்கள்.

# நன்றியுரை

## செய்யுட் பகுதியில்

மனோன்மணீயம் என்ற நாடக நூலிலிருந்து வாய்க்கால் என்ற பகுதியைச் சேர்த்து வெளியிட அனுமதி தந்த அதன் உரிமையாளர்க்கும்,

## உரைநடைப் பகுதியில்

திருச்சிராப்பள்ளி, மதுரையில் ஓர் இரவு, தொல்காப்பியர் பிறப்பகம் என்னும் கட்டுரைகளைச் சேர்த்துக்கொள்ள அனுமதி யளித்த அவற்றின் உரிமையாளர்கட்கும், முடத்தாமக் கண்ணி யார் என்ற கட்டுரையைச் சேர்த்து வெளியிட அனுமதி உதவிய சென்னை அகில இந்திய ரேடியோ நிலையத்தார்க்கும், இலக்கிய விமர்சனம் என்னும் கட்டுரையைச் சேர்த்துக்கொள்ள அனுமதி தந்துதவிய "சிந்தனை" என்னும் சீரிய பத்திரிகையின் அதிப ருக்கும் எமது நன்றி உரியதாகும்.

ஆசிரியர்கள்.

# உள்ளுறை

## செய்யுட் பகுதி

எண் பொருள் பக்கம்

## உரைநடைப் பகுதி

# ஐந்தாம் படிவம்—சிறப்பு



# செய்யுட் பகுதி

---

## I. கடவுள் வாழ்த்து

கடவுள் வாழ்த்துப் பாடிய பின்னரே நூல் பாடத் தொடங்குவது முன்னோர் வழக்கம். அதனால் இந்த இலக்கியத் திரட்டிலும் கடவுள் வாழ்த்து முதலிடம் பெற்றுள்ளது. 'கடவுள்' என்னும் சொல்லுக்குக் 'கடத்தல்' என்பது பொருள். மனம் மொழி மெய் ஆகிய மூன்றையும் கடந்து நிற்பது கடவுள். ஒவ்வொரு சமயத்தாரும் கடவுளை வேறு வேறு பெயரிட்டு அழைத்தாலும் கடவுள் ஒன்றே என்பதை நாம் உணர்தல் வேண்டும். இந்த உணர்ச்சியுடன் கடவுள் வாழ்த்தாக ஆன்றோர் பாடியவற்றுள் ஐந்து பாடல்கள் இங்கே தரப்பட்டுள்ளன.

### 1. நற்றிணை

குறிஞ்சி முதலாகிய ஐவகை நிலத்திற்கும் உரிய சிறந்த ஒழுக்க முறையை விளக்கிக் கூறுவதால் இந்நூல் 'நற்றிணை' (நல் + திணை) எனப் பெற்றது. இது சங்கப் புலவர்கள் பாடிய தொகை நூல்கள் எட்டுள் முதலாவது. இதில் நானூற்றொன்று பாக்கள் உள்ளன. பின்வரும் செய்யுளை இயற்றியவர் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்பவர். இச்செய்யுள் திருமால் வாழ்த்தாக அமைந்துள்ளது.

மாநிலஞ் சேவடி யாகத், தூநீர்
வளைநரல் பௌவ முடுக்கையாக,
விசும்புமெய் யாகத் திசைகை யாகப்,
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண் ணாக,
இயன்ற வெல்லாம் பயின்றகத் தடக்கிய
வேத முதல்வ னென்ப,
தீதற விளங்கிய திகிரியோனே.

# 2. குறுந்தொகை

குறுகிய அடிகளையுடைய பாக்களைக் கொண்டு தொகுக்கப் பட்ட நூல் என்பது இதன் பொருள். இது எட்டுத்தொகை நூல்களுள் இரண்டாவது. 'நல்ல குறுந்தொகை' என்று ஆன்ரோரால் இந்நூல் சிறப்பிக்கப்பட்டுள்ளது. இந்நூலில் முதலில் கடவுள் வாழ்த்தாக அமைந்துள்ள செய்யுள் இங்கே தரப்பெற்றுள்ளது. இச்செய்யுளை இயற்றியவரும் பெருந்தேவனாரே. இது முருகக் கடவுள் வாழ்த்தாக உளது.

தாமரை புரையுங் காமர் சேவடிப்,
பவழத் தன்னமேனித், திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த வஞ்சுடர் நெடுவேல்,
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றா லுலகே.

## குறிப்புரை

1. சேவடி - சிவந்த பாதங்கள். தூநீர் வளைநரல் பௌவம் - தூய நீரையுடைய சங்குகள் ஒலிக்கின்ற கடல். உடுக்கை - ஆடை. விசும்பு - ஆகாயம். சுடர் - சூரியன். இயன்ற எல்லாம் - அமைந்த எல்லா உயிர்களிடமும். பயின்று - பொருந்தி. திகிரி - சக்கராயுதம்.

2. தாமரை புரையும் - செந்தாமரை மலரை யொத்த. காமர் - அழகிய. திகழ் ஒளி - விளங்குகின்ற பிரகாசம். குன்றி ஏய்க்கும் உடுக்கை - குன்றி மணியை யொத்த (சிவந்த) ஆடை. குன்றின் - கிரௌஞ்சம் என்னும் பெயருள்ள மலையின். நெஞ்சு - நடுவிடம். பக - பிளவுபட. ஏமம் வைகல் - இன்பமுடைய நாட்களை. எய்தின்று - அடைந்துள்ளது.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—வளை, பௌவம், விசும்பு, திகிரி, காமர்.
2. பிரித்து எழுதுக :—சேவடி, தீதற, திகழொளி.
3. இப்பகுதியில் வந்துள்ள உவம உருபு, முரண்தொடை, பண்புத் தொகை இவைகளைக் குறிப்படுக.

## வினாக்கள்

1. இப்பகுதியில் வந்துள்ள செய்யுட்களில் 'எட்டுத் தொகை'யைச் சேர்ந்தவை எவை ?
2. நற்றிணை, குறுந்தொகை—பெயர்க் காரணம் என்ன ?
3. வேத முதல்வன் யாவன் ? அவன் எவ்வாறு விளங்குகின்றான் ?
4. யார் காப்பதால் உலகம் இன்பமுடைய நாட்களை யடைந்துள்ளது?
5. முருகப் பெருமானைக் குறுந்தொகை யாசிரியர் எப்படிப் போற்றுகிறார் ?

# II. நீதிக்கோவை

## 1. நாலடியார்

நாலடி வெண்பாக்களாலாகிய நூலாதலின் 'நாலடியார்' எனப் பெயர் பெற்றது. சிறப்புப்பற்றிய 'ஆர்' விகுதி கூட்டப் பட்டது. இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. நீதி நூல்களுள் நாலடியார் திருக்குறளோடு ஒப்ப மதிக்கப்பட்டு 'ஆலும் வேலும் பல்லுக்குறுதி, நாலும் இரண்டும் சொல்லுக் குறுதி'' எனவும், '' பழகுதமிழ்ச் சொல்லருமை நாலிரண்டில் '' எனவும் போற்றப்படுகின்றது.

இந்நூற் பாடல்கள் ஒருவரால் இயற்றப்பட்டவையல்ல. மதுரையில் வந்து தங்கியிருந்த சைன முனிவரால் பாடப் பெற்றவை. இவர்கள் கடைச் சங்க காலத்தை யொட்டி வாழ்ந் திருந்தவர் என்பர். பிற்காலத்தவரான பதுமனுர் என்னும் புலவர் இந்நூலுக்குப் பால், இயல், அதிகாரம் என்னும் பாகு பாடு செய்தார். இந்நூலினின்றும் ஐந்து பாடல்கள் கீழே தரப் பெற்றுள்ளன.

கல்வியே அழியாப் பொருள்

1. வைப்புழிக் கோட்படா ; வாய்த்தீயின் கேடில்லை ;
மிக்க சிறப்பின் அரசர் செறின்வவ்வார் ;
எச்சம்என ஒருவன் மக்கட்குச் செய்வன
விச்சை;மற்(று) அல்ல பிற.

கல்வியே உயர்ச்சிக்குக் காரணம்

2. களர்நிலத் துப்பிறந்த உப்பினைச் சான்றேர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர் ;
கடைநிலத்தோர் ஆயினும் கற்றுணர்ந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்.

குடிப்பிறந்தார் தன்மை

3. ஒருபுடை பாம்பு கொளினும், ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉந் திங்கள்போல்
செல்லாமை செவ்வனேர் நிற்பினும் ஒப்புரவிற்(கு)
ஒல்கார் குடிப்பிறந் தார்.

### சிற்றறிவுடையார் தன்மை

4. தாமேயும் இன்புறார் ; தக்கார்க்கும் நன்றாற்றார் ;
ஏமஞ்சார் நன்னெறியுஞ் சேர்கலார்—தாமயங்கி
ஆக்கத்துள் தூங்கி அவத்தமே வாழ்நாளைப்
போக்குவார் புல்லறிவி னார்.

### தானே தன் உயர்வுக்குக் காரணம்

5. நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்,—நிலையினும்
மென்மேல் உயர்த்து நிறுப்பானும், தன்னைத்
தலையாகச் செய்வானும் தான்.

### குறிப்புரை

1. விச்சை - கல்விகள். வைப்பு உழி - வைக்கப்பட்ட இடத்தில். கோள்படா - (பிறரால்) கவரப்படமாட்டா. செறின் - (பொறாமை காரணமாகக்) கோபித்தாலும். வவ்வார் - அபகரிக்கமாட்டார். எச்சம் - சம்பாத்தியத்தில் மிச்சப்பட்டு நிற்பது. இச்செய்யுள் கல்விப் பொருட்கும் செல்வப் பொருட்குமுள்ள வேற்றுமையைக் கூறுவதால், வேற்றுமையணி. எச்சம் - எஞ்சு : பகுதி. கோள் - முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

2. களர்நிலம் - (இழிவான) உவர் நிலம். கடைநிலத்தோர் - இழிவான வகுப்பிற் பிறந்தவர். தலைநிலம் - மேன்மையான இடம். பிறப்புப் பற்றி உயர்வு தாழ்வு பாராட்டாமல் கல்விச் சிறப்பால் நன்கு மதிக்க வேண்டும் என்பது கருத்து.

3. ஒருபுடை-ஒருபாகம். ஞாலம் - பூமி. செல்லாமை - வறுமை. செவ்வன் - நன்றாக. ஒப்புரவு - உபகாரம். இச்செய்யுளில் உவமையணி காண்க.

4. நன்று ஆற்றார் - தானம் செய்யமாட்டார். ஏமம் சார் - (உயிர்க்குப்) பாதுகாப்பாகப் பொருந்திய. ஆக்கம் - செல்வம். அவத்தம் - வீண்.

5. நிறுப்பானும் - வகிப்பவனும். ஒருவனுடைய உயர்வு தாழ்வுகட்கு அவனுடைய அறிவும் அறிவின்மையுமே காரணம் என்பது கருத்து: " பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம், கருமமே கட்டளைக் கல் " என்பது திருக்குறள்.

### பயிற்சி

1. பொருள் கூறுக :—எச்சம், விழுமிது, செல்லாமை, ஒப்புரவு, ஏமம், ஆக்கம்.

2. பிரித்துக் காட்டு :—வைப்புழி, எச்சம், ஒப்புரவு, இன்புறூர், நன்னெறி, நன்னிலை.

3. எச்சம், கேடு, ஒப்புரவு, ஆக்கம், கோள்—இவை என்ன பெயர்?

### வினாக்கள்

1. கல்விச் செல்வத்திற்கும் பொருட் செல்வத்திற்குமுள்ள வேறுபாடு யாது?

2. ' களர்நிலத்துப் பிறந்த உப்பினைச் சான்றோர் விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர் "—இதனால் நீவிர் அறிவது என்ன?

3. திங்களின் எத்தன்மை எதை விளக்க உவமையாக வந்துள்ளது?

4. அற்ப அறிவுடையார் செயல் என்ன?

5. 'அவனவன் உயர்வு தாழ்வுகளுக்கு அவனவனே காரணம்' என்ற கருத்தை விளக்குக. இக்கருத்தமைந்த திருக்குறள் யாது?

### கட்டுரையாக்கம்

1. 'குடிப் பிறந்தார் தன்மை' என்பது பற்றிப் பத்து வரியில் எழுது.

2. 'தானே தன் உயர்வுக்குக் காரணம்' என்பதை விளக்கி ஒரு சிறு கதை வரைக.

## 2. ஏலாதி

'ஏலாதி' என்பது ஏல ஆதி எனப் பிரிந்து, ஏலத்தை முதலாக வுடையது என்று பொருள்படும். ஆறு அல்லது ஏழு சரக்குகள் சேர்த்துச் செய்யப்படுவதாய், மாந்தர் உடற் பிணியைப் போக்கி ஆரோக்கியந் தந்து உடலுக்கு உறுதியை விளைவிக்கிற ஏலாதி என்ற மருந்தின் பெயர், ஒவ்வொரு செய்யுளிலும் ஆறு அல்லது ஏழு பொருள்களை எடுத்துரைத்து மாந்தர் மன நோயாகிய அறியாமையைப் போக்கி, இம்மை மறுமை வீடுகளில் உயிர்க்கு நன்மை விளைப்பதான நூலுக்குப் பெயராயிற்று. இது, உவமையாகு பெயர். இந்நூல் பதினெண் கீழ்க் கணக்கைச் சேர்ந்தது.

இந்நூலின் ஆசிரியர் கணிமேதையார் என்பவர். இப் பெயர் யாவராலும் மதிக்கப்படும் அறிவு நலமுடையவர் எனப் பொருள்படும். (மேதை-அறிவு.) இவர் சைன சமயத்தினர்; கடைச் சங்க காலத்தில் விளங்கியவர்.

### நல்லனவே செய்க

1. இளமை கழியும் ; பிணிமூப்(பு) இயையும்
வளமை வலிஇவை வாடும் ; உளநாளால்
பாடே புரியாது பால்போலும் சொல்லிஞய் !
வீடே புரிதல் விதி.

### எமனை ஒழிக்க வழி

2. வாளஞ்சான் வன்கண்மை அஞ்சான் வனப்பஞ்சான்
ஆளஞ்சான் ஆய்பொருள்தான் அஞ்சான்-நாள்எஞ்சாக்
காலன் வரவொழிதல் காணின்,வீ டெய்திய
பாலின்நூல் எய்தப் படும்.

### அன்பர்க்குரிய ஆறு குணங்கள்

3. சாதல் பொருள்கொடுத்தல் இன்சொல் புனர்வுவத்தல்
நோதல் பிரிவில் கவறலே, ஓதலின்
அன்புடையார்க் குள்ளன ஆறு குணமாக
மென்புடையார் வைத்தார் விரித்து.

### உத்தமன்

4. களியான்கள் உண்ணுன் களிப்பாரைக் காணுன்
ஒளியான் விருந்திற் குலையான்—எளியாரை
எள்ளான்ஈத் துண்பானேல் ஏதமில் மண்ஆண்டு
கொள்வான் குடிவாழ்வான் கூர்ந்து.

### மறுமைப்பேறு பெறத் தக்கவர்

5. தாயிழந்த பிள்ளை தலையிழந்த பெண்டாட்டி
வாயிழந்த வாழ்விஞர் வாணிகம்—போயிழந்தார்
கைத்தூண் பொருளிழந்தார் கண்ணிலவர்க் கீந்தார்
வைத்து வழங்கிவாழ் வார்.

### குறிப்புரை

1. மூப்பு - கிழத்தனம். இயையும் - நேரக்கூடியவை. வலி - தேக பலம். வாடும் - அழியக்கூடியவை. பாடேபுரியாது - உலக இன்பங்களுக்காகப் பாடுபடாமல். விதி - கடமை. பால்போலும் சொல்லிஞய் - மகடூஉ முன்னிலை. மூப்பு - தொழிற் பெயர் ; மூ - பகுதி.

2. வன்கண்மை - வீரதீரம். வனப்பு - கம்பீரமான தோற்றம். எஞ்சா - தவறாமல். பாலின் - சன்மார்க்கத்தைக் கூறுகிற. ஆய்பொருள் - வினைத்தொகை.

3. சாதல் - (தன் நண்பர் இறந்தால் தான்) இறத்தல். புணர்வு உவத்தல் - கூடிக் கூலாவி மகிழ்தல். பிரிவில் - பிரிய நேர்ந்தால். கவறல் - கவலைப்படுதல். மென்புடையார் - மென்மைத் தன்மையுடைய பெரியோர். கவறல் - தொழிற் பெயர். கவல் - பகுதி.

4. களியான் - கர்வப்படாதவனும். களிப்பாரை - கள்ளுண்டு மகிழ் பவரை. ஒளியான் - (உள்ளதை) ஒளித்து இல்லை என்னாதவனும். உலை யான் - தனது ஒழுக்கங் கெடாதவனும். எள்ளான் - இகழாதவனும். ஈத்து - இறந்தகால வினையெச்சம்.

5. தலை - தலைவன், கணவன். வாய் இழந்த வாழ்வினர் - ஊமை யராய் வாழ்பவர். கைத்து ஊண் பொருள் - கையில் உண்பதற்கு ஆதார மாயுள்ள பொருள்.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—வன்கண்மை, வனப்பு, கவறல், ஏதம், உலையான்.

2. பகுபத இலக்கணம் தருக :—மூப்பு, கவறல், காணான், வாழ்வார், அஞ்சான்.

3. இப்பகுதியில் வந்துள்ள தொழிற்பெயர்களை எடுத்துக் காட்டுக.

## வினாக்கள்

1. 'வீடே புரிதல் விதி' என்பது எப்படி வலியுறுத்தப்படுகிறது?
2. நம்மை எமன் பற்றாதிருக்கச் செய்யும் வழி என்ன?
3. அன்புடையார்க்குள்ள ஆறு குணங்கள் எவை?
4. குடிபெருகி இன்புற்று வாழ விரும்புவோன் செய்தற்குரியவை எவை?
5. 'வைத்து வழங்கி வாழ்வார்' என்று கூறப்படுபவர் யாவர்?

## கட்டுரையாக்கம்

இப்பகுதியில் வந்துள்ள நீதியுரைகளை விளக்கிப் பதினைந்து வரியில் எழுதுக.

# III. தொடர்நிலைச் செய்யுள்

## 1. சிலப்பதிகாரம்

சிலம்பினது அதிகரித்தலை (முக்கியமான விளைவை)த் தெரிவிப்பது சிலப்பதிகாரம். இது பழைய பெருங்காப்பியம் ஐந்தனுள் ஒன்று.

தனது செல்வம் முழுவதையும் விலைமகளுக்குக் கொடுத்து இழந்த கோவலன் என்பவன் வாணிகஞ் செய்து பொருள்தேட விரும்பித் தன் மனைவியான கண்ணகியின் சிலம்பை வாங்கி, அவளுடனே மதுரைக்குச் சென்று, அந்தச் சிலம்பை விற்கத் தொடங்குகையில், கள்வனுன பொற்கொல்லன் பேச்சை ஆராயாது நம்பிய பாண்டியவரசனுல் அக்கிரமமாகக் கொல்விக்கப்பட்ட சரித்திரத்தை விவரித்துக் கூறுவது இக்காப்பியம். இது—புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம் என மூன்று பெரும்பகுப்பை யுடையது. இதன் உட்பகுப்பின் தொகை முப்பது. இந்நூல், முத்தமிழும் விரவப் பெற்றதாதலால், இயலிசை நாடகப் பொருட்டொடர் நிலைச் செய்யுள் என்றும், நாடக வுறுப்புகளை யுடையதாதலால் நாடகக்காப்பியமென்றும், உரைப்பாட்டும் இசைப்பாட்டும் இடையிடையே விரவப் பெற்றதாதலால் உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என்றும் பெயர்பெறும். இந்நூல், முதலில் தமிழ்மொழியிலேதான் செய்யப்பட்டது.

இந்நூலைச் செய்தவர்—இளங்கோவடிகள். இவர் சேரநாட்டில் வஞ்சி நகரத்தில் அரசுபுரிந்த சேரலாதனுக்குப் புத்திரர்; செங்குட்டுவனுடைய தம்பி. இவர் அரசனுக்குத் தம்பியாதலால் 'இளங்கோ' எனப்பட்டுப் பின்பு துறவறம் பூண்டதனுல் இளங்கோவடிகள் என்று பெயர் பெற்றனர். இவருடைய மதம்—சைனம். இவருடைய காலம் கி. பி. இரண்டாம் நூற்ருண்டென்பர்.

முன் கதை: சோழ நாட்டில் காவிரிப்பூம் பட்டினத்தில் மாசாத்துவான் என்று ஒரு வணிகன் வாழ்ந்துவந்தான். அவன் மகன் கோவலனென்பவன். அவன் மாநாய்கன் மகளாகிய கண்ணகி யென்பவளை மணந்து இல்லறம் நடத்தி வாழலானுன். அப்போது அரங்கேறி நடனமாடிய நாடகக் கணிகையான மாதவி யென்பவளின் காதலுக்கு உட்பட்டுத் தன் பொருளை யெல்லாம் இழந்து வறியனுனுன். பிறகு, கோவலன் தன்

மனைவியினிடத்து எஞ்சியிருந்த சிலம்பைக் கொண்டு சென்று வேற்று நாட்டில் விற்று வாணிகஞ் செய்யக் கருதினான். கவுந்தி யென்னுந் தவமுதியாளை வழித் துணையாகக் கொண்டு மனைவி யுடன் மதுரையிலே புறஞ்சேரியிற் சென்றான். பிறகு இடைச்சேரியில் மாதரி யென்னும் இடையர் தலைவி, தன்னிடத்து அக் கண்ணகியைக் கவுந்தியடிகள் அடைக்கலமாக வைக்க, இடம் முதலியன கொடுத்து அவர்களை உபசரித்தனள். உபசரிக்கப் பெற்றபின், கோவலன் மதுரைத் தெருவிற் போய் அங்கு எதிர்ப்பட்ட கொல்லனொருவனுக்குத் தான் கொண்டு சென்ற தன் மனைவியின் ஒற்றைச் சிலம்பைக் காட்டினான். அந்தப் பொற்கொல்லன் அதனோடு ஒத்ததான பாண்டியன் தேவியினது சிலம்பொன்றைக் கவர்ந்த கள்வனாதலால், தன்னைக் குற்றமில்லாதவனாகக் காட்டுவதற்குத் தக்க உபயாஞ் சூழ்ந்து, கோவலனை அங்குத்தானே இருக்கச் சொல்லிப் பாண்டியனிடம் போய் "கோப்பெருந் தேவியின் சிலம்பைக் கவர்ந்த கள்வன் வந்துள்ளான்" என்று கூறினான். பாண்டியராசன் பொற்கொல்லன் பேச்சை நம்பிக் கோவலனைக் கொன்று சிலம்பு கொணருமாறு விதிவசத்தால் ஆராய்ச்சியில்லாமற் கூறினான். அரசன் கட்டளைப்படியே கொலையஞ்சாதவனொருவன் விரைந்து அக் கோவலனை வெட்டி வீழ்த்தினான். அதனைக் கண்ணகி கேள்வியுற்றுத் துன்பமும் சினமும் பொங்கப் புறப்பட்டுப் பாண்டியனிடஞ் சென்று முறையிடுமாறு அரண்மனை வாயிலை யடைந்தாள். அந்த வேளையில் பாண்டியன் தேவி தான் கண்ட தீக் கனாக்களைப் பாண்டியவரசனோடு சொல்லிக் கொண்டிருந்தாள்

## வழக்குரை காதை

அரிமா னேந்திய வமளிமிசை யிருந்தனன்
திருவீழ் மார்பிற் றென்னவர் கோவே ; இப்பால்
" வாயி லோயே ! வாயி லோயே !
அறிவறை போகிய பொறியறு நெஞ்சத்(து)
இறைமுறை பிழைத்தோன் வாயிலோயே !
இணையரிச் சிலம்பொன் றேந்திய கையள்
கணவனை யிழந்தாள் கடையகத்தாள் என்(று)
அறிவிப் பாயே யறிவிப் பாயே " யென ;
வாயிலோன், வாழியெங் கொற்கை வேந்தே ! வாழி !

தென்னம் பொருப்பிற் றலைவ வாழி!
செழிய வாழி! தென்னவ வாழி!
பழியொடு படராப் பஞ்சவ வாழி!
யடர்த்தெழு குருதி யடங்காப் பசுந்துணிப்
பிடர்த்தலைப் பீட மேறிய மடக்கொடி
வெற்றிவேற் றடக்கைக் கொற்றவை யல்லள்;
அறுவர்க் கிளைய நங்கை, யிறைவனை
யாடல்கண் டருளிய வணங்கு, சூருடைக்
கானக முகந்த காளி, தாருகன்
பேருரங் கிழித்த பெண்ணு மல்லள்;
செற்றனள் போலும் செயிர்த்தனள் போலும்
பொற்றொழிற் சிலம்பொன் றேந்திய கையள்
கணவனை யிழந்தாள் கடையகத் தாளே
கணவனை யிழந்தாள் கடையகத் தாளே'' யென
''வருக மற்றவட் டருக ஈங்(கு) என,
வாயில் வந்து கோயில் காட்டக்
கோயின் மன்னனைக் குறுகினள் சென்றுழி,
'நீர்வார் கண்ணை யெம்முன் வந்தோய்!
யாரை யோநீ மடக்கொடி யோய்?' எனத்
''தேரா மன்ன! செப்புவ துடையேன்;
எள்ளறு சிறப்பி னிமையவர் வியப்பப்
புள்ளுறு புன்கண் தீர்த்தோன் அன்றியும்
வாயிற் கடைமணி நடுநா நடுங்க
ஆவின்கடைமணி யுகுநீர் நெஞ்சுசுடத் தான்றன்
அரும்பெறற் புதல்வனை யாழியின் மடித்தோன்,
பெரும்பெயர்ப் புகாரென் பதியே, யவ்வூர்
ஏசாச் சிறப்பி னிசைவிளங்கு பெருங்குடி
மாசாத்து வாணிகன் மகனை யாகி,
வாழ்தல் வேண்டி யூழ்வினை துரப்பச்
சூழ்கழன் மன்ன நின்னகர்ப் புகுந்திங்(கு)
என்காற் சிலம்பு பகர்தல் வேண்டி, நின்பாற்
கொலைக்களப் பட்ட கோவலன் மனைவி
கண்ணகி யென்பதென் பெயரே'' யெனப், ''பெண்ண
கள்வனைக் கோறல் கடுங்கோ லன்று; [ணங்கே

வெள்வேற் கொற்றங் காண் ” என வொள்ளிழை
“ நற்றிறம் படராக் கொற்கை வேந்தே !
என்காற் பொற்சிலம்பு மணியுடை யரியே ” யெனத்
“ தேமொழி யுரைத்தது செவ்வை நன்மொழி
யாமுடைச் சிலம்பு முத்துடை யரியே
தரு(க) ” எனத் தந்து தான்முன் வைப்பக்
கண்ணகி யணிமணிக் காற்சிலம் புடைப்ப
மன்னவன் வாய்முதற் றெறித்தது மணியே, மணிகண்டு
தாழ்ந்த குடையன் றளர்ந்தசெங் கோலன்
“ பொன்செய் கொல்லன் றன்சொற் கேட்ட
யானோ வரசன் ? யானே கள்வன் ;
மன்பதை காக்குந் தென்புலங் காவல்
என்முதற் பிழைத்தது கெடுகவென் னாயுள் ” என
மன்னவன் மயங்கிவீழ்ந் தனனே ; தென்னவன்
கோப்பெருந் தேவி குலைந்தன ணடுங்கிக்
கணவனை யிழந்தோர்க்குக் காட்டுவ தில்லென்(று)
இணையடி தொழுது வீழ்ந்தனளே மடமொழி.

## குறிப்புரை

அடி 1-2 : திருவீழ் - திருமகள் விரும்புகின்ற. தென்னவர் கோ - பாண்டிய மன்னன். அரிமான் - சிங்கம். அமளி - ஆசனம். வீழ்மார்பு - வினைத் தொகை.

2-8 : அறிவு அறை போகிய - (ஒன்றை) ஆராய்ந்து அறிவது கெட்டொழிந்த. பொறி அறு நெஞ்சத்து - புண்ணியமற்ற மனத்தையுடைய. இறை முறை - அரச நீதி. இணை - தனக்குத் தானே ஒப்பதாகிய. அரி சிலம்பு ஒன்று - உள்ளிடு பரலையுடைய ஒரு சிலம்பை. கடை - வாயில். அறிவு : தொழிற்பெயர்.

9-23 : தென் அம் பொருப்பு - தெற்குத் திசையிலுள்ள அழகிய பொதியமலை. பஞ்சவ - பாண்டியனே. அடர்த்து - மேற்பட்டு. பிடர் தலை - பிடரியோடு கூடிய (மகிடாசுரனது தலையாகிய.) பீடம் - பீடத்திலே. தடம் கை - பெரிய கை. கொற்றவை- துர்க்கை. அறுவர்க்கு இளைய நங்கை- சப்த மாதர்களில் ஆறு பேர்க்கும் இளையவளாகிய பெண். இறைவனை - சிவபெருமானை. உகந்த - (விரும்பி) வாழுமிடமாகக் கொண்டுள்ள. தாருகன் - தாருகாசுரன். உரம் - மார்பு. செற்றனன் - முகக் கடுப்புக் கொண்டவன். செயிர்த்தனள் - மனக்கோபம் கொண்டவள். சப்த மாதர் - பிராமி, மகேசுவரி, கௌமாரி, வைணவி, வாராகி, மாகேந்திரி, சாமுண்டி.

24: தருக - அழைத்து வருக.

24-26: வாயில் - காவலோன். கோயில் காட்ட - அரண்மனையி லுள்ள அரசனைக் காட்டித் தா. குறுகினன் - முற்றெச்சம்.

27-28: நீர்வார் கண்ணை - நீர் பெருகுகின்ற கண்களை யுடையவளாய் இருக்கின்றாய். வார்கண் - வினைத்தொகை.

29-42: தேரா - (உண்மையை) ஆராய்ந்தறிய மாட்டாத. என்னு அறு - இகழ்ச்சியற்ற. புள் உறு - புறாவாகிய பறவை யடைந்த. புன்கண்-துன்பம். தீர்த்தோன் - போக்கியவனான சிபிச் சக்கரவர்த்தி. கடைமணி - கண்ணினின் கருவிழிக் கடையிலிருந்து. ஆழி - தேர்ச் சக்கரம். மடித்தோன் - என்றது மனுச் சோழனை. புகார் - காவிரிப்பூம் பட்டினம். என் பதி - எனது ஊர். துரப்ப - ஓட்டுதலால். பகர்தல் வேண்டி - விற்க விரும்பி.

42-44: கோறல் - கொல்வது. வெள்வேல் - வெள்ளிய வேலாயுதம். கொல் + தல் = கோறல்: தொழிற்பெயர்.

44-46: நல்திறம் படரா - நல்ல வழியிற் செல்லாத. மணி - மாணிக்கம்.

46-49: தேமொழி - உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை தேன் + மொழி). தந்து - கொண்டுவந்து.

50-51: வாய் முதல் - வாசல். வாய் - உள்ளே புகும் வழி. முதல்- ஏழாம் வேற்றுமை யுருபு.

51-57: தளர்ந்த - நிலைகுலைந்த. மன்பதை - மக்கட் கூட்டம். தென்புலம் - பாண்டிய நாடு என் முதல் - என்னைத் தொடங்கி.

57-60: குலைந்தனன் - மன நடுக்கமடைந்து: முற்றெச்சம். நடுங்கி- உடல் நடுங்கி. காட்டுவது - (முறை சொல்லிக்) காட்டக்கூடிய பொருள். இணை அடி - (கண்ணகியின்) இரண்டு பாதங்களையும்.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—சூர், அமளி, அரி, இறை, உரம், புன்கண், மன்பதை.

2. வீழ்மார்பு, அரிசிலம்பு, கடைமணி, இணையடி, பசுந்துணி, உகு நீர்—இவை என்ன தொடர்?

3. பிரித்துக் காட்டுக :—கோறல், அறிவுரை, பொற்றொழில், நற்றிறம், தேமொழி.

4. இப்பகுதியில் பாண்டியனைக் குறிக்க வரும் பெயர்களைக் காரணத்துடன் கூறுக.

5. இப்பகுதியில் கண்ணகியைக் குறிக்கும் தொடர்புகளைத் தெரிவிக்க.

6. இப்பகுதியில் வந்துள்ள ஏழாம் வேற்றுமை உருபுகளைக் குறிக்க.

## வினாக்கள்

1. சிலப்பதிகாரத்தோடு கதைத் தொடர்புள்ள வேறொரு கதை யாது?

2. இளங்கோவடிகட்குச் சமகாலத்தவரான மற்றொரு பெரும்புலவர் யார்?

3. கண்ணகி வழக்குரைக்கச் சென்றபோது பாண்டியன் எங்கிருந்தான்?

4. வாயில் காவலனை நோக்கிக் கண்ணகி கூறியது என்ன?

5. வாயில் காவலன் அரசனை எவ்வாறு வாழ்த்தினான்?

6. கண்ணகியின் பெருஞ்சீற்ற நிலையை வாயில் காவலன் மன்னனிடம் எவ்வாறு எடுத்துரைத்தான்?

7. பாண்டியன் "நீ யார்?" எனக் கேட்டதற்குக் கண்ணகி கூறியது என்ன?

8. சோழர் குலம், புகார், பெருங்குடி—ஆகியவற்றைக் கண்ணகி எவ்வாறு சிறப்பித்தனள்?

9. அரசன் 'வெள்வேல் கொற்றம்' என்றது எதனை?

10. கோவலன் கள்வன் அல்லன் என்பதைக் கண்ணகி எவ்வாறு மெய்ப்பித்தாள்?

11. தன் தவற்றை யுணர்ந்த பாண்டியன் கூறியது என்ன?

12. "கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்"—பொருளை விளக்குக.

13. கதைக் குறிப்பு வரைக: புள்ளுறு புன்கண் தீர்த்தோன், புதல்வனை ஆழியின் மடித்தோன், பிடர்த்தலை பீடம் ஏறிய மடக்கொடி, தாருகன் பேருரம் கிழித்த பெண்.

14. பொற்கொல்லன் செய்த சூழ்ச்சியைக் கூறுக.

15. "தேமொழி யுரைத்தது செவ்வை நன்மொழி"—சந்தர்ப்பங் கூறி விளக்குக.

## கட்டுரையாக்கம்

1. "கண்ணகியின் சீற்றங் கொண்ட தோற்றம்" என்பது பற்றிப் பதினைந்து வரியில் எழுதுக.

2. "கண்ணகி வழக்கை விளக்கியது" பற்றிப் பதினைந்து வரியில் வரைக.

3. இப்பகுதியிலடங்கிய செய்தியை உரையாடல் அமைப்பில் இரு பக்க அளவில் எழுதுக.

## 2. கம்பராமாயணம்

### ஆரணிய காண்டம்—சடாயு காண் படலம்

இராமாயணம் இதிகாசங்களில் ஒன்று. இதனை வடமொழியில் இயற்றியவர் வான்மீகி. அதன் வழி நூலாகத் தமிழில் கம்பரால் பாடப் பெற்றது கம்பராமாயணம். இது 10500 பாடல்கள் கொண்ட ஆறு காண்டங்களால் ஆகியது.

கம்பராமாயணம் என்பது கம்பரது ராமாயணம் என விரியும். 'ராம அயநம்' என்ற இரு வடசொற்கள் புணர்ந்து ராமாயணம் என்ருயின. 'ராம' என்பது (குணம், செயல், அழகு இவற்ருல் யாரையும்) மகிழ்விப்பவன் என்றும், அயநம் என்பது அறிவிப்பது என்றும் பொருள்படும்.

இது வழிநூலேயாயினும் கம்பர் பல இடங்களில் தமிழ் மரபுக்கும், தம் மனோதர்மத்திற்கும் ஏற்ப முதனூலிலிருந்து மாறுபட்டுச் செல்கிருர். அவரது பாடல்களில் கற்பனையும், சொல்லழகும், பொருளாழமும் மிகுந்துள்ளன.

கம்பர் சோழ நாட்டிலே திருவழுந்தூரிலே உவச்ச குலத்தில் ஆதித்தன் என்பவருக்குப் புதல்வராகத் தோன்றிஞரென்பர். இவர் வேளாண் மரபினர் என்பாருமுளர். இளமையிலேயே இவர் தந்தையை இழந்தாராகத் திருவெண்ணெய் நல்லூரில் வாழ்ந்த பெருவள்ளலாகிய சடையப்ப வள்ளலால் ஆதரிக்கப் பெற்றுக் கல்வியிற் சிறந்து விளங்கிஞர். இவர் ஒன்பதாம் நூற்ருண்டிலிருந்தவரென்று சிலரும், பன்னிரண்டாம் நூற்ருண்டில் இருந்தவரென்று வேறு சிலரும் கூறுகின்றனர். இவரைப் பற்றிய கர்ண பரம்பரை வரலாறுகளை வேறு நூல்களில் பரக்கக் காணலாம். இவர் வைணவ சமயத்தினர். இவர் இயற்றிய வேறு நூல்கள், ஏரெழுபது, சிலையெழுபது, திருக்கை வழக்கம், சரசுவதியந்தாதி ஆகியவை என்பர். இவரைக் குறிக்கும் கவிச் சக்கரவர்த்தி என்ற சிறப்புப் பெயரும், இவரைப் பற்றியெழுந்த 'கல்வியிற் பெரியவன் கம்பன்', 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவி சொல்லும்' என்ற பழமொழிகளும் இவரது கல்வித் திறமையை வெளிப்படுத்தும்.

முன் கதை : தசரதன் தன் மந்திரிகளுடன் ஆலோசித்து இராமனை யுவராசாவாக முடிசூட்ட நிச்சயித்தான். மந்தரையென்ற வேலைக்காரியால் தூண்டப்பெற்ற கைகேயி, தன் மகன் பரதனுக்கு முடிசூட்டுமாறும் இராமனைப் பதினன்கு ஆண்டு

வனவாசம் செய்யுமாறும் தசரதனிடம் இரண்டு வரங்களை வேண்டினாள். தசரதன் அதற்கு இணங்கவேண்டியதாயிற்று. இராமன், சீதையோடும், இலக்குமணனோடும் காடு சென்றார். சித்திரகூடத்தில் அவர்கள் தங்கியிருக்கையில் பரதன் அங்கு வந்து தசரதன் இறந்ததைத் தெரிவித்து இராமனை அயோத்திக்குத் திரும்புமாறு வேண்டினன். இராமன் அதற்கு இணங்காது தன் பாதுகைகளைப் பரதனிடம் கொடுத்தனுப்பிவிட்டுத் தண்டகாரணியத்தில் வசித்து வந்தார். பின்னர் அகத்திய முனிவரின் சொற்படி பஞ்சவடியை நோக்கிச் செல்லலானார்.

**இராமன் முதலிய மூவரும் சடாயுவைக் காணுதல்**

1. நடந்தனர் காவதம் பலவும் நன்னதி
கிடந்தன நின்றன கிரிகள் கேண்மையில்
தொடர்ந்தன துவன்றின சூழல் யாவையும்
கடந்தனர் கண்டனர் கழுகின் வேந்தையே.

**சடாயுவின் வருணனை**

2. உருக்கிய சுவணமொத் துதயத் துச்சிசேர்
அருக்கனிவ் வகலிடத் தலங்கு திக்கெலாந்
தெரிப்புறு செறிசுடர்ச் சிகையி னூற்சிறை
விரித்திருந் தனனென விளங்கு வான்றனை,

3. தூய்மைய னிருங்கலை துணிந்த கேள்வியன்
வாய்மையன் மறுவிலன் மதியின் கூர்மையன்
ஆய்மையின் மந்திரத் தறிஞ னுமெனச்
சேய்மையி னோக்குறு சிறுக ணான்றனை,

4. வீட்டிவாள் அவுணரை விருந்து கூற்றினை
யூட்டிவீழ் மிச்சிரு ளுண்டு நாடொறும்
தீட்டிமே லிந்திரன் சிறுகண் யானையின்
தோட்டிபோல் தேய்ந்தொளிர் துண்டத் தான்றனை,

5. கோளிறு நான்கினோ டொன்று கூடிய
வாளுறு திகிரிபோ லாரத் தான்றனை,
நீளும் மேருவி னெற்றி முற்றிய
வாளிர வியிற்பொலி மௌலி யான்றனை,

6. சொற்பங்க மிறநிமி ரிசையின் சும்மையை,
அற்பங்க முறவரு மருணன் செம்மலைச்,
சிற்பங்கொள் பகலெனக் கடிது சென்றுதீர்
கற்பங்க ளனைப்பல கண்டு ளான்றனை.

**இராமனும் இலக்குவனும் சடாயுவை யணுகிச் சந்தேகித்தல்**

7. ஓங்குயர் நெடுவரை யொன்றி னின்றது
தாங்கல திருநிலந் தாழ்ந்து தாழ்வுற
வீங்கிய வலியினி லிருந்த வீரனை
ஆங்கவ ரணுகின ரயிர்க்குஞ் சிந்தையார்.

8. ‘ இறுதியைத் தன்வயி னியற்ற வெய்தினன்
அறிவிலி யரக்கனு மல்ல னுமெனின்
எறுழ்வலிக் கலுழனே ’ யென்ன வுன்னியச்
செறுகழல் வீரருஞ் செயிர்த்து நோக்கினர்.

**சடாயு இராமலட்சுமணர்களைச் சந்தேகித்தல்**

9. வனைகழல் வரிசிலை மதுகை மைந்தரை
அனையவன் ருனுங்கண் டயிர்த்து நோக்கினன்
‘ வினையறு நோன்பின ரல்லர் ; வில்லினர் ;
புனைசடை முடியினர் ; புலவரோ ?’ வெனு.

10. ‘ புரந்தரன் முதலிய புலவர் யாரையும்
நிரந்தர நோக்குவென் ; நேமி யானுமவ்
வரந்தரு மிறைவனு மமுவ லாளனுங்
கரந்தில ரென்னையா னென்றுங் காண்பெறல்.

11. காமனென் பவனையுங் கண்ணி னேக்கினேன் ;
தாமரைச் செங்கணித் தடக்கை வீரர்கள்
பூமரு பொலங்கழற் பொடியி னேடுமொப்(பு)
ஆமென வறிகிலெ னர்கொ லாமிவர் ?’

12. ‘ உலகொரு மூன்றுந்தம் முடைமை யாக்குறும்
அலகறு மிலக்கண மமைந்த மெய்யினர்
மலர்மகட் குவமையா ளோடும் வந்தவிச்
சிலைவலி வீரரைத் தெரிகி லேன்’ எனு,

13. ‘ கருமலை செம்மலை யனைய காட்சியர் ;
திருமகிழ் மார்பினர் ; செங்கண் வீரர்தாம்
அருமைசெய் குணத்தினென் றுணைவ னாழியான்
ஒருவனை யிருவரு மொத்து ளாரரோ.’

சடாயு இராமலட்சுமணர்களை நீவிர் யாவரென வினவல்

14. எனப்பல நினைப்பின மனத்து ளெண்ணுவான்
சினப்படை வீரர்மேற் செல்லு மன்பினான்
“ கனப்படை வரிசிலைக் காளை யீர்கள் யார்
மனப்பட வெனக்குரை வழங்கு வீ(ர்)” என்றான்.

இராம இலட்சுமணர்கள் தம்மைத் தெரிவித்தல்

15. வினவிய காலையின் மெய்மை யல்லது
புனைமலர்த் தாரவர் புகல்கி லாமையாற்
“ கனைகட நெடுநிலங் காவ லாழியான்
வனைகழற் றயரதன் மைந்தர் யா(ம்) ” என்றார்.

சடாயு தசரதனது நலத்தை வினவுதல்

16. உரைத்தலும் பொங்கிய வுவகை வேலையன்
தரைத்தலை யிழித்தவர்த் தழுவு காதலன்
“ விரைத்தடந் தாரினிர், வேந்தர் வேந்தன்றன்
வரைத்தடந் தோளிணை வலிய வோ ?” வென்றான்.

தசரதன் இறந்ததை இராமன் தெரிவிக்க, சடாயு மூர்ச்சித்தல்

17. மறக்கமுற் றுதன வாய்மை காத்தவன்
துறக்கமுற் றனென விராமன் சொல்லலும்
இறக்கமுற் றனென வேக்கமெய்தினான்
உறக்கமுற் றனென வுணர்வு நீங்கினான்.

இராம இலட்சுமணரால் தேற்றப்பட்ட சடாயு
புலம்பத் தொடங்குதல்

18. தழுவின ரெடுத்தனர் தடக்கை யான்முகங்
கழுவின ரிருவருங் கண்ணி னீரினால்
வழுவிய வின்னுயிர் வந்த மன்னனும்
அழிவுறு நெஞ்சின னரற்றி னனரோ.

### சடாயு புலம்புதல்

19. "பரவலருங் கொடைக்குநின்றன் பனிக்குடைக்கும்
பொறைக்குநெடும் பண்பு தோற்ற,
கரவலருங் கற்பமுகமு முடுபதியுங்
கடலிடமுங் களித்து வாழப்
புரவலர்தம் புரவலனே! பொய்ப்பகையே!
மெய்க்கனியே! புகழின் வாழ்வே!
இரவலரு நல்லறமும் யானுமினி
யென்படநீத் தேகினையே!"

20. "அலங்கார மெனவுலகுக் குயிரளிக்குந்
தனிக்குடையாய்! ஆழி சூழ்ந்த
நிலங்காவ லிதுகிடக்க, நிலையாத
நிலையுடையே னேயநெஞ்சின்
நலங்காண நடந்தனையோ? நாயகனே!
தீவினையே னண்பி னின்றும்
விலங்கானே னகலினால் விலங்கினே
னின்னுமுயிர் விட்டி லேனால்."

21. "தயிருடைக்கு மத்தென்ன வுலகைநலி
சம்பரனைத் தடிந்த வந்நாள்
அயிர்கிடக்குங் கடல்வலயத் தவரறிய
நீயுடனா னவி யென்று
செயிர்கிடத்தல் செய்யாத திருமனத்தாய்!
செப்பினாய்; திறம்பா நின்சொல்
உயிர்கிடக்க வுடலைவிசும் பேற்றினார்
உணர்விறந்த கூற்றி னாரே."

### சடாயு தன் வம்சாவளியைக் கூறுதல்

22. "எழுவதோ ரிசைபெருக விப்பொழுதே
ஒப்பரிய வெரியுந் தீயின்
விழுவதே நிற்சமட மெல்லியலார்
தம்மைப்போ னிலத்தி மேல்வீழ்ந்(து)

அழுவதே யான் '' என்று வறிவற்றான்
எனவெழுந்தாங் கவரை நோக்கி
" முழுவதே முலகுடையான் மைந்தன்மீர் !
கேண்மின் '' என முறையிற் சொல்வான் :

23. " அருணன்றன் புதல்வனியா னவன்படரும்
உலகெல்லாம் படர்வே னுழி
இருண்மொய்ம்பு கெடத்துரந்த தயரதற்கின்
னுயிர்த்துணைவ னிமையோ ரோடும்
வருணங்கள் வகுத்திட்ட காலத்தே
வந்துதித்தேன் கழுகின் மன்னன்
தருணங்கொள் பேரொளியீர் ! சம்பாதி
பின்னர்வரு சடாயு '' வென்றான்.

சடாயுவின் வரலாற்றைக் கேட்ட இராமலட்சுமணர்
மகிழ்தல்

24. ஆண்டவனீ துரைசெய்ய வஞ்சலித்த
மலர்க்கையா ரன்பி னோடு
மூண்டபெருந் துன்பந்தான் முறைமுறையி
னிறைமலர்க்கண் மொய்த்த நீரார்
பூண்டபெறும் புகழ்நிறுவித் தம்பொருட்டாற்
பொன்னுலகம் புக்க தாதை
மீண்டனன்வந் தானவனைக் கண்டனரே
யொத்தனரவ் விலங்கற் றோளார்.

சடாயு தான் தீப்பாய்வதாக அன்புமொழி கூறுதல்

25. மருவினிய குணத்தவரை வருசிறகா
லுறத்தழுவி, " மக்காள் ! நீரே
உரியகடன் வினையேற்கு முதவுவீ
ருடலிரண்டுக் குயிரொன் றானன்
பிரியவுந்தன் பிரியாதே யினிதிருக்கு
முடற்பொறையாம் பீழை பாரா(து)
எரியதனி னின்றேபுக் கிறவேனேல்
இத்துயர மறவேன் '' என்றான்.

**இராமலட்சுமணர்கள் சடாயுவை இறவாதிருக்க வேண்டுதல்**

26. என்று ரைத்த வெருவை யரசனை
துன்று தாரவர் நோக்கித் தொழுதுகண்
ஒன்று முத்த முறைமுறை யாயுக
நின்று மற்றின்ன நீர்மை நிகழ்த்தினர்:

27. "உய்விடத் துதவுதற் குரியா னுந்தன்
மெய்விடக் கரு தாதுவிண் ணேறினன்;
இவ்வி டத்தினி லெம்பெரு மானெமைக்
கைவி டிற்பினை யார்களை கண்ணுளார்?

28. தாயு நீங்கருந் தந்தையுந் தண்ணகர்
வாயி னீங்கி வனம்புகுந் தெய்திய
நோயு நீங்கிய நுண்ணிய வெங்களை
நீயு நீங்குதி யோ?நெறி நீங்கலாய்!"

**சடாயுவின் மறுமொழி**

29. என்று சொல்ல விருந்தழி நெஞ்சினன்
நின்ற வீரரை நோக்கி நினைந்தவன்
"அன்ற தென்னின் அயோத்தியி னையன்மீர்
சென்ற பின்னவற் சேர்குவென் யான்" என்றான்.

**இராமலட்சுமணர்கள் வனத்திற்கு வந்த காரணத்தைச் சடாயு வினவுதல்**

30. "வேந்தன் விண்ணடைந் தானெனின், வீரர்நீர்
ஏந்து ஞால மினிதளி யாதிவண்
போந்த தென்னை? புகுந்தவென் புந்திபோய்க்
காந்து கின்றது, கட்டுரை யீர்" என்றான்.

31. "தேவர் தானவர் திண்டிறல் நாகர்வே(று)
ஏவ ராக விடரிழைத் தாரெனிற்
பூவ ராவு பொலங்கரை வேலினீர்
சாவ ராக்கித் தருவே னர(சு)" என்றான்.

### இராமன் குறிப்பிக்க இலட்சுமணன் வரலாறு கூறுதல்

32. தாதை கூறலுந் தம்பியை நோக்கினன்
சீதை கேள்வன் ; அவனுந்தன் சிற்றவை
மாத ரால்வந்த செய்கை வரம்பிலா
ஒத வேலை யொழிவின் றுணர்த்தினன்.

### சடாயு இராமனைப் புகழ்ந்து கொண்டாடுதல்

33. " உந்தை யுண்மைய னாக்கியுன் சிற்றவை
தந்த சொல்லைத் தலைக்கொண்டு தாரணி
வந்த தம்பிக் குதவிய வள்ளலே
யெந்தை வல்ல தியாவர்வல் லார் ?" என,

34. அல்லித் தாமரைக் கண்ணனை யன்புறப்
புல்லி மோந்து பொழிந்தகண் ணீரினன்
" வல்லை மைந்த !வம் மன்னையு மென்னையும்
எல்லை யில்புக ழெய்துவித் தாய் " என்றான்.

### சடாயு சீதையை யாவள் என வினவுதல்

35. பின்ன ரும்மப் பெரியவன் பெய்வளை
அன்ன மன்ன வணங்கினை நோக்கினன் :
" மன்னர் மன்னவன் மைந்த ! இவ் வாணுதல்
இன்ன ளென்ன வியம்புதி யால்" என்றான்.

### இலக்குவன் கூறுதல்

36. அல்லி றுத்தன தாடகை யாதியா
வில்லி றுத்த திடையென மேலைநாட்
புல்லி றுத்த தியாவும் புகன்று, தன்
சொல்லி றுத்தனன் றோன்றல்பின் றோன்றினன்.

### சடாயு 'நீவிர் இங்கே வைகுமின்' எனல்

37. கேட்டு வந்த கிளரொளி மௌலியான்
" தோட்ட லங்கலி னீர் !துறந் தீர்வள
நாட்டி னீவிரு நன்னுத ருணுமிக்
காட்டில் வைகுதிர் ; காக்குவன் யா(ன்)" என்றான்.

### இராமனது மறுமொழி

38. " இறைவ வெண்ணி யகத்திய னீந்துள
தறையு நன்மணி யாற்றி னகன்கரைத்
துறையி னுண்டொரு சூழலச் சூழல்புக்(கு)
உறைது(ம்)" என்றன னுள்ளத் துறைகுவான்.

### சடாயு உடன்பட்டு அவ்விடத்தைக் காட்டுதல்

39. " பெரிது நன்றப் பெருந்துறை ; வைகிநீர்
புரிதிர் மாதவம் ; போதுமின் ; யானது
தெரிவு றுத்துவெ(ன்)" என்றவர் திண்சிறை
விரியு நீழலின் மேவவிண் சென்றனன்

### சடாயு காட்ட அவர் பஞ்சவடி சேர்தல்

40. " ஆய சூழ லறிய உணர்த்தியத்
தூய சிந்தையத் தோமில் குணத்தினுன்
போய பின்னைப் பொருசிலை வீரரும்
ஏய சோலை யினிதுசென் றெய்தினர்.

## குறிப்புரை

1. காவதம் - காதம். கிரி - மலை. துவன்றின - நெருங்கிய. சூழல் - காட்டிடம். கேண்மையின் - முறைமையால்.

2. சுவணம் - சுவர்ணம், பொன். உதயத்துச்சி - உதயகிரியின் சிகரம். அருக்கன் - இளஞ்சூரியன். சிகையினுல் - ஒளியினுல்.

3. இருங்கலை துணிந்த கேள்வியின் - மிக்க கல்வியையுந் தெளிந்த கேள்வியையுமுடையவனும். மதியின் கூர்மையன் - அறிவின் நுட்பத்தை யுடையவனும். ஆய்மை - ஆராய்ச்சி. மந்திரம் - ஆலோசனை. சேய்மையின் நோக்குறு - மிக்க தூரத்திலுள்ளவற்றையும் காண்கின்ற.

4. வாள் அவுணரைவீட்டி - கொடிய அசுரர்களைக் கொன்று. வீழ்மிச்சில் - கீழ் விழுந்து மிகுதியாய் நின்ற உடலை. தோட்டி - அங்குசம். துண்டத்தான் - மூக்கையுடையவன்.

5. கோள் - கிரகம். இருநான்கினேடு ஒன்று - ஒன்பது. திகிரி - சிம்சுமார சக்கரம். ஆரம் - மாலை. வான் இரவி - ஒளியினையுடைய சூரியன். மௌலி - கிரீடம்.

ஆரத்திற்குத் துருவசக்கரமும், ஆரத்திற் பதிந்துள்ள நவமணிகளுக்கு நவக்கிரகங்களும் உவமை. சடாயுவினது உருவத்துக்கு மேருவும், சிரசுக்குச் சிகரமும் கிரீடத்துக்குச் சூர்யனும் உவமை.

6. சொல் பங்கம் உற - சொற்கள் தோல்வியடையும்படி. அல் பங்கம் உற - இருள் அழிவையடையும்படி. செம்மல் - புத்திரன். சிற்பம் கொள் பகல் - சிறுமையைக் கொண்ட நாள்களைப் போல.

7. தாங்கலது - தாங்கமாட்டாமல். வீங்கிய வலியினால் - மிக்க பலத்தோடு. அயிர்க்குஞ் சிந்தையார் - சந்தேகிக்கும் மனத்தினரானார்.

8. இறுதியை - அழிவை. தன் வயின் - தன் மூலமாக. எறழ் வலி கழுலுனே - மிக்க வலியினையுடைய கருடனே (யாவன்). செயிர்த்து - சந்தேகித்து. (தன்வயின் இறுதியை இயற்ற-'தனக்குத்தானே முடிவை உண்டாக்கிக் கொள்ள' என்றும் கூறலாம்).

9. வனைகழல் - கட்டிய வீரக்கழல். மதனை - வலிமை. வினை அறு நோன்பினர் (எனின்) வில்லர் (ஆதலால்) அல்லர் - வினைகள் அறுதற்குக் காரணமான தவமுடைய முனிவரோ வெனின், வில்லையுடையராதலால் அல்லர்.

10. புரந்தரன் - இந்திரன். புலவர் - தேவர். நிரந்தரம் - எப்போதும். நேமி - சக்கராயுதம். வரம்தரும் இறைவன் - பிரமன். மழுவலாளன் - மழுவென்னும் ஆயுதத்தினையுடைய சிவன். என்னைக் கரந்திலர் - எனக்கு ஒளியார்.

11. கண்ணின் நோக்கினேன் - (காமன் அங்கமற்றவனாயிருந்தும்) என் கண்களாற் கண்டுள்ளேன். கழல் பொடி - பாததூளி. ஆர்கொல் - யாவரோ.

12. அலகுஉறும் இலக்கணம் - அளவற்ற உத்தமலட்சணங்கள். மலர்மகள் - இலக்குமி. சிலைவலி வீரர் - வில்லின் வலிமையையுடைய வீரர்.

13. திருமகிழ் மார்பினர் - ஜயலக்ஷ்மி மகிழ்வுடன் வீற்றுள்ள மார்பை யுடையவர். அருமை செய் குணம் - பெறுதற்கரிய நற்குணங்கள். ஆழி யான் ஒருவனை - தசரத சக்கரவர்த்தியை, ('இவர் தசரதன் மக்களோ' எனச் சடாயு ஊகிக்கிறான்.)

14. பல நினைப்பின் - பல எண்ணங்களை. கனம் வரிசிலை படை - சிறப்பையுடைய கட்டமைந்த வில்லாயுதம். காளையீர்கள் யார் - காளைகள் போன்ற நீவிர் யாவர்.

15. மெய்மை அல்லது புகல்கிலாமையால் - சத்தியம் அல்லது (வேறு எதையும்) சொல்ல அறியாமையால். ஆழியான் - ஆஞ்ஞா சக்கரத்தை யுடையவன்.

16. உவகை வேலையன் - களிப்பாகிய கடலையுடையவன் (ஆகி). தரைத்தலை இழிந்து - (சிகரத்திலிருந்து) பூமியில் இறங்கி. தழுவு காதலன் - தழுவுகின்ற அன்புடையவன் (ஆகி). விரை - மணம். வரை தட தோள் இணை வலியவோ - மலைபோன்ற அகன்ற இரு புயங்களும் வலிமையுள்ளனவா யிருக்கின்றனவா. ('தசரதன் க்ஷேமமா' என்பது கருத்து).

17. மறக்க முற்றுதன - மறக்கக் கூடாதவையாகிய. துறக்கம் உற்றான் - சுவர்க்கமடைந்தான். இறக்கம் உற்றான் என-(1) (நண்பன்) மரணமடைந்தான் என்ற காரணத்தால். (2) மரண தசையடைந்தவன் போல.

18. வழுவிய இன் உயிர் வந்த மன்னான் - நீங்கிய இனிய உயிர் மீண்டும் வரப்பெற்ற சடாயு.

19. பரவல் அரு கொடை - புகழ்தற்கு அரிய வள்ளல் தன்மை. கரவல் அரும் கற்பகம் - (இரப்போர்க்கு) ஒளித்தலில்லாத கற்பக விருக்ஷங்கள். உடுபதி - சந்திரன். கடல் இடம் - கடலாற் சூழப்பட்ட பூமி. என்பட - என்ன துன்பத்தை அனுபவிக்க.

20. நிலையாத நிலை உடையேன் - சஞ்சலமான நிலைமையையுடைய (எனது), நேய நெஞ்சு - அன்புள்ள மனம். விலங்கினேன் - தவறியவன் (ஆகி).

21. செயிர் கிடத்தல் செய்யாத - குற்றமானது இருந்தலைச் செய்யாத (குற்றமற்ற). அயிர் - நுண்மணல். கடல் வலயத்தவர் - கடல் சூழ்ந்த பூமியிலுள்ளோர். திரும்பா - மாறுபடா. உணர்வு இறந்த - பகுத்தறிவு இல்லாத. விசும்பு - சுவர்க்கம்.

22. தீயின் விழுவதே நிற்க - நெருப்பில் விழுவதேயொழிய. அழு வதே - அழுவது தகுமோ.

23. தருணம் கொள் - இளமையைக் கொண்ட (வளரும் தன்மைய தான). படரும் - செல்லும். இருள் மொய்ம்பு கெட - (பகைவர்களாகிய) இருளின் வலிமை கெடும்படி. துரந்த - செலுத்திய. இமையோர் - தேவர்.

24. விலங்கல் - மலை. அஞ்சலித்த - கூப்பிய. மூண்ட - வளர்ந் தெழுந்த. மொய்த்த நீரார் - மிகுதியாய்த் தோன்றிய கண்ணீரை உடைய வராய். மீண்டனன் வந்தான் அவனை - திரும்பி வந்தவனை.

25. வருசிறகு - வளர்ந்து வருகின்ற சிறகுகள். உரிய கடன் - (இறந்தபின்) செய்வதற்குரிய கடமைகளை. உடல் பொறை - தேகபாரம். பீழை - துன்பம்.

26. எருவை - கழுகு. துன்று - நெருங்கிய. முத்தம் - முத்தைப் போன்ற கண்ணீர். இன்ன - இவ்வார்த்தைகளை. நீர்மை - அன்பு (உடன்).

27. உதவற்கு உரியானும் - காப்பாற்றித் துணை செய்தற்குரிய தந்தையும். மெய் - சாத்தியம். பி(ன்)னை - பின்பு. களைகண் - பற்றுக்கோடு.

28. நீங்கரு தாயும் தந்தையும் நீங்கி - (யாம்) பிரிதற்கு அரிய தாயையும் தந்தையையும் பிரிந்து. தண் நகர்வாயின் - குளிர்ந்த நகரத்தி லிருந்து. நோய் - வருத்தம். நுண்ணிய - எளியரான.

29. இருந்து அழி நெஞ்சினன் - அழிந்த வண்ண மிருக்கின்ற மனத்தை யுடையவன் (ஆகி). அன்று அது என்னின் - அச்செயல்

(உங்களுக்கு) உடன் பாடன்று என்றால். அவன் சேர்குவென் - அத் தசரதனை அடைவேன் (இறப்பேன்).

30. ஏந்து ஞாலம் - தாங்குதற்குரிய நாட்டை. அளியாது - காவல் செய்யாது. புந்தி - அறிவு. காந்தகின்றது - வெதும்புகிறது. புகுந்த கட்டுரையீர் - நடந்தவற்றை உறுதியாய்ச் சொல்லுங்கள்.

31. பூ அராவு பொலம் கறை வேலினீர் - இலை (வடிவமாக) அராவிக் கூர்மையாக்கப்பட்ட அழகிய (இரத்தக்) கறையையுடைய வேலாயுதத்தை உடையவர்களே. வேறு எவர் ஆக - வேறு எவராயினும். சாவர் ஆக்கி இறந்தவராக்கி.

32. கேள்வன் - கணவன். வரம்பிலா - அளவில்லாத. ஓதம் வேலை பெரிய கடலை (கடல் போன்ற வாலாற்றை). ஒழிவின்று - தவிர்தலின்றி.

33. வந்த தம்பிக்கு - உடன் பிறந்த தம்பிக்கு. எந்தை வல்லது வல்லார் யாவர் - என்னப்பனாகிய நீ வல்லனாகிச் செய்த காரியத்தைச் செய்யவல்லார் வேறு எவர்.

34. புல்லி - தழுவி. மோந்து - உச்சி மோந்து. வல்லை மைந்த - வல்லவனாகிய மகனே.

35. பெய்வளை - அணிந்த வளையல்களையுடைய. இன்னன் என்ன - இன்னான் என்று.

36. தோன்றல் - இராமன். அல் இறுத்து அன - இருள் ஒரு வடிவம் எடுத்து வந்தாற் போன்ற. ஆதி ஆ - முதலாக. இடை என - நடுவாக. புல் இறுத்தது (ஈறாக) - வனத்தை அடைந்தது (ஈறாக). இறுத்தனன் - முடித்தான்.

37. தோடு அலங்கலினீர் - பூவிதழையுடைய மாலையையுடையவர்களே. துறந்தீர் நீவிரும் - விட்டு வந்தவர்களாகிய நீங்களும். வைகுதிர் - தங்கியிருங்கள்.

38. இறைவ - தலைவனே. ஈந்துளது - (வசிக்கும்படி) சொல்லி யாருளியதாகிய. கரைதுறையின் - கரையினிடத்தில். சூழல் - இடம் (பஞ்சவடி).

39. தெரிவுறுத்துவென் - காண்பிப்பேன். விரியும் நிழலில் மேய - பரந்த நிழலில் பொருந்தி வரும்படி. விண்சென்றனன் - ஆகாயத்திற் பறந்து போனான்.

40. தோம் இல் - குற்றமற்ற. அறிய உணர்த்தி - தெரியும்படி காட்டி.

## பயிற்சி

1. பொருள் கூறுக:—மந்திரம், சேய்மை, அவுணர், கோள், மௌலி, அயிர்த்தல், பரந்தரன், அலகு, விரை, வரை, உடுபதி, அயிர், பிழை, கனகன், ஞாலம், அல், அலங்கல், தோம்.

2. சூரியன், மலை இவற்றைக் குறிக்க இப்பகுதியில் பயின்றுள்ள வேறு சொற்கள் யாவை?

3. பிரித்துக் காட்டுக :—நாடோறும், அற்பங்கமற, மழுவாளன், பொலங்கழல், பேரொளி, ஒழிவின்று, வாணுதல், தோட்டலங்கலினீர்.

4. தொடரிலக்கணங் கூறுக :—அகலிடம், செறிசுடர், நன்னதி, தாமரைச் செங்கண், வேந்தர்வேந்தன், முறைமுறை, ஓதவேலை, எல்லையில் புகழ்.

5. பகுபதவிலக்கணங் கூறுக :—கேள்வியன், ஆரத்தான், மனப்பட, கடந்தனர், வீங்கிய, காண்டெனுல், தெரிகிலேன், வழங்குவீர், அரற்றினன், உதித்தேன், காந்துகின்றது, புகன்று, புரிதிர்.

6. இப்பகுதியில் வந்துள்ள உரிச்சொல், தொழிற்பெயர், உவம உருபு, வினையாலணையும் பெயர், ஆகுபெயர், வடசொல்—இவைகட்கு இரண்டிரண்டு உதாரணங்கள் தருக.

## வினக்கள்

1. கம்பரது வரலாற்றினைச் சுருக்கமாக வரைக.

2. ஆசிரியர் சடாயுவை எவ்வாறு வருணித்துள்ளாரென்பதை நும் சொந்த வாக்கியங்களிற் கூறுக.

3. சடாயுவின் மூக்கு எதனுடன் எவ்வாறு ஒப்பிடப்பட்டுள்ளது ?

4. சடாயு முதிர்ந்த வயதினன் என்பதைக் கம்பர் எவ்வாறு நயம் படக் கூறினர் ?

5. சடாயுவைக் கண்ட வீரர்கள் மனத்தில் என்ன சந்தேகம் தோன்றியது ?

6. இராம லட்சுமணர்களைப் பார்த்ததும் சடாயு அவர்களைப் பற்றி எங்ஙனஞ் சந்தேகித்தான் ?

7. வீரர்கள் தேவரல்லர், மன்மதனுமல்லர் எனச் சடாயு ஏன் கருதினன் ?

8. "என் துணைவன் ஆழியான் ஒருவன்" என்று சடாயு யாரைக் குறிப்பிடுகிறன் ?

9. தசரதன் இறந்த செய்தியைக் கேட்டதும் சடாயுவுக்கு யாது நேர்ந்தது ? எவ்வாறு தேறினன் ?

10. தசரதனைக் குறித்துச் சடாயு எவ்வாறு புலம்பினன் ?

11. சடாயு தன்னை எவ்வாறு வீரர்களுக்கு அறிமுகஞ் செய்து கொண்டான் ?

12. சடாயுவின் வரலாற்றினை அறிந்த வீரரின் மனநிலை எவ்வாறிருந்தது ?

13. எரியிற் புகுவதற்குச் சடாயு ஏன் விரும்பினன் ?

14. இராமலட்சுமணர்கள் யாதுகூறிச் சடாயுவை எரியிற் புகாது தடுத்தனர் ?

15. எப்பொழுது தன்னுயிரைப் போக்கிக் கொள்வதாகச் சடாயு கூறினன்?

16. இராமலட்சுமணர்கள் வனம்புகுந்த வரலாற்றைக் கேட்ட சடாயு இராமனை எவ்வாறு புகழ்ந்தனன்?

17. இராமன் பஞ்சவடிக்குச் செல்லவேண்டுமென்று கூறியதும் சடாயு என்ன செய்தான்?

18. இடஞ்சுட்டி விளக்குக:—(1) வேந்தர் வேந்தன்றன் வரைத்தடந் தோளிணை வலியவோ? (2) எரியதனி னின்றேபுக் கிறவேனேல் தீத்துயர மறவேன். (3) இவ்விடத்தில் எம்பெருமானெமைக் கைவிடிற் பிணையார் களைகண்ணுளார்? (4) எந்தை வல்ல தியாவர் வல்லார்?

## கட்டுரையாக்கம்

1. இப்படலத்துக் கூறப்பட்ட வரலாற்றை ஒன்றரைப் பக்க அளவில் வரைக.

2. ‘சடாயுவின் நட்புத் திறம்’ என்பது பொருளாகப் பதினைந்து வரிகளில் எழுதுக.

3. இப்பகுதியிலுள்ள கதையை நாடக முறையில் எழுதுக.

# IV. பல்சுவைப் பகுதி

## 1. புறநானூறு

சங்ககாலத் தொகை நூல்களுள் 'புறநானூறு' எட்டுத் தொகை என்ற வகையைச் சேர்ந்தது; புறப்பொருளைப் பற்றிக் கூறும் நானூறு செய்யுட்களையுடைய நூலாதலால் இப்பெயர் பெற்றது. இந்நூலின் உள்ள பாடல்கள் இன்சுவை பொருந்தியவை; தமிழ் நாட்டின் பழைய வரலாற்று நிகழ்ச்சிகளையும், அரசர் வள்ளல் முதலியோர் சிறப்புக்களையும் விளக்குபவை. பின்வரும் செய்யுள் ஔவையார் பாடியது.

அதிகமான் நெடுமானஞ்சி என்ற வள்ளல் அறிஞரைப் போற்றி யாதரிக்கும் அருங்குணத்தைப் பாராட்டும் செய்யுள் இது:

1. ஒருநாட் செல்லலம்; இருநாட் செல்லலம்;
பலநாட் பயின்று பலருடன் செல்லினும்
தலைநாட் போன்ற விருப்பினன் மாதோ!
அணிபூண் அணிந்த யானை யியல்தேர்
அதியமான் பரிசில் பெறாஉங் காலம்
நீட்டினும் நீட்டா தாயினும் யானைதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுவது பொய்யா காதே.
அருந்தஏ மாந்த நெஞ்சம்!
வருந்த வேண்டா வாழ்கவவன் தாளே.

பின்வரும் செய்யுட்கள் இரண்டும் உறையூர் ஏணிச்சேரி முடமோசியார் வள்ளல் ஆய் அண்டிரன் கொடைச் சிறப்பைப் பாராட்டிப் பாடியவை:

2. களங்கனி யன்ன கருங்கோட்டுச் சீறியாழ்ப்
பாடின் பனுவல் பாணர் உய்த்தெனக்
களிறில வாகிய புல்லரை நெடுவெளில்
கான மஞ்ஞை கணனொடு சேப்ப,
ஈகை யறியா இழையணி மகளிரொடு

சாயின் றென்ப ஆஅய் கோயில் ;
சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
உரைசால் ஓங்குபுகழ் ஒரீஇய
முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே.

3. குறியிறைக் குரம்பைக் குரவர் மாக்கள்
வாங்கமைப் பழுனிய தேறல் மகிழ்ந்து
வேங்கை முன்றில் குரவை யயரும்
தீங்சுளைப் பலவின் மாமலைக் கிழவன்
ஆஅய் அண்டிரன் அடுபோ ரண்ணல்
இரவலர்க் கீத்த யானையின் கரவின்று
வான மீன்பல பூப்பி னுறு(து)
ஒருவழிக் கருவழி யின்றிப்
பெருவெள் ளென்னிற் பிழையாது மன்னே.

## 2. குறுந்தொகை

குறுகிய அடிகளையுடைய பாக்களைக்கொண்டு தொகுக்கப் பட்டநூல், குறுந்தொகை. இதுவும் எட்டுத்தொகை நூல்களுள் ஒன்று. இதில் 402 அகவற்பாக்கள் உள்ளன. பின்வரும் பாடலை இயற்றியவர் கூடலூர் கிழார் என்பவர். கிழார் என் பது வேளாண் மாந்தர்க்கு உரிய பெயர். இவர் கூடலூரில் தோன்றி வாழ்ந்தவர் என்று தெரிகிறது. இப்பாடல் மனையின் கண்ணிருந்து இல்லறம் நடத்தும் தலைவியின் தன்மையை இனிது கூறுகின்றது.

4. முளிதயிர் பிசைந்த காந்தண் மெல்விரல்
கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்
குவளை யுண்கண் குய்புகை கமழத்
தான்துழந் தட்ட தீம்புளிப் பாகர்
இனிதெனக் கணவன் உண்டலின்
நுண்ணிதின் மகிழ்ந்தன் றொண்ணுதல் முகனே.

## 3. மனோன்மணீயம்

'மனோன்மணீயம்' என்பது ஓர் இனிய செந்தமிழ் நாடக நூல். இந்நூலை இயற்றியவர் திருவனந்தபுரம் கல்லூரியில் பேராசிரியராக விளங்கிய சுந்தரம் பிள்ளை அவர்கள். இவர் தமிழ்ப் புலமை மிக்கவர்; வேளாள மரபினர்; சென்ற நூற்றாண்டில் இருந்தவர். பின்வரும் பகுதி ஒரு வாய்க்காலினைச் சிறப்பித்துப் பாடப்பெற்றது.

### வாய்க்கால்

தமக்குஊண் நல்கும் வயற்குப யோகம்
எனப்பலர் கருதும் இச்சிறு வாய்க்கால்
செய்தொழில் எத்தனை விசித்திரம்! ஐயோ
அலைகடல் மலையா மலைஅலை கடலாப்
புரட்டிட அன்றோ நடப்பதிச் சிறுகால்!
பார்இதோ! பரற்களை நெறுநெறென் றுறைத்துச்
சீரிய துளியாத் தெள்ளிப் பொடித்துத்
தன்வலிக் கடங்கிய மண்கல் புல்புழு
இன்னதென் றில்லை யாவையும் ஈர்த்துத்
தன்னுட் படுத்தி முந்நீர் மடுவுள்
காலத் தச்சன் கட்டிடும் மலைக்குச்
சாலத் தகுமிவை எனஓர்ந் துருட்டிக்
கொண்டுசென் றிட்டு மற்று "ஐயா!
அண்ட யோனியின் ஆணையின் மழையாய்ச்
சென்றபின் பெருமலைச் சிகர முதலாக்
குன்றுவீழ் அருவியாய்த் தூங்கியும், குகைமுகம்
இழிந்தும், பூமியின் குடர்பல நுழைந்தும்,
கதித்தெழு சினையாய்க் குதித்தெழுந் தோடியும்,
ஊறிடுஞ் சிறிய ஊற்றாய்ப் பரந்தும்,
ஆறாய் நடந்தும், மடுவாய்க் கிடந்தும்,
மதகிடைச் சாடியும், வாய்க்கால் ஓடியும்,
பற்பல படியான் பட்டங் கீட்டியது
அற்பமே யாயினும் ஆதர வாய்க்கொள்
இன்னமும் ஈதோ ஏகுவன்", எனவிடை,

பின்னரும் பெற்றுப் பெயர்த்தும் எழிலியாய்
வந்திவண் அடைந்துமற் றிராப்பகல் மறந்து
நிரந்தரம் உழைக்குமிந் நிலைமையர் யாவர் !

## குறிப்புரை

1. தலைநாள் - முதலிற் சென்ற நாள். அணிந்த யானை - முக படாம் முதலிய அலங்காரங்களையுடைய யானை. இயல் தேர் - பொருந்திய தேர். கோடு - கொம்பு. இடை - ஏழனுருபு. கவளம் - சோற்றுருண்டை. பொய்யாகாது - தப்பாது. அருந்த ஏமாந்த நெஞ்சம் - உண்ண ஆசைப் பட்ட மனமே ! : அண்மை விளி. தாள் - முயற்சி.

2. களங்கனி - களாப்பழம். கருங்கோட்டு - கருமைநிறமான தண்டினையுடைய. பனுவல் - பாடல். பாணர் உய்த்து என - பாணர் பரிசில் பெற்றுக்கொண்டு செல்ல. புல்லரை - வெறிச்சென்றிருக்கும் பக்கத்தை யுடைய. வெளில் - யானை கட்டும் இடம். கான மஞ்ஞை - காட்டு மயில். சேப்ப - தங்க. சாயின்று - அழகை இழந்திருக்கிறது. கோயில் - அரண் மனை. குய்யுடை அடிசில் - தாளிப்பை உடைய உணவு. ஒரீஇய - நீங்கிய.

3. குரம்பை - சிறுவீடு. தேறல் - கள். குரவை அயரும் - குரவைக் கூத்தாடும். கரவு இன்று - மேகம் மறைத்தல் இன்றி. கருவழி - கரிய இடம். பிழையாது - தப்பாது. குரவை - முல்லை அல்லது குறிஞ்சி நில மகளிர் தம்முள் கைகோத்து ஆடும் ஒரு வகைக் கூத்து.

4. முளிதயிர் - கட்டித்தயிர். காந்தள் மெல்விரல் - காந்தள் மலர் போன்ற மெல்லிய விரல். கழுவுறு கலிங்கம் - தோய்த்த ஆடை. உடீஇ - உடுத்து. குவளை உண்கண் - குவளை மலரையொத்த மையுண்ட கண்கள். குய்புகை - தாளிப்பில் தோன்றிய புகை. துழந்து - துழாவி. அட்ட - காய்ச்சிய. தீம்புளி பாகர் - இனிய புளிக் குழம்பு.

5. வயல் + கு = வயற்கு. கால் - கால்வாய். பரல் - கூழாங்கல். முந்நீர் - கடல். குகை முகம் - குகையின் பக்கம் ; முகம், ஏழனுருபு. சாடி - மோதி. எழிலி - மேகம். நிரந்தரம் - எப்பொழுதும்.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—கோடு, கவளம், தாள், காந்தள், கலிங்கம், பரல், முந்நீர், எழிலி, பனுவல், வெளில், அடிசில், குரம்பை.

2. செல்லலம், விருப்பினன், நடப்பது, ஏகுவன், தேறல், குரவை— இவை என்ன வினைமுற்றுக்கள் ?

3. காந்தள் விரல், தீம்புளி, செய்தொழில், அலைகடல், நெறுநெறு, மண்கல், இராப்பகல்—இவை என்ன தொடர் ?

## வினாக்கள்

1. அதிகமான் நெடுமானஞ்சியின் அரிய குணத்தை ஔவையார் எவ்வாறு கூறுகின்றார்?

2. 'யானைதன் கோட்டிடை வைத்த கவளம் போல' உவமையை விளக்குக.

3. ஆய் அரண்மனை எவ்வாறு அழகிழந்துள்ளது?

4. களங்கனி எதற்கு உவமையாகக் கூறப்பட்டிருக்கிறது?

5. ஆய் இரவலருக்கு அளித்த யானையின் தொகை எதற்கு ஒப்பாகும்?

6. தலைவியின் மகிழ்ச்சிக்குக் காரணமானது எது? இதனால் நீவிர் அறிவதென்ன?

7. வாய்க்கால் செய்யும் தொழில்கள் என்னென்ன?

## கட்டுரையாக்கம்

1. 'அதிகமான் நெடுமானஞ்சி'யைப் பற்றிப் பத்து வரியில் எழுதுக.

2. குறுந்தொகைச் செய்யுளை ஆதாரமாகக் கொண்டு 'தமிழ் நாட்டுப் பெண்பாலாரைப் பற்றி நீவிர் அறிவதைக் கூறுக.

3. 'வாய்க்காலின் பயன்' என்பது பற்றி ஒரு சிறு கட்டுரை எழுதுக.

# உரைநடைப் பகுதி

## 1. இறையனார் அகப்பொருள் உரை

நக்கீரர்

[சிவபெருமான் அருளிய அகப்பொருள் இலக்கணத்திற்கு நக்கீரர் என்ற சங்கப்புலவர் உண்மைப் பொருள்கண்டதைக் கூறுவது, இப்பகுதி.]

அக்காலத்துப் பாண்டியனாடு பன்னீரியாண்டு வற்கடம் சென்றது. செல்லப் பசி கடுகுதலும், அரசன் சிட்டரை யெல்லாம் கூவி, 'வம்மின்; யான் உங்களைப் புறந்தர கில்லேன்; என் தேயம் பெரிதும் வருந்துகின்றது; நீயிர்போம்; நுமக்கறிந்தவாறு புக்கு நாடு நாடாயின ஞான்று என்னை உள்ளி வம்மின்,' என்றான். என, அரசனை விடுத்து எல்லோரும் போயின பின்றைக் கணக்கின்றிப் பன்னீரியாண்டு கழிந்தது. கழிந்த பின்னர் நாடு மலிய மழை பெய்தது. பெய்த பின்றை, அரசன் 'இனி நாடு நாடாயிற்று. ஆகலின், நூல் வல்லாரைக் கொணர்க,' என்று எல்லாப் பக்கமும் ஆட்போக்க, எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் வல்லாரைத் தலைப்பட்டுக் கொணர்ந்து, 'பொருளதிகாரம் வல்லாரை எங்குந் தலைப்பட்டிலேம்,' என்று வந்தார். வர, அரசனும் புடைபடக் கவன்று, 'என்னை! எழுத்தும் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே! பொருளதிகாரம் பெறேமெனின், இவை பெற்றும் பெற்றிலேம்!' எனச் சொல்லா நிற்ப, மதுரை ஆலவாயில் அழனிறக் கடவுள் சிந்திப்பான்; என்னை பாவம்! அரசற்குக் கவற்சி பெரிதாயிற்று. அதுதானும் ஞானத்திடையது ஆகலான், யாம் அதனைத் தீர்க்கற்பாலம்,' என்று இவ்வறுபது சூத்திரத்தையுஞ் செய்து, மூன்று செப்பிதழகத் தெழுதிப் பீடத்தின் கீழிட்டான்.

இட்ட பிற்றை ஞான்று, தேவர்குலம் வழிபடுவான் தேவர் கோட்டத்தை எங்குந் துடைத்து, நீர் தெளித்து, பூவிட்டு, பீடத்தின்கீழ்ப் பண்டென்றும் அலகிடாதான்

அன்று தெய்வத் தவக்குறிப்பினுன், 'அலகிடுவன்,' என்று உள்ளங் குளிர அல்கிட்டான். இட்டாற்கு அவ் வலகினேடும் இதழ் போந்தன. போதரக் கொண்டு போந்து நோக்கினுற்கு வாய்ப்புடைத்தாயிற்ருேர் பொரு ளதிகாரமாய்க் காட்டிற்று. காட்ட, பார்ப்பான் சிந்திப் பான்; அரசன் பொருளதிகாரம் இன்மையின் கவல்கின் ருன் என்பது பட்டுச் செல்லா நின்ற துணர்ந்து நம் பெருமான் அருளிச் செய்தாருகும்!' என்று, தன் அகம்புகாதே கோயிற்றலேக்கடைச் சென்று நின்று; கடைகாப்பார்க் குணர்த்த, கடைகாப்பார் அரசற் குணர்த்த, அரசன், 'புகுதருக' என்று பார்ப்பானேக் கூவ, சென்று புக்குக் காட்டக் கொண்டு நோக்கி, 'இது பொருளதிகாரம்! நம்பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச் செய்தாருகற்பாலது!' என்று, அத்திசை நோக்கித் தொழுதுகொண்டு நின்று, சங்கத்தாரைக் கூவுவித்து 'நம்பெருமான் நமது இடுக்கண் கண்டு அரு ளிச் செய்த பொருளதிகாரம்! இதனேக் கொண்டுபோய் பொருள் காண்மின்,' என, அவர்கள் அதனேக் கொண்டு போந்து, கன்மாப்பலகை ஏறியிருந்து ஆராய்வுழி, எல் லாரும் தாம் தாம் உரைத்த உரையே நன்றென்று சில நாளெல்லாம் சென்றன. செல்ல, 'நாம் இங்ஙனம் எத் துணே யுரைப்பினும் ஒருதலேப்படாது; நாம் அரச னுழைச் சென்று நமக்கோர் காரணிகனேத் தரல் வேண்டும் என்று கொண்டுபோந்து, அவனுல் பொரு ளெனப்பட்டது பொருளாய், அன்றெனப்பட்டது அன்ரு யொழியக் காண்டும்,' என, எல்லாரும் ஒருப்பட்டு அரச னுழைச் சென்ருர். செல்ல, அரசனும் எதிர் எழுந்து சென்று, 'என்னே? நூற்குப் பொருள் கண்டீரா?' என, 'அது காணுமாறு எனக்கோர் காரணிகனேத் தரல் வேண்டும்,' என, 'போமின்! நுமக்கோர் காரணிகனே எங்ஙனம் நாடுவேன்? நீயிர் நாற்பத்தொன்பதின்மரா யிற்றே; நுமக்கு நிகராவார் ஒருவர் இம்மையினின்றே!' என்று அரசன் சொல்லப்போந்து, பின்னேயும் கன்மாப் பலகை ஏறியிருந்து, 'அரசனும் இது சொல்லினுன்;

யாம் காரணிகனைப் பெறுமாறு என்னைகொல்!' என்று சிந்தித்திருப்புழி, 'சூத்திரம் செய்தான் ஆலவாயில் அவிர்சடைக் கடவுள் அன்றே! அவனையே, காரணிகனையும் தரல்வேண்டும் என்று சென்று வரங்கிடத்தும்,' என்று சென்று வரங் கிடப்ப, இடையாமத்தும், 'இவ்வூர் உப்பூரி குடி கிழார் மகனுவான் உருத்திரசன்மன் என்பான், பைங்கண்ணன், புன்மயிரன், ஐயாட்டைப் பிராயத்தான், ஒரு மூங்கைப்பிள்ளை உளன்; அவனை அன்னனென்றிகழாது கொண்டுபோந்து, ஆசனமேலிரீஇக் கீழிருந்து சூத்திரப் பொருளுரைத்தால், கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்க்கும் மெய்யாயின உரை கேட்டவிடத்து; மெய்யல்லா உரை கேட்ட விடத்து வாளா இருக்கும்; அவன் குமார தெய்வம்; அங்கோர் சாபத்தினால் தோன்றினான்,' என முக்காலிசைத்த குரல் எல்லார்க்கும் உடன்பாடாயிற்றாக, எழுந்திருந்து தேவர் குலத்தை வலங்கொண்டு போந்து, உப்பூரி குடி கிழாருழைச் சங்கமெல்லாம் சென்று, இவ்வார்த்தை யெல்லாஞ் சொல்லி, 'ஐயனுவான் உருத்திரசன்மனைத் தரல்வேண்டும்,' என்று வேண்டிக் கொடுபோந்து, வெளியது உடீஇ, வெண்பூச்சூட்டி, வெண்சாந்தணிந்து, கன்மாப் பலகையேற்றி இரீஇக் கீழிருந்து சூத்திரப் பொருளுரைப்ப, எல்லாரும் முறையே உரைப்பக் கேட்டு வாளா இருந்து, மதுரை மருதனிள நாகனார் உரைத்த இடத்து ஒரோவழிக் கண்ணீர் வார்ந்து, மெய்ம்மயிர் நிறுத்தி, பின்னர்க் கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்த இடத்துப் பதந்தொறும் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தான். இருப்ப ஆர்ப்பெடுத்து, மெய்யுரை பெற்றும் இந்நூற்கு!' என்றார்.

குறிப்புரை

*பன்னீரியாண்டு* - பன்னிரண்டு வருடம். *வற்கடம்* - பஞ்சம். *கடுகுதலும்* - அதிகப்படவும். *சிட்டர்* - பெரியோர். *வம்மின்* - வாருங்கள். (வா + மின்). *புறந்தர* - காப்பாற்ற. *உள்ளி* - நினைத்து. *தலைப்பெற்று* - எதிர்ப்பட்டு. *புடைபட* - மிகுதியாக. *கவன்று* - வருந்தி. *ஆலவாய்* - மதுரை. *ஞானத்திடையது* - அறிவைப்பற்றியது. *செப்பிதழ்* - தாமிரத்தாற் செய்த

ஓலையேடு. பிற்றைஞான்று - அடுத்த நாள். தேவர்குலம் - கடவுள் கோயில். அலகிடுதல் - பெருக்குதல். இதழ் - செப்பேடு. கோயில் தலைக் கடை - அரண்மையின் தலைவாசல். இடுக்கண் - மனக் கவலை. கன்மாப் பலகை - கல்லினாலியன்ற பெரிய சங்கப் பலகை. காரணிகன் - மத்தியஸ் தன். ஒருப்பட்டு - சம்மதித்து. பைங்கண்ணன் - குளிர்ந்த கண்களை யுடையவன். ஐயாட்டை - ஐந்து ஆண்டு (ஐ + ஆண்டு). மூங்கைப் பிள்ளை - ஊமைப் பிள்ளை. மேலிரீஇ - மேலே இருக்க வைத்து. முக்கால் இசைத்த குரல் - மும்முறை இசைத்த அசரீரியின் ஒலி. வெளியதுஉடீஇ - வெண்ணிற ஆடையை உடுத்து.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—வற்கடம், இடுக்கண், காரணிகன், செப்பிதழ், மூங்கை, சிட்டர்.

2. வம்மின், உள்ளி, போந்து, காண்மின், காண்டும், பெற்றும்—சொல்லிலக்கணம் கூறுக.

## வினாக்கள்

1. இறையனார் அகப்பொருள் தோன்றிய வரலாறு யாது?
2. அரசனிடம் இந்நூல் சென்றது எவ்விதம்?
3. நக்கீரனார் உரையே மெய்யுரை என்பது எவ்வாறு பெறப்பட்டது?
4. சங்கத்தாருக்குக் காரணிகனைத்தர அரசன் மறுத்தது ஏன்?
5. காரணிகனைத் தந்தவர் யார்? காரணிகன் யாவன்?

## கட்டுரையாக்கம்

'இறையனார் அகப்பொருள் உரை' என்பது பொருளாக ஒரு பக்க அளவில் கட்டுரை எழுதுக.

## 2. தொல்காப்பியர் பிறப்பகம்

திரு. எஸ். வையாபுரிப் பிள்ளை, பி. ஏ., பி. எல்.

இப்பொழுதுள்ள தமிழ் நூல்களனைத்தினும் மிக்க தொன்மையதாகக் கருதப்படுவது தொல்காப்பியம். இதை இயற்றிய ஆசிரியர் எந்தப் பிரதேசத்தைச் சார்ந்தவரென்று தெரியத் தமிழ் மக்கள் பெரிதும் விரும்புவார்கள். இவ் விஷயத்தை ஆராய்ந்து நிராக்ஷேபமான முடிவைக் காணுதற்குரிய சான்றுகள் மிகுதியாக இல்லை. ஆனால் கிடைக்கும் சிற்சில சான்றுகளைப் பயன்படுத்துவது ஆராய்ச்சியாளன் கடமை.

தொல்காப்பியரோடு ஒருங்குகற்ற ஒருசாலை மாணாக்கராகிய பனம்பாரனார் தமிழ்ப் பேரிலக்கணமாகிய தொல்காப்பியத்திற்கு எழுதியுள்ள பாயிரம் தமிழறிஞர்களால் நன்கு ஆராயப்பட்டதே. அப்பாயிரத்திலே,

> " நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
> அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
> அதங்கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து "

என்று காணப்படுகிறது. இங்கே அதங் கோட்டாசான் என்று ஓர் ஆசிரியர் குறிக்கப்படுகிறார். அதங்கோடு என்னும் ஊரிலுள்ள ஆசிரியன் என்பது பொருள். அதங்கோடு என்பது எங்கே உள்ளது?

இப்போதுள்ள மலையாள இராச்சியத்திற்கு ஆங்கிலத்தில் 'Travancore' என்று பெயர். இது 'திருவாங்கோடு' என்பதன் திரிபு என்பது நன்கறியப்பட்டதொன்றே. திருவாங்கோடு என்பது எதன் திரிபு என்று அறிதல் வேண்டும். ஒரு சாரார் இது திருவாழுங்கோடு என்பதன் திரிபாக இருத்தல் வேண்டுமென்பர். இதற்குக் காரணம் இத் தொடர்க்கு உறுப்புப் பொருள் செம்மையாய் அமைந்துள்ளதென்பதும் சுதேசாபிமானமுமேயாகும். 'திருவாழுங்கோடு' என்பதற்குப் பழைய நூல் வழக்கு இல்லை என்பது மிக்க வன்மையுள்ள ஒரு தடையாகும். இத்தொடரே ஆதாரமற்றிருப்பதால், இதனை வடமொழி புணர்த்து 'ஸ்ரீ வாழுங்கோடு' எனத் திரிந்து

வழங்குதல் குறித்து ஆராய்ச்சி செய்யும் அவசியமே இல்லை.

திருவாங்கோடு என்பதனைத் 'திருவிதாங்கோடு' எனச் சில விடங்களிலும், 'திருவதாங்கோடு' எனச் சில விடங்களிலும் வழங்குகின்றனர். இராச்சியத்திற்குப் பெயராக வழங்குவது மாத்திரமேயன்றி, ஓர் ஊர்க்கும் இது பெயராக வழங்கி வருகிறது. ஊர்ப் பெயரே இராச்சியத் திற்கும் பெயராக இருப்பதை நோக்கினால், இவ்வூர் மிகப் பழமையான தென்பதும், இவ்விராச்சியத்தின் தலைநகராக இருந்ததாகலாமென்பதும் நாம் ஊகிக்கத் தக்கனவே. இவ்வூகத்திற்கிணங்க இவ்வூர் பண்டைக் காலத்தில் இராச்சியத்தின் தலைநகராக விளங்கியதென்றும், இன்றும் பழைய கோட்டை மதிலின் சின்னங்கள் காணக்கிடக் கின்றன வென்றும் ஸ்ரீ நாகமையா அவர்கள் 'Travancore State Manual' என்ற நூலிற் கூறுகின்றார்கள். இதனால் திருவிதாங்கோடு தலைமையான ஒரு தொன்னகர மென்பது உணரக்கிடக்கின்றது.

திருவிதாங்கோடு என்பதில் திரு என்ற அடை மொழியை நீக்கினால் எஞ்சியுள்ள பெயர் அதங்கோடு என்பதனோடு, மிகவும் ஒத்துள்ளமை எளிதிற் புலனாகும். ஆகவே, அதங்கோட்டாசான் என்பவர் திருவாங்கோடு என்று இக்காலத்தில் வழங்கும் ஊரினர் என்பது பெறப் படுகின்றது. 'அதங்கோடு' என்ற பெயருடைய ஊர் வேறொன்று இருப்பதாகத் தெரியவில்லை என்பதும் இங்கே குறிக்கத்தக்கது.

இனி இவ்வாசான் அகத்தியரின் பன்னிரு மாணாக் கருள் ஒருவராகவும், தொல்காப்பியரோடு உடன் கற்றவ ராகவும் இருந்தனர். இவ்வாறு திராவிடப் பிரகாசிகை கூறுகிறது. இங்ஙனம் கூறுதற்குரிய ஆதாரம் யாதென்று இப்போது விளங்கவில்லை யெனினும், ஐயனாரிதனாரும் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் அகத்தியர்க்கு மாணாக்கர் பன்னிருவர் எனக் குறித்துள்ளார்கள். நச்சி னார்க்கினியர் எழுதிய பாயிர உரையிலிருந்து அதங் கோட்டாசான் அகத்தியரது மாணாக்கருள் ஒருவரென்ப

தும் தொல்காப்பிய நூலைக் கேட்பதற்குரிய கல்வி முதிர்ச்சியும், பிற தகுதிகளும், வாய்ந்தவரென்பதும் பெரும்பாலும் தொல்காப்பியரோடு உடன்கற்றவராக இருக்கக் கூடும் என்பதும் குறிப்பாக உணர்ந்து கொள்ளலாம்.

அதங்கோட்டாசானைப் போலவே தொல்காப்பியரும் ஒருகால் திருவதங்கோட்டுப் பிரதேசத்தினராக இருத்தல் கூடுமோ?

இக்கேள்வி எழுதற்கு நூலின்கண் யாதேனும் சான்று உளதோ என்று நோக்கும்பொழுது, ஒரு சில சூத்திரங்கள் நம்முன் எதிர்ப்படுகின்றன. அவையாவன:

"பனியென வரூஉங் கால வேற்றுமைக்கு
அத்தும் இன்னும் சாரியை ஆகும்." (தொல். எழுத். 241)
"மழையென் கிளவி வளியியல் நிலையும்." ( ,, ,, 287)
"வெயிலென் கிளவி மழையால் நிலையும்." ( ,, ,, 377)

இச்சூத்திரங்கள் பனி, மழை, வெயில் என்பன வேற்றுமை முடிபில் முறையே பனியத்து மழையத்து, வெயிலத்து என அத்துச் சாரியை பெற்று வருதலை உணர்த்துகின்றன. பனியத்துக் கொண்டான், மழையத்துக் கொண்டான், வெயிலத்துக் கொண்டான் என உதாரணங்களும் காட்டப்பட்டுள்ளன. இச் சொற்கள், இங்ஙனம் வருதல் எங்கே காணப்படுகிறது?

தமிழ் வழங்கும் நாட்டில் இப்பொழுது ஓரிடத்தேனும் இவ் வழக்குக் காணப்படுமாறில்லை. இற்றைக்குச் சுமார் 350 ஆண்டுகட்கு முன்பும் இவ்வழக்கு இல்லையென்பது அக்காலத்துத் தோன்றிய இலக்கண விளக்கத்தில் மேற்காட்டிய விதியமைந்த சூத்திரம் இன்மையால் உணரலாகும். நன்னூலிலும், தொல்காப்பியு நெறியையே போற்றிச் செல்லும் நேமிநாதத்திலும் இவ்விதி காணப்பெறவில்லை. எனவே, இவற்றின் காலமாகிய 12-ம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் இவ்வழக்கு இல்லையெனல் தெளிவாம். 11-ம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட வீர சோழியத்திலும் இவ்விதி குறிக்கப்படவில்லை. எனவே அக்காலத்திலும் இவ்வழக்கு இல்லை. 10-ம் நூற்றாண்டிற்கு முன்பு தோன்றிய ஐம்பெரும் காப்பியங்களிலும்,

தேவாரம் நாலாயிரம் முதலியவற்றிலும் இவ் வழக்கு காணுமாறில்லை. பதினெண் கீழ்க்கணக்கு நூற்களிலும் அவ்வாறே. முடிவில் தொல்காப்பிய காலத்துக்கு மிக நெருங்கிய காலத்தவாகிய சங்க இலக்கியங்களிலும் இவ் வழக்கிற்கு ஆதாரமில்லை.

சங்க காலந்தொட்டு இன்றுவரை தமிழில் காணுத இவ்வழக்கு எந்தப் பிரதேசத்தில் பண்டைக் காலத்தில் பயின்று வந்திருத்தல் கூடும்? தமிழோடு நெருங்கிய தொடர்புள்ள யாதானுமொரு மொழியில் இவ்வழக்கு காணப்படுமாயின், அம்மொழி வழங்கும் பிரதேசத்தினை யடுத்துப் பண்டைக் காலத்திலும் இவ்வழக்குப் பயின் றிருந்ததெனல் பொருத்தமுடைத்தாகத் தோன்றுகிறது. அம் மொழி யாது?

மலையாள மொழி ஒன்றிலேயே இவ்வழக்கு காணப் படுகிறது. 'பனியத்துப் போகருதே' 'மழையத்துப் போகருதே' 'வெயிலத்துப் போகருதே' என்பன போன்ற வழக்குகள் இப்பொழுதும் கேட்கப்படுகின்றன. இங்ஙனம் வழங்கும் பிரதேசத்தில் பண்டைக் காலத்தில் தமிழ் மொழியே வழங்கி வந்ததென்பதும், மிகப் பிற்பட்ட காலத்தில் இப்பிரதேசத்து மொழி தமிழின் பிராந்திய மொழியாய் மாறி மலையாள மொழியாகப் பரிணமித்த தென்பதும் சரித்திரமொப்பிய உண்மைகள்.

இப் பிற்கால மலையாளப் பிரதேசத்தை அடுத்து வாழ்ந்து வந்தவரே மேற்காட்டிய இலக்கண விதிகளை அமைத்தனரென்று கருதுதல் தக்கதேயாகும்.

எனவே, தொல்காப்பியர் திருவிதாங்கோட்டு பிர தேசத்தைச் சார்ந்தவராக இருக்கலாம் என்ற கருத்துச் சற்றே உறுதியடைகின்றது.

ஆனால் சிறிதும் ஐயாப்பாடின்றி இம்முடிவு ஒப்புக் கொள்ளப்பட வேண்டுமாயின் இன்னும் சிறந்த சான்று கள் வேண்டும்.

தொல்காப்பியரைக் குறித்து நாம் அறிந்தன மிகச் சிலவே. நச்சினார்க்கினியர் புராணக் கதையொன்று நம் மவர் மகிழ்ச்சிக்கென எழுதிவைத்தனர். நவீன ஆராய்ச்சி

யாளர் சிலர் 'காப்பியர்' என்ற பெயரைக் கொண்டு சில வரலாறுகளை உய்த்துணர்ந்து எழுதினர். ஆனால் தொல் காப்பிய நூலினத்தே பல சான்றுகள் இருத்தல் ஒருதலை. அவற்றைச் சரித்திரக் கண்கொண்டு நோக்குதல் வேண்டும். உரையாளர்களைத் துணையாக மட்டும் கைக் கொள்ளுதல் வேண்டும். இம் முறையிலேயே ஆராய்வோ மாயின் ஆராய்ச்சி பெரிதும் பயன்படுவதாகும். தொல் காப்பியரைக் குறித்துப் பல அரிய செய்திகள் புலப்படக் கூடும்.

## குறிப்புரை

தொன்மை - பழமை. பாயிரம் - முன்னுரை. திரிபு - மாறிய பெயர். ஒருதலை - நிச்சயம்.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—நிராக்ஷேபமான, சான்று, சின்னம்.
2. வாக்கியங்களில் அமைக்க :—தொன்மை, பாயிரம், திரிபு, வழக்கு, சான்று, ஒருதலை.
3. பிரித்துக் காட்டுக :—சிற்சில, தொன்னகரம், இங்ஙனம், ஐயப் பாடின்றி.

## வினாக்கள்

1. திருவாங்கோடு என்னும் பெயர் எவ்வார்த்தைகளின் திரிபாகக் கருதப்படுகின்றது?
2. திருவாங்கோட்டில் பழைய கோட்டை மதிலின் சின்னங்கள் காணப்படுவதிலிருந்து ஊகிக்கக் கூடியதென்ன?
3. அதங்கோட்டாசான் என்பவர் யார்? அவர் பெயரிலிருந்து அவர் எப்பிரதேசத்தைச் சார்ந்தவரெனக் கொள்ளலாம்?
4. தமிழிலக்கண நூல்கள் மூன்று கூறுக.
5. 'பனியென வரூஉங் கால வேற்றுமைக்கு அத்தும் இன்னும் சாரிகையாகும்'—இச் சூத்திரத்தின் கருத்து யாது?

## கட்டுரையாக்கம்

"தொல்காப்பியர் பிறப்பகம்" என்பதைப் பொருளாகக் கொண்டு ஒரு பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

# 3. முடத்தாமக் கண்ணியார்

## [வானொலிப் பேச்சு]

எஸ். வி. வரதராஜ ஐயங்கார், எம். ஏ., எம். ஓ. எல்.

முடத்தாமக் கண்ணியார் என்பவர் தமிழ் இலக்கியம் ஆக்கிய சிறந்த கவிகளுள் ஒருவர். இவர் கடைச் சங்க காலத்தில் விளங்கிய ஒரு பெரும்புலவர். மோசியார் என்ற ஒரு கவி இருந்தார். அவர் முடவராய் இருந்ததால் அவரை முடமோசியார் என்று அழைத்தார்கள். அவரைப் போலவே தாமக்கண்ணியார் என்பவரும் முடமாயிருந்த தால் முடத்தாமக் கண்ணியார் என்று பெயர் பெற்றார். தாமக்கண்ணியார் என்பது தலைமேல் வட்டமாகப் பூமாலையைச் சூடியிருந்த காரணத்தால் இவருக்கு ஏற்பட்ட பெயராக இருக்கலாம். தாமக்கண்ணி என்ற பெயரோடு ஆர் என்பதைச் சேர்த்துத் தாமக்கண்ணி யார் என்று இவரை மரியாதையாக அழைத்து வந்ததாகத் தெரிகிறது. தாமக்கண்ணி என்று பெயர் அமைந்திருப் பதைக் கொண்டு, இவரை ஒரு பெண்பால் என்றும் சிலர் கருதுகிறார்கள். இங்கே சொல்லியதைத் தவிர இவரைப் பற்றிய வேறு செய்திகள் தெரியவில்லை.

தமிழ் மக்களுக்கு அழியாத ஒரு பெருஞ்செல்வத்தை அளித்துள்ளவர் முடத்தாமக் கண்ணியார். அதுவே 'பொருநராற்றுப் படை' என்பது. இது ஒரு சங்ககால நூல். பத்துப் பாட்டு என்னும் தொகைநூலிலுள்ள பத்துப்பாட்டுகளில் இது இரண்டாவது பாட்டு. இதி லிருந்து விஷயங்களைக் கூர்ந்து நோக்கி அறிந்து அவை களைக் கவிகளில் அமைத்துப் பாடும் இவருடைய திறமையை நாம் அறியலாம்.

'ஆற்றுப்படை' என்பதற்கு 'வழியில் செலுத்துவது' அல்லது 'வழிகாட்டுவது' என்பது பொருள். பொருநர் ஆற்றுப்படை என்பது பொருநனை வழியில் செலுத்துவது என்று பொருள்படும். முற்காலத்தில் கூத்தர் என்ற ஒரு வகுப்பார் இருந்தனர். இவர்கள் தம் குடும்பத்தோடு கும்பல் கும்பலாக ஊர் ஊராகச் சென்று அங்கேயுள்ள

கொடையாளிகளைப் பாடி மகிழ்வித்துப் பரிசில் பெறுவது வழக்கம்.

இவ்வாறு பரிசில் பெற்றுச் செல்லும் ஒரு கூத்தன் வழியில் ஓரிடத்தில் தங்கியிருக்கும்போது, யதேச்சையாக அந்த வழியாக வந்த மற்றொரு கூத்தன் அவனைக் கண்ட தாகவும், வந்த கூத்தனின் வறுமை நிலையைக் கண்டு மனமிரங்கிய கூத்தன், 'இன்ன வழியாகச் சென்றால், இன்ன ஊரில் இன்ன கொடையாளியைக் காணலாம். அவனைப் பாடினால் அளவற்ற பரிசில் அளிப்பான். நானும் அவனிடம் பரிசில் பெற்றுத்தான் வருகிறேன்' என்று சொல்லி அவனுக்கு வழிகாட்டியதாகவும் பாடு வதற்குத்தான் 'ஆற்றுப்படை' என்று பெயர்.

முடத்தாமக் கண்ணியார் இயற்றிய ஆற்றுப் படைக்குப் 'பொருநர் ஆற்றுப்படை' என்பது பெயர். பொருநர் என்பதற்கு மற்றொருவரைப்போல் வேஷம் போட்டுக் கொண்டு கூத்தாடுபவர் என்பது பொருள். இப்படி வேஷம் போட்டுக்கொண்டு கூத்தாடுபவரை இப்போதுகூட நாம் காண்கிறோம் அல்லவா? ஒருவன் வேஷம் போட்டுக்கொண்டு ஆடுவான். மற்றொருவன் மத்தளம் வாசிப்பான். இன்னொருவன் தாளம் போடு வான். இவர்கள் இப்படி ஆடிப்பாடி நடிப்பதெல்லாம் யாசகம் பெறுவதற்குத்தான். இதுவே இவர்கள் பிழைப்பும் ஆகும். முற்காலத்திலும் இப்படிப்பட்ட கூத்தர் இருந்தார்கள். அவர்களுக்குப் பொருநர் என்றும் பெயர் உண்டு. இந்தப் பொருநர் ஏர்க்களம் பாடுவோர், போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் என்று மூன்று வகைப்படுவர். இவர்களுள் போர்க்களம் பாடும் பொருநன் பாடுவதாக அமைத்து இந்த ஆற்றுப் படையை முடத்தாமக் கண்ணியார் பாடியிருக்கிறார். இந்தப் பொருநன் தடாரிப்பறை என்னும் ஒருவகை வாத்தி யத்தைக் கொட்டுபவன். பொருநர்கள் திருவிழா நடக்கும் ஊர்களுக்குப் போய்த் தங்கள் இசைப்புலமையைக் காட்டி யாசகம் பெறுவார்கள். விழா முடிந்ததும் விழா நடக்கும் மற்றோர் ஊரை நோக்கிப் போவார்கள்.

ஆற்றுப்படை என்பது கூத்தரால் பாடப்பட்ட நூல் என்று நீங்கள் எண்ணிவிடலாகாது. ஒரு கூத்தன் மற்றொரு கூத்தனுக்கு வழி சொல்லி அனுப்புவதாகக் கவி கற்பனை செய்து பாடும் நூல் இது. இப்படி நூல் இயற்று வதற்குத் தொல்காப்பியம் என்னும் இலக்கணம் இடம் கொடுக்கிறது. ஆகவே, பொருநர் ஆற்றுப்படை என்பது முடத்தாமக் கண்ணியார் என்பவரால் கற்பனையாக இயற்றப்பட்ட ஓர் இலக்கியம் என்பது நாம் அறிந்து கொள்ளக் கூடியது.

இந்தப் பொருநர் ஆற்றுப்படை ஒரு கற்பனைக் களஞ்சியம். இதில் கூறப்படும் செய்திகளை நீங்கள் சுருக்கமாகத் தெரிந்து கொள்வது அவசியம். தஞ்சாவூர் ஜில்லாவில் வெண்ணி என்று ஓர் ஊர் உண்டு. அது தேவாரம் பெற்ற ஒரு பாடல் ஸ்தலம். அதற்கு இப்பொழுது கோயிலுண்ணி என்று பெயர் வழங்குகிறது. இந்த ஊருக்குப் பக்கத்தில் ஒரு பெரும்போர் நடந்தது. அப்போரில் இளஞ்சேட்சென்னி என்ற சோழனின் புதல்வனை கரிகாற் பெரு வளத்தான் தன் இளமைப் பருவத்தில் சேர பாண்டியர்களை வென்றான். அப்போர்க் களத்தை வருணித்தும், அவன் வெற்றியைப் புகழ்ந்தும் சென்ற தனக்கு அவன் உபசாரம் செய்து பரிசில் அளித்ததை விவரித்துச் சொல்லி, 'நீயும் அவனை நாடிப் பரிசில் பெறுவாய்' என்று தூண்டுகிறான் பொருநன். இதன் கதைச்சுருக்கம் இதுதான்.

பொருநன் வழியில் தங்கியிருக்கும் இடம் யானைகள் திரியும் ஒரு பாலைக்காடு. நூல் வலையைப் பந்தலாக இட்டால் எவ்வளவு நிழல் இருக்குமோ, அவ்வளவு அற்பமான நிழலுள்ள இலையுதிர்ந்த ஓர் ஆச்சாமரத்தின் நிழலில் அவன் மற்றொரு பொருநனைச் சந்திக்கிறான். வந்த பொருநனோடு ஒரு பாடினியும் வந்திருக்கிறாள். அவள் கையில் ஒரு யாழ் இருக்கிறது. அந்த யாழின் பத்தல்—அதாவது குடம்—மானின் குளம்பு அழுந்தின இடத்தைப் போல இருக்கிறது. அதை அவள் ஒரு தோலால் மூடி எடுத்துக் கொண்டு நிற்கிறாள். அந்தத் தோலுறை

நழுவாமல் இருப்பதற்கு இரண்டு ஆணிகள் உண்டு. அவை வளையில் இருக்கும் நண்டின் கண்களைப் போல இருக்கின்றன. யாழின் நீண்ட தண்டானது பாம்பு படமெடுத்து நிற்பதுபோல் காணப்படுகிறது. நன்றாகக் குத்தித் தீட்டின தினையரிசியின் நிறத்தை ஒத்திருக் கின்றது அந்த யாழ் நரம்பின் நிறம். யாழானது கலியாணப் பெண்ணைப் போல அழகாக இருக்கிறது என்கிறார் முடத்தாமக் கண்ணியார்! அதைப் பாடினி வாசித்தால் எப்படி இருக்கும் தெரியுமா? அந்த இசையைக் கேட்கும் வழிக் கொள்ளைக்காரர்கள்கூடத் தங்கள் இயற்கையான கொடிய குணம் மாறி அருள் உண்டாகி, தங்கள் கையிலுள்ள ஆயுதங்கள் தம்மை யறியாமலே நழுவி விழ, மெய்ம்மறந்து கேட்டுக்கொண்டே இருப்பார்களாம்.

> " ஆறலை கள்வர் படைவிட அருளின்
> மாறுதலை பெயர்க்கும் மருவு இன்பாலை "

என்கிறார், முடத்தாமக்கண்ணியார். நரம்புகளைத் தழுவி யும் உருவியும் தெறித்தும், ஒன்றைவிட்டு ஒன்றைத் தெறித்தும் தன் குரலொடு இசைத்துப் பெண் மயில் போன்ற சாயலையுடைய அந்தப் பாடினி பாடுவாளாம். அந்தப் பாணிக்கு ஏற்பப் பொருநன் தடாரி வாசிப் பானும்.

பெருமைக்கு ஏற்ற செல்வமும், செல்வத்தால் வந்த கீர்த்தியும், வல்லமையோடு பொருந்திய விடாமுயற்சியும், வெற்றிமுரசு முழக்கும் பெரும் படையும் உடைய சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தரும் ஒரே சபையில் சேர்ந்திருந்தால் எவ்வளவு சிறப்பாக இருக்கும்! அது போல வாத்தியம், நிருத்தம், கீதம்—அவையாவன கொட்டு, ஆட்டம், பாட்டு—ஆகிய மூன்றும் பொருந்தச் சிறந்த ஓர் இசை விருந்து அளிக்கின்ற பொருநனும் அவன். அவனை ஏழின் கிழவன் அதாவது 'ஏழிசைக் கும் உரியவன்' என்று அழைக்கின்றார் முடத்தாமக் கண்ணியார்.

பொருநன் தான் கரிகால் பெருவளத்தானை யடைந்து பரிசில் பெற்ற விதத்தைப் பின்வருமாறு கூறுகின்ருன் :

"பழுத்த மரத்தைத் தேடிச் செல்லும் வௌவால் போல நான் கரிகால் பெருவளத்தானை நாடியடைந்தேன். காண வேண்டும் என்று ஆவலோடு வந்தவர், தடை யில்லாமலும் வாயில்காப்போர் அனுமதி பெருமலும் நேராக உள்ளே செல்லக்கூடிய கரிகாலன் மதிலுக்குள்ளே போனதும், என் களைப்புத் தானுகவே நீங்கிவிட்டது. அதிகாலையில் சுக்கிரன் உதிக்கும் வேளையில் ரூபக தாளத் தில் தடாரியைக் கொட்டி ஒரு பாட்டுப்பாடி முடிப்ப தற்குள், அவ்வேந்தன் என்னை அழைப்பித்து, அருளோடு பார்த்து உபசரித்து, என் மனத்தைக் குளிரச் செய்தான் ; ஈரும் பேனும் வாசம் பண்ணும் இடமாயும், வேர்வையால் நனைந்ததாயும், எங்கும் தையல் மயமானதாயும் இருந்த என் அரையாடைக்குப் பதிலாக ஓர் அருமையான ஆடையைத் தந்து உடுக்கச் செய்தான். அரண்மனையில் எனக்குச் சிறந்த விருந்து கிடைத்தது. வேளை தப்பாமல் விலாப்புடைக்கப் பல நாள் இடைவிடாமல் உண்டதனுல், எனக்கு உணவில் வெறுப்பு ஏற்பட்டுவிட்டது ; ஊருக்குப் போகவேண்டும் என்ற எண்ணமும் வந்துவிட்டது. விடை கேட்டேன். அவன் பிரிய மனமில்லாமல் விடை கொடுக்கத் தயங்கினுன். அப்பால் யான் மன்ருடி விடை கொள்ளும்போது, எனக்கு வேண்டிய யானைகளையும் யானைக் கன்றுகளையும் கொண்டு போகும்படி சொல்லிப் பொன்னுபரணம் முதலான பல வரிசைகளுந் தந்து அனுப்பினுன், கரிகாலன்.

நல்ல வேளை வருமளவும் தாய் வயிற்றில் தங்கி யிருந்து கடலில் உதித்துக் கம்பீரமாகக் கிளம்பும் பால சூரியனைப் போலப் பிறந்ததனுல் அரசுரிமை பெற்றவன், அக்கரிகாலன். பகைவர் அவனைப் பணிந்து ஏவல் செய் வார்கள். வெண்ணிப் போர்க்களத்தில் நெடுஞ்சேரலாத னும் பாண்டியனும் அவனை எதிர்த்துத் தோல்வியடைந் தார்கள். நீங்கள் அவனையடைந்து உங்கள் வறுமை நிலை தோன்ற நிற்பீர்களானுல் சமீபத்தில் கன்று போட்ட

பசுவைப்போல அவன் உங்களிடம் அன்பு கொள்வான். உன் பாடினி யாழை மீட்டி ஓர் இசை பாடுவதற்குள், உங்கள் கந்தையாடையைப் போக்கிப் பட்டாடை வழங்கு வான். உண்டியும் உறைவிடமும் தந்து உபசரிப்பான்."

பரிசில் பெற்றுவந்த பொருநன் தன் எதிரே வந்த பொருநனை நோக்கி இவ்வாறெல்லாம் பரிசில் பெறுவதற் கான உபாயங்களைச் சொல்லியனுப்புவதாக முடத்தாமக் கண்ணியார் மிகவும் அழகாகக் கற்பனை செய்து பாடி யிருக்கிருர். கரிகாற் பெருவளத்தானுடைய வீரம் தியாகம் என்ற இரண்டு அருங் குணங்களையும் யாவரும் அறியச் செய்வதுதான் கவியின் முக்கிய நோக்கம். அதற்கு இப் படி ஒரு துறை வகுத்துக் கொள்வது கவிகளின் வழக்கம்.

யாழின் அமைப்பையும், அதனைப் பாடினி மீட்டி வாசிக்கின்ற பாங்கையும் கொடிய மனமுள்ளவரை இளகிய மனமுடையவராக்கும் இசையின் தன்மையையும் முடத்தாமக் கண்ணியார் மிகவும் அழகாகக் கூறியுள்ளார். இதிலிருந்து இவர் ஒரு சங்கீத ரசிகர் என்று தெரிகிறது. இக்காலத்துப் பெண்களைப் போலவே முற்காலப் பெண் களும் நாகரிகமாக உடையணிவதும், முத்துமாலை பொன் னரிமாலை போன்ற ஆபரணங்கள் பூண்பதும் உண்டு என்றும் புலனுகிறது. தேரின் மொட்டு என்னும் உறுப்பு தந்ததால் அமைந்து சித்திர வேலைப்பாடுகள் உடையதாக இருக்கும் என்பதால், தந்தத்தால் பதுமை முதலியவை செய்யும் சிற்பத் தொழில் தமிழ் நாட்டிற்கு மிகவும் பழைமையானது என்று நாம் அறிகிறோம். குதிரைக் குத் தலையாட்டம் என்னும் ஒருவகை அணி இடப்படும் என்றும், தேர்களில் நான்கு வெண்ணிறக் குதிரைகள் ஒருசேரப் பூட்டப்படுதல் உண்டு என்றும் தெரிகிறது. சரிகைப்பூ வேலைப்பாடமைந்த பட்டாடைகளையும் இழை களுக்கு இடையே இடைவழி தெரியாதபடி மிக மெல்லிய தாக நெய்யப்பெற்ற பருத்தியாடைகளையும் முடத்தாமக் கண்ணியார் பாராட்டிக் கூறுவதால், பழந்தமிழ் நாட்டில் பருத்தி நெசவு மட்டுமல்லாமல், பட்டு நெசவுத் தொழிலும் நன்கு நடைபெற்று வந்தது என்று நாம் கருதலாம்.

சோழ நாட்டையும் அதனை வளப்படுத்தும் காவிரி யாற்றையும் நம் கவி மனமாரப் போற்றுகின்றார். இதனால் அவரது தேசாபிமானம் நன்கு விளங்குகிறது.

" சாலி நெல்லின் சிறைகொள் வேலி
ஆயிரம் விளையுட் டாகக்
காவிரி புரக்கும் நாடு கிழவோனே "

என்று கரிகால் பெருவளத்தானைப் போற்றுகிறார் நம் கவி. இதனால் கவியின் ராஜபக்தி நமக்குப் புலனாகிறது. காவிரி யின் இருகரையிலுமுள்ள சோலைகளையும் காவிரியின் பாசனத்தால் செம்மாந்து விளைந்து தலைநிமிர்ந்து நிற்கும் நெற்கதிர்களையும், நெல் வயல்களுக்கு இடையே காணப் படும் கரும்புத் தோட்டங்களையும், இவை தரும் கண் கொள்ளாத இன்பக் காட்சிகளையும் கண்டு களிப்பு மேலிட்டுப் பாடியுள்ளார் நமது தாமக் கண்ணியார். அவரது கவனம் குலை நிறைந்த தென்ன மரத்தின் மட்டைமீது உட்கார்ந்து கொண்டு, திரும்பித் திரும்பிப் பார்க்கும் ஆந்தையைக் காண்பதிலும் சென்றிருக்கிறது! 'தண்ணீரும் காவிரியே, தார்வேந்தன் சோழனே, மண் ணாவதும் சோழ மண்டலமே' என்று பாடிய ஔவையின் வாக்கு இங்கே நம் நினைவில் வருகிறது. தமிழ் நாட்டில் விசேஷமாகச் சோழ மண்டலத்தில் இருந்த பலவகை மரங்கள், நறுமண மலர்கள், இசைக் கருவிகள், அவை செய்யப்படுவதற்கு உரிய மரங்கள் முதலான பல செய்தி கள் இவர் வாக்கால் நமக்குத் தெரியவருகின்றன. காவிரி யின் படித்துறைகளில் மகளிர் இறங்கிக் குடைந்து குடைந்து நீராடுவதையும் தாமக் கண்ணியார் கூறாமல் விடவில்லை. சோழன் கரிகாற் பெருவளத்தானால் ஆதரிக் கப்பெற்ற பெரும் புலவருள் ஒருவரான முடத்தாமக் கண்ணியார் நமக்களித்துள்ள ஓர் இலக்கியம் 'பொருந ராற்றுப்படை'. அது ஒரு கற்பனைக் களஞ்சியம்.

## குறிப்புரை

பாடினி - பாணனோடு சென்று அவன் தடாரி கொட்டத் தான் பாடுகிறவள். ஆற்றலாளர் - வழிப்பறி செய்வோர். தியாகம் - கொடை. சாலி - நெல்லில் ஒரு சிறந்த வகை. ஆயிரம் விளையுட்டாக - ஒன்று ஆயிரமாக விளைவதாக.

## பயிற்சி

1. கற்பனைக் களஞ்சியம், மெய்ம்மறந்து, இளமைப் பருவம், இசை விருந்து, உண்டியும் உறைவிடமும் - இவைகளை நும் சொந்த வாக்கியங்களில் அமைத்துக் காட்டுக.

2. கீர்த்தி, விஷயம், யாசகம், வேஷம், வாத்தியம், கற்பனை, அவசியம்—நேரான தமிழ்ச் சொற்கள் தருக.

## வினாக்கள்

1. முடத்தாமக் கண்ணியார் என்று பெயர் வரக் காரணம் என்ன?
2. 'ஆற்றுப்படை' என்பதன் பொருளை விளக்குக.
3. 'பொருநர்' என்போர் யாவர்? அவர்கள் தொழில் என்ன?
4. பொருநராற்றுப்படை கூறும் செய்திகள் எவை?
5. யாழின் அமைப்பைப்பற்றித் தெளிவாக எழுதுக.
6. யாழிசையின் சிறப்பு எத்தகையது?
7. பொருநன் எவ்வாறு இசைவிருந்து அளித்தான்?
8. கரிகாற் பெருவளத்தான் கொடைச் சிறப்பை விளக்குக.
9. தாமக்கண்ணியார் சோழநாட்டில் கண்ட இயற்கைக் காட்சி யாது?
10. "பழுத்த மரத்தைத் தேடிச் செல்லும் பறவை போல" இடங் காட்டி விளக்குக.

## கட்டுரையாக்கம்

1. 'சோழ நாட்டின் வளம்' என்பதுபற்றிப் பதினைந்து வரியில் எழுதுக.

2. 'பொருநராற்றுப்படை' என்ற பொருள்பற்றி ஒன்றரைப் பக்க அளவில் கட்டுரை வரைக.

# 4. மதுரையில் ஓர் இரவு

**திரு. ஆர். விசுவநாத ஐயர், எம். ஏ., பி. ஓ. எல்.**

[சங்கச் செய்யுட்கள் பொருட்செறிவு உடையவை. நம் நாட்டின் பண்டைச் செய்திகளைக் காண அவை மிகவும் பயன்படுகின்றன. இன்று பெருங்குழப்பத்தி லிருந்துவரும் நம் பாரத நாட்டை நன்னிலையில் அமைத்துக் காணவேண்டு மென்று முயலும் அன்பர்களுக்கு, பண்டை நிலை எவ்வா றிருந்தது என்றறிவது இன்றியமையாதது. ஆகவே, தமிழ கத்தின் பழைய காலத்து வாழ்க்கை முறைகளைக் காட்ட தலையாலங்கானத் துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியன்மீது மா[illegible]குடி மருதனார் என்ற புலவர் பெருமான் பாடியருளிய, மதுரைக் காஞ்சி என்ற பாடலி லிருந்து இது தொகுக்கப் பெற்றது. நூலின் சொற்களையே எளிமைபடக் கையாண்டுள்ளோம்.]

'மாடம் பிறங்கிய மலிபுகழ்க் கூடலிலே' கதிரவன் தன் பணியைச் செய்து முடித்துத் தன் வெயிற் கதிர் மயங்கியவனாய் மேற்றிசையில் சாய்ந்தான். கடவுளர் களின் கோயில்களிலெல்லாம் அந்தி விழாக்கள் தொடங் கின. பணிப்பெண்கள் கொடிகளைத் தாங்கிக் கொண்டு வீதிகளிலே நின்றனர். மாடங்களில் நின்று வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்த செல்வ மகளிரின் முகங்கள் அக்கொடிகளால் ஒவ்வொரு கால் மறைக்கப்பட்டன. அத் தோற்றம் வெண்மேகங்களினிடையே புகுந்து புகுந்து வெளிப்படும் சந்திரனை ஒத்திருந்தது. செல்வவான்கள் தேர்களிலே ஏறிக்கொண்டு கோயில்களுக்குச் சென்று கொண்டிருந்தனர். அத்தேர்களைப் பின்பற்றி அவர்களின் பணியாட்கள் வீர உடை தரித்து ஓடிவந்தனர். அவர்கள் அரைகளிலே சிவந்த ஆடைகளைத் தரித்திருந்தனர். அவ்வாடைகள் மிக நுட்பமான பூ வேலைப்பாடுகள் அமைந்தனவாயிருந்தன. அவற்றிலே அவ்வீரர்கள் பொன் பிடியிட்ட உடைவாள்களைச் செருகியிருந்தனர். அவர்கள் தோள்களிலே மெல்லிய மேலாடைகள் கிடந்து அசைந்தன. கழுத்துக்களிலே அழகிய முத்து மாலை களும் பாண்டியர்க்குரிய வேப்பம்பூ மாலைகளும் பிணைந்து தொங்கின. குதிரைகள் காற்றை ஒத்துப் பறந்தன.

கோயில்களில் அந்திப் பூசைகள் நடந்தன. எங்கும் பலவகை வாத்தியங்கள் முழங்கின.

### பௌத்தப் பள்ளிகள்

ஒளி மிகுந்த ஆபரணங்கள் பூண்ட பெண்டிர், தாமரைப் பூக்களைக் கைகளிலே பிடித்துக் கொண்டவர் போலத் தம் அரிய மக்களைக் கைகளினாலே பிடித்துக் கொண்டும், தட்டுக்களிலே பூசைக்குரிய பூக்களையும், தூபங்களுக்குரிய பொருள்களையும் ஏந்திக் கொண்டும் தம் கணவன்மாருடன் பௌத்தப் பள்ளிகளில் அந்தி வணக்கம் செய்து கடவுளை வணங்கினர்.

### அந்தணர் இல்லம்

அந்தணர்கள் தம் இல்லங்களிலே அதர்வணம் ஒழிந்த வேதங்களைத் தமக்குப் பொருள் விளங்கும்படி ஓதினர். அவர்கள் பல யாகங்களைச் செய்தவர்கள். அவர்கள் தம் ஒழுக்கத்தால் தேவலோகத்தை இந்நில வுலகத்தே கொண்டுவந்தவர்களாகவும், ஒன்றாகிய பிரமம் தாமேயாகவும் விளங்கினார்கள். அவர்களின் மனம் தரும வழியிலிருந்து ஒருகாலமும் தப்பாதது. அது பல உயிர்க ளிடத்தும் அன்பு நிறைந்தது. அவர்கள் தம் பிரமசரிய காலத்திலே பெரியோர்களிடம் தங்கின விசேடத்தாலே வீட்டு இன்பத்தையும் நுகர்ந்த பெருமை வாய்ந்தவர்கள். அவர்களுடைய இல்லங்கள் மலைகளை உள்வெளியாக வாங்கி இருப்பிடமாக ஆக்கினாற்போல விளங்கின.. அங் கிருந்துகொண்டு அவர்கள் தமக்குரிய அந்திச் சடங்கு களைக் கழித்திருந்தனர்.

### ஜைனர் நகரம்

அருக சமயத்தினர் முக்காலமும் உணரத்தக்க அறிவைப் பெற்றவர். அவர்களுக்குத் தேவருலகத்திலும் பிற இடங்களிலும் நடைபெறும் செய்திகளைத் தாமிருந்த விடத்திலிருந்தே அறியும் ஆற்றலுண்டு. கல்விகளெல் லாம் நிறைந்து களிப்பின்றி யடங்கின அறிஞர்களாகிய

அவர்கள், தாங்குதற்கரிய பல விரதங்களைத் தாங்கியும் உடல் இளைக்கப் பெருதவர்களா யிருந்தனர். கல்லைப் பொளிந்தாற் போன்ற சிறிய வாயையுடைய குண்டிகை யைப் பல கயிறுகளாலமைந்த உறியிலே கட்டித் தொங்க விட்டிருந்தனர். அவர்களின் இல்லங்கள் குளிர்ந்த குளங் களைப் போலத் தண்ணென்றிருந்தன. சுவர்கள் செம்பாற் செய்தனபோல் விளங்கின. அவற்றிலே பலவகைச் சித்தி ரங்கள் எழுதப்பட்டிருந்தன. மேல் நிலம் பார்ப்பவர் கண்களைத் தகைக்கும்படி உயர்ந்திருந்தது. மலைகள் பல ஒருங்கே திரண்டு நின்றனவோவென அவ்வில்லங்கள் தோன்றின. அவற்றைச் சூழ்ந்து பூஞ்சோலைகள் மணம் வீசின. அங்கிருந்துகொண்டு சமணர்கள் தங்களுக்குரிய அந்திப் பூசைகளைச் செவ்வனே நடத்தினர்.

**நீதி மன்றம்**

அவ்வேளையில், அறம் கூறும் அவையத்தோரும் தத்தம் தொழில்களைச் செய்து முடித்துக் கொண்டிருந் தனர். வழக்குத் தொடுப்பவர்கள் அச்சமும் அவலமும் ஆர்வமுங் கொண்டு நின்றுகொண்டிருந்தனர். அவையத் தோர் நடுவாகக் கூறுவாரோ மாட்டாரோ என்ற எண் ணத்தால் அச்சமும், தோல்வியுண்டாகி விடுமோ என்ற தால் அவலமும், தம் நெஞ்சில் பொருள்களின்மேல் உண்டான ஆர்வமும் ஆகிய மூன்றும் வழக்காளிகளிட மிருந்து நீங்குமாறு, அறங்கூறுவோர் ஒருபுறத்தில் விருப்பும், அதன் எதிர்ப்புறத்தில் வெறுப்பும் கொள்ளா மல் துலாக்கோலையொத்த நடுவு நிலைமையிலே பொருந்தி, தருமமுறைப்படி, நீதி நூல்களை ஆராய்ந்து சொல்லிக் கொண்டிருந்தனர்.

**காவிதி மாக்கள்**

காவிதிப் பட்டம் பெற்ற அமைச்சர்கள், விளங்கு கின்ற தலைப்பாகைகளுடன் தத்தம் அரசியல் விவகாரங் களிலே ஈடுபட்டிருந்தனர். அவர்கள் அரசனிடத்தில் மிக்க அன்புடையவர்களாகி, அவனிடத்தில் தீங்குகள்

காணப்படுமாயின் அஞ்சாமல் எடுத்துரைக்கும் இயல்பு பெற்றவர்கள். சுற்றத்தாரிடத்து அன்பும் எல்லா உயிர்களிடத்தும் தருமமும் தப்பாமல் பாதுகாத்து வந்தனர். அவர்கள் தம்மீது பழி எங்கு வந்துவிடுமோ என்ற முன் எச்சரிக்கையுடையவர்கள். அவர்களுடைய புகழ் எங்கும் பரந்திருந்தது. அத்தகையோர் தத்தம் தொழிற்சாலைகளிலிருந்துகொண்டு மிகுந்த நேர்மையுடன் தத்தம் அலுவல்களைக் கவனித்துவந்தனர்.

**குழுவினர்**

அமைச்சர் ஒழிந்த புரோகிதர், சேனாதிபதியர், தூதர், ஒற்றர் என்ற நால்வகைக் குழுவினர்களும் தத்தம் தொழில் நிலையங்களிலிருந்துகொண்டு அரச காரியங்களிற் கண்ணுங் கருத்துமாயிருந்தனர்.

**வணிகர்**

ஒன்றையொன்று அடுத்தாற்போன்று பல குன்றுகள் திரண்டாலொத்த இல்லங்களி லிருந்துகொண்டு, வணிகர்கள் தம் இல்லறவியல் கெடாமல் நடந்து வந்ததோடு, பல்வேறு நாடுகளிலிருந்தும், மலை, நிலம், கடல் ஆகிய வெவ்வேறு இடங்களிலிருந்தும் வந்த பல பண்டங்களையும், மணி, முத்து, பொன் ஆகிய விலையுயர்ந்த பொருள்களையும் விற்றுக் கொண்டிருந்தனர்.

**சில்லறை வியாபாரிகள்**

நாற்பெரும் வீதிகளிலும், சந்துகளிலும், முடுக்குகளிலும் பல சில்லறைத் தொழிலாளர்களும், வியாபாரிகளும் தங்களிடம் கிடைப்பனவற்றின் பெயர்களை உரக்கக் கூவிக்கொண்டு அலைந்து கொண்டிருந்தனர். அறுத்த சங்கை வளைகளாகக் கடைவாரும், அழகிய மணிகளைத் துளையிடுவாரும், பொன்னை உருக்கிப் பணிகளாகப் பண்ணுவாரும், பொன்னை உரைத்து உரையைக் கணக்கிட்டுச் சொல்வாரும், புடவைகள் விற்பாரும், பழைய செப்புப் பாத்திரங்களை நிறுத்து வாங்கிக்கொள்

வாரும், தோள் கோப்பு முதலிய கச்சுக்களை அழகுபட முடிப்பாரும், பூக்களையும் புகைப் பொருள்களையும் சந்த னக் கலவைகளையும் விலை கூறுவாரும், எவ்வகைப் பொருள் களையும் சித்திரமாகத் தீட்டி வரைந்து காட்ட வல்லாரும், அழகான வேலைப்பாடுகளமைந்த புடவைகளை விற்பாரும், நெல் முதலிய கூலங்களை விற்பாரும் ஆகிய பல்லோர் பல விடங்களில் நின்றும் திரிந்தும் தத்தம் தொழில்களையும் பண்டங்களையும் விலை கூறிக்கொண்டு அலைந்தனர்.

## சோறிடும் சாலைகள்

அந் நகரிலே பற்பல சோறிடும் சாலைகளிருந்தன. அங்கே, தேன் ஒழுகுகின்ற இனிய மணமிக்க பலாச்சுளை களையும், பல்வேறு வடிவங்களுள்ள மாம்பழங்களையும், வாழை, முந்திரிகை முதலிய பழங்களையும், பாகற்காய், வாழைக்காய், வழுதுணங்காய் முதலிய காய்கறிகளையும், நன்ருக வளர்ந்த கொடிகளிலிருந்தும் கிள்ளப்பட்ட இலை களால் ஆகிய கறிகளையும், கிழங்குக் கறிகளையும், கற் கண்டுக் கட்டிகளையும், பெரிய இறைச்சிச் சோற்றையும், பாற் சோற்றையும் பாலையும் இவைபோன்ற பிறவற்றை யும் உண்பவர்களுக்கு விலைகூறி இடுவார்களின் ஓசை, கடலொலிபோலப் பரந்து நின்றது.

## துறைமுகம்

தத்தம் நாடுகளிலுள்ள பொருள்களைக் கொண்டு வந்து இறக்கி, அவற்றிற்கு மாருக மதுரை மாநகரத்திற் செய்யப்படும் அணிகலங்களை வாரிக்கொண்டு போவ தற்காக, அயல் நாடுகளிலிருந்து வந்த மரக்கலங்கள் கழியோரங்களிலே வந்து தங்க, அவற்றினின்றும் சரக்கு களை இறக்குவார் இடும் ஓசை, கேட்பவர் காது செவிடு படும்படி எழுந்தது.

## அந்தி விளக்கு

இவ்வாறு சூரியாஸ்தமன காலத்தே எழுந்த பலவித ஓசைகளால் மதுரை மாநகர் பொலிந்தது. கீழ்த் திசை

யிலே பதினாறு நாட் சென்று முதிர்ந்த நிறைமதி எழுந்து தன் நிலாவைப் பரப்பிற்று. மனைகளிலுள்ள பெண்டிர் ஆராய்ந்த இதழ்களையுடைய செங்கழுநீர் மலர்களை மாலைகளாகக் கட்டி அணிந்தனர். தம் அணிகளைத் திருத்தியமைத்துக்கொண்டனர். பகலிலே தம் தலையிற் பூசிய மயிர்ச்சந்தனத்தை அலைத்து நீக்கினர். கத்தூரியையும் சந்தனத்தையும் அரைத்துப் பூசிக்கொண்டனர். மெல்லிய நூலால் செய்த தம் புடைவைகளுக்கு அகிற்புகையூட்டினர். நெடிய ஒளியையுடைய விளக்குகளை ஏற்றி, வீட்டு வாசலிலும் உட்புறங்களிலும் அமைத்தனர்.

வீடுகள்தோறும் யாழொலி எழும்பிற்று. பெண்டிர் தம் கொண்டைகளிலே முடித்த வெண்பூக்களின் மணம் தெருவெல்லாம் பரந்தது. அலரும் பருவத்திலிருந்த விடு பூக்கள் உடைந்தன.

### சேரிப்போர்கள்

அன்று ஓணத்திருநாள். மறவர்கள் திருமாலுக்குரிய இந்நாளிலே போலிப்போர் புரிவோமென்று தம் தெருக்களின் ஓரங்களிலேயுள்ள மணற் பரப்புக்களிலே கூடினர். தும்பைப் பூவைச் சூடினர். கடிய கள் தெளிவைப் பருகினர். யானையோடு யானை தாக்குவது போல ஒருவரையொருவர் தாக்கினர். அப்போலிப் போரில் பெறும் புண்களையும் பொருட்படுத்தினாரல்லர்.

### பெண்டிர் பூசை

ஒரு புறத்தில் உயர்ந்த குடும்பங்களிற் பிறந்த கடுஞ்சூல் கொண்ட மகளிர், இம்மைக்கும் மறுமைக்கும் பயனையளிக்கவல்ல நல்ல மக்களைத் தாம் பெறவிரும்பி, தெய்வத்தைப் பரவுவதற்காகப் பல சுற்றத்தார் சூழக் கோயிலுக்குச் சென்று, யாழ் முழவு சிறுபறை முதலியன முழங்க, தேவராட்டியைக் கொண்டு கடவுளுக்கு நிவேதனம் முதலியவற்றைப் படைத்து வணங்கினர்.

**கூத்துக்கள்**

மற்ருெரு புறத்தில் முருகபூசை நடந்துகொண்டிருந்தது. பூசாரி கழங்கு வைத்துப் பார்த்து, "இக் குற்றம் முருகனுல் விளைந்தது" என்று கூறினுன். உடனே அத் தெய்வத்துக்குரிய வழிபாட்டிற்கு ஏற்பாடுகள் செய்யப் பட்டன. சல்லி, கரடி முதலிய இசைக் கருவிகள் ஒலித்தன. பூசாரி வேலைக் கையிலே ஏந்திக்கொண்டும், குறிஞ்சிப் பூவைச் சூடிக்கொண்டும் தெய்வத்தைத் தன்மேல் வரவழைத்து வெறியாடல் ஆடத் தொடங்கினுன். பெண்டிர் கைகளைக் கோத்துக்கொண்டு குரவை ஆடினர்.

பிற இடங்களிலும் வேறுவகைக் கூத்துக்கள் நடந்தன. சில இடங்களில் பாட்டுக்களும் பேச்சுக்களும் நடந்தன.

இவ்வாறு அந்தி நேரம் தொடங்கி முதல்யாமம் முடியும் வரையில், நகரத்தில், கடலோசைபோல் ஒலி முழங்கிக் கொண்டிருந்தது.

**இடையாமம்**

நள்ளிருள் தொடங்கிற்று. சங்குகள் தம் ஆரவாரங்கள் ஒழிந்து அடங்கிக் கிடந்தன. கடைகளிலெல்லாம் கதவுகள் அடைக்கப்பட்டன. மகளிர் துயின்றனர். அடைகளையும் அப்பங்களையும் விற்பவர் அவற்றை வாங்குபவரைக் காணமாட்டாமல், அப்பணியாரங்கள் கொண்ட கூடைகளை அணைத்துக்கொண்டே தெரு ஓரங்களில் உறங்கினர். கூத்தரும் கண்ணயர்ந்தனர். படுக்கையிலே படுத்து உறங்குபவர்கள் அயர்ந்து நித்திரை போயினர். இரவு தன் பதினைந்தாம் நாழிகையைப் பெற்றது. மறுமைக்கு வேண்டிய நல்வினைகளைச் செய்து வந்தமையால், மதுரை மக்கள் யமனுடைய கோயிலுக்கு அஞ்சுபவரல்லர். அத்தகையோர்களாகிய அந் நகரவாசிகள் ஒன்றுக்கும் கவலையுருமல் தூக்கத்திலாழ்ந்தனர்.

**கள்வர்**

பேயும், அணங்கும், கழுதும் மட்டுமே திரிந்துவரும் அந்நள்ளிருளில், சில கள்வர்களும் தம் தொழில்களைச்

செய்ய முன்வந்தனர். அவர்களுடைய உடல் யானைத் தோலைப் போன்ற கருமையை இயல்பாகப் பெற்றிருந் தது. அதன்மேல் கருஞ் சட்டையொன்றும் இட்டிருந்தார் கள். அவர்கள் கைகளில் நிலத்தை அகழும் உளிகளிருந் தன. அவை கல்லையும் மரத்தையும் இலகுவிலே அறுக்கும் கூர்மை வாய்ந்தவை. அவர்கள் வாள்களைத் தூக்கு களிலே கோத்துத் தோள்களிலிருந்து தொங்கவிட்டிருந்த னர்; காலிலே செருப்பிட்டிருந்தனர். அரையிலே உட லொடு நெருக்கிக் கட்டின நீல உடை காணப்பட்டது. அக்கச்சைக்குள் தொடையோடு பொருந்தி வளைவுக்கத்தி யொன்று செருகப்பட்டிருந்தது. அக் கத்திக்குப் பெயர் சிலசொட்டை என்பது. கச்சை பல பூவேலைப்பாடு பொருந்தியது. அதன் மேலே இடுப்பைச்சுற்றி நூலேணி யொன்று வரிந்து கட்டப்பட்டிருந்தது. அதன் ஒரு தலை யிலே கைப்பிடிபோன்ற ஒன்று இரும்பால் செய்யப்பட் டிருந்தது. மதிலின் உட்புறத்தே விழும்படியாக அதனை எறிந்தால் அது மதிலை நன்ருகப் பிடித்துக்கொள்ளும். கயிற்றின் மற்ரெரு புறத்திலிருந்து அதைப் பிடித்துக் கொண்டு எளிதில் மதிலின்மேல் ஏறிவிடலாம். இத்தகைய கருவிகளுடன் பொருளிருக்கும் இடங்களை ஆராய்ந்து கொண்டு அவர்கள் பதுங்கிப் பதுங்கிச் சென்று கொண் டிருந்தார்கள்.

**காவலர்**

அதே சமயத்தில், எவ்வகைக் கள்வரையும் இலகுவில் பிடிக்கவல்ல அஞ்சா நெஞ்சர்களான காவலர்களும் அக் கள்வரை நாடி வந்து கொண்டிருந்தனர். வலிய யானையை இரையாக்கப் பார்க்கும் வலிய புலியைப் போல அவர்கள் பதுங்கி நாடிவந்தனர். அவர்களின் கண்கள் தூக்கத் தையே அறிந்தனவல்ல. பேய் முதலியவற்றிற்கும் அஞ்சா நெஞ்சினர். அவர்கள் எவ்வளவோ திறமையுடன் களவு நூல்களைக் கற்றுக் களவு செய்யக்கூடியவரையும் கண்ட றிந்து விடும் ஆற்றல் பெற்றிருந்தனர். காவல் தொழி லுக்காக ஏற்பட்ட நூல்களையெல்லாம் அவர்கள் கைபோ

கக் கற்றிருந்தனர். தப்பக் கருதி முயல்வாரைத் தப்ப விடாத ஊக்கம் வாய்ந்திருந்தனர். கொடிய மழை பெய் யுங் காலத்திலும் அவர்கள் தம் தொழிலில் பிழைபட நடந்துகொள்ள மாட்டார்கள். அத்தகையோர்கள் தம் கடமையுணர்ச்சி செறியப்பெற்று அந் நடுச்சாமத்தில் நகரெங்கணும் உலாவிக்கொண்டிருந்தனர். இவ்வாறு நடுச்சாமம் கழிந்தது.

### விடியல்

இரவின் மூன்றும் பகுதி தொடங்கிற்று. மணம் மிகுந்த பொய்கைகளில் பூக்கள் தளையவிழ்ந்து நாறின. அப் பூக்களில் தாதை உண்ணும் தும்பிகள் பாடின. அத் தும்பிகளின் ஒலியை யொத்து இல்லங்களிலிருந்து அந் தணர்கள் வேத மந்திரங்களைச் சொல்லித் தம் தெய்வங் களைத் துதித்தனர். யாழோர் தாளங்களுடன் நரம்பைத் தெறித்துத் தம் யாழை இனிமையாக மீட்டினர். பரிக் காரர்கள் யானைகளுக்கு உணவு ஊட்டினர். வரிசையாகக் கட்டப்பட்டு நின்றுகொண்டிருந்த தேர்க் குதிரைகள் புல்லை மென்றன. கடைக்காரர்கள் தம் கடை வாசல்களை மெழுகினர். கள் விற்போர் அதற்கு விலை சொல்லிக் கொண்டு தெருவிலே அலைந்தனர். கற்புடை மகளிர் தம் வீட்டுத் தொழில்களைச் செய்யத் தொடங்கினர். வீட்டுக் கதவுகள் திறக்கப்படும் ஒலியும், பெண்டிர் காற்சிலம்பு ஒலிக்கும் ஒலியும் புறத்தே செல்வார்க்கும் கேட்டன.

அரசர் அரண்மனையில் மாகதர் நின்றுகொண்டு புகழ்ப் பாடல்களைப் பாடினர். வேதாளிகர் நாழிகை யறிந்து கூறினர் ; பள்ளியெழுச்சி முரசங்கள் ஒலித்தன. காளைகள் முழங்கின. கோழிச் சேவல்கள் கூவின. வண் டாங்குருகின் சேவல்களும், அன்னச் சேவல்களும் தத்தம் பேடைகளை அழைத்தன. அழகிய மயில்களும் தம் பேடை களைஅழைத்தன. பெரிய யானைகள் பேரொலி முழக்கின. கூட்டிலே யுறையும் பெரிய கரடிகளும் பிற கொடியவிலங்கு களும் கூச்சலிட்டன. இல்லங்களின் முற்றங்களிலே

சிந்திக்கிடக்கும் வாடற் பூமாலைகளையும் பணிப்பெண்கள் பெருக்கிக் குவித்தனர்.

அத்தகைய விடியற்காலத்தே, அரண்மனை வாயிலிலே பாண்டியனின் படைவீரர்கள் பகைவர்களை வென்று வாரிக்கொண்டு வந்த யானைகளையும், குதிரைகளையும், பிறவற்றையும் கொண்டுவந்து நிறுத்தி அரசன் செவ்வியை எதிர்நோக்கி நின்றனர். அத்தோற்றம் கங்கையாறு தன் ஆயிரம் முகங்களுடன் கடலைக் கடந்தது போலத் தோன்றிற்று.

இவ்வாறு தேவர்களும் விரும்பும் புகழமைந்த மதுரா புரியிலே இரவு கழிந்தது; கதிரவன் தன் ஆயிரம் கதிர்களையும் பரப்பிக்கொண்டு கீழ்த்திசையிலே தோன்றினன்.

—மதுரைக் காஞ்சி

## குறிப்புரை

கூடல் - மதுரை. குண்டிகை - ஒருவகைப் பாத்திரம். காவிதி - பாண்டிய அரசர் வேளாளர்க்கு அளித்துவந்த பட்டம். கூலம் - தானியம். ஓணம் - திருவோணம். சூல் - கருப்பம். பரவுதல் - பூசித்தல். தேவராட்டி - சன்னதக்காரி. குரவை - ஒருவகைக் கூத்து. அணங்கு - பெண்பேய். கழுது - பேய் வகை. அகழ - தோண்ட. கைபோக - திறமையுடன். தாது - மகரந்தம். மாகதர் - அரசர் புகழ்பாடும் சாதியார். செவ்வி - குறிப்பு.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—சூல், தேவராட்டி, மாகதர்.

2. வாக்கியங்களில் அமைக்க :—பரவு, செருகு, பிணைந்து, முழங்கு, பிரமசரியம், செவ்வனே, அவலம்.

## வினாக்கள்

1. அந்தி நேரத்தில் மதுரை வாசிகள் கோயிலுக்குச் சென்ற காட்சி எவ்வாறிருந்தது?

2. அருக சமயத்தினரது இல்லங்கள் எவ்வாறு விளங்கின?

3. அந்தி நேரத்தில் நீதிமன்றம் எவ்வாறு காணப்பட்டது?

4. சில்லறை வியாபாரிகள் அந்தி நேரத்தில் எத்தொழில்களில் ஈடுபட்டிருந்தனர்?

5. மதுரைமா நகரத்துச் சோறிடுஞ் சாலைகள் எவ்வாறு திகழ்ந்தன?

6. சிறு குறிப்பு வரைக :—பெண்டிர் பூசை; முருக பூசை.

7. மதுரையில் கள்வர் தம் தொழிலை நடத்த எவ்வாறு முயன்றனர் என்பதை விவரி.

8. காவலர் தம் தொழிலில் எவ்வாறு கண்ணுங் கருத்துமாயிருந்தனர்?

## கட்டுரையாக்கம்

'சங்ககால மதுரையின் வைகறைக் காட்சி' என்பது பொருளாக ஒரு பக்க அளவில் ஒரு கட்டுரை வரைக.

# 5. இலக்கிய விமர்சனம்

திரு. அ. சீனிவாசராகவன், எம். ஏ.

பழைய கதை. உங்களுக்குத் தெரிந்ததுதான். "நெற்றிக்கண்ணைத் திறந்தாலும் குற்றம் குற்றமே" என்று தமிழ்ப் புலவன் நக்கீரன் சிவபெருமானிடம் பேசிய ரசமான கதை. இன்றும் நம்முடைய தமிழ் நாட்டில் புலமையின் அஞ்சாத உறுதிக்கு எடுத்துக்காட்டாக நக்கீரன் நிற்கிறான்.

தமிழன் இன்றும் நக்கீரனைப் பாராட்டுவதில் வியப்பொன்றுமில்லை. குற்றத்தைச் சொன்னால் நெற்றிக் கண்ணைத் திறக்கும் சிவபெருமான்கள் இந்தக் காலத்திலும் நம்மிடையே வாழ்கிறார்கள். தாம் கண்ட உண்மைக்கு உண்மையாயிருக்கும் நக்கீரர்களை மட்டும் அதிகமாகக் காணோம். இலக்கிய விமர்சனம் என்பது ஒரு கலை; இலக்கியம் எவ்வளவு முக்கியமானதோ அவ்வளவு முக்கியமானது இலக்கிய விமர்சனம்; இலக்கிய வளர்ச்சிக்கே இந்த விமர்சனம் இன்றியமையாத சாதனம். உண்மையும் தீரமும் உறுதியும் படைத்த இலக்கிய விமர்சனம் தற்போது தமிழுக்குத் தேவை என்பதுதான் என்னுடைய கட்சி. ஆகவேதான் நக்கீரர்கள் வேண்டும் என்கிறேன்.

இதனால் கதையிலே தோன்றும் நக்கீரன் செய்யும் இலக்கிய விமர்சனம் சரியானது என்பது என் கருத்தன்று. அந்தக்கதை உண்மை நிகழ்ச்சிகளைச் சொல்லுகிறதோ, என்னவோ, கதையைக் கட்டியவன் மனத்தில்—அதாவது தமிழனுடைய மனத்தில்—ஒரு காலத்தில் நக்கீரன் கட்சி நியாயமானது, நக்கீரன் கையாண்ட விமர்சன முறை ஒழுங்கானது என்ற எண்ணம் இருந்திருக்க வேண்டும். இப்போதும் பல தமிழ் அறிஞர்களிடையே இந்த எண்ணம் இருந்துவருகிறது. நக்கீரன் கட்சி நியாயமானதா என்று முதலில் பார்ப்போம்.

கதைதான் உங்களுக்குத் தெரியுமே. தருமி என்ற ஏழைப் பார்ப்பான் ஒருவன் பாட்டொன்றோடு பாண்டியன் சபைக்கு வந்து சேர்ந்தான்; பாட்டைப் பாடினான்.

"கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத்தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ"

என்று தொடங்குகிறது பாடல்.

'பூவின் வாசத்தை ஆராயும் வாழ்க்கை நடத்தும் தும்பி, அழகிய சிறகை உடையவனே, எனக்காக ஒரு தலைப் பட்சமாக நான் விரும்பியதைக் கூருமல் நீ கண்டதைச் சொல்' என்று ஒருவன் கேட்கிருன். அப்படிக் கேட்பது யார்? என்ன நிலையிலே கேட்கிருன்? என்ன கேட்கிருன்? பாட்டைத் தொடர்ந்து பார்ப்போம்.

"கொங்குதேர் வாழ்க்கை அஞ்சிறைத்தும்பி
காமம் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்
செறிஎயிற் றரிவை கூந்தலின்
நறியவும் உளவோ நீ அறியவும் பூவே"

பாட்டிலே பேசுபவன் ஒரு காதலன். தன் காதலி தன்னேடு பல காலம் பழகியதை எண்ணுகிருன். மயில் போன்ற அவள் சாயலை எண்ணுகிருன். அவளுடைய நெருங்கிய பல்வரிசையை எண்ணுகிருன். 'அட, தும்பி, எத்தனையோ! பூக்களைப் பார்த்திருக்கிருயே! என் காதலியின் கூந்தலைவிட, வாசனை பொருந்திய பூக்களை நீ கண்டதுண்டோ, சொல்' என்று கேட்கிருன். காதலன் ஒருவனுடைய அன்பின் வேகம் பாட்டில் வடிவாகிறது. அருமையான பாட்டு என்று நீங்களும் நானும் நினைக்கிருேம்.

ஆனல் நக்கீரன் சொன்னது தெரியுமல்லவா? 'கூந்தலுக்கு இயற்கை மணம் உண்டா?' என்று கேட்டுப் பாட்டைக் குறை கூறினன், நக்கீரன். இதற்கு இறைவனலும் சமாதானம் கூற முடியவில்லை என்று சொல்லும்போது, நக்கீரன் எழுப்பிய தடை நியாயமானது என்ற கருத்து உதயமாகிறது. உண்மையில் இந்தக் கதையில் வரும் நக்கீரன் இலக்கியத்தின் இயல்பை உணரவில்லை. இலக்கியம் எதைப்பற்றி பேசியபோதிலும், உண்மையில் அது பேசுவது மனித அனுபவத்தைப் பற்றியே என்பதை இந்த நக்கீரன் எண்ணவில்லை. உலகத்திலே உள்ள காட்

சிப் பொருள்களைப் பற்றி யெல்லாம் இலக்கியம் பேசு கிறது. உண்மைதான். ஆனால் எந்த முறையிலே, எந்த நோக்கோடு பேசுகிறது என்பதைக் கவனிக்க வேண்டும். காட்சிப் பொருளை காட்சிப் பொருளாக அன்று; கருத்தை எழுப்பிய கருவியாகவே இலக்கியம் பேசும். ஆகவே இலக்கியத்தில் காதலியின் கூந்தல் மணமுடையதாகும்; இதுபோலவே தாமரை விளக்கந் தாங்கும், கொண்டல் முழவம் பரிமாறும்; மயில் பரத நாட்டியம் புரியும்; குவளை கண்விழித்து நோக்கும். கவிஞன் கற்பனையின் உதித்த மருதம் என்ற அரசி கொலு வீற்றிருப்பாள். இலக்கிய உலகிலே சென்றால் இவை போன்ற அற்புதங்கள் எத் தனையோ அங்கே கண்ணில் தென்படும். உள்ளதை, அதாவது வெளியிலே உள்ள காட்சிப்பொருள்களை, புற நிகழ்ச்சிகளை அல்ல, அவற்றைக் காணும் உள்ளத்தில் எழும் பல்வேறு விதமான சிந்தனைகளை, உணர்ச்சிகளை, பாவனைகளை யல்லவா இலக்கியம் சித்திரிக்கிறது?

இதை நம்முடைய கதையிலே தோன்றும் நக்கீரன் உணரவில்லை. இறையனாரும் உணரவில்லை. ஆனால் பழைய இலக்கண ஆசிரியர்கள் ஒருவாறு உணர்ந்திருந்தார்கள். அவர்களுடைய கொள்கைகளில் மூன்று அருமையான அம்சங்களிருப்பதைக் காணலாம். ஒன்று, இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்புவது; இரண்டாவது பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல; மூன் றாவது நாடக வழக்கு, அதாவது இலக்கிய வழக்கு, புற நிகழ்ச்சிகளைப் பொறுத்த மட்டில் உலகியல் நடைமுறை யினின்றும் மாறுபடுவது பொதுவாகத் தவறாகாது. இதற்கு ஆதாரமான பழைய சூத்திரங்களைச் சொல்ல நான் விரும்பவில்லை. உங்களுக்குத் தெரிந்ததை மறுபடியும் சொல்வானேன்?

ஆனால் பிற்காலத்தில் இலக்கியத்திற்கு உயிராதார மான இந்தப் பரந்த கொள்கையைப் புறக்கணித்து விட்டோம். இலக்கிய மதிப்புரை என்றால் நக்கீரனைப் போல் குற்றங் காணுவது என்ற எண்ணம் எப்படியோ நம்மிடையே வேரூன்றிவிட்டது. விமர்சகன் தடைகளை

எழுப்புவதும் இலக்கிய கர்த்தா அதற்குச் சமாதானம் கூற முயல்வதுமான தடை விடை என்ற முறையானது சாதாரணமாய் வழக்கத்தில் இருந்து வந்தது. தடைகளெல்லாம் பழைய இலக்கண விதிகளை ஒட்டியே எழுந்தன. விடைகளும் அவ்வாறே. வண்டு மலரைச் சங்காக ஊதும் என்ற புகழேந்தியின் வர்ணனைக்கு எழுந்த தடை ஞாபகம் இருக்குமே? மலர் சங்கானால் வண்டு அதன் காம்பில் அல்லவா ஊத வேண்டும் என்ற தடைக்கு, வண்டு கள்ளை உண்டு மயங்கி முன்பின் தெரியாமல் தவித்தது நியாயமே என்ற விடை பிறந்தது சமத்காரமாகத்தான் இருக்கிறது. என்றாலும், இந்தத் தடை விடை முறை இலக்கியத்தில் இயல்பைப் பற்றிய அடிப்படையான ஆராய்ச்சியிலிருந்து தோன்றாமல் இலக்கண விதிகளைத் திருப்பித் திருப்பிப் பேசும் குறுகிய குற்றச் சாட்டு முறையாகிவிட்டது. இலக்கண விதிகளைப் பின்பற்றுவது தவறென்று நான் சொல்லவில்லை. அவையெல்லாம் பழைய இலக்கிய மரபை ஒட்டி எழுந்தவை. அவற்றை ஒரேயடியாகப் புறக்கணிப்பதால் இலக்கிய வளர்ச்சி தடைப்படுவதோடு பாஷையைக் கருவியாகப் பயன்படுத்தக்கூட இயலாமல் பாஷையின் அழுத்தமும் தெளிவும் மறைந்துவிடும். ஆனால் அநேகமாக நம்முடைய பழைய இலக்கண விதிகள் இலக்கியத்தில் கருவியான பாஷையைப் பற்றியவை. எழுத்து, சொல், அணி இவற்றைப்பற்றி நுட்பமாக நம்முடைய முன்னோர்கள் ஆராய்ந்தார்கள். இலக்கியத்திற்குப் பொருளிலக்கணம் காண வேண்டும் என்று அவர்கள் முற்பட்டார்கள்; கண்டார்கள். ஆனால் இலக்கியப் பொருளின் தன்மையை அடிப்படையான முறையில் மேல்நாட்டில் அரிஸ்டாடில் காலத்திலிருந்து இன்று வரை ஆராய்ந்திருப்பதுபோல் நாம் ஆராயவில்லை. நூலுக்கு இலக்கணம் வகுத்தபோது, நூலின் அழகு பத்து வகையிலே கிட்டும் என்று நன்னூலார் சொன்னார். அதுபோல குற்றமும் பத்து. உத்தி முப்பத்திரண்டு. இவை எல்லா நூலுக்கும் பொருந்தும். வான சாஸ்திரமோ ரசாயனமோ நூலாக அமைந்தால்,

அந்த நூலிலும் சுருங்கச் சொல்லுதல், விளங்க வைத்தல், நவின்ரேர்க்கினிமை முதலியன அழகாகவும், குன்றக் கூறல், மிகைபடக் கூறல் முதலியன குற்றங்களாகவும், தொகுத்துச் சுட்டல், வகுத்துக் காட்டல் முதலியன உத்தி களாகவும் அமையக்கூடும். இவை இலக்கிய நூல்களுக்கு மட்டும் உரித்தான விதிகள் அல்ல. தேரையர் வைத்திய மும் கம்ப ராமாயணமும் நூல்கள்; ஆனால் ஒன்று வைத்தியம், அறிவியல் நூல்; இன்னென்று கவிதை, இலக்கிய நூல்.

ஒரு நூல் எப்போது இலக்கியமாகிறது என்ற ஆராய்ச்சியை நாம் விரிவாகச் செய்யாமலிருந்து விட் டோம். இலக்கிய வகைகளையும், உலா, பரணி, பெருங் காப்பியம், பிள்ளைத் தமிழ் என்ற நூலின் வெளிப்படை யான சில அம்சங்களை வைத்துக் கொண்டு வகுத்தோம். ஆனால், இந்த வகைகளில் சேராத புதிய நூலொன்று தோன்றினுல் அவைகளை மதிப்பிடுவதற்கு இலக்கியத் திற்கே பொதுவான இலக்கியத்துவம் ஒன்றை நாம் சிருஷ்டி செய்து கொள்ளவில்லை. பழைய இலக்கணங் களில், தொல்காப்பியத்தில், இறையனுரகப் பொருளில், நேற்று வந்த நன்னூலில், சில சூத்திரங்களில் இந்த இலக்கிய தத்துவம் பேசப்படுகிறது என்று நீங்கள் சொல்லலாம். சூத்திரங்கள் இருப்பதால் அவற்றை இன்று அடிப்படையாகவோ புறப்படும் இடமாகவோ கொண்டு, விரிவாக இலக்கிய தத்துவத்தை விசாரணை செய்ய வேண்டும் என்று நான் சொல்லுகிறேன்.

இலக்கிய விசாரணை செய்யாமலா நம்முடைய சாத்து கவிகள் தோன்றியிருக்கின்றன? நம்முடைய உரையாசிரி யர்களைவிட நுட்பமான நூலை ஆராய்ந்தவர்கள் உண்டா என்று கேட்பீர்கள். சாத்து கவிகள் கேவலம் உபசார வார்த்தைகளாக இல்லாதபோது கூட, ஒரு நூலின் பெரு மையைப் பொதுப்படக் கூறுவனவே அல்லாமல், அவற்றை இலக்கிய விமர்சனமாகக் கொள்ள முடியாது. நம்மாழ்வாருடைய பெருமையில் ஈடுபட்ட ஒருவர்,

"ஈதோ திருநகரி! ஈதோ பொருநை!
ஈதோ பரமபதத் தெல்லை—ஈதோதான்
வேதம் பகிர்ந்திட்ட மெய்ப்பொருளின் உட்பொருளை
ஓதும் சடகோபன் ஊர்"

என்று பாடினார். இந்தப் பாட்டு இலக்கிய விமர்சனமா? இதிலிருந்து இதைப் பாடியவர் நம்மாழ்வாருடைய பாட்டில் எவ்வளவு ஈடுபட்டார் என்பது தெளிவாகிறது. ஆனால் திருவாய்மொழியின் இயல்பைப் பற்றியோ அது எவ்வாறு சிறந்த இலக்கியமாகிறது என்பதைப் பற்றியோ இந்தப் பாட்டிலிருந்து ஒன்றும் தெரிந்துகொள்ள முடியாது. ஆனால் துரதிர்ஷ்ட வசமாக நம்முடைய தமிழ் நாட்டில் இலக்கியம் ஒன்றைப்பற்றிப் பெருமையாகவோ குறைவாகவோ அழுத்தமாகப் பேசிவிட்டால் அதுவே விமர்சனம் என்ற எண்ணத்துடன் சிலர் எழுதி வருகிறார்கள். 'ஓகோகோ, இதுவே பாட்டு' என்று பேசுவதும், 'சீ சீ, இதுவும் பாட்டா' என்பதும் சாதாரணமாக நாம் கேட்கலாம். இவ்வாறு பேசுகிறவர்கள் தங்கள் அனுபவத்தை உண்மையாகவே வெளியிடலாம். அதை நான் மறுக்கவில்லை. ஆனால், அவர்கள் அனுபவம் மற்றெல்லாராலும் ஒப்புக்கொள்ளக் கூடியது என்பதற்கு, அந்த அனுபவத்தை ஆராய்ந்து, அது எவ்வாறு ஏற்பட்டது என்பதைத் தெளிந்து, ஸஹ்ருதயன் உள்ளத்தில் இந்த அனுபவந்தான் ஏற்படும் என்பதற்கு அவர்கள் இலக்கிய தத்துவ உணர்வோடு, தர்க்க ரீதியாக மற்ற இலக்கியங்களோடு தாங்கள் விமர்சனம் செய்யும் இலக்கியத்தையும் ஒப்பிட்டுக் காரணம் காட்ட வேண்டும்.

இந்தக் கோஷ்டியார் தத்துவ விசாரத்தோடு பழைய உரையாசிரியர்களையும் ஒப்புக் கொள்வதில்லை. சொல்லின் பொருளையும் யாப்பையும் அணிகளையும் பற்றிப் பேசிக் கொண்டு உரையாசிரியர்கள் பாட்டை மறந்து விடுகிறார்கள். மறைத்தும் விடுகிறார்கள் என்பதே இவர்கள் விடுக்கும் குற்றச்சாட்டு. ஓரளவுக்கு இது உண்மையே. உரையாசிரியர்கள் பலர் இலக்கியத்திற்குக் கருவியாக அமையும் பாஷையோடு நின்று விடுகிறார்கள்.

'காமஞ் செப்பாது கண்டது மொழிமோ' என்ற அடியிலே 'மோ' என்பது முன்னிலை அசை என்பார்கள்; 'தும்பி' பேசக்கூடியதாகக் கருதப்படுவதற்குப் பழைய தொல்காப்பிய விதியான 'சொல்லாமரபினவற்றேடு கெழீஇச் செய்யாமரபிற்ரெழிற் படுத்தடக்கியும்' என்பது இடம் தருகிறது என்பார்கள். தும்பியென்றது முன்னிலையாக்கல், கண்டது மொழிமோ என்றது சொல்வழிப் படுத்தல், கூந்தலின் நறியவுமுளவோ என்றது நன்னயமுரைத்தல் என்றெல்லாம் பேசுவார்கள்; பாட்டின் அருமையை, அது எவ்வாறு கவிதையாகிறது என்பதை மறந்து விடுவார்கள். உரையாசிரியர்கள் செய்த தொண்டு அருமையானது. சொல்லையும் அணியையும் வேறு இலக்கியக் கருவிகளையும் துல்லியமாக ஆராய்ந்திருக்கிருர்கள். ஆனல் இது போதாது. இதற்குமேல் தத்துவ ரீதியில் இலக்கியத்தைப்பற்றி அவர்கள் பேசவில்லை. இலக்கிய விசாரத்தை வெளிப்படையாக விரிவாக அவர்கள் செய்யவில்லை என்பதே என் நினைவு.

இலக்கியம் என்பது ஒரு கலை. அதன் கருவியான மொழியைப் பற்றிய நுட்பமான ஆராய்ச்சி நம்மிடம் உள்ளது. ஆனல் கலையின் பண்பைப் பற்றிய ஆராய்ச்சியை நாம் செய்ய வேண்டும். அதை அடிப்படையாகக் கொண்டே இலக்கிய விமர்சனம் தோன்றும். இதைத் தத்துவ ரீதியான இலக்கிய விமர்சனம் என்று சொல்லலாம். ஆனல் இலக்கியம் என்பது வளர்ந்து வரும்போது அதற்கு முன்னிருந்த பழைய இலக்கியத்தோடு தொடர்பில்லாமல் வளருவதில்லை. கம்பன் விருத்தப்பாவைக் கையாண்டான் என்ருல், அதற்குச் சீவக சிந்தாமணி ஆசிரியன் வழிகாட்டியாக இருந்தான் என்பதை மறக்கலாகாது. இந்த வகையிலே நம் நாட்டின் இலக்கியத்தைத் தொடர்ந்து வளர்ந்து வந்த ஒரு ஜீவனைக் கருதி, ஒரு காலத்து இலக்கியத்திற்கும் இன்னெரு காலத்து இலக்கியத்திற்கும் உள்ள தொடர்பையும், ஏன் அந்த அந்தக் காலத்தில் புதிய வகைகள் புதிய முறைகள் தோன்றின என்பதைப் பற்றியும் ஆராய்வது இலக்கிய

விமர்சனத்தில் ஒரு பகுதி. இதைச் சரித்திர ரீதியான இலக்கிய விமர்சனம் என்று கருதலாம். இலக்கியம் ஆகாயத்தில் முளைப்பதல்ல. ஒரு சமுதாயத்தில் வாழ்ந்த ஒருவனுடைய அனுபவமே இலக்கியமாகிறது. ஆகவே, அவன் எந்தச் சமுதாயத்தில் வாழ்ந்தான்? அவனுக்கும் மற்றவர்களுக்கும் இருந்த உறவு என்ன? அவனுடைய வாழ்க்கைச் சரிதம் அவனுடைய இயல்பைப் பற்றி என்ன தெரிவிக்கிறது என்பதெல்லாம் ஆராய்ந்து, அவனுடைய இலக்கியத்தின் தன்மையை உணர இந்த அறிவைப் பயன்படுத்திக் கொள்வதும் இலக்கிய விமர்சனத்தில் ஒரு முறை. இதை வாழ்க்கைச் சரித ரீதியில் அமைந்த இலக்கிய விமர்சனம் என்று கொள்ளலாம். இவை தவிர, ஒரு புலவனுக்கும் இன்னொருவனுக்கும் இலக்கிய பண்பைப் பொறுத்த மட்டில் என்ன என்ன ஒற்றுமை என்ன என்ன வேறுபாடு உள்ளது? இளங்கோவடிகள் குரலுக்கும் கம்பன் குரலுக்கும் உள்ள வேற்றுமை என்ன என்று தனிப் புலவர்களுடைய பண்பை ஆராய்வதும் இலக்கிய விமர்சனத்தின் வேலை. இதை ஒப்புமை ரீதியான இலக்கிய விமர்சனம் என்று சொல்லலாம். இவ்விமர்சன வகைகள் ஒவ்வொன்றிற்கும் தனி முறைகள் உண்டு; அடிப்படையான விதிகள் உண்டு.

ஆனால் இலக்கிய விமர்சனம் எந்த வகையானதாக இருந்தபோதிலும் ஒரே நோக்கத்தைக் கொண்டுதான் வழங்க வேண்டும். இலக்கியத்தின் பெருமையை உணருவதற்கும் அனுபவிப்பதற்கும் விமர்சனம் வழிகாட்ட வேண்டும். விமர்சகன் இலக்கணத் தராசைக் கையிலேந்தி இலக்கியத்தை நிறுக்கும் நக்கீரனல்லன்; இலக்கியத்திற்கு ஓயாமல் பொருள் விளக்கமும் இலக்கணக் குறிப்பும் தரும் உரையாசிரியனல்லன். 'ஓகோ...' என்று களித்து 'சீ சீ' என்று ஒதுக்கும் குழந்தையுமல்லன். பிரபஞ்சத்தைக் கண்டு தன் மனத்திலெழும் அனுபவத்தைச் சொல்லில் தேக்குவது இலக்கியமானால், இலக்கிய விமர்சனம் அந்த இலக்கியத்தில் உள்ள அனுபவத்தைத் தெளிவாக்கி, அது எவ்வாறு சொல்லில் தேங்குகிறது என்

பதைக் காட்டி, இந்த அனுபவம் சொல்லில் தேங்கும் போது ஏன், எவ்வாறு கலையாகிறது என்பதைத் தத்துவ ரீதியில் ஆராய்ந்து, கலானுபவத்தின் எல்லை நிலமான ஆனந்தத்திற்கு அழைத்துச் செல்வதே. இதனால் மொழி வளரும் ; இலக்கியம் வளரும் ; தத்துவ விசாரம் ஏற்படும்; கலானுபவம் சித்திக்கும் ; ஸஹ்ருதயம், அதாவது கலைஞனோடு ஒன்றி நின்று அவன் பெற்ற ஆனந்தத்தைப் பெறும் அபூர்வ சக்தி, தானாகவே நம்மை வந்தடையும்.

## குறிப்புரை

எடுத்துக்காட்டு - உதாரணம். கொங்கு - பூந்தாது. தேர் - ஆராயும். காமஞ் செப்பாது - என்னிடங்கொண்ட விருப்பத்தாற் சொல்லாமல். பயிலியது கெழீஇய நட்பு - நெருங்கிப் பழகிய நட்பு. மயில் இயல் - மயில் போன்ற சாயல். செறி எயிறு - நெருங்கிய பல்வரிசை. அரிவை - பெண். வாசம் - வாசனை. வடிவாகிறது - உருவம் பெறுகிறது. விமர்சகன் - மதிப்பிடுபவன். திருநகரி - ஆழ்வார் திருநகரி. பொருனை - தாமிர வருணி. சொல்லா மரபின் அவற்றொடு - பேசுந்தன்மையில்லாதவைகளோடு. ரீதி - போக்கு, முறை.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—கொங்கு, எயிறு, அரிவை, பொருனை, ரீதி.
2. கலானுபவம், தத்துவரீதி, எடுத்துக்காட்டு, புறக்கணித்து— நுமது சொந்த வாக்கியங்களில் அமைக்கவும்.

## வினாக்கள்

1. தமிழ் வளர்ச்சிக்கு எத்தகைய விமர்சனம் வேண்டப்படுவது ?
2. தருமி கொண்டுவந்த செய்யுளின் கருத்து யாது ?
3. நக்கீரர் காட்டிய குற்றம் என்ன ?
4. "காட்சிப் பொருளைக் காட்சிப் பொருளாக அன்று ; கருத்தை எழுப்பிய கருவியாகவே இலக்கியம் பேசும்"—உதாரணம் தந்து விளக்குக.
5. பழைய இலக்கண ஆசிரியர்களுடைய கொள்கைகளின் அருமையான அம்சங்கள் யாவை ?
6. பிற்காலத்தார் இலக்கிய விமர்சனத்தை எவ்வாறு கருதத் தலைப்பட்டார்கள் ?
7. உரையாசிரியர்கள் செய்த அருமையான தொண்டு யாது ? ஆனால், அவர்கள் செய்யாது விடுத்தவை எவை ?
8. சரித்திர ரீதியான விமர்சனம், வாழ்க்கைச் சரித ரீதியாலமைந்த விமர்சனம், ஒப்புமைரீதியான விமர்சனம்—குறிப்பு வரைக.
9. விமர்சனத்தின் நோக்கம் எத்தகையதாக இருக்கவேண்டும் ?

## கட்டுரையாக்கம்

"இலக்கிய விமர்சனம்" என்பது பற்றி ஒன்றரைப் பக்க அளவில் கட்டுரை வரைக.

# 6. திருச்சிராப்பள்ளி

**திரு. T. V. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள்**

தென்னிந்தியாவிலுள்ள புகைவண்டி நிலையங்களுள் முதன்மைபெற்று விளங்கும் திருச்சிராப்பள்ளியைப் பலரும் அறிவர். நம் அரசாங்கத்தார், சுதந்திர இந்தியாவில் ஊர்களெல்லாம் தம் பழைய பெயர்களோடு நின்று நிலவ வேண்டுமென்ற கருத்தினராய் இப்போது சில ஊர்களின் பெயர்களை மாற்றியுள்ளனர். அவற்றுள் திருச்சிராப்பள்ளி என்பதும் ஒன்றாகும். அப் பெருநகரின் பண்டைப் பெயர் யாது என்பதை ஈண்டு ஆராய்வோம்.

கடைச்சங்க நூல்களுள் ஒன்றாகிய அகநானூற்றில், “கறங்கிசை விழவின் உறந்தைக் குணாது—நெடும் பெருங் குன்றம்” என்று உறையூர்க்குக் கிழக்கே ஒரு குன்று கூறப்பட்டுள்ளதேயன்றி, அதன் பெயராதல், அஃது அமைந்துள்ள ஊரின் பெயராதல் அப்பாடலில் குறிக்கப் படவில்லை. சைவசமய குரவர்களாகிய திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் அக்குன்றின்மேல் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள சிவபெருமான்மீது பாடியுள்ள பதிகங்களிலேதான் ‘சிராப்பள்ளி’ என்ற பெயர் காணப்படுகின்றது. கி. பி. ஏழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தொண்டை நாட்டையும் சோழ நாட்டையும் ஒருங்கே ஆட்சிபுரிந்த பல்லவ வேந்தராகிய முதல் மகேந்திர வர்மன் என்பவனே சிராப்பள்ளிப் பெருங் குன்றைக் குடைந்து, அங்கே சிவபெருமானுக்குத் திருக்கோயில் அமைத்தவன் என்பது ஆராய்ச்சியால் அறியப் படுகின்றது. வடமொழியிலே சிறந்த புலமை பெற்றிருந்த அவ்வேந்தன் எட்டுச் சுலோகங்கள் இயற்றி, அவற்றைத் தான் எடுப்பித்த சிராப்பள்ளி சிவன் கோயிலில் பொறித்துள்ளான்.

அச்சுலோகங்களிலே தான் புறச்சமயத்திலிருந்து திரும்பிச் சிவநெறியைக் கடைப்பிடித்துச் சைவனாகியதையும், சிராப்பள்ளிக் குன்றின்மேற் குகைக்கோயிற்

சிவலிங்கத்தை எழுந்தருளுவித்ததையும் குறிப்பிட்டுள்ளான். அச்செய்திகளை நுணுகி நோக்குமிடத்து அம் மன்னனது ஆட்சியின் பிற்பகுதியிலேதான் சிராப்பள்ளிக் குன்றிற் சிவாலயம் அமைக்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்பதும், அதற்கு முன்னர் அவன் சமண சமயத்தைக் கைக்கொண்டு ஒழுகிய காலத்தில் அங்கே சிவாலயம் இருந்திலது என்பதும் நன்கு புலனாகின்றன. சமணர்களாற் கருங்கல்லிற் பிணித்துக் கடலில் போடப்பெற்ற திருநாவுக்கரசு சுவாமிகள் சிவபெருமான் திருவருளால் அக்கல்லையே தெப்பமாகக் கொண்டு கடலைக் கடந்து, திருப்பாதிரிப்புலியூரை யடைந்து திருக்கோயிலுக்குட் சென்று, ''ஈன்றாளுமாய்'' என்று தொடங்கும் திருப் பதிகம் பாடி இறைவனை வணங்கினர் என்பது பெரிய புராணம் என்று வழங்கும் திருத்தொண்டர் புராணத்தால் அறியப்பெறும் ஓர் உண்மை வரலாறாகும். அந்நிகழ்ச்சி-தான் மகேந்திர வர்மன் சமண சமயத்தைத் துறந்து சைவனாகும்படி செய்துவிட்டது என்பது தேற்றம். அந் நாட்களில் திருப்பாதிரிப்புலியூர் என்று வழங்கும் பாடலிபுரத்திலிருந்த ஓர் அமண் பள்ளியையிடித்து, திருவதிகை நகரில் தன் பெயரால் குணபரேச்சுரம் என்ற சிவன் கோயிலொன்று அவ்வரசன் அமைத்தனன். இச் செய்தியைச் சேக்கிழார் தம் பெரியபுராணத்திற் கூறியுள்ளனர். அவனுக்குக் குணபரன் என்னும் சிறப்புப் பெயர் உண்டு என்பது, அவனுடைய சிராப்பள்ளிக் கல்வெட்டுக்களாலும் செங்கற்பட்டிற்கு அண்மையிலுள்ள வல்லத்திற் காணப்படும் அவன் கல்வெட்டொன்றாலும் நன்கறியக் கிடக்கின்றது. ஆகவே, சேக்கிழார் கூறியுள்ள அச் செய்தி பெரிதும் உறுதியெய்தல் உணரற்பாலதாகும். அங்ஙனமே, அவன் தன் நாட்டிலிருந்த அமண் பள்ளிகளை இடித்து, அவ்விடங்களிற் சிவன் கோயில்கள் அமைத்திருத்தல் வேண்டும். அவற்றுள் சிராப்பள்ளிக் குன்றின் மேலுள்ள சிவாலயமும் ஒன்றாகும். அவ் வுண்மை, அக்கோயிலிற் காணப்படும் அவனுடைய வட மொழிக் கல்வெட்டுக்களாலும், அக்குன்றின் உச்சியில்

வரையப் பெற்றுள்ள வேறு சில கல்வெட்டுக்களாலும் வலியுறுகின்றது.

இனி, சிராப்பள்ளிக் குன்றின் மேலுள்ள உச்சிப் பிள்ளையார் கோயிலுக்குப் பின்புறத்தில் பல சமண முனிவர்களின் கற்படுக்கைகள் தலையணைகளோடு இருத்தலை இன்றும் காணலாம். அத்தலையணைகளில் அவற்றை உபயோகித்த சமண முனிவர்களின் பெயர்கள் வரையப் பட்டிருக்கின்றன. அவ்வெழுத்துக்களைக்கொண்டு அவற்றின் காலத்தை ஆராய்ந்த கல்வெட்டிலாகா அறிஞர்கள், அவை கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் அமைக்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்று கூறுகின்றனர். எனவே, கி. பி. ஐந்தாம் நூற்றாண்டில் அக் குன்றின்மேற் சில சமண முனிவர்கள் தங்கித் தவம் புரிந்து கொண்டிருந்தனர் என்பது நன்கு தெளியப்படும். அவர்களுள் 'சிரா' என்ற முனிவர் ஒருவர் இருந்தமை அங்குள்ள கல்வெட்டுக்களால் அறியப்படுகின்றது. அம்முனிவர் அத்தவப் பள்ளியின் தலைவராயிருந்தமைபற்றி அது 'சிராப்பள்ளி' என்று முதலில் வழங்கத் தொடங்கி, அவர் காலத்திற்குப் பின்னரும் அப்பெயரோடு நின்று நிலவுவதாயிற்று. முதலில் மகேந்திரவர்மனும் தன் ஆட்சியின் முற்பகுதியில் அத்தவப் பள்ளியை ஆதரித்துப் போற்றிவந்திருத்தல் நன்கு துணியப்படும். திருநாவுக்கரசர் பொருட்டுச் சிவபெருமான் நிகழ்த்திய அரிய நிகழ்ச்சிகளை அறிந்த அப் பெருவேந்தன் அமண் சமயத்தை வெறுத்துச் சைவனாயினமை முன்னர் விளக்கப் பெற்றது. அந் நாட்களிலேதான் அவன் சிராப்பள்ளி என்னும் அமண் பள்ளியை இடித்து, அக்குன்றின்மேல் சிவன்கோயில் எடுப்பித்திருத்தல் வேண்டும். அச்சிவாலயமும் சிராப்பள்ளி என்னும் பழைய பெயருடன் வழங்கிவருவதாயிற்று. சைவசமய குரவர்களாகிய திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் தம் காலத்தில் வழங்கிவந்த சிராப்பள்ளி என்ற அப்பெயரைத் தாம் அக்கோயிலிற் பாடியருளிய பதிகங்களிற் குறிப்பிட்டுச் செல்லுவாராயினர். ஆகவே, சிரா என்ற சமண முனிவரது தவப்பள்ளியின் பெயரா

யிருந்த சிராப்பள்ளி என்பது, பின்னர் முதல் மகேந்திர வர்மன் அங்கு எடுப்பித்த சிவன்கோயிலின் பெயராக மாறிவிட்டமை அறியத்தக்கது.

நம் தமிழ் நாட்டிலே சில ஊர்களிலுள்ள திருக் கோயில்களுக்குத் தனிப்பெயர்கள் முற்காலத்தில் வழங்கி வந்தன என்பது சமயகுரவர் அருளிய தேவாரப் பதிகங் களாலும் கல்வெட்டுக்களாலும் புலப்படுகின்றது. உறை யூரிலுள்ள கோயில் ஆனிலை எனவும், பழையாறை யிலுள்ள கோயில்கள் பட்டீச்சுரம் திருச்சத்திமுற்றம் எனவும், திருநறையூரிலுள்ள கோயில் சித்தீச்சுரம் எனவும், கோவந்தபுத்தூரிலுள்ள கோயில் விசயமங்கை எனவும், சாத்தனூரிலுள்ள கோயில் ஆவடுதுறை எனவும், சாத்தமங்கையிலுள்ள கோயில் அயவந்தி எனவும், காவிரிப்பூம் பட்டினத்திலுள்ள கோயில் பல்லவனீச்சுரம் எனவும், பெண்ணைகடத்திலுள்ள கோயில் தூங்கானை மாடம் எனவும், திருவெண்ணெய் நல்லூரிலுள்ள கோயில் அருட்டுறை எனவும், தஞ்சாவூரிலுள்ள கோயில் இராச ராசேச்சுரம் எனவும், திருப்புரம்பயத்திலுள்ள கோயில் ஆதித்தேச்சுரம் எனவும் பெயர் எய்தியிருந்தன என் பதைத் தேவாரப்பதிகங்களாலும், அவ்வூர்களிலுள்ள கல் வெட்டுக்களாலும் அறியலாம். அம்முறையில் சிராப்பள்ளி என்பது கோயிற் பெயராயிருத்தலால், அக்கோயில் அமைந்துள்ள ஊரின் பெயர் யாது என்பது இனி ஆராய் தற்குரியதாகும்.

திருச்சிராப்பள்ளியில் முதல் இராசராச சோழனது ஆட்சியின் பதினைாம் ஆண்டாகிய கி. பி. 1000-ல் வரையப் பட்டுள்ள கல்வெட்டொன்று விக்கிரமசிங்க மூவேந்த வேளான் என்பவன் ஒருவன் வளத்தூர் நாட்டு ஆலங் குடியில் நிலம் விலைக்கு வாங்கி, அதனை உறையூர்க் கூற்றத்துச் சிற்றம்பரில் உள்ள சிராப்பள்ளிக் கோயி லுக்கு அளித்தனன் என்று கூறுகின்றது. அதனை, ஆராயுமிடத்து, அத்தலைவனால் இறையிலி நிலம் வழங்கப் பெற்ற சிவன் கோயில் சிராப்பள்ளி என்னும் பெய ருடையது என்பதும், அக்கோயில் அமைந்துள்ள நகர்

சிற்றம்பர் என்னும் பெயருடையது என்பதும் நன்கு புலனுதல் காண்க. கி. பி. ஒன்பதாம் நூற்ருண்டின் முதற் பகுதியில் முதல் வரகுண பாண்டியனது ஆட்சியின் பதினென்ரும் ஆண்டில் அக்கோயிலிற் பொறிக்கப்பெற் றுள்ள வேருெரு கல்வெட்டொன்றும் அவ்வுண்மையை உறுதிப்படுத்துதல் உணரத்தக்கது.

இக்கல்வெட்டில் அவ்வூர் சிற்றம்பர் நகர் எனவும் சிற்றம்பர் பதி எனவும் குறிக்கப்பட்டிருக்கிறது.

நம் தமிழ் நாட்டில் அம்பர், இன்னம்பர், நல்லம்பர் என்ற ஊர்கள் இருத்தலேப் பலர் அறிந்திருத்தல் கூடும். அவ்வூர்களைப்போற் சிற்றம்பர் என்ற ஊரும் இருந்துளது. இக்காலத்தில் அவ்வூரின் பெயர் மறைந்தொழிந்தது எனினும், அவ்வூர் திருச்சிராப்பள்ளி என்னும் பெயருடன் இஞ்ஞான்று எல்லோர்க்கும் காட்சியளித்துக்கொண்டு பெருமையுடன் விளங்குவது மகிழ்தற்குரியதாகும்.

இதுகாறும் ஆராய்ந்து கூறியவற்ருல் பண்டைக் காலத்தில் சிராப்பள்ளி என்பது சிரா என்ற சமண முனிவரது தவப் பள்ளியின் பெயராயிருந்தது என்பதும், பிறகு பல்லவ வேந்தனுகிய முதல் மகேந்திர வர்மன் அதனை இடித்துவிட்டு அங்கு எடுப்பித்த சிவன் கோயி லின் பெயராயிற்று என்பதும், அதன் பின்னர் அத்திருக் கோயில் அமைந்துள்ள நகரின் பெயராக வழங்கி வருகின் றது என்பதும், கோயிலின் பெயர் நகரின் பெயராகப் போய்விட்டமையின் சிற்றம்பர் என்னும் அந் நகரின் பழைய பெயர் மறைந்துவிட்டது என்பதும் நன்கு விளங்குதல் காண்க.

குறிப்புரை

கறங்கு இசை விழவின் உறந்தைக் குணது - ஒலிக்கின்ற இசையோடு கூடிய உறையூருக்குக் கிழக்கிலுள்ளது. குரவர் - ஆசாரியர். பதிகம் - பத்துப் பாடல்கள் கொண்டது. நுனுகி - கூர்ந்து. தேற்றம் - நிச்சயம். அமண்பள்ளி - சமணத் துறவிகள் வாழுமிடம். அமண் சமயம் - சமண சமயம். இஞ்ஞான்று - இப்பொழுது.

## பயிற்சி

1. பொருள் கூறுக :—கறங்கு, குணுது, குரவர், தேற்றம்.
2. பிரித்துக் காட்டுக :—கறங்கிசை, பிற்பகுதி.

## வினுக்கள்

1. சுதந்திர இந்தியாவில் பழம் பெயராக மாற்றப்பட்ட சில நகரங்களின் பெயர்களைக் கூறுக.
2. சைவசமய குரவராவார் யார் ?
3. சிராப்பள்ளிக் குன்றைக்குடைந்து சிவபெருமானுக்குத் திருக்கோயில் எடுத்த வேந்தன் யாவன் ?
4. முதல் மகேந்திர வர்மனது வடமொழிக் கல்வெட்டால் நாம் அறியக் கூடியது என்ன ?
5. மகேந்திரவர்மன் சமணனுயிருந்து சைவனுன வரலாறு யாது ?
6. மகேந்திரவர்மனுக்கு வழங்கிய மற்றெரு பெயர் யாது ?
7. சிராப்பள்ளி என்று பெயர் வரக் காரணமென்ன ?
8. சிராப்பள்ளியில் சிவபெருமானைப் பாடின சைவசமய குரவர் யாவர் ?
9. 'நம் தமிழ் நாட்டிலே சில ஊர்களிலுள்ள திருக்கோயில்களுக்குத் தனிப் பெயர்கள் முற்காலத்தில் வழங்கி வந்தன' என்பதற்கு மூன்று சான்றுகள் தருக.
10. சிராப்பள்ளி என்ற பெயர் வருவதற்குமுன் அப்பதிக்கு வழங்கிய பெயர் என்ன ?

## கட்டுரையாக்கம்

'சிராப்பள்ளி' என்ற பெயர்க் காரணத்தை விளக்கி ஒரு சிறு கட்டுரை வரைக.

